கழக வெளியீடு: ௫௨௪

# கந்த புராணம்

[வசனம்]



ஆக்கியோர் :

சு. அ. இராமசாமிப் புலவர்



:: திருநெல்வேலி, தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை 1.

# பதிப்புரை

கந்தபுராணம் என்னும் அரிய பெரிய வாய்மையுணர்த்தும் செந்தமிழ் நூல் "அடல்கெட முனிந்த செவ்வேற், கந்தவேள்" திருக் கதையாகும். இந்நூல், காஞ்சிபுரத்து 'முப்போதும் திருமேனி தீண்டுவா'ராகிய கச்சியப்ப சிவாசாரிய அடிகளால் குமரகோட்டத் திறைவன் உடங்கியைந்து ஊக்க அருளிச்செய்யப்பெற்றது.

இது, செய்யுள்நடையில் சிறந்த பேரிலக்கியமாகும். இவ் விலக்கியம் எல்லா நலங்களும் நிரம்பியது. திருமுருகன் திருவருளுக் குரியராக்கும் செம்மைவாய்ந்தது. ஆறு காண்டமும், நூற்று நாற்பத் தொரு படலமும், பதினாயிரத்து முந்நூற்று நாற்பத்தைந்து திருப் பாட்டுக்களும் கொண்டது.

இந்நூலை இனிய எளிய உரைநடையாகக் கூடுமானவரை புரா ணத்தை அடியொற்றி இன்றியமையாத இடங்களில் புராணத் திருப் பாட்டுக்களுடன் சுருக்கமும் விளக்கமும் பொருந்த ஒரு நூல் வெளிப்படுத்துவது நலமெனக் கருதினோம்.

எங்கள் வேண்டுகோளுக்கிணங்கித் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் ஆக்கித்தந்துள்ளார்கள். நூல், ஆற்றொழுக்காகப் போவதுடன் அவ்வவ் விடங்களில் உணர்ச்சியூட்டும் ஆற்றல்வாய்ந்த இனிய தூய செந்தமிழ் நடையுங்கொண்டு திகழ்கின்றது. ஆசிரிய ரவர்கட்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனைச் செந்தமிழ்ச் செல்வர்களும் செந்நெறியாளர்களும் வாங்கிப் பயின்று முருகவேள் திருவருட்குரித்தாய் நாடும் மொழியும் ஓங்க நலம்புரிந்து பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

## 3. மகேந்திர காண்டம்



## 4. போர்புரி காண்டம்

## 5. தேவ காண்டம்



## 6. தக்க காண்டம்

உ

வேலுமயிலுந்துணை

# கந்த புராணம்

## காப்பு

### விநாயகர்

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

### முருகக்கடவுள்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

## கடவுள் வாழ்த்து

### சிவபிரான்

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய்து அறிதற்கு அரும்பெற்றி எய்தி
அருவந் தனையும் உருவத்தையும் அன்றி நின்றான்
ஒருவன் தனது பதந்தன்னை உளத்துள் வைப்பாம். க

### இறைவி

செறிதரும் உயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறும் அரனிடம் மரபின் மேவியே.
அறுவகை நெறிகளும் பிறவும் ஆக்கிய
இறைவிதன் மலரடி இறைஞ்சி ஏத்துவாம். உ

### விநாயகர்

மண்ணுல கத்தினில் பிறவி மாசற
எண்ணிய பொருளெலாம் எளிதின் முற்றுறக்
கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம். ௩

## முருகக்கடவுள்

இருப்பரங் குறைத்திடும் எஃக வேலுடைப்
பொருப்பரங்(கு) உணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங்(கு) அமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம். ௪

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்டு
ஈரலை வாயிடும் எஃகம் ஏந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம். ௫

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம். ௬

நீரகத் தேதனை நினையும் அன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடும்
தாரகத் துருவமாந் தலைமை எய்திய
ஏரகத்(து) அறுமுகன் அடிகள் ஏத்துவாம். ௭

ஒன்றுதொ ருடலை ஒருவி ஆவிமெய்
துன்றுதொ ருடலைத் தொடங்கி ஐவகை
மன்றுதொ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதொ ருடிய குமரற் போற்றுவாம். ௮

எழமுதி ரைப்புனத்(து) இறைவி முன்புதன்
கிழமுதிர் இளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களி(று)என வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம். ௯

ஈறுசேர் பொழுதினும் இறுதி இன்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியில்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரான் அடிகள் போற்றுவாம். ௧0

## நூற்பயன்

இந்திரர் ஆகிப் பார்மேல் இன்பமுற்(று) இனிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச் சிவகதி அதனிற் சேர்வர்
அந்தமில் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த செவ்வேல்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித்(து) ஓது வோரே. ௧௧

# 1. உற்பத்தி காண்டம்

## க. திருக்கைலைமலை

இறைவன் எழுந்தருளப்பெறும் பேற்றைப்பெற்றது திருக்கைலைமலை. அம்மலை வெள்ளிய நிறம் உடையது. பாற்கடல் இறைவனுக்கு ஓர் இருக்கையாக வந்து நிற்பதைப்போன்றது. பல திங்கள்கள் தோன்றினாற்போல ஒளி வீசுவது. அதில் இறைவன் அடியார்களுக்குத் திருவருள்புரியும் பொருட்டு இறைவியோடு எழுந்தருளி யிருந்தார்.

அப்பொழுது பலவகை ஒலிக்கருவிகள் முழங்கின. இன்னிசைவல்லோர் இசை பாடினார்கள். தேவர்களும் முனிவர்களும் இறைவனைப் போற்றி வழிபடுவதற்காக வந்து நெருங்கினார்கள். இறைவனை வணங்கித் திருவருள் பெற்றார்கள். நந்திதேவர் தம்முடைய கையிலே பொற்பிரம்புடன் நின்று திருக்கூட்டத்தை ஒழுங்கு செய்து கொண்டிருந்தார்.

## உ. மலைமகள்

அப்பொழுது இறைவியானவள் எழுந்தாள். இறைவனைப் பணிந்தாள். சிவபெருமானைப் பார்த்துக் கூறத் தொடங்கினாள். "ஓ இறைவனே! தங்களை இகழ்ந்த தக்கன் இடத்திலே நான் சிலகாலம் வளர்ந்தேன். அதனால் தாட்சாயணி என்னும் பெயரும் எனக்கு உண்டாயிற்று. நான் அப் பெயரையும் இவ்வுடலையும் வைத்திருத்தற்கு அஞ்சுகின்றேன். நான் இவ்வுடலை ஒழித்து வேறு உடலை எடுத்தற்குத் திருவருள் புரிதல்வேண்டும்," என்று வேண்டிக் கொண்டாள்.

இறைவியின் வேண்டுகோளுக்கு இறைவன் இணங்கினார். இறைவியைப் பார்த்து, "ஓ இறைவியே! நீ கொண்ட எண்ணஞ் சிறந்தததுதான். இமயமலை அரசன் உன்னைத் தன் மகளாகப் பெற்று வளர்த்து, எமக்குத் திருமணஞ்

செய்துதர விரும்புகிறுன். அதன்பொருட்டு நம்மை நோக்கித் தவஞ்செய்கின்றுன். நீ ஒரு குழந்தை வடிவாக அவனை அடைவாயாக! அகவை ஐந்து நிரம்பியபின் நம்மை நோக்கித் தவஞ்செய்வாயாக! அஞ்ஞான்று நாம் வந்து உன்னைத் திருமணஞ் செய்துகொள்ளுகிறோம்,'' என்று கூறியருளினர். இறைவி இறைவனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு திருக்கைலைமலையை நீங்கினுள். இமய மலையை எய்தினுள்.

## மலையரசனுக்கு மகளாதல்

மானசவாவி என்னும் பெயரையுடைய ஒரு பொய்கை இமயமலையின்மேல் உள்ளது. அப் பொய்கையின் கரையிலே அழகிய மலர்ப்பொழில் ஒன்று அமைந்திருந்தது. அப் பொழிலிலே, மலையரசன் தவஞ்செய்துகொண்டிருந்தான். பொய்கையிலிருந்த தாமரை மலர் ஒன்றில் இறைவி சிறு குழந்தை வடிவாகி எழுந்தருளியிருந்தாள். தவஞ் செய்துகொண்டிருந்த மலையரசன் குழந்தையைக் கண்டான். இறைவியே தன்பொருட்டுக் குழந்தையாகிவந்து அமர்ந்துள்ளாள் என்று உறுதியாக எண்ணினுன். இறைவியின் தண்ணளியை எண்ணி எண்ணி மகிழ்ந்தான். பேரின்பக்கடலிலே அமிழ்ந்தான். கண்களில் நின்றும் இன்பநீர் பொழிந்தது. உடலில் உள்ள மயிர்கள் சிலிர்த்தன. மகிழ்ச்சிப்பெருக்கால் ஆடிப் பாடினுன். தாமரை மலர்மேல் இருக்கும் இறைவியாகிய குழந்தையை வணங்கினுன். தூக்கிக்கொண்டு தன் மனைவியாகிய மேனையிடத்திலே சென்றுன். அவளுடைய கைகளிலே கொடுத்தான். அவள் குழந்தையைத் தொழுது தனது கைகளிலே வாங்கினுள். “இஃது எவ்வாறு உனக்குக் கிடைத்தது?'' என்று வினவினுள். மலையரசன் நிகழ்ந்ததை மேனைக்குக் கூறினுன். மேனை திருவருளை எண்ணி மகிழ்ந்தாள். அவளுடைய கொங்கைகள் பால் சுரந்தன. பாலை உண்பித்து மகிழ்ந்தாள். பலவகை அணிகலன்களைப்பூட்டி அழகுபடுத்தினுள். உலகங்களையெல்லாம் வளர்க்கும் இறைவியை மேனை வளர்த்தாள்.

## மலைமகள் மாதவஞ் செய்தல்

இறைவிக்கு அகவை ஐந்து நிரம்பியது. இறைவனை நோக்கித் தவஞ்செய்தற்கு எண்ணினாள். தன் கருத்தைத் தாய்தந்தையருக்குத் தெரியப்படுத்தினாள். மலையரசன் தன் மகளாகத் தோன்றியுள்ள இறைவியைப் பார்த்து, "எம் தாயே! நான் சொல்வதைக் கேள்; நீ தவஞ்செய்தற்கு ஏற்றகாலம் இஃதன்று. இப்பொழுது உனக்கு ஆண்டுகள் ஐந்துதான் நிரம்புகின்றன. தவஞ்செய்தலை நின்னுடைய இளமைமிக்க உடல் தாங்கமாட்டாது. ஆகையால், நீ இந்த எண்ணத்தை விட்டுவிடுதல் வேண்டும்," என்று கூறினான்.

தந்தையாகிய மலையரசன் கூறியதைக்கேட்ட இறைவி நகைத்தாள். "உலகத்திலுள்ள உயிர்களையெல்லாங் காப்பாற்றுபவன் இறைவனேயாவன். உயிர்களைப் பாதுகாத்தல் மற்றைய உயிர்களால் இயலாது. இஃது உறுதியாகும். தவஞ்செய்தல் வேண்டும் என்னும் எண்ணம் எனக்குண்டாகியதும் இறைவன் திருவருளேயாகும். ஆகையால், என்னுடைய வேண்டுகோளை நீங்கள் மறுக்காமல் உடன்படுவீர்களாக," என்று திருவாய்மலர்ந்தருளினாள். இறைவி கூறியதைக்கேட்ட மலையரசன், இறைவி தவஞ்செய்தற்கு உடன்பட்டான். ஓரிடத்தில் தவச்சாலை ஒன்று அமைத்துக்கொடுத்தான். தன் சுற்றத்தார்களாகிய பெண்கள் பலரோடும் இறைவியைத் தவச்சாலைக்கு அனுப்பினான். இறைவி, சிவபெருமானை எண்ணித் தவஞ்செய்துகொண்டிருந்தாள். மலையரசனும் மேனையுந் தினந்தோறுஞ் சென்று தங்கள் மகளைப் பார்த்துக்கொண்டு வந்தார்கள்.

# ௩. மேருமலை

## சூரபன்மன்

இறைவி மேற்கூறியவாறு தவஞ்செய்துகொண்டிருந்தாள். சூரபன்மன் என்னும் அசுரன் ஒருவன் தோன்றினான். அவன் இறைவனை நோக்கிக் கடுமையான தவங்கள் செய்தான். இறைவனார் அவனுக்குப் பேரருள் புரிந்தார்.

இறைவனுடைய அருளால் அவன் பெருந்திறல் அடைந்தான். உலகத்துயிர்களுக்குந் தேவர்கட்கும் பெருந் தொல்லை புரிந்தான்.

## நால்வருக்கு அருளுதல்

ஒரு காலத்தில் சிவபெருமான் கல்லாலமரத்தின்கீழ் தட்சணாமூர்த்தியாக எழுந்தருளியிருந்தார். அப்போது அவரிடத்திலே சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் முனிவர்கள் நால்வரும் மறைநூற் பொருளை உணர்ந்தார்கள். ஆயினும், மாயையினாலே அவர்களுக்கு மெய்யறிவு உண்டாகவில்லை. இறைவனை நோக்கிப் பின்னும் நெடுங்காலந் தவஞ் செய்தார்கள். பிறகு திருக்கைலைமலையை அடைந்தார்கள். நந்திதேவரைக் கண்டு வணங்கினார்கள். நந்திதேவர் அம்முனிவர்களை க்கோயிலுக்குள்ளே அழைத்துக்கொண்டு சென்றார். முனிவர்கள் சிவபெருமானைப் போற்றி வணங்கினார்கள். பின்னர் இறைவனைப் பார்த்து, "மேலான பரம்பொருளே! அடியார்களாகிய நாங்கள் மறைகளையும், உபநிடதங்களையும் நெடுநாள் பயின்றோம். ஆயினும் மெய்யறிவு கைவரப்பெறாதவர்களாக இருக்கின்றோம். எங்களுடைய அறிவு பலவாறாக மயங்கி நிற்கின்றது. திருவருள் செய்து அம் மயக்கத்தினை நீக்கியருளுதல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டார்கள்.

இறைவன் அம் முனிவர்களிடத்திலே திருவருள் நோக்கங் கொண்டார். முனிவர்களைப்பார்த்து, "அன்பர்களே! உங்களுக்கு மெய்யறிவு உண்டாகும் வண்ணம் நாம் மறைவாக ஆகமத்தை அருளுவோம்," என்று திருவாய் மலர்ந்தருளினார். நந்திதேவரைப் பார்த்து, "காமனைத் தவிர பிறர் எவரையும் உள்ளே விடாதே" என்று கட்டளை யிட்டருளினார். நந்திதேவரும் சிவபெருமானைத் தொழுது, முதற் கோபுரவாயிலின்கண்ணே சென்று காவல் செய்து கொண்டிருந்தார்.

## கூறாது கூறுதல்

சிவபெருமான் முனிவர்கட்குச் சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றையும் உரைத்தருளினார். முனிவர்கள் ஞானத்தையும் உரைத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். "ஞானம் நாவினாலே நவிலற்பாலதன்று; இப்படி யிருத்தலேயாம்," என்று திருவாய் மலர்ந்தார். தமது திருமார்பின்கண்ணே ஒரு கையைச் சேர்த்தினார்; மௌன முத்திரையைக் காட்டினார். யோகஞ் செய்கின்றவர்களைப்போல ஒரு கணம் எழுந்தருளியிருந்தார். அதைக் கண்ட முனிவர்கள் உள்ளம் ஒடுங்கப்பெற்றார்கள். சிவஞானத்தைச் சேர்ந்து ஓவியப்பாவைபோல வீற்றிருந்தார்கள்.

## உலக வளர்ச்சி தடைப்படுதல்

இறைவன் கணப்போதே செயலற்று அமர்ந்திருந்தார். இறைவனுடைய அந்த ஒரு கணம் திருமால், நான்முகன் முதலிய தேவர்கட்குப் பல யுகங்கள் ஆகிவிட்டன. இறைவன் ஒரு கணப்போதும் உலக நோக்கத்தைக் கொள்ளாமலிருந்தபடியால் உலகத்துயிர்கள் காமப்பற்றை நீங்கி நின்றன. அதனால் உலக வளர்ச்சி குறைந்துபோய் விட்டது.

## இந்திரன் தவம்

சிவபெருமான் யோகத்திலிருந்த போது, சூரபன்மன் தேவர் முதலியோர்கட்குப் பெருந் தீமைகள் செய்தான். இந்திரன் இந்திராணியோடுந் தேவர்களோடும் நிலவுலகத்திற்கு வந்தான். கைலைமலைக்குச் சென்றான். சிவபெருமானைக் காண முடியவில்லை. மேருமலைக்குச் சென்றான். சூரபன்மனுடைய மகனாகிய பானுகோபன் விண்ணுலகத்தை யெரித்தமையையும், தன் மகனாகிய சயந்தனையும், பல தேவர்களையுஞ் சிறைவைத்தமையையும் உணர்ந்தான். மேரு மலையில் தானே தங்கி இறைவனை எண்ணி நீண்ட காலம் பெருந் தவஞ் செய்தான். இறைவன் இந்திரனுக்குக் காட்சி கொடுத்தருளினார். இறைவனைக் கண்ட இந்திரன்

போற்றி வணங்கினான். இறைவன் இந்திரனுடைய மனக் குறையை உணரார் போன்று, "உனக்கு வேண்டும் வரம் யாது?" என்று கேட்டருளினார். இந்திரன் சூரபன்மனால் ஏற்பட்ட துன்பங்களையெல்லாம் இயம்பினான். "சூரபன்மனைக் கொன்று அடியேங்களைக் காப்பாற்றி அருளவேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். இறைவன் இந்திரனைப் பார்த்தார். "வேள்விக்குத் தலைவனாகிய நம்மை இகழ்ந்து தக்கன் செய்த வேள்விக்குச் சென்றிருந்தீர்களல்லரோ? அத்தீவினையினால் இத்துன்பத்தை நுகருகின்றீர்கள். நம் மிடத்தில் ஒரு மகன் பிறப்பான். அவன் சூரபன்மனைக் கொன்று உங்களைக் காப்பான்," என்று கூறி மறைந்தார்.

## இந்திரன் நான்முகனிடஞ் செல்லுதல்

இறைவன் மறைந்ததும் இந்திரன் வருந்தினான். "இறைவன் திருக்கைலைமலையில் யோகத்தில் அமர்ந்திருக்கின்றார். இறைவியாரோ இமயமலையில் தவஞ்செய்துகொண்டிருக்கிறார். 'இவ்வாறாக இவர்களுக்கு மகன் பிறப்பது எவ்வாறு?'' என்று எண்ணினான். தன் மனைவியைத் தன் ஆசிரியர் வியாழபகவானுடைய மனைவியிடத்திலே விட்டுவிட்டுத் தான் தேவர்களோடு நான்முகன் உலகத்திற்குச் சென்றான். படைத்தல் தொழில் இல்லாமையால் வருந்திக்கொண்டிருந்த நான்முகனைக்கண்டு வணங்கி நின்றான். சூரபன்மனால் தானுந் தேவர்களும் படுந்துன்பங்களையெல்லாம் நான்முகனுக்குச் சொன்னான். இறைவன் யோகத்தில் அமர்ந்திருத்தலையுந் தன்பால் இறைவன் தோன்றியருளியதையுங் கூறினான்.

நான்முகன் இந்திரனைப் பார்த்து, "இறைவன் யோகத்தில் அமர்ந்திருத்தல் நம்முடைய துன்பங்களையெல்லாம் நீக்கும்பொருட்டேயாகும். சூரபன்மனைக்கொண்டு நமக்குத் துன்பஞ் செய்வித்தலும் நம்முடைய தீவினைகளையெல்லாம் ஒழிக்கும்பொருட்டேயாகும். நமக்கு ஏற்படுகிற துன்பங்களெல்லாம் நம்முடைய இன்பத்தின்பொருட்டே என்று நாம் உணர்தல்வேண்டும். இனிமேல் சிவபெருமான்

நமக்குத் திருவருள்செய்வார். நாமுஞ் சிறிது முயற்சி செய்தல்வேண்டும். நாம் அனைவரும் திருமாலிடஞ் செல்வோம்,'' என்று கூறினன். இந்திரன் முதலிய தேவர்களை அழைத்துக்கொண்டு திருமால் உலகத்திற்குச் சென்றான்.

## நான்முகன் முதலியோர் திருமாலைக் காணுதல்

நான்முகன் முதலிய தேவர்கள் திருமாலைக்கண்டு வணங்கினர்கள். திருமால் அனைவருக்குந் திருவருள் புரிந்தார். நான்முகனைப்பார்த்து, "உன்னுடைய படைப்புத்தொழில் நன்கு நடைபெற்றுவருகின்றதா?'' என்று உசாவினர். நான்முகன் சிவபெருமான் முனிவர்கள் பொருட்டு யோகத்தில் அமர்ந்திருத்தலையும், அதனல் உயிர்கள் காமப்பற்று அற்றிருத்தலையும், அதனல் படைப்புத்தொழில் நின்றுவிட்டதையும், சூரபன்மன் தேவர்களைத் துன்புறுத்துதலையும், இந்திரன் மகன் சயந்தனைச் சிறையில் வைத்துள்ளதையும் கூறினன்.

## திருமால் திருவாய்மலர்ந்தருளுதல்

நான்முகன் நவின்றவைகளைத் திருமால் கேட்டார். "இறைவன் யோகத்திருப்பாராயின் மற்றையோர் எவ்வாறு காமப்பற்றை எய்துவர்? நம்முடைய தீவினையின் பயனை நமக்கு ஊட்டியருளியபின்னர் இறைவன் நமக்கு அருள் புரிவர். யோகத்தினின்றும் நீங்கி மலையரசன் மகளைத் திருமணம்புரிந்து கொள்வாராயின் உனக்குப் படைப்புத் தொழில் பழையபடி உண்டாகும். ஒரு மகனைத் தருவாராயின் சூரபன்மன் முதலிய அசுரர்களெல்லாம் அழிவர். உலகமும் முன்போலச் சிறப்படையும். இறைவன் இறைவியை மணப்பதற்கு ஒன்று சொல்கிறேன் கேள். காமனை இறைவன்மேல் அனுப்புவையாயின் இறைவன் யோகம் நீங்குவர். இறைவியை மணந்து மகனைத் தந்தருளுவர்,'' என்றார். திருமால் கூறியதைக்கேட்டு நான்முகன் மகிழ்ச்சியடைந்தான். 'அவ்வாறே செய்கிறேன்,' என்று கூறி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான்.

# ௪. காமன் எரிதல்

## நான்முகனும் காமனும்

தன் இருப்பிடத்தையடைந்த நான்முகன், காமன் தன்னிடம் வரவேண்டுமென்று எண்ணினன். உடனே காமனும் நான்முகன் முன்பு தோன்றினன். நான்முகனை வணங்கி நின்றான். "என்னை நினைந்தருளியது எதன் பொருட்டோ?" என்று கேட்டான். நான்முகன் காமனை நோக்கிக் கூறலானன். 'நீ எங்களுக்காகத் திருக்கைலாய மலைக்குச் செல்லுதல்வேண்டும். உன்னுடைய மலர்க் கணைகளை இறைவன்மீது செலுத்துதல்வேண்டும். அதனல் இறைவன் மோனம் நீங்கி இறைவியைத் திருமணஞ் செய்தல்வேண்டும். பிறகு இறைவன் ஒரு திருமகனைப் பெற்றருளுதல்வேண்டும். அம்மகனல் நமது துன்பங்கள் எல்லாம் ஒழிதல்வேண்டும். நாம் இப்போது அவுணர்களால் பெருந்தொல்லையை நுகருகின்றோம் அல்லமோ?' என, நான்முகன் நவின்றவைகளைக்கேட்ட காமன் கலக்கத்தை யடைந்தான். தன்னிரண்டு காதுகளையுங் கைகளால் மூடிக் கொண்டான். நான்முகனைப் பார்த்து, அறிவுடைப் பெரியோர்கள் கொடியோர் தம்மிடம் வந்தாலும் அவர்கட்கு நல்வழியை நவில்வார்கள். அவ்வாறாக நான் உம்மிடத்தில் வர நீர் எனக்குக் கொடிய மொழிகளைக் கூறியருளினீர். என்னிடத்திலே உமக்கு அருள் இல்லையா?

வன்கண் ணருமா சறகாட் சியர்பால்
நன்கண் ணுறினும் நலம்பு கல்வார்
உன்கண் ணுறின்இத் தவறே நினையால்
என்கண் அடிகட் கிலையோ அருளே.

"நான் எல்லாத் தேவர்களையும் சிறந்த முனிவர்களையும் மனிதர்களையும் வெற்றி கொண்டது; முழுமுதற் பொருளாகிய இறைவனுடைய திருவருளேயாகும். என்னுடைய மலர்க்கணைகள் திருமால் முதலிய தேவர்களைத் தாக்கி வருத்துவனவாமே யன்றி இறைவன்மீது செல்லுமா? நான் இறைவனிடத்திற்கு மலர்க்கணைகளுடன் ஏகுவேனே

யாயின் உயிருடன் மீளவும் முடியுமோ? விருப்பு வெறுப் பற்ற பரம்பொருளை எவ்வாறு கலங்கச் செய்தல்கூடும்? நீர் இறைவனுடைய பெருமையை எண்ணிப் பார்க்காமற் பேசினீர். அவனை எதிர்த்தோரனைவரும் அழிந்தொழிந்தார் களே யல்லாமல் உயிருடன் மீண்டோர் யாவர்? முப்புரப் போருக்குச் சென்றபோது இறைவனது ஏவல்வழி நின்ற திருமால் முதலிய தேவர்களின் கருத்தை யறிந்த இறை வன் முப்புரங்களையும் நகைத்து எரித்தமையை நீர் அறியீரா? மார்க்கண்டேயரைப் பிடிக்க வந்த கூற்றுவனை உதைத்தமையை நீர் உணரமாட்டீரா? நீரும் திருமா லும் செருக்குக்கொண்டு, 'யானே பரம்பொருள், யானே பரம்பொருள்,' என்று சொற்போர் செய்யும்போது, இறைவன் தோன்றி உம்முடைய நடுத்தலையைக் கிள்ளி யதை மறந்துவிட்டீரா? சலந்தரன் முதலிய அவுணர்கள் இறைவனை யெதிர்த்து இறந்தொழிந்தமையை நீர் கேள் விப்படவில்லையா? உம்முடைய மகனாகிய தக்கன் இறை வனை இகழ்ந்து செய்த வேள்வியில், தக்கனும் தேவர்களும் வீரபத்திரக் கடவுளால் அடைந்த துன்பங்களை நீர் பார்க்க வில்லையா? பாற்கடலில் தோன்றிய நஞ்சைக்கண்டு திருமால் முதலிய தேவர்கள் அஞ்சி ஓட்டமெடுக்கவும் இறைவன் அந்நஞ்சினையுண்டு தம்மாற்றலைப் புலப்படுத்த வில்லையா? கங்கையின் பெருக்கைச் சடையில் தாங்கி அடக்கவில்லையா? நரசிங்கத்தின் வயிற்றைக் கிழிக்க வில்லையா? யானையையும், புலியையுந் தோலையுரிக்க வில்லையா? ஆணவங் கொள்வோரின் ஆற்றலை இறைவன் அழித்துக்கொண்டிருத்தலை நீர் அறியீரா? உலகங்க ளெல்லாம் இறுதிநாளில் இறைவனுடைய நுதற்கண்ணி னின்றும் தோன்றும் ஓர் பொறியினால் அழியுமென்பது உமக்குத் தெரியாதா? நான் கரும்பு வில்லையும், மலர்க் கணைகளையுங்கொண்டு இறைவனை யெதிர்க்கமாட்டேன். தம்முடைய உயிரினிடத்தில் விருப்பமில்லாதவர்கள் தாம் நீர் சொல்லுஞ் செயலைச் செய்தற்குத் துணிவார்கள். முழுமுதற்கடவுளை எதிர்ப்பது என்னால் முடியாது" என்று கூறினான்.

காமன் கழறியவைகளைக் கேட்டு நான்முகன் மனக் கவலை கொண்டான். சிறிதுபோது ஆழ்ந்து எண்ண மிட்டான். பிறகு காமனை நோக்கிப் பேசலானான். "நீ இறைவன் பெருமையை எடுத்துக் கூறினாய். நீ கூறிய வைகளெல்லாம் உண்மையே. இறைவனை யெதிர்த்து வெற்றி கொள்ளுதல் எத்தகையோருக்கும் அருமையான செயலேயாகும். ஆயினும், இச்செயல் உன்னாலேதான் முடிய வேண்டியதாக விருக்கிறது. இச்செயல் பிறரால் நிறைவேறக் கூடியதன்று. எல்லோருடைய செயலும் இறைவன் செயலேயன்றி வேறன்று. இறைவன் திரு வருளையன்றி ஓரணுவும் அசையாது. நீ இப்பொழுதே இறைவனிடத்திற்குச் செல்லக்கடவாய். துன்பம் அனு பவிப்போர் யாவராயினும் தமக்கு உதவி செய்யுமாறு வேண்டிக்கொண்டாராயின் செய்யவேண்டியது கட்டாய மாகும். அவ்வாறு செய்யாது தன்னுயிரைத் தாங்குதல் உலக நடைக்கு ஒத்ததாகாது. ஒருவன் பிறருக்கு யாதேனும் ஓர் உதவியைச் செய்யத் தக்கவனாயின், அவ் வுதவியை அவர்கள் கேட்காமல் தானே செய்தல் முதன்மை யானதாகும். அவ்வாறின்றி அவர் சொல்லியபின் செய் தல் இடைப்பட்ட செயலாகும். சொல்லிய பின்பு பல நாள் பொறுத்துச் செய்தல் கடைப்பட்ட செயலாகும். ஒருவருடைய துன்பத்தை நீக்கும்பொருட்டுத் தம்முயிரை விடினும் அஃது அறமேயாம். மறுத்துரைப்பின் தீவினை யும் இழிவும் உண்டாகும். ஒருவன் தான் உயிர் வாழ் தலையே பெரிதாக எண்ணிப், பிறருக்கு உதவி செய்யா னாயின் அவன் இழிந்தவனாவான். அவன் போக்கிய நாட்கள் நல்ல நாட்களாகமாட்டா.

ஈங்கிதுவும் அன்றி எவரேனும் தம்மடங்காத்
தீங்குபெறின் உதவி செய்என்(று) இரந்திடலும்
ஆங்கொருவன் செய்யா(து) அதுமறுத்துத் தன்உயிரைத்
தாங்கல் உலக நடைதனக்குத் தக்கதுவோ ?

என்னானும் ஓர்உதவி யாதொருவன் யார்க்கெனினும்
தன்னால் முடிவதெனில் தானே முடித்தல்தலை
சொன்னால் முடித்தல் இடையாகும் சொல்லுகினும்
பன்னாள் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே.

எவர் எனினும் இடர்உற் றனராகி
ஒவில் குறையொன்(று) உளரேல் அதுமுடித்தற்கு
ஆவி விடினும் அறனே மறுத்துளரேல்
பாவம் அலது பழியும் ஒழியாதே.

உய்கை பொருளா ஒருவர்க்கும் ஒருதவி
செய்கை இலனேல் சிறியோன் கழித்தபகல்
வைகல் அதுவோ வறிதே அவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்தகொட்டி போலும் பொலிந்துளதே.

திருமாலோடு போர்செய்து வென்ற ததீசிமுனிவர், விருத்திராசுரனைக் கொல்லும்பொருட்டு இந்திரன் வந்து இரக்கத் தம்முடைய முதுகெலும்பைக் கொடுத்து உயிர் விடவில்லையா? கொடிய நஞ்சை இறைவன் உண்டு தேவர்களைக் காத்தமையை நீ உணரவில்லையா? அந் நஞ்சை ஒரு கணம் எதிர்த்து நின்று திருமால் கருநிறத்தை யடையவில்லையா? ஒருவர் பிறர்மீது அன்புகொண்டு அவருக்கு உதவிசெய்ய விரும்புவாராயின், அதனால் தமக்கு வருந் துன்பத்தையேனும் சாவையேனும் ஒரு பொருட்படுத்தார். புகழ் ஒன்றையே தம்முடைய பயனாகக் கொள்ளுவார்கள். மிகுந்த ஆற்றலுடைய சூர பதுமனின் கொடுமையாலே நாமனைவருந் துன்புற்று வருந்துகிறோம். அத்துன்பம் அகலும்பொருட்டுச் சிவ பெருமான் ஒரு திருமகனைப் பெறுதல்வேண்டும். அதன் பொருட்டே உன்னை வேண்டுகிறோம். நமது துன்பம் ஒழியும்பொருட்டு நீ சாக்காட்டை மேற்கொள்வதற்குச் சிறிதும் அஞ்சாதே. புகழ் தேடுவார் எத்தகைய தீமையை யும் ஒரு பொருளாக எண்ணார். விரைந்து இறைவனுக்கு முன் செல்வாயாக.''

## காமன் மறுத்துரைத்தல்

நான்முகன் கூறியவைகளைக் கேட்டுக் காமன் துன்ப மடைந்தான். "நான் இறைவனுக்கு மாறாக நடக்கமாட்டேன். என்னாற் செய்யக்கூடியதாயிருந்தாற் செய்கிறேன்'' என்றான்.

## நான்முகன் சினத்தல்

காமன் மறுத்துரைத்ததைக் கண்டு நான்முகன் சினங் கொண்டான். "நான் கூறியவைகளை நீ கேட்கமாட்டேன் என்கிறாய். நான் கூறியபடி கேட்டாற் பிழைப்பாய். மறுத்துரைப்பாயாயின் சாபங் கொடுப்பேன்; எது உனக்கு முடிவு?" உடனே சொல்வாயாக என்றான்.

## காமன் உடன்படுதல்

நான்முகனுடைய சினத்தைக் கண்டு காமன் கலங்கினான். பெருமூச்செறிந்தான். இனி யாது செய்யலாமென்று எண்ணமிட்டான். தன்னுளத்தை ஒருவாறு தெளிவு செய்துகொண்டான். நான்முகனைப் பார்த்து, "நீர் கொடுக்குஞ் சாபங்களைப் பெற்று அழிவதினும் இறைவனுக்கு முன்பு சென்று அழிதலே சிறந்தது. நான் இறைவனோடு போருக்குச் செல்லுகிறேன்" என்றான். காமனுடைய உடன்பாட்டைக் கண்டு நான்முகன் மகிழ்ந்தான். "காமனே! உன்னுடைய முடிவு மிகவும் நல்லது. இறைவனிடத்திற்கு உன்னை அனுப்பிவிட்டு நாங்கள்மட்டும் இங்கிரேம். நாங்களும் பின்வருவோம். அஞ்சாமற் செல்வாயாக!" என்று ஏவினான்.

## காமன் கைலைக்குச் செல்லுதல்

காமன் தன்னுடைய நகரத்தை யடைந்தான். தன் மனைவியாகிய இரதியைக் கண்டான். நிகழ்ந்தவைகளையெல்லாம் அவளுக்குக் கூறினான். அவள் கலங்கினாள். அவள் உள்ளத்தை ஒருவாறு தெளிவித்தான். மலர்க் கணைகள் பொருந்திய தூணியை முதுகிலே கட்டினான். மாந்தளிராகிய உடைவாளை அரையிலே கட்டினான். கரும்புவில்லைக் கையிலே பிடித்தான். குயில்கள் காகளமாகவும், கடல்கள் முரசமாகவும் ஒலித்தன. கிளிகளாகிய குதிரைகள் பூட்டப்பெற்ற தென்றலாகிய தேர்மீது இரதியுடன் ஏறினான். தன்னுலகத்தை அகன்று சென்றான். தீய சகுனங்கள் பல தோன்றின. திருக்கைலைமலையை நெருங்கினான். தேரைவிட்டு இறங்கிக் கைலைமலையை

வணங்கினான். தன்னைச் சூழ்ந்து வந்தவர்களைத் தொலைவி லேயே நிறுத்திவிட்டுத் தான் மட்டும் துணிந்து சென்றான். மலைமீது ஏறினான். அங்குக் காமப்பற்று அற்றிருந்த உயிர்கட்கெல்லாம் காமப்பற்றை உண்டாக்க எண்ணினான். காமனுடைய செயலைக்கண்டு நந்திதேவர் சினந்தார். காமன் நந்திதேவரைக் கண்டு வணங்கினான். நான்முக னுடைய வேண்டுகோளைக் கூறினான். சிவபெருமான் இட்டிருந்த கட்டளையை எண்ணிய நந்திதேவர் காமனை உள்ளே புகவிட்டார்.

## காமன் எரிதல்

காமன் நந்திதேவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு மேலைவாயிலாலே உள்ளே சென்றான். இறை வன் எழுந்தருளியிருத்தலைக் கண்டான். சரபப் பறவை யைக்கண்ட சிங்கக்குட்டிபோல அஞ்சி நடுநடுங்கினான். கையில் இருந்த படையோடு நடுங்கிக் கீழே விழுந்தான். இரதி அவனைத் தூக்கித் தெளியச்செய்தாள். காமன் அறிவு வரப்பெற்றான். பலவாறு எண்ணமிட்டு மயங்கி வருந்தினான். எண்ணுவதில் பயன் யாது? நான்முக னுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றுதலே தக்கதென்று திடங்கொண்டான். வில்லை விளைத்து மலர்க்கணைகளை இறைவன்மீது செலுத்த முயன்றான்.

நான்முகன் இந்திரன் முதலிய தேவர்களும் கைலை மலையை யடைந்து காமன் யாது செய்கின்றான் என்று பார்த்துக்கொண்டு நின்றார்கள். காமன் கரும்புவில்லிலே தொடுத்த மலர்க்கணைகளைச் சிவபெருமான்மீது செலுத்தி னான். அவை இறைவன்மீது சென்று பட்டன. இறை வன் தமது திருக்கண்களைச் சிறிது திறந்து பார்த்தார். அவ்வளவில் இறைவனுடைய நெற்றிக்கண் காமனைச் சுட்டது. திருக்கயிலைமலை யெங்கும் புகை பரவியது. புகை பரவியதைக் கண்ட நந்திதேவர், "காமன் எரிந்துவிட் டான்" என்று தம்மைச் சூழ்ந்திருந்த கணங்களுக்குக் கூறியருளினார்.

## இரதி வருந்துதல்

காமன் எரிந்த பிறகும் இறைவன் முன்போலவே யோகத்தில் எழுந்தருளியிருந்தார். இரதி தன் கணவன் எரிந்தழிந்ததைக் கண்டு துன்பங்கொண்டாள். கண்ணீர் சொரிய அறிவிழந்து கீழே விழுந்தாள். பின்னர் எழுந்து வயிற்றிலே அடித்துக்கொண்டு புலம்பலானாள்: "திருமகள் மகனே! என் உயிரே! திருமாலின் செல்வனே! சம்பரனுக்குப் பகைவனே! கரும்புவில்லைக் கையிற்கொண்ட காளையே! செம்பவழ மலையைப்போன்ற சிவபெருமானுடைய நுதற்கண்ணால் எரிந்தாயே! தேவர்களுடைய கண்களெல்லாம் உறங்கினவோ? நான்முகனாரும் மனமகிழ்ந்தாரோ? முப்புரங்களையெரித்தருளியமுதல்வனோடும் போர்செய்யச் சென்றாயே! தேவர்களுடைய பேச்சைக் கேட்டுச் சென்ற நின்னுடைய உடல் பொடியாகப் போய் விட்டதே! என்னுயிராகிய நீ இறந்தபின்பும் நான் தனியே இருக்கலாமா? என் கணவனே! உனக்கு நான் ஏதேனும் குறை செய்ததுண்டோ? சிவபெருமானுடைய யோகத்தை மாற்ற விரும்பினால், தேவர்களெல்லாரும் இறந்தார்களா? நீமட்டுந்தானா அதற்கு முன்னிற்கவேண்டும்? உன்னை இவ்வாறு கொல்லாமற் கொன்றார்களே! பொல்லாதவர் கட்கு நல்லது செய்யப்போனால் தீங்குண்டாகுமல்லவோ? நான் என்ன தீவினை செய்தேனோ? என்னாழ் இவ்வாறு முடிந்ததே! அந்தோ! நான் என்செய்வேன்? என்னை விட்டு விட்டு நீ எங்கிருக்கின்றாய்? எல்லாத் தேவர்களுங்காண என்னைத் திருமணஞ்செய்த காலத்தில், 'உன்னை என்றும் பிரியேன்' என்று உறுதிமொழி உரைத்தாயே! என்னைத் தனியே விட்டுப்போதல் நீதியோ? உன்னை இங்கு விடுத்த தேவர்களெல்லாருங்கூடி உன்னை யெழுப்பமாட்டார்களா?" என்று கூறிப் பலவாறு வருந்தினாள்.

செம்பதுமை திருக்குமரா! தமியேனுக்
காருயிரே! திருமால் மைந்தா!
சம்பரனுக் கொருபகைவா! கன்னல்வரிச்
சிலைபிடித்த தடக்கை வீரா!

அம்பவளக் குன்றனைய சிவன்விழியால்
வெந்துடலம் அழிவுற் றாயே!
உம்பர்கள்தம் விழியெல்லாம் உறங்கிற்றோ?
அயனாரும் உவப்புற் றாரோ?

வில்லால்முப் புரம்எரித்த பரம்பொருள்யோ
கந்தவிர்க்க வேண்டில் விண்ணோர்
எல்லாரும் இறந்தனரோ? என்கணவா!
நீயோதான் இலக்காய் நின்றாய்!
கொல்லாது போலவுனைக் கொன்றனரே!
என்னுயிர்க்குங் கொலைசூழ்ந் தாரே!
பொல்லாத பேர்க்குநன்றி செய்வதுதம்
உயிர்போகும் பொருட்டே யன்றோ?

## ரு. இறைவன் மோனம் நீங்குதல்

### தேவர்கள் இறைவனைப் போற்றுதல்

காமன் இறந்தொழிந்தமையையும், இறைவன் மீண்டும் யோகத்தில் எழுந்தருளியிருத்தலையும் நான்முகன் முதலிய தேவர்கள் கண்டார்கள். அஞ்சி நடுநடுங்கினார்கள். கண்ணீர் சொரிய வருந்தித் துன்பக்கடலில் அமிழ்ந்தார்கள். "நமது துன்பம் தீரும்பொருட்டுக் காமனை இறைவனிடத்தில் அனுப்பினோம். அவனை எரித்தழித்தார். ஆயினும், தமது யோகநிலையை விடுத்திலர். இனி யாது செய்வோம்!" என்று சோர்ந்தார்கள். பிறகு ஒருவாறு மனந்தெளிந்தார்கள். இறைவனைப்போற்றி வழிபட்டு நம்முடைய தொல்லைகளைப் போக்கிக்கொள்ளுதலே நல்லது என்று முடிவுசெய்தார்கள். பிறகு அனைவரும் இறைவன் எழுந்தருளியுள்ள இடத்திற்குப் பக்கத்தே சென்று புகழ்ந்து போற்றலானார்கள்.

"எம்பெருமானே! முன்னாளில் நஞ்சையுண்டும், கங்கையைத் தாங்கியும், அவுணர்களைக் கொன்றும் அடியேங்களைக் காப்பாற்றியருளினீர். இப்பொழுது எங்கட்கு அருள்செய்யமாட்டீராயின் உம்முடைய மக்களாகிய எங்கட்குவேறு புகலிடம் யாதுளது? அடியார்கள் குற்றமே செய்தாலும் அவற்றைக் குணமாகக்கொண்டரு

ளும் இறைவனே! உம்முடைய திருவடிகளையே அடைக்கலமாக அடைந்தோம். நாங்கள் நாள்தோறும் அவுணர்களால் வருந்தித் துன்பப்படலாமா? எங்கள் துன்பத்தைத் தாம் திருவுளம்கொண்டருளமாட்டீரோ? நீர் இறைவியைப் பிரிந்து யோகநெறிக்கண் அமர்ந்தது உமக்கு ஒரு கணப்பொழுதேயாயினும், எங்கட்குப் பல ஊழிகளாய்விட்டன. இன்னும் நீர் அருள்செய்யாதிருப்பீராயின் நாங்கள் உய்வது எப்படி? ஐந்தொழில்களையும் புரியும் நீர் தவநிலைக்கண் நிற்றல் எம்பொருட்டேயாகும். சிறியேங்கள் முன்பு செய்த தீவினையின்பொருட்டே எங்களை இவ்வாறு வருத்துகிறீர். இனிமேலாயினும் காத்தருளும். அல்லது விரைவாகக் கொன்றுவிடும்,'' என்று கூறிப் பலவாறு போற்றினார்கள்.

## இறைவன் தேவர்கட்கு அருளுதல்

தேவர்கள் வருந்திப் போற்றுதலைச் சிவபெருமான் உணர்ந்தார். திருவுளம் இரங்கினார். திருநந்திதேவரை எண்ணினார். நந்திதேவர் சிவபெருமான்முன் சென்று வணங்கினார். இறைவன் நந்திதேவரைப் பார்த்து, "நான்முகன் முதலிய தேவர்களை நம்முன் அழைத்துக்கொண்டு வரக்கடவாய்'' என்று திருவாய்மலர்ந்தருளினார். நந்திதேவர் வெளியே எழுந்தருளி வந்தார். நான்முகன் முதலிய தேவர்கள் நந்திதேவரைப்போற்றி வணங்கினார்கள். நந்திதேவர் அவர்களைச் சிவபெருமான் முன்பு அழைத்துக்கொண்டு சென்றார். தேவர்கள் சிவபெருமானைக் கண்டு வணங்கிப் போற்றினார்கள். சிவபெருமான் தேவர்கட்குத் திருவருள் புரிந்தருளினார். "உங்களுக்கு நிகழ்ந்த துன்பம் யாது? என்ன செய்தல் வேண்டும்?'' என்று கேட்டருளினார். தேவர்கள் இறைவனைப் பார்த்து "எம்பெருமானே! நாங்கள் சூரபதுமனுடைய தொல்லையினாலே துன்பப்படுகிறோம். அடியேங்களுடைய துன்பத்தை நீக்குவோர் உம்மையன்றி வேறு யாவருளர்? சூரபதுமனையழித்தற்கு ஒரு திருமகனைப் பெறும்பொருட்டு இமயமலையில் தவஞ்செய்யும் உமாதேவியாரைத் திருமணஞ்

செய்தருளல்வேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டார்கள். தேவர்களின் வேண்டுகோளுக்குச் சிவபெருமான் இசைந் தருளினர். "நீங்கள் வருந்துதல்வேண்டாம். நாம் உமையை மணந்து உங்கள் வருத்தத்தை நீக்குவோம்; நீங்கள் செல்லுங்கள்,'' என்று திருவாய்மலர்ந்தருளினர். நான்முகன் முதலிய தேவர்கள் இறைவனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்றார்கள்.

## இரதி வேண்டுகோள்

இரதி இறைவன் முன்னர்ச் சென்று வணங்கினள். இறைவனைப் பார்த்து, "நான்முகன் முதலிய தேவர்களின் வேண்டுகோளால் என் கணவன் இங்கே வந்து எரிந்து இறந்து போனன். அவனை யெழுப்பித் தருதல்வேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டாள். இறைவன் திருவுளம் இரங்கினர். இரதியைப் பார்த்து, "நீ வருந்துதல் வேண் டாம். நாம் இமயமலை மீது தவஞ்செய்துகொண்டிருக்கும் உமையைத் திருமணஞ் செய்யும்போது உன் கணவனை உயிர்ப்பித்துத் தருவோம். நீ செல்லக்கடவாய்'' என்று கூறியருளினர். இரதி இறைவனைப் போற்றினள். இமய மலையின்ஓரிடத்தே சென்று தங்கியிருந்தாள்.

## நால்வர்க் கருளுதல்

இறைவன் உமாதேவியைத் திருமணம்புரிந்து தேவர்க ளுடைய துன்பத்தை நீக்குதற்கு எண்ணினர். சனகர் முதலிய நால்வரையும் பார்த்தார். "ஞானயோகம் நவிலற் பாலதன்று. அஃது இவ்வாறு மவுனத்தோடிருந்து நம்மை யறிதலேயாகும்'' என்றார். முனிவர்கள் இறைவனை வணங்கினர்கள். "நாங்கள் மயக்கம் நீங்கிக் கடைத்தேறி னோம்,'' என்றார்கள். "இனி நீங்கள் யோகத்திலிருந்து மேலான நெறியை அடையக்கடவீர்க,''ளென்று அவர்கட்கு விடை கொடுத்தருளினர் சிவபெருமான்.

## கூ. தவங்காணல்

### இறைவன் உமாதேவி தவஞ்செய்யும் இடத்துக்கு எழுந்தருளல்

முனிவர்கள் சென்ற பின்பு இறைவன் உமாதேவி தவஞ்செய்தலைக் காண எண்ணினர். துறவிக்கோலம் பூண்டார். உமாதேவியார் தவஞ்செய்யும் தவச்சாலையை யடைந்தார். மாறுகோலம் பூண்டுள்ள இறைவனைக் கண்ட தோழியர், இறைவியிடஞ் சென்று "ஒரு முதிய துறவி நின்னைப் பார்த்தற்கு வந்துள்ளார்," என்று கூறினர்கள். "அவர் முதியவராயின் இங்கே அழைத்துக் கொண்டு வருக," என்று உமாதேவி கட்டளையிட்டாள். தோழியர்கள் முதியவரை அவ்வாறே இறைவியிடத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றனர். உமாதேவியின் அண்மைத் தோழியாகிய விசயை பெரியவர்க்கு ஓர் இருக்கை கொடுத்து அதில் அமரச்செய்தாள். உமாதேவியைப் பெரியவர் அன்புடன் நோக்கினர். "உனது அழகெல்லாம் வீணாக ஒழிய உடல் இளைக்கப் பெருந்தவம் புரிகின்றாய்; உன்னுடைய நோக்கம் யாது கூறு?" என்று கேட்டார். உமாதேவியின் குறிப்பையுணர்ந்த தோழி "அடிகாள்! இவ்வம்மையானவள் தன்னைச் சிவபெருமான் திருமணஞ் செய்துகொள்ளும்பொருட்டுத் தவஞ் செய்கின்றாள்," என்றாள். விசயை கூறியதைக்கேட்டுத் துறவியாக வந்த முதியவர் நகைத்தார். "நான்முகன் திருமால் முதலிய தேவர்கட்குக்கூட அரியவராக உள்ள சிவபெருமான் இவளுடைய தவத்துக்கு எளியவராவாரா? எளியவராயினுந் திருமணஞ் செய்துகொள்ளுவாரா? இவள் வீணாகத் தவஞ் செய்கின்றனள். இவள் வருந்தித் தவஞ் செய்தலால் ஒரு பயனுமில்லை. இவள் தன்னுடைய தவத்தை விடுதலே தக்கதாகும்" என்று கூறினர்.

### உமாதேவி

இறைவன் கூறியவைகளைக் கேட்ட உமாதேவி வருந்தினாள். பெரியவருக்குத் தானே பதிலுரை பகரத்

தொடங்கி, "முதலும் முடிவுமில்லாத இறைவன் என் கருத்தை நிறைவேற்றுதொழியினும் நான் தவஞ்செய்தலை விடமாட்டேன். இன்னுங் கொடிய தவத்தை அளவில்லாத காலஞ் செய்வேன். நீர் முதியவராகையால் அறிவு மயங்கியிருக்கிறீர்," என்றாள்.

## இறைவன்

மேலும் இறைவனாகிய முதியவர் உமாதேவியாரைப் பார்த்து, "நீ சிவபெருமானுடைய இயல்பை நன்றாக உணரவில்லை. அதனை நாம் சொல்லுகின்றோம் கேள். சிவ பெருமானுக்கு ஆடை தோல்; ஊர்தியோ எருது; அணிகலனோ பாம்பும், எலும்பும், பன்றிக்கோடும் தலைமாலையுமாம். உண்கலமோ தலையோடு; உணவோ நஞ்சும் ஐயமேற்றலும்; கூத்தாடுமிடமோ சுடுகாடு; மேலும் அவரிடமிருப்பனவோ சூலம், மான், மழு, தீ முதலியன; படைகளோ பூதங்கள். மேலும் அச்சிவபெருமானுக்குத் தாய் தந்தை முதலிய உறவினரும் இலர். இச் சிறப்புக்களையெல்லாம் நீயும் அடையும்பொருட்டா தவஞ் செய்கின்றாய்? நீ பெருஞ்சிறப்புடைய மலையரசன் மகள் அல்லவோ?" என்றார்.

## உமாதேவி

மாறுவேடம் பூண்ட இறைவன் கூறியவைகளைக் கேட்ட இறைவி பெருஞ் சினங்கொண்டாள். முதியவரைப் பார்த்து, "ஓ பார்ப்பானே! சிவபெருமானிடத்திலே உனக்குச் சிறிதாயினும் அன்பில்லை. நீ கொண்டுள்ள கோலம் பொய்க்கோலமாக விருக்கின்றது. முன்னாளிலே சிவபிரானையிகழ்ந்த தக்கன்பட்ட பாட்டை நீ கேட்டதில்லையா? நீ இவ்வாறு சிவபெருமானை இகழ்ந்தாயே! மறையை ஆராய்ந்துணரவில்லையா? நீ பார்ப்பானாகவிருந்தும் தீயமொழிகளையே பேசினாய். அவுணர்களுக்குள்ளே கூட உன்னைப்போன்ற கொடியவர்கள் இலர். சிவபெருமான் கொண்டருளியுள்ளவைகளெல்லாம் எல்லா உயிர்களும் உய்யும்பொருட்டுக் கொண்ட குறிகளென்று

உணரக்கடவாய். எம்பெருமானுடைய இயல்புகளையெல்லாம் உணரக்கூடியவர் யாவர்? பொய்க்கோலம் பூண்டு வந்தவனே! உடனே நீ புறப்பட்டு வெளியே போய்விடுவாயாக!'' என்றாள்.

### இறைவன்

பார்ப்பனக்கோலம் பூண்டுவந்த பரமன், இறைவியைப்பார்த்து, "உன்மேல் விருப்பங்கொண்டு வந்த என் சொல்லைக் கேளாது, என்னை வெளியே போய்விடும்படியாகச் சொல்லுகின்றாய்! இது தகுதியாகுமா? நான் இங்கு வந்தது உன்னைத் திருமணஞ் செய்துகொள்ளும் பொருட்டேயாகும்,'' என்றார்.

### இறைவன் காட்சி யளித்தல்

பொய்க்கோலப் புங்கவன் புகன்ற மொழிகளைக் கேட்ட இறைவி வருந்தினாள். உள்ளம் பதைபதைத்தாள். "இக்கிழவன் வெளியே போகமாட்டான்; நான் அப்பாற் போய்விடுகிறேன்'' என்று வேறோரிடத்துக்குச் சென்றாள். இறைவன் பலகணங்கள் தம்மைச் சூழ்ந்து துதிப்ப, எருதாகிய ஊர்தியின்மீது விண்ணில் தோன்றிக் காட்சி கொடுத்தார். இறைவி இறைவனைப் போற்றி வணங்கினாள். "பெருமானே! உம்முடைய மாயையை அறியாமல் இகழ்ந்துரைத்துவிட்டேன்! என்னுடைய குற்றத்தை பொறுத்தருளவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டாள். சிவபெருமான் உமாதேவியைப் பார்த்து, "நீ இகழ்ந்துரைத்தவைகளையெல்லாம் புகழ்ந்துரைத்தவைகளாகவே கொண்டோம். இனிமேல் நீ கொடிய தவத்தைச்செய்து வருந்தாதொழி. நாளை உன்னைத் திருமணம் செய்ய வருவோம்,'' என்று கூறி மறைந்தருளினார். உமாதேவியார் திருவுளம் மகிழ்ந்து இறைவனை யெண்ணிக்கொண்டிருந்தார். சில தோழியர் மலையரையனிடத்திற்குச் சென்று நிகழ்ந்ததைத் தெரிவித்தார்கள். மலையரசன் நிகழ்ந்ததையறிந்து மனம் மகிழ்ந்தான். தன் மனைவி மேனையுடன் விரைந்து வந்து இறைவியைத் தன்னுடைய அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு சென்றான்.

## எ. மணம் பேசுதல்

### மணம் பேசுதற்கு முனிவர்களை ஏவுதல்

இறைவியின் தவத்தைக்கண்டு சென்ற இறைவன் மணம் பேசுதற்கு எண்ணினார். முனிவர்களெழுவருந் தமக்கு முன்னே வருமாறு எண்ணியருளினார். முனிவர்களும் உடனே இறைவனுக்கு முன் தோன்றி வணங்கினார்கள். "எங்களை நினைந்தருளியது எக்காரணமோ?" என்று கேட்டார்கள். இறைவன் அம்முனிவர்களைப் பார்த்து "நீங்கள் இமயமலையரசனிடஞ்சென்று இறைவியை மணம் பேசி வருவீர்களாக," என்று கட்டளையிட்டருளினார்.

### முனிவர்கள் மணம் பேசுதல்

இறைவன் ஏவலை முனிவர்கள் தலைமேற் கொண்டார்கள். இமயமலையரசனுக்கு முன் சென்றார்கள். இமயமலையரசன் தன் மனைவியோடும் எதிர்வந்து போற்றி வணங்கினான். அழைத்துக்கொண்டு சென்று, இருக்கையில் அமர்த்திப் போற்றினான். பலவாறு புகழ்ந்துரைத்தான். 'எழுந்தருளியது எக்காரணம் பற்றியோ?' என்று உசாவினான். முனிவர்கள் தாங்கள் உமாதேவியை இறைவனுக்கு மணம் பேசவந்த செய்தியை தெரியப்படுத்தினார்கள். முனிவர்கள் கூறியதைக்கேட்டு மலையரசன் மனமகிழ்ந்தான். "உமாதேவியை இறைவனுக்குத் திருமணஞ்செய்து கொடுக்கிறேன்," என்றான்.

அப்பொழுது மலையரசனுடைய பக்கத்திலே நின்றிருந்த அவனுடைய மனைவியாகிய மேனையானவள், முனிவர்களைப் பார்த்து, "நான்முகன் மகனாகிய தக்கன் தன் மகளைச் சிவபெருமானுக்கு மணஞ்செய்து கொடுத்தான். சிவபெருமான் அந்தத் தக்கனுடைய தலையையறுத்தார் என்று பலரும் பேசுகின்றார்கள். அதனை எண்ணும்பொழுது என்னுடைய மனமானது அஞ்சுகின்றது. அவ்வாறாக எங்கள் மகளை எவ்வாறு சிவபெருமானுக்குத் திருமணஞ் செய்துகொடுப்பது?" என்றாள்.

முனிவர்கள் மேனையைப் பார்த்து, 'நீ சிவபெருமானுடைய உயர்வும் ஒப்பும் இல்லாத குணங்களை நன்றாக உணரவில்லை. தக்கன் வேள்வியிலே இறைவனுக்குக் கொடுக்கவேண்டிய அவியைக்கொடுக்காமல் இகழ்ந்தபடியால் தலையைப் போக்குமாறு நிகழ்ந்தது. தம்மை வழிபாடு செய்பவர்கட்குத் திருவருளும், இகழ்பவர்களுக்குத் தீமையும் புரிதல் சிவபெருமானுடைய இயல்பு. இவ்வுண்மையை எல்லோரும் நன்குணர்வார்கள்," என்று கூறினார்கள். மேனை அஞ்சி நடுங்கினாள். "இறைவனுடைய அருளை அறியாமற் சொல்லிவிட்டேன்; என்னுடைய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்.

மலையரசன் முனிவர்களைப் பார்த்து, "அறிவு சிறிதும் இல்லாத இவளுடைய புன்மொழிகளைத் திருவுளத்திலே கொண்டருளாதீர்கள். உமாதேவியை மணஞ் செய்தற்கு இறைவனை இங்கெழுந்தருளுமாறு செய்யுங்கள்," என்றான். முனிவர்கள் மனமகிழ்ந்து திருக்கைலைமலையை அடைந்தார்கள். சிவபெருமான்முன் சென்று அவரை வணங்கிப் போற்றினார்கள். மலையரசன் திருமணத்திற்கு உடன்பட்டமையைக் கூறினார்கள். பிறகு சிவபெருமானிடம் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார்கள்.

## அ. மணவிழாவுக்கு அழகு செய்தல்

### தெய்வத் தச்சன் திருப்பணி

சிவபெருமான், தன் மகளாகத் தோன்றிய உமாதேவியிடம் எழுந்தருளிக் காட்சி கொடுத்ததையும், முனிவர்களை அனுப்பி மணம் பேசியதையும் நினைந்து மலையரசன் மகிழ்ச்சியடைந்தான். தேவதச்சன் தன்முன் வரும்படி நினைத்தான். அவனும் உடனே தோன்றினான். மலையரசன் தேவதச்சனைப்பார்த்து, 'எல்லாவுலகங்கட்கும் தாயாகிய உமாதேவியை, எல்லாவுலகங்கட்கும் தந்தையாகிய சிவபெருமானுக்கு மணஞ்செய்து கொடுத்தல்வேண்டும்.

நீ நமது நகரம் முழுவதையும் அமராவதியைப்போல அழகுபடுத்துவாயாக,'' என்று கட்டளையிட்டான்.

தேவதச்சன் நகரத்தை அழகுபடுத்தத் தொடங்கினான். இமயமலையின்மேலே கோபுரங்களையும், மண்டபங்களையும், பந்தர்களையும் அழகுடையவைகளாக உண்டாக்கினான். பந்தர்களின் மேலே கொடிகளைக் கட்டினான். உள்ளே மேற்கட்டிகளினாலே பலவகை அழகுகளைச் செய்தான். சாமரங்களையும், பூமாலைகளையுந் தொங்கவிட்டான். வாழைகளையும், பாக்குமரங்களையும் நாட்டினான். பலவகைத் தோரணங்களைக் கட்டினான். கணக்கற்ற தேவர்கள் கொண்டுவரும் பொருள்களையெல்லாம் வைக்குமாறு பொருட்சாலைகளை அமைத்தான். கோயிலுக்கு ஒரு பக்கத்திலே பதினாயிரம் யோசனைப் பரப்புடையதாகிய ஒரு மதிலையும், அதன் நான்கு வாயில்களினுங் கோபுரத்தையும் செய்தான். அதன் நடுவிலே திருமண மண்டபத்தைச் செம்பொன்னினாலே செய்தான். சந்தனமும், கத்தூரியும், புழுகுங்கலந்த பனிநீரினாலே நிலத்தை மெழுகினான். அதன்மேலே நறுமணம் மிக்க மலர்களைத் தூவினான். தேவர்களனைவருக்கும் இருக்கைகளை அமைத்தான். பல நிறங்களினாலுந் திண்ணைகளைக் கட்டினான். தேவர்களையும், முனிவர்களையும், அரம்பையர்களையும்போல உருவங்களைச் செய்து, அவைகள் சாமரை வீசுதல், வீணைவாசித்தல், கூத்தாடுதல் முதலியவைகளைச் செய்யுமாறு அமைத்தான். திருமணச்சாலையினுள்ளே சிவபெருமானும், உமாதேவியாரும் எழுந்தருளும்பொருட்டு இந்திரநீல இரத்தினத்தினால் ஒரு சிறந்த அரியணை செய்தான். மற்றும் பலவகையான சிறப்புக்களைச் செய்து திருமணச்சாலையைப் பேரழகுடையதாக முடித்தான்.

## திருமணச்செய்தி தெரிவித்தல்

தேவதச்சன் திருமணச்சாலையை முடித்ததை மலையரசன் கண்டு மகிழ்ந்தான். நான்முகன், திருமால், தேவர்கள், முனிவர்கள் முதலியோர் தங்கள் மனைவியுடன் திருமணவிழாவுக்கு வருமாறு எங்குந் தூதர்களைப் போக்கி

னன். தேவர்களுடைய மனைவியர்கள் அனைவரும் இமய மலையை அடைந்து உமாதேவியாரை வணங்கிப் போற்றினார்கள். திருமகள், கலைமகள் முதலியோர் உமாதேவியை வணங்கித் திருமணக்கோலம் செய்யலானார்கள். இமய மலையினுடைய சுற்றங்களாகிய மகாமேரு, மந்தரம் முதலியவைகளும், கடல்களும், நாகர்களும், திக்கு யானைகளும் திருமணத்திற்கு வந்தன.

### இறைவனை அழைத்தல்

திருமண ஏற்பாடுகளெல்லாம் இனிது நிறைவேறின. மலையரசன் தன் சுற்றத்தாரோடு திருக்கைலைமலையை அடைந்தான். நந்திதேவர் கட்டளைபெற்று உள்ளேசென்று இறைவனை வணங்கினன். உமாதேவியைத் திருமணஞ் செய்தற்கு எல்லா ஏற்பாடுகளும் இனிது முடிந்தன. திருமணம்புரிதற்கு இமயமலைக்கு எழுந்தருளுதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபிரான் மலையரசனைப்பார்த்து, "நாம் கணங்களுடன் இப்பொழுதே புறப்படுகிறோம். நீ முன்னே செல்லக்கடவாய்," என்று கட்டளையிட்டருளினார். மலையரசன் வணங்கி விடைபெற்றுக் கொண்டு தன் நகரத்தையடைந்தான்.

## ௯. திருமணத்திற்குச் செல்லுதல்

### தேவர்களை யழைத்தல்

சிவபிரான் நந்திதேவரைப் பார்த்தார். "நம்முடைய திருமணத்தைக் காணும்பொருட்டு, உருத்திரர்களையும், திருமால் நான்முகன் இந்திரன் முதலிய தேவர்களையும், மற்றையோர்களையும் இங்கே அழைக்கக்கடவாய்" என்று பணித்தருளினார். நந்திதேவர் சிவபெருமான் குறிப்பிட்ட தேவர்களைத் திருவுள்ளத்திலே எண்ணியருளினார். அதனையறிந்து அனைவரும், திருக்கைலைமலைக்கு வந்து கூடினார்கள். காலாக்கினி ருத்திரர் ஆயிரகோடி கணங்களுடன் வந்தார். கூர்மாண்டேசர் எழுபத்திரண்டு கோடிப் பூதங்கள் சூழ வந்தார். ஆடகேசுரர் என்பவர் கோடி கோடி ருத்திரர்

கள் சூழவந்தார். வீரபத்திரக்கடவுள் நூறு பத்தாயிர கோடி பூதங்கள் சூழவந்தார். ஐயனார் நூறுகோடி பூதங்கள் சூழ்வந்தார். மற்றும் வரவேண்டியவர்களனைவரும் தத்தங் கணங்களுடன் வந்து சேர்ந்தனர்.

### தேவர்களின் வரவைத் தெரியப்படுத்தல்

திருக்கைலாயமலையில் யாவருந் திரண்டுவந்து சேர்ந்த தன்மையை, நந்திதேவர் சிவபெருமானுக்குத் தெரியப்படுத்தினார். சிவபெருமான் அனைவரையும் தம் முன் அழைக்குமாறு கட்டளையிட்டருளினார். நந்திதேவர் அனைவரையும் உள்ளே அழைத்துக்கொண்டு சென்றார். அனைவரும் இறைவனைக் கண்டு போற்றி வணங்கினார்கள்.

### நான்முகனும், அணிகலன்களும்

நான்முகன் பலவகைப் பொற்கலன்களை இறைவன் முன் வைத்து, அவைகளை அணிந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் அவைகளைக் கையினாலே தொட்டருளி, "நான்முகனே! நீ கொணர்ந்த அணிகலன்களையெல்லாம் நாம் அணிந்துகொண்டாற் போல மகிழ்ந்தோம்," என்று கூறியருளினார். பிறகு தம்முடைய பாம்புப் பணிகளையெல்லாம் இரத்தினப் பணிகளாக மாற்றிக்கொண்டார்.

## ௧0. திருமணம்

### இறைவன் இமயமலையை அடைதல்

இறைவன் இமயமலைக்கு எழுந்தருளுமாறு திருவுளங் கொண்டார். அரியணையினின்றும் எழுந்தார். நந்திதேவர் புகழ்ந்துகொண்டு முன்னே சென்றார். தேவர்களும் முனிவர்களும் வாழ்த்துக் கூறினார்கள். தும்புரு நாரதர்களும், விஞ்சையர்களும் இன்னிசை பாடினார்கள். இறைவன் எருதின்மீது ஏறியருளினார். சூழ்ந்து நின்றவர்கள் கடல் ஒலிபோலப் பேராரவாரஞ் செய்தார்கள். ஆனைமுகக்கடவுள் ஐந்நூற்றேழுகோடி பூதங்கள் புடை

சூழவந்து இறைவனை வணங்கிக்கொண்டு முன்னே சென்றார். ஞாயிறேனும் திங்களும் குடை பிடித்தார்கள். காற்றிறையோன் சாமரம் வீசினான். வருணன் சாந்தாற்றி சுற்றினான். இந்திரன் ஆலவட்டம் சுழற்றினான். பூதர்கள் பலவகைப்பட்ட ஒலிக்கருவிகளைக் கடல்போல முழக்கினார்கள். இறைவன் இமயமலையை அடைந்தருளினார்.

## இறைவனுக்கு வரவேற்பு

இறைவன் வரவையறிந்த மலையரையன் தன் சுற்றத்தார்களோடு எதிர்வந்து வணங்கினான். நகரத்துக்குள் அழைத்துக்கொண்டு சென்றான். இருடிகள் நிறைகுடங்களை யேந்திக்கொண்டு வந்தார்கள். மங்கையர்கள் எண் வகை மங்கலங்களைக் கொண்டுவந்து காட்டினார்கள். பலர் ஆலத்தி சுற்றினார்கள். திருமணச்சாலையை அடைந்தவுடன் அனைவரும் தத்தம் ஊர்திகளினின்றும் இறங்கினார்கள்.

மேனை அரம்பையர்களோடு வந்தாள். காமதேனுவினுடைய பாலாற் சிவபெருமானுடைய திருவடிகளை விளக்கினாள். நந்திதேவர் பாதுகைகளைக் கொணர்ந்து இறைவனுக்குமுன் வைத்தார். இறைவன் அதன்மேலே யெழுந்தருளினார். நான்முகனும் திருமாலும் இருபக்கங்களினின்றுங் கை கொடுத்தார்கள். பலவகை ஒலிக்கருவிகள் முழங்கின. தேவர்கள் போற்றிப் புகழ்ந்தனர். இறைவன் திருமணச் சாலைக்குள்ளே எழுந்தருளினார்.

## நிலவுலகு நிலைதடுமாறுதல்

இறைவன் இந்திர நீலமணியினால் இயன்ற இருக்கை மீது இருந்தருளினார். தேவர்களனைவரும் சிவபெருமானைச் சூழ்ந்து தத்தமக்குரிய இருக்கைகளிலே இருந்தார்கள். திருமணச் சிறப்பைக் காணும்பொருட்டு எல்லாவுலகங்களினுமுள்ள எல்லோரும் ஒன்றாக வந்துகூடினமையால் இமயமலை நடுங்கியது. நிலவுலகின் வடபால் தாழ்ந்தது. தென்பால் உயர்ந்தது. தேவர்களனைவரும்

வருத்தமடைந்து ஓலமிட்டார்கள். சிவபெருமான் புன் முறுவல் செய்தார். இடரை நீக்கத் திருவுளங்கொண்டார். நந்திதேவரைப் பார்த்து, "அகத்திய முனிவனை இங்கே அழைத்துக்கொண்டு வருக", என்று கட்டளையிட்டருளினார். நந்திதேவர் அகத்தியமுனிவரைக் கூவினார். அகத்தியமுனிவர் நந்திதேவருக்கு முன் வந்தார். நந்திதேவர் அவரை அழைத்துக்கொண்டுபோய் இறைவனுக்கு முன்விட்டார். அகத்தியர் இறைவனை வணங்கி நின்றார்.

## அகத்தியரைப் போதியைக்கு அனுப்புதல்

சிவபெருமான் அகத்தியமுனிவரைப் பார்த்தார். "ஓ அகத்தியமுனிவனே! இங்கே யாவரும் வந்து கூடினமையால் வடபால் தாழத் தென்பால் உயர்ந்துவிட்டது. இதனால் உயிர்களெல்லாம் அஞ்சுகின்றன. இவ்வாறு ஒருபால் உயர்ந்து ஒருபால் தாழ்ந்தால் நிலவுலகு தடுமாறும். ஆகையால், நீ இவ்விடத்தைவிட்டு நீங்கித் தென்னாட்டை யடைந்து பொதியமலையின்மேல் இருப்பாயாக! நீ அவ்வாறு சென்றிருந்தால் நிலவுலகம் முன்போலத் தகுந்த நிலைமையை அடைந்துவிடும்" என்று திருவாய் மலர்ந்தருளினார். இறைவன் இயம்பியவைகளைக் கேட்ட குறுமுனிவர் வருந்தினார். "நான் தங்கட்கு யாதேனும் குற்றஞ் செய்தேனோ? கொடியேனாகிய யான் இங்கு இராவண்ணம் தொலைவிலே செல்லுமாறு கூறியருளுகிறீர்" என்றார். இறைவன் அகத்தியரைப் பார்த்து, "நினக்கு ஒப்பாகிய முனிவர்கள் இவ்வுலகத்தில் இலர். நான்முகனும் உனக்கு ஒப்பாகமாட்டான். நீ உருவத்திற் சிறியையாயினும் பெருமையிற் பெரியை. நீ நினைந்தவைகள் யாவற்றையுந் தவறாது முடிக்கவல்லை. இவ்வரிய செயல் நின்னைத்தவிர வேறு எவரானும் இயலாது. யாவரினுஞ் சிறந்தவனாகிய நின்னாலேதான் முடிதல் வேண்டும். ஆதலால் நீ செல்லக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அகத்தியர் இறைவனைப் பார்த்து, "நான்முகனும் திருமாலும் இந்திரனும் இருக்க இச்செயலுக்கு அடியேனை ஏவியருளினீர். இதுதான் நான் செய்த

தவத்தின் பயன்போலும். நான் இப்பணியைப் புரிந்தால் தமது திருமணக்கோலத்தைக் காண்டல் இயலுமா? தம் திருமணக்கோலத்தைக் காணுதிருத்தற்கு என்னுள்ளம் ஒருப்படவில்லையே; இதற்கு அடியேன் யாது செய்வேன்?'' என்று கூறினார். இதற்கு இறைவன் பதிலுரைக்கலானார். "முனிவனே! நீ சிறிதுங் கவலவேண்டாம். பொதியமலைக்குச் செல். நாம் அங்குவந்து எமது திருமணக்கோலத்தை உனக்குக் காட்டுவோம். நீ மகிழ்வுடன் பார்க்கலாம். ஆகையால் நீ சிலநாள் அங்கு சென்றிருப்பாயாக!

இறைவன் கூறியதற்கு அகத்திய முனிவர் இயைந்தார். தேவதேவனுடைய திருவடிகளைப் பலமுறை வணங்கினார். எழுந்து கைகூப்பி நின்றார். பெருமூச்செறிந்தார். அருமையாக அவ்விடத்தைவிட்டு நீங்கிப் பொதியமலையை அடைந்தார். சிவபெருமானை எண்ணிக் கொண்டு பொதியமலையில் எழுந்தருளியிருந்தார். உலகமானது முன்போல வடபாலுந் தென்பாலுந் தக்கவாறு சமமாக அமைந்துநின்றது. ஏற்றத் தாழ்வினுல் வருந்திய உயிர்களெல்லாம் இறைவனைப்போற்றி மகிழ்ச்சி அடைந்தன.

## திருமணம் நிகழல்

மலையரசனுடைய ஏவலின்படி தேவமாதர்கள் உமாதேவியைத் திருமணச்சாலைக்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். காளி காவல் காத்துவந்தாள். இந்திராணி அடைப்பை ஏந்திவந்தாள். கங்கைகள் சாமரம் வீசின. திருமகள் கைகொடுத்தாள். கலைமகள் புகழ் பாடினுள். திருமணச்சாலையை அடைந்த இறைவி சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கினுள். 'பக்கத்தே இருக்கக் கடவாய்' என்று சிவபெருமான் பணித்தருளினார். இறைவியும் அவ்வாறே எழுந்தருளினுள். மேனை, நீர் சந்தனம் மலர் முதலியன கொண்டுவந்தாள். மேனை நீர் ஊற்ற, மலையரசன், மலைவில்லியின் மலரடிகளை விளக்கினுன். சந்தனம்,

நறுமலர் முதலியவைகளால் வழிபாடு செய்தான். பிறகு உமாதேவியின் திருக்கைகளை எடுத்துச் சிவபெருமானுடைய திருக்கைகளில் வைத்தான். "நான் என் புதல்வியாகிய உமாதேவியை உமக்குத் தந்தேன்" என்று மறைமொழிகளைக்கூறி நீர் ஊற்றினன். அப்பொழுது அரம்பையர்கள் ஆடினார்கள். சித்தர்கள், கந்தருவர்கள், தும்புரு நாரதர்கள் ஆகியோர் இசைபாடினார்கள். தேவர்களும் முனிவர்களும் மறைகளைக் கூறினார்கள். அலைமகளும், கலைமகளும் மங்கலம் பாடினார்கள். பூதர்கள் பலவகை ஒலிக்கருவிகளை முழக்கினார்கள். மலையரசன் ஆன்பால், வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி, நெய், தேன் முதலியவைகளைச் சிவபெருமான்முன் வைத்து, "எம்பெருமானே! இவற்றைத் திருவமுது செய்தருளல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் அவைகளைத் திருக்கையினாலே தொட்டுத் திருவருள் செய்தருளினார்.

## திருமண வேள்வி

நான்முகன் இறைவனை வணங்கினன். "நிலவுலகத்தினும், விண்ணுலகத்தினும் உள்ளவர்கள் யாவரும் திருமணச் சடங்கைச் செய்யும்வண்ணம், எல்லா உலகங்களுக்குந் தலைவராகிய தாங்கள் நடத்தியருளல்வேண்டும். ஆகையால், திருமணவேள்வி செய்யுமாறு கட்டளை தந்தருள்க" என்று வேண்டிக்கொண்டான். அதற்குச் சிவபெருமான் இசைந்தருளினார். நான்முகன் வேள்விப் பொருள்களைத் தருவித்தான். வியாழன், சுக்கிரன், முனிவர்கள் முதலியோர் பக்கத்தே சூழத், திருமண வேள்விச் சடங்குகளையெல்லாம் செய்துமுடித்தான். பிறகு சிவபெருமானையும், உமாதேவியாரையும் அங்குள்ளோர் யாவரும் வணங்கினார்கள். இறைவனும், இறைவியும் அவர்களனைவருக்குந் திருவருள் செய்தனர். மலையரையன் இறைவனுக்கு வழங்கியவற்றின் சேடப்பொருளை எல்லோருக்கும் வழங்கினன். அதனை அனைவரும் பெற்று இன்பமடைந்தார்கள்.

### காமன் எழுதல்

அப்பொழுது இரதி இறைவன்முன் வந்து வணங்கினுள். தன்னுடைய துன்பத்தை நீக்கியருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டாள். காமன் வந்து தோன்றும்படி இறைவன் எண்ணியருளினுர். உடனே காமன் வந்து இறைவனே வணங்கினுன். தன்னுடைய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். இறைவன் அவனுக்கு அருள்செய்தார். இரதிக்குமட்டும் உருவுடன் காணப்படுமாறும், மற்றவர்கட்கு உருவந் தோன்ருமல் அருவமாக இருக்குமாறும் பணித்தார். காமன் சிவபெருமானுடைய அருளைப் பெற்றுக்கொண்டு இரதியுடன் தனது நகரத்தை யடைந்தான்.

### இறைவன் கயிலையை அடைதல்

இறைவன் அரியணையினின்றும் இறங்கினுர். தேவர்களும் முனிவர்களும் போற்ற, பூதகணங்கள் வாத்தியங்களை முழக்க எருதின்மீது ஏறினுர். இமயமலையைக் கடந்து, திருக்கைலைமலையை உமாதேவியாருடன் அடைந்தார். தேவர்களை அவரவர்கள் இருப்பிடங்கட்குச் செல்லுமாறு பணித்தார். இறைவியாருடன் முன்போல அரியணையில் இனிது அமர்ந்திருந்தார். உலகத்துயிர்களெல்லாம் இன்பபோகத்தை இனிது நுகர்ந்துகொண்டிருந்தன.

## கக. திருமுருகன் தோற்றம்

### தேவர்கள் வாயுதேவனை அனுப்புதல்

நாட்கள் பல சென்றன. ஒருநாள் நான்முகன், திருமால், இந்திரன் முதலிய யாவரும் மேருமலையிற் கூடினுர்கள். இறைவனுக்குத் திருமணமாகியும் நம்முடைய துன்பம் ஒழியவில்லையே யாது செய்யலாமென்று எண்ணமிட்டார்கள். அனைவரும்கூடி இறைவனிடம் சென்று முறையிட்டுக்கொள்ளலாம் என்று முடிவுசெய்தார்கள். நான்முகன், "ஒரு தூதனை யனுப்பிச் சிவபெருமானுடைய செயலை அறிந்துகொண்டு பிறகு செல்லலாம்" என்று

கூறினன். வாயுதேவனைப் பார்த்து, "நீ திருக்கைலைமலைக்குச் சென்று சிவபெருமான் யாது செய்கின்றார் என்பதை அறிந்துகொண்டு வருவாயாக" என்று கூறினர். வாயுதேவன் நான்முகன் கூறியதைக்கேட்டு அஞ்சினன். "காமனை எரித்த கடவுண்முன்பு செல்லுதல் அரிது; சென்றால் பொல்லாங்கு விளையும். அவ்வாறு செல்லுதல் என்னால் இயலாது" என்று கூறினன். நான்முகன் வாயுதேவனை நோக்கி, "நீ செல்வதற்குச் சிறிதும் அஞ்சாதே. எங்கும் உலாவும் இயல்பினையுடைய உன்னைத் தவிர வேறு யாவர் அங்குச் செல்லவல்லார்? உற்றவிடத்திலே உதவி செய்கிறவர்களும், வரையாது கொடுக்கின்றவர்களும், தவஞ்செய்கின்றவர்களும், போர்செய்யும் மறவர்களும் வேறொரு பொருளையும் விரும்பமாட்டார்கள். துன்பத்தையும் பார்க்கமாட்டார்கள். உயிர் நீங்கவரினும் மகிழ்வர். ஆகையால், எங்கட்கெல்லாம் உதவிசெய்யும்பொருட்டு நீ செல்லக்கடவாய்" என்று கூறினன்.

உற்றுழி உதவிசெய்வோர் உலப்புறா தெவையும் ஈவோர்
அற்றமில் தவத்தாறு உற்றோர் அமர்புரி வீரர் ஆவோர்
மற்றொரு பொருளும் வெஃகார் வருத்தமும் ஓரார் ஆவி
இற்றிட வரினும் எண்ணார் இனிதென மகிழ்வர் அன்றே.

நான்முகன் இவ்வாறு கூறியதைக்கேட்ட வாயுதேவன் ஒருவாறு உடன்பட்டெழுந்தான். திருக்கைலைமலையை அடைந்தான். ஆற்றில் நீராடினன். சோலையின் நறுமணத்திற் படிந்தான். தென்றலாக அசைந்துகொண்டு திருக்கோயிலுள்ளே புகுதற்கு முயன்றான்.

## வாயுதேவனை நந்திதேவர் தடுத்தல்

வாயுதேவனுடைய செயலை நந்திதேவர் கண்டார். மிகுந்த சினங்கொண்டார்; அதட்டினர். நந்திதேவர் அதட்டுதலும் வாயுதேவன் அஞ்சி நடுங்கிக் கீழே விழுந்தான். விழுந்தவன் எழுந்து நந்திதேவரை வணங்கினன் "நான்முகன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் சிவபெருமானைக்காண விரும்பினர்கள். என்னைப் பார்த்துச் 'சமயம் அறிந்துகொண்டு வருவாயாக' என்றார்கள்

நான் மறுத்துக் கூறியும் அவர்கள் வற்புறுத்தி என்னை அனுப்பினார்கள். ஆகையால், அடியேன் அஞ்சி அஞ்சித் தென்றலாய் வந்தேன். உம்முடைய கட்டளையைப் பெறுதற்கு நினைந்திலேன். அறிவில்லாத என்னுடைய குற்றத்தைப் பொறுத்தருளுதல் வேண்டும். சூரபதுமனாலே பெருமைநீங்கி வருந்தி யிளைத்துவிட்டேன். செய்யத் தக்கது இன்னது செய்யத்தகாதது இன்னது என்பதையும் உணர்ந்திலேன். பிற தேவர்களும் இவ்வாறேயாயினர். உமது சினத்துக்குச் சிறியேனை ஆளாக்கலாமா? அடியேன் அறியாது செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். நந்திதேவர் சினந் தணிந்தார். "நாம் உன்னுயிரைத் தந்தோம்; இங்கு நில்லாது விரைந்தோடிப்போ" என்று கட்டளையிட்டார். வாயுதேவன் நந்திதேவரை வணங்கித் திருக்கைலைமலையை நீங்கினான். மேருமலையிலுள்ள தேவர் கூட்டத்தை யடைந்தான். நான்முகனையுந் திருமாலையும் வணங்கினான். கைலைமலையில் நிகழ்ந்ததைக் கூறினான்.

## தேவர்கள் சிவபெருமானிடத்திற்குச் செல்லுதல்

வாயுதேவன் கூறியதைக்கேட்டு திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்கள் வருந்தினார்கள். இனி யாது செய்யலாமென்று எண்ணினார்கள். அனைவரும் திருக்கைலைமலையை அடைந்து சிவபெருமானை வேண்டிக் கொள்வது என்று முடிவுசெய்தார்கள். மேருமலையை நீங்கிக் கைலாசமலையை அடைந்தார்கள். திருநந்திதேவரைக் கண்டு வணங்கினார்கள். "தங்கள் வரவை இறைவனுக்குத் தெரியப்படுத்தித் தங்களை இறைவன்முன் அனுப்பவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள். நந்திதேவர் இறைவனிடஞ்சென்று தேவர்களின் வரவைத் தெரியப்படுத்தினார். "அவர்களை இங்கே அழைத்துக் கொண்டுவா" என்று சிவபெருமான் கட்டளையிட்டருளினார். நந்திதேவர் வெளியே வந்து திருமால் முதலிய தேவர்களை அழைத்துக்கொண்டுபோய் இறைவன் முன்பு

விட்டார். தேவர்கள் சிவபெருமானைத் தொழுது போற்றினார்கள்.

சிவபெருமான் தேவர்கட்குத் திருவருள் செய்தார். "நீங்கள் மிகவும் வருந்தினீர்கள். உங்களுடைய குறை யாது? சொல்லுங்கள்," என்று கேட்டருளினார். தேவர்கள் சிவபெருமானைப் பார்த்து, "நாங்கள் இதுவரையிலும் அவுணர்களால் வருந்தினோம். இனி நாங்கள் அவ்வருத்தம் நீங்கி முன்னையநிலையை யடையும்பொருட்டுத் தண்ணருள் புரிதல்வேண்டும். அவுணர்களின் தொல்லை நீங்கும் பொருட்டு ஒரு திருமகனைத் தோற்றுவித்தருளுதல் வேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டார்கள்.

## ஐமுகப்பரமன் அறுமுகப்பரமனைத் தோற்றுவித்தல்

இறைவன் தேவர்களைப் பார்த்து, "நீங்கள் வருந்துதல் வேண்டாம்; புதல்வனைத் தோற்றுவிக்கின்றோம்'' என்று கூறினார். தம்முடைய பழைய ஆறு திருமுகங்களையுங் கொண்டு, அம்முகங்களிலுள்ள நெற்றிக்கண்கள்தோறும் ஒவ்வொரு தீப்பொறியைத் தோற்றுவித்தருளினார். அந்த ஆறு பொறிகளும் மிகுந்த வெம்மையுடையனவாக இருந்தன. அப்பொறிகளின் வெம்மையைத் திருமால் நான்முகன் முதலிய தேவர்களாலுந் தாங்கமுடியவில்லை. அப்பொறிகள் எங்கும் பரவின. அதனால் வாயுக்கள் ஒய்ந்தன; கடல்கள் வற்றின. ஊழித்தீ ஆணவம் அடங்கிற்று. நிலம் பிளந்தது. மலைகள் நெகிழ்ந்தன. உயிர்களெல்லாம் அஞ்சி நடுங்கின. தண்ணளிசெய்தற்குத் தோன்றிய அப்பொறிகள் எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யவில்லை. எல்லா உயிர்களையும் அஞ்சச்செய்யும் அத்தீப்பொறிகளைக் கண்டு உமாதேவியும் அஞ்சினாள். திருவுளங்கலங்கி எழுந்தாள். உடலில் வியர்வை தோன்றியது. தனது திருவடிகளிலுள்ள சிலம்புகள் புலம்பித் தாக்கத் தனது திருக்கோயிலுக்குள்ளே ஓடினாள். சிவபெருமான் முன்புநின்ற திருமால் முதலிய தேவர்களும் அஞ்சியோடினார்கள். அவர்கள் திரும்பிவந்து இறைவனைப்போற்றினார்கள். தீப்பொறியின் வெம்மையைத் தணித்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

சிவபெருமான் தேவர்களைப்பார்த்து, "அச்சம் ஒழியுங்கள்," என்று அருள்சுரந்தார். புதியனவாகத்தோன்றிய ஐந்து திருமுகங்களையும் மறைத்து ஒரு திருமுகத்தோடு முன்போல எழுந்தருளினார். தீப்பொறிகள் திரும்பிவருமாறு திருவுளங்கொண்டருளினார். தீப்பொறிகள் திரும்பிச் சிவபெருமான் திருமுன்பையடைந்தன. இறைவன் வாயுதேவனையும் தீக்கடவுளையும் பார்த்து, "நீங்களிருவரும் இத் தீப்பொறிகளைத் தாங்கிக்கொண்டுபோய்க் கங்கையில் விடுங்கள். அஃது இவைகளைச் சரவணப்பொய்கையில் சேர்க்கும்," என்று கட்டளையிட்டருளினார். வாயுதேவனும் தீக்கடவுளும் இறைவன் கூறியதைக் கேட்டு வருத்தமுற்று அஞ்சி நடுநடுங்கினார்கள். இறைவனை வணங்கினார்கள். ஒரு நொடிப்பொழுதிற்குள் உலகமெங்கும் பரவிய தீப்பொறிகள் உமது திருவருளினாலே சிறுகின. இவைகளை நாங்கள் தாங்கக்கூடிய வல்லமையை உடையவர்கள் அல்லேம். உலகத்தையழிக்கும் உமது நுதற்கண்ணினின்று தோன்றிய இத்தீயைத் திருமால் நான்முகன் ஆகியவர்கள் தாமும் ஒரு கணப்பொழுதேனுந் தாங்கவல்லவர்களா? முன்காலத்தில் தோன்றிய ஆலகாலநஞ்சைப்போன்ற இத் தீயைக் கண்டவுடனே நில்லாது வருந்தி ஓடினேம். இவ்வாறாக இவற்றைத் தாங்குதல் எப்படி? இத்தீயை நினைத்தாலும் எமதுள்ளம் வெப்பத்தையடைகின்றது; உடல் வேர்க்கின்றது," என்றனர். "இத்தீப்பொறிகளைத் தாங்கிச்செல்லும் ஆற்றல் உங்கட்கு உண்டாவதாக," என்று திருவாய்மலர்ந்தருளினார் சிவபெருமான். வாயுதேவனும், தீக்கடவுளும் தாங்குதற்கு இசைந்தார்கள். சிவபெருமானைப் போற்றினார்கள். திருமால், நான்முகன் முதலிய தேவர்கள் நடுக்கம் நீங்கினார்கள். "எங்கள் துன்பம் இன்றே நீங்கியது," என்று மனமகிழ்ந்தார்கள். இத்தீப்பொறி சரவணப்பொய்கையை அடைந்து ஒரு குழவியாய் வளர்ந்து, அவுணர்களை அழித்து உங்கட்கு அருள்புரியும். நீங்கள் அனைவரும் உங்கள் இருப்பிடங்களுக்குச் செல்லுங்கள்," என்று திருவருள்புரிந்தருளினார். திருமால் நான்முகன் முதலிய தேவர்கள், "நாங்கள் பிழைத்தோம்;

இனி எங்கட்கு ஒரு குறையுமில்லை," என்று கூறிச் சிவ பெருமானை வணங்கிக்கொண்டு அங்குநின்றுஞ் சென்றார்கள்.

## தீப்பொறிகளைச் சரவணப்பொய்கையில் விடுதல்

தீக்கடவுளும், வாயுதேவனும் சிவபெருமானை வணங்கி யெழுந்தார்கள். முதலில் வாயுதேவன் தீப்பொறிகளைத் தாங்கிக்கொண்டுசென்றான். திருமால் முதலிய தேவர்கள் வாயுதேவனைப் பின்தொடர்ந்து சென்றார்கள். ஒரு நாழிகைக்குமேல் வாயுதேவன் அப்பொறிகளைத் தாங்கமுடியாதவன் ஆனான். பிறகு தீக்கடவுளுடைய தலையின்மேலே சேர்த்தான். தீக்கடவுள் அவைகளை மிகுந்த வருத்தத்துடன் தாங்கிச்சென்று கங்கையில் விட்டான். அத்தீப் பொறிகள் அடைந்தவுடனே கங்கை வற்றியது. பிறகு இறைவனுடைய திருவருளால் கங்கையானது அத்தீப் பொறிகளைக் கொண்டுசென்று இமயமலைச்சாரலிலுள்ள சரவணப்பொய்கையிற் சேர்த்தது. தேவர்கள் அப் பொய்கையின் நான்கு பக்கங்களையும் காத்தார்கள். கங்கையையும் வற்றச்செய்த அத்தீப்பொறி இறைவனுடைய திருவருளால் சரவணப்பொய்கையை வற்றச் செய்யவில்லை.

## அறுமுகக்கடவுள்

உருவம் இல்லாததாகவும், உருவம் உடையதாகவும், முதல் முடிவு அற்றதாகவும், ஒன்றாகவும், பலவாகவும், பிரமமாகவும் உள்ள ஒளிப்பிழம்பே திருவுடலாகத்தாங்கி; அருள்வெள்ளம் பொழிகின்ற ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கைகளுங்கொண்டு, முருகக்கடவுள் உலகம் உய்யும்வண்ணம் தோன்றியருளினார்.

"அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய."

ஆறுமுகக்கடவுள் தோன்றியருளிய அளவில் விண்ணில் தேவதுந்துபிகள் ஒலித்தன. மறைகளெல்லாம் முழங்கின. நான்முகனும், திருமாலும், இந்திரனும், முனிவர்களும் மலர்மழை சொரிந்தார்கள். உலகத்துயிர்களெல்லாம் மகிழ்ச்சியை அடைந்தன. அவுணர்கள் அனைவருக்குந் தீமை நேருங் குறிப்புக்கள் உண்டாயின. மறைகளாலும், உள்ளத்தாலும், மொழியாலும் அறிதற்கரியராய் எங்கும் நிறைந்துநின்ற தூயராகிய முதற்கடவுள் ஆறு திருமுகங்களை யுடையவராகத் தோன்றினார். சரவணப் பொய்கையிலே செந்தாமரை மலர்மீது வீற்றிருந்தருளினார்.

## சிறு திருவிளையாடல்

திருமால் முதலிய தேவர்கள், கார்த்திகைப் பெண்களைப் பார்த்துக், "குழந்தையாகத் தோன்றியுள்ள முழுமுதற்பொருளை நீங்கள் வளர்க்கக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டார்கள். கார்த்திகைப் பெண்களும் அதற்கிசைந்தனர். பொய்கையில் தோன்றிய கடவுள் ஆறு குழந்தைகளாகத் திருவுருக்கொண்டருளினார். கார்த்திகை மகளிர் களித்து அக்குழந்தைகளுக்குப் பாலூட்டினர். முருகக்கடவுளும் உண்டருளினார். தாமரை மலர்கள்மீது முருகக்கடவுளைத் துயில்வித்தனர் கார்த்திகை மாதர். அப்பொழுது ஓர் குழவி துயில்செய்யும். ஓர் குழவி துயில் நீங்கி விரைந்தெழுந்து பேசும். ஓர் உருவம் பால்உண்ணும். ஓர் உருவம் நகைத்துக்கொண்டிருக்கும். ஓர் உருவம் அழும். ஓர் உருவம் தவழ்ந்துசெல்லும். ஓர் உருவம் பொய்கையைக் கலக்கும். ஓர் உருவம் பாட்டுப் பாடும். ஓர் உருவங் கைகளைக் கொட்டும். ஓர் உருவங் கூத்தாடும். இவ்வாறு ஆறு குழந்தை யுருவங்களும் பல திருவிளையாடல்களைப் புரிந்தன. திருமால் முதலிய தேவர்கள் முருகக்கடவுளின் திருவிளையாடல்களைக் கண்டு மனங்களித்திருந்தனர்.

## ௧௨. துணைவர்கள் தோன்றுதல்

### உமாதேவி திரும்புதல்

தீப்பொறிகள் தோன்றிய காலத்திலே அஞ்சி ஓடிய உமாதேவி திரும்பினாள். நிகழ்ந்தவைகளையெல்லாம் உணர்ந்தாள். "என்னிடத்திலே மகன் தோன்றாமல் தடுத்த தேவர்களுடைய மனைவியர்கட்கும் மக்கள் இல்லாதொழிக" என்று சாபங் கொடுத்தாள். சிவபெருமானுடைய திருமுன்பை யடைந்தாள். அவருடைய திருவடிகளை வணங்கினாள். "நீர் தோற்றுவித்தருளிய தீப்பொறிகளின் வெம்மைக்கு அஞ்சி ஓடினேன். நீர் அப்பொறிகளை இப்பொழுது அகற்றினமையின் திரும்பினேன்" என்றாள். சிவபெருமான் உமாதேவிக்கு அருள்செய்து பக்கத்திலே அமர்த்தியருளினார்.

### ஒன்பது சக்திகள்

முன்பு உமாதேவி ஓடியபொழுது திருவடிச் சிலம்பில் நின்றுஞ் சிதறிய இரத்தினங்கள் சிவபெருமான் திருமுன்பு விளங்கின. இறைவன் திருவருளால், சிதறிய ஒன்பது வகை மணிகளினும் உமாதேவியினுடைய உருவந் தோன்றியது. அவ்வுருவங்களை நோக்கிச் சிவபெருமான், 'வாருங்கள்' என்று திருவாய்மலர்ந்தருளினார். ஒவ்வோர் மணிக்கும் ஒவ்வொரு சக்தியாக ஒன்பது சக்திகள் தோன்றினார்கள். அவர்கள் சிவபெருமானை வணங்கி நின்றார்கள். சிவபெருமானிடத்திலே விருப்பங்கொண்டார்கள். முனிவர்கள் மனைவியரைப்போல உடனே சூல் கொண்டார்கள். இறைவி அவர்களைச் சினந்து, 'நீங்கள் நமக்கு மாறாக நடந்தமையால் இச்சூலோடு நெடுங்காலம் இருக்கக்கடவீர்கள்' என்று ஆணையிட்டார். ஒன்பது சக்திகளும் அஞ்சி நடுநடுங்கினார்கள். அவர்களுடைய உடல்கள் வியர்த்தன.

### நூறாயிரம் வீரர்கள்

இறைவனுடைய திருவருளினாலே, அந்த ஒன்பது சக்திகளினுடைய வியர்வையில்நின்றும் நூறாயிரம் வீரர்

கள் தோன்றினார்கள். அவ்வீரர்கள் பொன்னுடை யுடையவர்களாகவும், வாளையும் பரிசையையுங் கையில் தாங்கியவர்களாகவும் இறைவன் திருமுன்பு சென்று இறைவனைப் போற்றிப் புகழ்ந்துகொண்டு நின்றார்கள். சிவபெருமான் அவ்வீரர்கட்குத் திருவருள் செய்தார். "நீங்கள் அவுணர்களைக்கொல்லும்பொருட்டு முருகனுக்குப் படைகளாவீர்களாக" என்று கட்டளையிட்டார்.

## ஒன்பது வீரர்கள்

இறைவியினுடைய சாபத்தையேற்ற ஒன்பது சக்திகளும் இறைவியை வழிபாடு செய்துகொண்டு சூலோடு பலகாலம் இருந்தார்கள். அந்தச் சக்திகளுடைய கருவினுள்ளே நந்தியின் கூட்டத்தவர்கள் குழந்தைகளாய்ப் புகுந்து இளைஞர்களாகி; இறைவனை எண்ணித் தொழுது கொண்டிருந்தார்கள். ஒன்பது சக்திகளும் இறைவனையும் இறைவியையுந் தொழுது, "சூலின் சுமை தாங்க முடியவில்லை: திருவருள் செய்தல்வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். சிவபெருமான் திருவுளமிரங்கினார். இறைவியைப் பார்த்தார். "உன் காற்சிலம்பில் தோன்றிய இச்சக்திகள், உன் சாபத்தினாலே நெடுங்காலஞ் சூலைச் சுமந்து வருந்தினார்கள். இனி, மக்களைப் பெறுமாறு அருள்செய்க" என்று பணித்தருளினார். உமாதேவியும் அதற்கு இசைந்தாள். ஒன்பது சக்திகளையும் பார்த்து, "இனி நீங்கள் மக்களைப் பெறக்கடவீர்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினாள்.

ஒன்பது சக்திகளும் துன்பம் நீங்கினார்கள். நுதற்கட் பெருமானையும் இறைவியையும் போற்றிப் பணிந்தார்கள். மாணிக்கவல்லியிடத்திலே வீரவாகுதேவர் தோன்றினார். மௌத்திகவல்லியிடத்திலே வீரகேசரி தோன்றினார். புட்பராகவல்லியிடத்திலே வீரமகேந்திரர் தோன்றினார். கோமேதகவல்லியிடத்திலே வீரமகேச்சுரர் தோன்றினார். வைடூரியவல்லியிடத்திலே வீரபுரந்தரர் தோன்றினார். வைரவல்லியிடத்திலே வீரராக்கதர் தோன்றினார்.

மரகதவல்லியிடத்திலே வீரமார்த்தாண்டர் தோன்றினர். பவளவல்லியிடத்திலே வீராந்தகர் தோன்றினர். இந்திர நீலவல்லியிடத்திலே வீரதீரர் தோன்றினர். இவ்வீரர்கள் ஒன்பதின்மரும் சக்திகளினுடைய உந்தியின் வழியே தோன்றினர்கள். தோன்றிய வீரர்கள் உமாதேவியையும் இறைவனையும் பணிந்தார்கள். இருவரும் அந்த வீரர்கட்குத் திருவருள் புரிந்தார்கள். இறைவன் அவர்கட்குப் படைக்கலங்கொடுத்தருளினர். "நூறாயிரம் வீரர்களோடு நீங்களுங்கூடி உங்கட்குத் தலைவனாகிய அறுமுகனோடுறைந்து, அவன் பணித்த பணிகளைச் செய்தொழுகுவீர்களாக," என்று கட்டளையிட்டார். அவர்களும அதற்கிசைந்து வணங்கினர்கள்.

## கரு. சரவணப்பொய்கை

### கந்தக்கடவுள்

இறைவன் இறைவியைப் பார்த்து, "நமது நுதற் கண்ணினின்றுந் தோன்றிச் சரவணப்பொய்கையில் வளரும் உன்மகனை இங்கே கொண்டுவருவோம்; வருவாயாக!," என்று கூறினர். இறைவியார் அதற்கிணங்கி யெழுந்தருளினர். தேவர்கள் நம்முடைய தீவினைகளெல்லாந் தொலைந்தன என்று மகிழ்ந்து போற்றினர்கள். திருமால்,நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள் பூமாரி பெய்துகொண்டு நெருங்கிச்சூழ்ந்தார்கள். பூதர்கள் பலவகை ஒலிக்கருவிகளை முழக்கினர்கள். நான்மறைகளும் பிரணவமும் பல கலைகளும் ஒலித்தன. வித்தியாதரர்கள் இசைபாடினர்கள். கதிரவர்கள் வெண்குடை பிடித்தார்கள். பூதர்கள் சாமரம் வீசினர்கள். இடபக்கொடிகள் நெருங்கின. உமாதேவியோடு புறப்பட்ட சிவபெருமான் திருக்கைலையைக் கடந்து சரவணப்பொய்கையை அடைந்தார். முருகக் கடவுள் இறைவனையும் இறைவியையுங் கண்டுகளித்தார். சிவபெருமான் உமாதேவியைப் பார்த்து, "உன் மகனைக் கொண்டுவருவாயாக", என்று பணித்தார். தேவியார் ஊர்தியினின்றும் விரைந்து இறங்கியருளினர். பொய்கை

யில் இருந்த ஆறு உருவங்களையும், இரண்டு திருக்கைகளினாலும் அன்போடு எடுத்துத் தழுவினாள். ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருப்புயங்களுங்கொண்ட ஒரு வடிவமாகுமாறு செய்தாள். ஆறு திருவுருவங்கள் ஒன்றாகச் சேர்க்கப்பெற்று ஒருரு வாக்கப்பட்டபடியால் அந்தக் கடவுளுக்குக் கந்தக்கடவுள் என்ற ஒரு பெயர் உண்டாயிற்று. இறைவியினுடைய திருக் கொங்கைகளினின்றும் பால் பொழிந்தது. அதனை ஒரு மணிக்கிண்ணத்தில் ஏற்றுக் கந்தக்கடவுளுக்கு அன்புடன் ஊட்டினாள். இறைவன் திருமுன்பு கொண்டுபோய் வணங்கச்செய்தாள். இறைவன் தம்முடைய திருக்கைகளினாலே தூக்கிப் பக்கத்தில் வைத்தருளினார்.

## கார்த்திகை மாதர்கள்

திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் இறைவனை அடைந்து வணங்கினார்கள். முருகக்கடவுளைப் போற்றி வழிபட்டார்கள். "அவுணர்களால் அடையுந் தொல்லையை நீக்கியருளவேண்டும்," என்று பூமழை பொழிந்தார்கள். கார்த்திகை மாதர்கள் இறைவனைப் போற்றினார்கள். சிவபெருமான் அம்மாதர்கட்குத் தண்ணருள் புரிந்தார். "நம்முடைய மகனாகிய இவன் நுங்களால் வளர்க்கப் பட்டமையின் கார்த்திகேயன் என்னும் பெயரையடையக்கடவன். எவராயினும் கார்த்திகையாகிய உங்களுடைய நாளிலே இவனை உண்மையான அன்புடன் வழிபடுவார்களாயின் அவர்கட்கு மேன்மைகளைக் கொடுத்து வீடுபேற்றையுங் கூட்டுவோம்", என்று உரைத்தருளினார்.

## பராசரர்மக்கட் கருளுதல்

இறைவி முருகக்கடவுளைத் தழுவியெடுத்தபோது கொங்கையினின்றும் பொழிந்த பால் சரவணப்பொய்கையிற் புகுந்தது. தங்கள் தந்தையாராகிய பராசரமுனிவருடைய சாபத்தினால் அப்பொய்கையில் மீன்களாகிக் கிடந்த சிறுவர்களறுவரும் அப்பாலைப் பருகினார்கள். மீன் வடிவம் ஒழிந்து முன்னைய வடிவங்கொண்டார்கள். சிவ

பெருமான் திருமுன்பு சென்று வணங்கிப் போற்றினார்கள் இறைவன் அவர்களைப் பார்த்துத், "திருப்பரங்குன்றிற் சென்று நீங்கள் தவஞ்செய்துகொண்டிருங்கள். முருகன் அங்கு வந்து உங்கட்கு அருள்செய்வான்" என்றார். அவர்களும் உள்ளங்களித்துச் சிவபெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள். சிவபெருமான், திருமால், நான்முகன் முதலிய தேவர்கட்கும், கார்த்திகை மகளிர்கட்கும் தங்கள் தங்கள் இடத்துக்குச் செல்லுமாறு கட்டளையிட்டார். தாம் திருக்கைலைமலையை அடைந்து, முருகக்கடவுளோடும் உமாதேவியோடும் செம்பொற் கோயிலில் அரியணைமீது வீற்றிருந்தார். நூறாயிரத்தொன்பது வீரர்களும் முருகக்கடவுளைப்போற்றி அவருடைய ஏவலின்வழி நின்றார்கள்.

## ௧௪. முருகன் திருவிளையாடல்

### பல இடங்களில் உலவுதல்

இறைவனுக்கும் இறைவிக்கும் இடையே எழுந்தருளிய முருகக்கடவுள் பலவாறு திருவிளையாடல் செய்ய எண்ணினார். அவருடைய திருவடிகளிலே, தண்டை, சிலம்பு, கழல், சதங்கை ஆகியவைகள் ஒலித்தன. அரையிலே கிங்கிணி இசைத்தது. திருக்காதுகளிலே குண்டலங்கள் விளங்கின. திருமார்பிலே மதாணி திகழ்ந்தது. திருநுதலிலே வீரபட்டிகை விளங்கியது. அவர் பல வகைத் திருவிளையாடல்களைச் செய்யலானார். மன்றுகள் தோறும் உலாவுவார். தடாகங்கள்தோறும் உலாவுவார். பூங்காதோறும் உலாவுவார். ஆறுகள்தோறும் உலாவுவார். குன்றுகள்தோறும் உலாவுவார். விண்ணில் உலாவுவார். மண்ணில் உலாவுவார். திக்குகளில் உலாவுவார். கடல்களில் உலாவுவார். ஞாயிற்று மண்டலம், திங்கள் மண்டலம் ஆகியவைகளில் உலாவுவார். மற்றும் பலவிடங்களிலும் உலாவுவார். ஆறு திருமுகங்களோடுஞ் சிறியவராகத் திரிவார். ஒரு திருமுகத்தோடு குழந்தையாய்த் திரிவார். பார்ப்பனராய்த் திரிவார். முனிவராய்த் திரிவார். வீர

ராய்த் திரிவார். காலால் நடந்து செல்லுவார். குதிரை மீது செல்லுவார். யானைமீது செல்லுவார். தேர்மீது செல்லுவார். விமானமீது செல்லுவார். மற்றும் பலவாறு செல்லுவார். மணியடிப்பார். குழல் ஊதுவார். வீணை வாசிப்பார். பலவித வாத்தியங்களை ஒலிப்பார். கூத்தாடுவார்.

## முருகன் பெருமையை முதல்வன் முதல்விக்கு மொழிதல்

முருகக்கடவுள் பலவாறு திருவிளையாடல் புரிதலை இறைவி கண்டு வியந்து மகிழ்ந்தாள். இறைவனை வணங்கினாள். "நம்முடைய மகன் குழவிப்பருவத்தே செய்யும் திருவிளையாடல் மிக வியக்கத்தக்கவாறு இருக்கிறதே! அவனுடைய பெருமையை அடியாளுக்குத் தெரியப்படுத்தியருளுதல்வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். சிவபெருமான் உமாதேவியை நோக்கி, "நாம் அவன் தன்மையைச் சொல்லுகிறோம் கேள். நம் திருநுதற் கண்ணில் தோன்றிய திருமுருகன், கங்கையால் தாங்கப்பட்டபடியால் **காங்கேயன்** என்று பெயர் பெறுவான். சரவணப்பொய்கையில் தோன்றியபடியால், **சரவணபவன்** என்று பெயர்பெறுவான். கார்த்திகை மாதர்களாலே வளர்க்கப்பட்டபடியால், **கார்த்திகேயன்** என்று பெயர் பெறுவான். ஆறு உருவங்களும் திரட்டி உன்னாலே ஒன்றாக்கப்பட்டமையால், **கந்தன்** என்று பெயர் பெறுவான். நமக்கு ஆறு முகங்கள் உள்ளன. அவைகள் தாம் முருகனுக்கும் முகங்களாயின. தாரகப்பிரமமாயுள்ள நம் ஆறெழுத்தும் ஒன்றாகி முருகனுக்கு ஆறெழுத்து மந்திரமாயிற்று. ஆகையினால், அறுமுகக்கடவுள் நம்முடைய சக்தியேயாவன். அவனுக்கும் நமக்கும் வேறுபாடில்லை. அவன் நம்மைப்போல எங்கும் நிறைந்திருப்பவனே. அவன் குழந்தைபோலக் காணப்படினும் எல்லாவற்றையும் நன்குணரும் முற்றறிவுடையனாவன். தன்னை உள்ளன்புடன் வழிபாடு செய்வார்க்கு செல்வத்தையும், அறிவையும், வீடுபேற்றையுங் கொடுக்கவல்லவன்.

அவன் இனிமேல் நான்முகனைச் சிறையில் வைப்பான். படைப்புத் தொழிலைத் தானே செய்வான். அவுணர்களைக் கொன்று தேவர்கட்கு நன்மையைச் செய்வான்!'' என்று இயம்பியருளினார். இறைவி முருகன் பெருமையைக் கேட்டு மகிழ்ந்தாள்.

## திருவிளையாடல் புரிதல்

முருகக்கடவுள் உலகு எங்குஞ்சென்று திருவிளையாடல் புரிவாராயினர். குலமலைகள் அனைத்தையும் ஓரிடத்தே சேர்ப்பர். பிறகு அவைகளைத் தலைதடுமாற்றமாக நிலத்தில் நிறுத்துவர். கடல்கள் அனைத்தையும் ஒன்றுகச் சேர்ப்பர். மகாமேருமலையைப் பாதாளத்திற் புகுத்துவர். கங்கையாற்றை அடைப்பர். திக்குயானைகளை ஒன்றோடொன்று போர்செய்யச் செய்வர். விண்ணிலுள்ள கங்கை நீரால், ஊழித்தீயை அணைப்பர். கருடனையும் வாசுகியென்னும் பாம்பையும் போர்செய்யச் செய்வர். பாதாளத்திலுள்ள நாகர்களை, நிலத்திற் சேர்ப்பர். நிலவுலகிலுள்ள கடல்களனைத்தையும், பாதாளத்திற் புகவிடுவர். கதிரவனைத் திங்கள் மண்டிலத்தில் எறிவர். திங்களைக் கதிரவன் மண்டிலத்தில் சேர்ப்பர். இன்னும் பலவாறு பலவகைத் திருவிளையாடல்களைச் செய்வர்.

## அவுணர்கள் திகைப்பு

நிலவுலகிலுள்ள அவுணர்கள் முருகக்கடவுளுடைய திருவுருவத்தைக் கண்டிலர். இவ்வாறு செய்கிறவர்கள் யாவர் என்று அறியாமல் திகைத்தார்கள். பலவிடங்களிலுந் தேடிப் பார்த்தார்கள். தீவினையாளர்களாகிய அவர்களுக்கு முருகக்கடவுள் தமது வடிவத்தைக் காட்டவில்லை. நான்முகன் திருமால் முதலிய தேவர்களாலும் அறியப்படாத சிவபெருமானுடைய மாயமே இஃது என்றார்கள். அறுமுகக்கடவுளின் ஆடலை நிலவுலகிலுள்ள மக்கள் கண்டு 'தீமைகளைப்புரியும் அவுணர்கள் அழியப்போவது உறுதி' யென்று எண்ணினார்கள்.

## தேவர்கள் திகைப்பு

திக்குப் பாலகர்களாகிய திசை காப்பாளர்களும், கதிரோன், திங்கள் முதலாயினோரும்கூட, அறுமுகக் கடவுளின் ஆடல்களைக் கண்டார்களேயல்லாமல், அவரைக் காணவில்லை. "இச்செயல்கள் அவுணர்களுடையவைகளல்ல. வேறு யாரோ இவ்வாறு செய்கிறார்கள்", என்று ஒன்றுகூடிப் பேசிக்கொண்டார்கள். "இந்திரன் நான்முகன் முதலியோர் மேருமலையில் இருக்கின்றார்கள். அவர்களிடத்தே சென்று இதனைச் சொல்வோம்," என்று முடிவு செய்தார்கள். அனைவரும் புறப்பட்டு மேருமலையை அடைந்தார்கள். அங்கு இந்திரனும் துன்பத்தோடுதான் இருந்தான். சென்ற தேவர்கள் நிகழ்ந்த செய்தியைத் தேவர்கோனிடம் தெரியப்படுத்தினார்கள். இந்திரன் தேவர்களைப் பார்த்து, "நானும் இதனை ஆராய்ந்துகொண்டுதான் இருக்கிறேன். ஒன்றும் விளங்கவில்லை. வாருங்கள் நான்முகனிடஞ் சென்று கேட்போம். உடனே எழுங்கள்", என்றான். அப்போது அறுமுகக்கடவுள், ஒரு திருமுகத்துடன் தேவர்கள் அனைவர்களுடைய கண்ணுக்குந் தோன்றியருளினார்.

## திருமுருகனுக்குந் தேவர்களுக்கும் போர்

தேவர்களின் திகைப்பைப் போக்கவந்த செவ்வேள் மேருமலையை அடைந்தார். கொடி முடிகளைப் பறித்து நான்கு பக்கங்களிலும் வீசினார். இந்திரன் முதலிய தேவர்கள் முருகனைக் கண்டார்கள். "மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் மாறுபடச் செய்தவன் இவனேயாகும்", என்றார்கள். அரிமாவை முன்னற்கண்ட விலங்குகளைப்போலக் கலங்கினார்கள். "இவனது ஆற்றலையெண்ணுமிடத்து இவன் பாலன் அல்லன். அவுணர்களினும் இவன் மிகக் கொடியவன். பெரிய மாயங்களைச் செய்பவன். இப்போதே போர் செய்து இவனை வெல்வோம்," என்று முடிவுசெய்து சூழ்ந்தார்கள். இந்திரன் வெள்ளையானையை நினைத்தான். அஃது உடனே வந்தது.

இந்திரன் போர்க்கோலங் கொண்டான். குலிசம், வாள், வில், வேல் என்னும் படைக்கருவிகளை யெடுத்துக்கொண்டான். வெள்ளையானையின்மேல் ஏறிக்கொண்டு முருகக் கடவுளோடு போர்செய்யத் தொடங்கினான். தேவர்களும் திருமுருகனை வளைத்துக்கொண்டார்கள். தேவர்கள் தம்மை வளைத்துக்கொண்டமையைக்கண்டு முருகக்கடவுள் திருநகைபுரிந்தார். யாதும் எண்ணாமல் முன்போலவே திருவிளையாடல்களைப் புரிந்தார். இந்திரன் படைக்கலங்கள் பலவற்றை அறுமுகக்கடவுள்மீது வீசினான். அவைகளெல்லாம் முருகன்மீது மலர்களைப்போல விழுந்தன. இந்திரன் குலிசத்தை யெறிந்து கனைத்தான். அக்குலிசம் முருகப்பெருமான்மீது பட்டுத் தூள்தூளாகப் போய்விட்டது. அதனை இந்திரன் கண்டு துன்பத்தை யடைந்தான். ஐராவதம் பேரொலி செய்துகொண்டு முருகக் கடவுள் முன்பு சென்றது. முருகப்பெருமான் எண்ணமாத்திரத்தால், ஒரு வில்லையும், பல கணைகளையும், விரைந்து உண்டாக்கிக்கொண்டார். வில்லைவளைத்து நாணொலி செய்தார். ஒரு கணையை யானையின் நெற்றியில் செலுத்தினார். வெள்ளை யானை புலம்பி விழுந்து மடிந்தது. வெள்ளை யானை மடிந்ததை இந்திரன் கண்டு வருந்தினான். முருகக் கடவுளை நெருங்கிநின்று சினத்தோடு வில்லை வளைத்தான். முருகக்கடவுள் ஓர் கணையை இந்திரன் தோள்மீது விட்டார். இந்திரன் வருத்தமுற்று ஆற்றலிழந்தான். தன் கையிலிருந்த வேலொன்றை முருகக்கடவுள்மீது வீசினான். அந்த வேல் ஒரு சிறு புல்போற் சென்று முருகக்கடவுள்மீது பட்டது. அதைக்கண்ட தேவர்கள் அனைவரும் வியப்படைந்தார்கள். முருகப்பெருமான் இந்திரனுடைய முடியை ஒரு கணையினாலும், கொடியை ஒரு கணையினாலும் மார்புக்கவசத்தை ஒரு கணையினாலும் அழித்தார். மார்பிலே எழு கணைகளை விட்டார். இந்திரன் சோர்ந்து வீழ்ந்தான். மற்றைத் தேவர்கள் முருகக்கடவுளை வளைத்துக்கொண்டு போர் செய்தார்கள். அப்பொழுது அறுமுகப்பெருமான் வருணனை நான்கு கணைகளினாற் கொன்றார். இயமனை ஐந்து

கணைகளினற் கொன்ருர். திங்களை ஒரு கணையினற் கொன்ருர். கதிரவனை மூன்று கணைகளினற் கொன்ருர். வாயுவை இரண்டு கணைகளினற் கொன்ருர். தீக்கடவுளை மூன்று கணைகளினற் கொன்ருர். எஞ்சிய தேவர்கள அறுமுகக்கடவுளுடைய நிலையை நோக்கினர்கள். "இவன் ஒருவனே இன்றைக்கு எல்லாரையுங் கொன்றுவிடுவான்," என்று முடிவு செய்தார்கள். சரபப்பறவையைக் கண்ட அரிமாக்கூட்டம்போல அஞ்சினர்கள். உள்ளங்கலங்கி நடுநடுங்கி ஓட்டம்பிடித்தார்கள். முருகக்கடவுள் போர்க் களத்திலே தனியே நின்ருர்.

## நாரதர் தொண்டு

நிகழ்ந்தவைகளை நாரதமுனிவர் கண்டார். தேவகுருவாகிய வியாழனிடஞ் சென்று சொன்னர். அவர் வருந்தினர். விரைந்து போர்க்களத்தையடைந்தார். தேவர்கள் இறந்து கிடத்தலைக்கண்டு மனம் வருந்தினர். முருகப்பெருமானுடைய திருவிளையாடல்களைக் கண்டார். அவருடைய திருவடித் தாமரைகளைப் போற்றி வழிபட்டார். "எம்பெருமானே! அவுணர்களின் தொல்லையால் இந்திரன் துன்பமுற்றுத் தன் பதவியைவிட்டு இம்மேருமலையில் மறைந்திருந்தான். அவன் உம்மைக்கொண்டு அவுணர்களையழித்துத் தன்னரசைப் பெற எண்ணியிருந்தான். பலகாலம் அருந்தவஞ்செய்து பெருந்துன்பமடைந்தான். நீர் தோன்றியபிறகு மகிழ்ச்சிகொண்டிருந்தான். உமக்குத் தொண்டு செய்வதற்கு இந்திரன் விரும்பியிருந்தான். நீர் இவ்வாறு திருவிளையாடல் புரிவதை அவன் அறிந்திலன். உமது திருவிளையாடல்களை அறிய வல்லவர்கள் யாவர்? பாசத்தில்நின்றும் நீங்காத சிற்றறிவையுடைய யாங்கள் தமது பெருந்திருவிளையாடலை யுணரவல்லேமோ? இந்திரன் அறிவின்மையினலே, உம்மோடு செய்தான். அவன் உம்முடைய திருவிளையாடல்களை உணர்ந்து கொள்ளவில்லை. நீர் தகுந்த தண்டனையே அளித்தீர். மற்றைத் தேவர்களும் அறிவின்மையால் உம்மோடு போர் செய்து இறந்தார்கள். தாய் தந்தையர்களே, தம் மக்களைக்

சொல்வார்களாயின், அவர்கட்கு வேறு யாவர் அருள் புரிவர்? அறிவு வடிவாகிய அடிகாள்! சரபப்புள்ளானது அரிமாவைக் கொல்வதன்றி, மின்மினியைக் கொல்வது வெற்றியாகுமா? ஆற்றல் மிக்க அவுணர்களை அடியோடு ஒழித்தருளும்; உம்முடைய திருவடிகளை மறவாத தேவர்களுடைய பெரும்பிழைகளைப் பொறுத்தருளும்," என்று பலவாறு வேண்டிக்கொண்டார்.

## போர்செய்திறந்த தேவர்கள் உயிர்பெற்றெழுதல்

வியாழன் கூறியவைகளைக் கேட்டு முருகக்கடவுள் புன்முறுவல் செய்தார். இந்திரன் முதலிய யாவரும் எழும்வண்ணம் திருவுள்ளத்தில் எண்ணியருளினார். உடனே இந்திரன் முதலிய தேவர்கள் உயிர்பெற்றெழுந்தார்கள். அவர்கட்கு மெய்யறிவு தோன்றிற்று. தாங்கள் முன்பு போர்செய்தது முருகக்கடவுளோடு என்று உணர்ந்தார்கள். மனங்கலங்கி வாடினார்கள். நடுநடுங்கி ஒடுங்கினார்கள். முருகக்கடவுளின் திருவடிகளைப் பன்முறை போற்றி வணங்கினார்கள். முருகக்கடவுள் அவர்கட்குத் திருவருள் செய்தார். தேவர்கள் துன்பமும் அச்சமும் நீங்கினார்கள். முருகக்கடவுளைப் பலவாறு புகழ்ந்துரைத்தார்கள். அருளுருவாகிய முருகக்கடவுள் தேவர்களைப் பார்த்து, "நீங்கள் நம்மை ஒரு சிறுவன் என்று நினைத்துப் போர் செய்தீர்கள்; நமது வன்மையும் பெருமையும் நீங்கள் நன்றாக இன்னும் உணருமாறு காட்டுவோம்" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## முருகக்கடவுள் பேருருவம்

எட்டுத் திக்குகளும், பதினான்கு உலகங்களும், எட்டு மலைகளும், ஏழு கடல்களும், உலகத்துயிர்களும், திருமால், நான்முகனாகிய பல தேவர்களும் தம்முள்ளே யடங்கிய பேருருவத்தை (விசுவரூபத்தை)க் கொண்டருளினார். பாதாளமெங்குந் திருவடிகளாக விருந்தன. திக்கின் முடிவுகளெல்லாம் திருத்தோள்களாக விருந்தன. விண்ணிடமெல்லாம் திருமுடிகளாக விளங்கின. ஞாயிறு,

திங்கள், தீ முதலியன திருக்கண்களாக விளங்கின. நடுவிடமெல்லாம் உடலாக விளங்கியது. மறைகளெல்லாம் திருவாயாக விளங்கின. அறிவுகளெல்லாந் திருக்காதுகளாக விளங்கின. திருமால், இந்திரன், நான்முகன் *முதலிய தேவர்களெல்லாரும் உடலில் திகழ்ந்ததுடன், இறைவியார் திருவுள்ளமாகவும், இறைவனார் ஆன்மாவாகவுமாகத் திகழ்ந்தனர். தேவர்கள் அறுமுகக்கடவுளின் பேருருவங் கண்டு வியப்படைந்தனர். அப் பேருருவத்தின் முழு அளவையுந் தேவர்களாற் காண முடியவில்லை. முழங்கால் வரையுமே அரிதாகக்கண்டு புகழ்ந்தனர். "முழுமுதற் கடவுளே! நீர் கொண்டுள்ள பெருவடிவத்தை நாங்கள் முழுவதுங் கண்டிலேம். முற்றுங்கண்டு மகிழுமாறு காட்டியருளுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள். அருட்கடலாகிய அறுமுகப்பெருமான் திருவுள்ளம் இரங்கியருளினார். மேலான அறிவுக்கண்ணைக் கொடுத்தருளினார். தேவர்கள் அறுமுகக் கடவுளுடைய பெருவடிவம் முழுவதையும், அடிமுதல் முடிவரை நன்கு கண்டார்கள். கணக்கற்ற உலகங்களும், உயிர்களும், மும்மூர்த்திகளும் அவ் வடிவத்திலே விளங்குவதைக் கண்டார்கள். இன்பம் மிகுந்தவர்களாய்ப் போற்றிப் புகழ்ந்தார்கள். பின்னர் முருகக்கடவுள் பேருருவத்தை மறைத்தார். ஆறு திருமுகங்களுடன் பழைய வடிவத்தைக்கொண்டார். இந்திரன் முருகக்கடவுளைப் போற்றினான். "பேருட்கடலே! சூரன் முதலிய அவுணர்களைக் கொன்று அழித்தருளுதல் வேண்டும். அடியேனுந் தேவர்களுந் தொண்டு செய்ய விண்ணுலகத்தை அரசு செய்துகொண்டிருத்தல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். முருகக் கடவுள் இந்திரனுக்குத் திருவருள் செய்தார். உலகத்தில் தம்மால் தடுமாற்ற மடைந்தவைகளையெல்லாம் முன்போல் நிலைநிறுத்தி யருளினார். யாவரும் அதுகண்டு மகிழ்ந்தனர்.

## கந்தவெற்பு

இந்திரன் முருகக்கடவுளைப் போற்றினான். "முதலீறற்ற முழுமுதற் பொருளே! மறைமுடிவிலே விளங்கா

நின்ற உம்முடைய திருவடிகளை வழிபட விரும்புகிறோம். அதற்குத் திருவருள் புரிக,'' என்று வேண்டிக்கொண்டான். முருகக்கடவுள் அதற்கிசைந்தார். தேவர்கள் பின்தொடர, மகாமேருமலையை நீங்கினார். திருக்கைலாய மலையின் பக்கத்திலுள்ள ஒரு மலையை அடைந்தார். இந்திரன் தேவதச்சனைக்கொண்டு ஒரு திருக்கோயிலை அமைத்தான். அதற்குள்ளே ஒரு சிறந்த அரியணையையும் ஏற்படுத்தினான். முருகக்கடவுள் அவ்வரியணைமீது எழுந்தருளினார். இந்திரனும், தேவர்களும் முருகக்கடவுளைப் பலவாறு போற்றி வழிபட்டார்கள். பிறகு முருகக் கடவுள் அங்கு நீங்கிக் கைலைமலையை அடைந்தார். இந்திரனும், தேவர்களும் அம்மலையை நீங்கினார்கள். அந்த மலை கந்தவெற்பு என்னும் பெயரைப் பெற்றது. திருக் கைலையை அடைந்த முருகக்கடவுள் நூறாயிரத்தொன்பது வீரர்களும் பூதர்களும் போற்ற அங்கு எழுந்தருளியிருந்தார்.

## கரு. ஆட்டில் ஏறுதல்

### நாரதர் வேள்வி

நாரதமுனிவர், நிலவுலகில் ஒரு வேள்விசெய்தார். அவ்வேள்வி சிவபெருமானுக்கு விருப்பமாகுமாறு செய்யப்பட்டது. அவ்வேள்வியில் தேவர்களும், முனிவர்களும், பார்ப்பனர்களும் திரண்டிருந்தார்கள். வேள்வியின் தீயில் நின்றும் ஓர் ஆட்டுக்கடா தோன்றியது. வேள்வியிற் கூடியிருந்தவர்கள் அக் கடாவைக்கண்டு அஞ்சியோடினார்கள். அக் கடா ஓடியவர்களை துரத்திச்சென்று கொன்றது. உலகு எங்குந் திரிந்து பலரைத் தாக்கிக்கொன்றது. அது மிகுந்த சினமுடையதாக இருந்தது. நாரதமுனிவரும் மற்றவர்களும் ஓடித் திருக்கைலாயமலையை அடைந்தார்கள். மலையில் ஏறிச்செல்லும்பொழுது அறுமுகக் கடவுளை நூறாயிரத்தொன்பது வீரர்களுடனும் கண்டார்கள். சிவபெருமானிடஞ்சென்று இச் சிறுசெய்தியைச் சொல்லவேண்டாம்; இப்பெருமானிடமே சொல்வோம்

என்று முடிவுசெய்தார்கள். நாரதர் வேள்வி செய்ததையும், அதில் ஆடு தோன்றிக் கேடுபுரிதலையுங் கூறினார்கள்.

### ஆட்டைப் பிடித்துவரச்செய்தல்

முருகக்கடவுள் அவர்கட்குத் திருவருள்புரிந்தார். "நீங்கள் அஞ்சவேண்டாம்" என்றார். வீரவாகுதேவரைப் பார்த்து, "வேள்வியில் தோன்றித் தீதுபுரியும் அவ்வாட்டுக் கடாவைப் பிடித்துவருவாயாக", என்று பணித்தருளினார். வீரவாகுதேவர் அப்பணியைத் தலைமேற்கொண்டு விரைந்து சென்றார். ஆட்டுக்கடாவைத் தேடினார். எல்லாவுலகங்களினுந் தேடியபிறகு, அவ்வாட்டுக்கடா நான்முகன் உலகத்தில் அகப்பட்டது. அக் கடா அஞ்சும் வண்ணம், அதன் கொம்பைப்பிடித்து, இழுத்துக்கொண்டு திருக்கைலாய மலையை அடைந்தார். முருகக்கடவுள் முன்புவிட்டு வணங்கினார். முருகக்கடவுள் முனிவர்களையுந் தேவர்களையும் பார்த்து, "ஆட்டுக்கடா இங்கு வந்துவிட்டது. இனி நீங்கள் நிலவுலகிற்சென்று தொடங்கிய வேள்வியை முடியுங்கள்," என்று மொழிந்தருளினார். தேவர்களும், முனிவர்களும் திருமுருகப்பெருமானை நோக்கி, "இவ்வாட்டுக் கடாவை ஊர்தியாகக் கொண்டருளுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள். முருகக்கடவுள், அவ்வாட்டுக்கடாவைத் தமக்கு ஊர்தியாகக் கொண்டருளினார்.

## கரு. நான்முகனைச் சிறைசெய்தல்

### நான்முகன் ஆணவம்

அறுமுகக்கடவுள், ஆட்டுக்கடாவின்மேலேறி எல்லாவுலகங்களினுஞ் சென்று, திருவிளையாடல்கள் புரிந்துகொண்டிருந்தார். ஒருநாள் நான்முகன் முதலாயினோர் திருக்கயிலாயமலையிற் சென்று, இறைவனை வணங்கித் திருவருள் பெற்றுக்கொண்டு மீண்டார்கள். கோபுரவாயிலை அடைந்தார்கள். முருகக்கடவுள், முதற்கோபுரத்துள்ளே நூறாயிரத்தொன்பது வீரர்களுஞ்சூழ்ந்து போற்ற

எழுந்தருளியிருந்தார். முருகக்கடவுள் தேவர்கள் கூட்டத்தைப் பார்த்தார். படைப்புத்தொழில் புரியும் நான்முகன் அக்கூட்டத்திற்குத் தலைவனாக இலங்கினான். முருகக் கடவுள் நான்முகனைப்பார்த்து, "இங்கே வா", என்று கூப்பிட்டார். நான்முகன் முருகக்கடவுளுக்கு, அண்மையிற் சென்றான். கீழேவிழுந்து வணங்காமல் கைகளைக் குவித்துக் கும்பிட்டான். முருகக்கடவுள் நான்முகனுடைய உள்ளக் கருத்தை உணர்ந்துகொண்டார்.

## அறுமுகக்கடவுள் நான்முகன் அறிவை ஆராய்தல்

"நான்முகனே! உட்காருவாயாக" என்று கட்டளையிட்டார். அவனும் அவ்வாறே உட்கார்ந்தான். "நீ எத்தொழில் புரிகின்றாய்?" என்று கேட்டார். "சிவபெருமானுடைய ஆணையினாலே நான் படைத்தல் தொழிலைப் புரிகின்றேன்." என்றான் நான்முகன். முருகக்கடவுள் நான்முகனைப் பார்த்துப், "படைப்புத்தொழில் புரியும் உனக்கு மறைகளெல்லாம் தெரியுமா"? என்று கேட்டார். "முன்னாளில் என்னைப் படைத்தருளிய சிவபெருமான், மறை முதலியவைகளைச் செய்து எனக்குப் போதித்தருளினார். அவைகளை நான் அறிவேன்," என்றான் நான்முகன். "அவற்றுள் இருக்கினைச் சொல்லைக்கடவாய்," என்று இயம்பியருளினார். நான்முகன் முதலிலே 'ஓம்' என்பதைச் சொல்லிவிட்டு மறையைச் சொல்லத் தொடங்கினான். முருகக்கடவுள் நான்முகனைப்பார்த்து, 'நிறுத்து' என்றார். அவனும் நிறுத்தினான். "நீ முதலில் மொழிந்த ஓம் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் கூறுவாயாக," என்றார். நான்முகனுக்கு ஓம் என்பதன் பொருள் விளங்கவில்லை. ஒன்றுங் கூறமுடியாமல் விழித்தான்.

இறைவன் எழுந்தருளியிருக்கும் இருக்கையாகவும (பீடம்), மற்றைத் தேவர்கட்கெல்லாம் பிறப்பிடமாகவும், எல்லா மந்திரங்களுக்கும், மறைகளுக்கும் மூலமாகவும், காசியில் இறப்பவர்கட்குச் சிவபெருமான் உணர்த்தியருளும் தாரகப்பிரமமாகவும் உள்ள பிரணவத்தின் பொருளை நான்முகன் ஆராய்ந்து பார்த்தான். ஒன்றும்

புலப்படவில்லை. யாதுங் கூறமுடியாமல் தியங்கினன். ஓம் என்பதன் உண்மைப்பொருளை நான்முகனும் அறியாது மயங்கினன் ஆயின், நாம் சிலவற்றை அறிந்திருக்கிறோம் என்பது நகைப்புக்கிடமன்றோ? பிரணவத்தின் பொருளை நான்முகன் உணராமல் விழித்த அளவில் அறுமுகக் கடவுளுக்குச் சினமுண்டாகியது. "பிரணவத்தின் பொருளையறியாத நீ படைத்தல் தொழிலைச் செய்வது எவ்வாறு?" என்று கூறி, நான்முகனுடைய நான்கு தலைகளும் குலுங்குமாறு குட்டினர். கீழே விழும்வண்ணம் திருவடிகளினல் உதைத்தருளினர். கந்தவெற்பிலே கொண்டுபோய்ச் சிறையில் அடைக்குமாறு செய்தார். தாமே படைத்தல் தொழிலைச் செய்யலானர். நான்முகனுடன் வந்த தேவர்கள் முருகக்கடவுளின் செயலைக் கண்டு மனம் நடுங்கினர். முருகக்கடவுளைத் தொழுதுகொண்டு தங்கள் தங்கள் இருப்பிடங்களை யடைந்தார்கள்.

எட்டொணுதஅக் குடிலையின் பயன்இனத் தென்றே
கட்டுரைத்திலன் மயங்கலும் இதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதுஇத் தன்மைய தோஎனுச் செவ்வேள்
குட்டினன் அயன் நான்குமா முடிகளுங் குலுங்க.

மறை புரிந்திடுஞ் சிவனருள் மதலைமா மலர்மேல்
உறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினல் உதைத்து
நிறைபு ரிந்திடு பரிசனரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்.

## கஎ. நான்முகனைச் சிறை நீக்குதல்

### திருமால் சிவபெருமானிடஞ் செல்லுதல்

அறுமுகப்பெருமான் அளவில்லாத காலம் படைத்தல் தொழிலைச் செய்துகொண்டிருந்தார். திருமால், நான்முகனைச் சிறை நீக்குவிக்க எண்ணினர். தேவர்களையும், முனிவர்களையும் தம்மிடம் வருமாறு எண்ணினர். அதனையுணர்ந்து, எல்லாத்தேவர்களும், திருமாலிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். திருமால், அத்தேவர்களுடன், திருக்கைலையை அடைந்தார். நந்திதேவரை வணங்கி, அவருடைய உடன்பாடு பெற்றுக்கொண்டு உள்ளே சென்றர்.

சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிப் போற்றினர். சிவபெருமான் அனைவர்க்குந் திருவருள் புரிந்தார். அவர்களைப் பார்த்து, "நீங்கள் துன்பத்தோடு நம்மிடம் வரக் காரணம் யாது?" என்று கேட்டருளினர். திருமால் இறைவனைப் பணிந்து, "உம்முடைய திருமகன் இங்கு வந்த நான்முகனைக் கூப்பிட்டுப் பிரணவத்திற்குப் பொருள் வினவினர். அவனதனை உரைக்க அறியாமல் மயங்கினன். அவனைக் குட்டிச் சிறையிலடைத்துவிட்டுத் தாமே படைத்தல் தொழிலைப் புரிகின்றர். அவன் அளவில்லாத காலங்களாகச் சிறையிற் கிடந்து துன்பப்படுகிறன். அவன் சிறையினை நீக்கியருளுதல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டார்.

## சிவபெருமான் திருநந்திதேவரை முருகக்கடவுளிடம் அனுப்புதல்

உடனே சிவபெருமான் திருநந்திதேவரைப் பார்த்து, "நீ நம்முடைய மகனாகிய முருகனிடஞ் சென்று, சிறையிலடைத்துள்ள நான்முகனை வெளியே விட்டுவிடுமாறு கூறிவிட்டு விரைந்து வருவாயாக," என்று கட்டளையிட்டார். நந்திதேவர் அப்பணியைத் தலைமேற்கொண்டார். அளவில்லாத கணங்கள் சூழக் கந்தவெற்பை நோக்கிப் புறப்பட்டார். கந்தவெற்பை யடைந்து திருக்கோயிலிற் புகுந்தார். முருகக்கடவுளுடைய திருவடித் தாமரைகளை வணங்கி யெழுந்தார். வாய்புதைத்து நின்றர். "நான்முகனுடைய சிறையை நீக்கிவிடுமாறு உமக்குச் சொல்லும் வண்ணம் சிவபெருமான் என்னை யனுப்பியருளினர். அவனைத் தடையின்றிச் சிறையில்நின்று நீக்கிவிடுதல் வேண்டும். பிரணவப்பொருள் அவன் சொல்லுதற்கு அவ்வளவு எளிதா?" என்று சொன்னர்.

முருகக்கடவுள் நந்திதேவரைப் பார்த்துச் சினந்தார். "நான், நான்முகனைச் சிறையினின்றும் விடமாட்டேன். நீ உடனே விரைந்து ஓடிப்போகாமல் இங்கே நிற்பையாகில் உன்னையுஞ் சிறையிலடைப்பேன். ஆகையால்,

உடனே ஓடிப்போ. வேறொன்றும் பேசாதே," என்றார். நந்திதேவர் முருகக்கடவுளின் சீற்றத்தைக் கண்டு அஞ்சி நடுநடுங்கினார். முருகக்கடவுளை வணங்கி அங்குநின்றும் மீண்டார். திருக்கைலாயமலையை யடைந்து, முருகக் கடவுள் கூறியருளியவைகளைக் கூறினார்.

## சிவபெருமான் நான்முகனைச் சிறைமீட்டல்

நந்திதேவர் கூறியவைகளைக்கேட்ட சிவபெருமான் திருநகை செய்தார்; அரியணையினின்றும் விரைந்து இறங்கினார். எருது ஊர்தியின்மேல் ஏறினார். திருமால், தேவர்கள், முனிவர்கள் முதலானவர்கள் சிவபெருமானைச் சூழ்ந்து சென்றார்கள். கண்ணுதற்பெருமான் கந்தவெற்பை யடைந்தார்; திருக்கோயிலுக்குள்ளே புகுந்தார். முருகக் கடவுள் விரைந்தெழுந்து இறைவனை வணங்கினார். தமது இருக்கையின்மீது இருக்கவைத்தார். "எம்பெருமான் இங்கு எழுந்தருளிவர நேர்ந்தது யாது செயலோ?" என்றார். சிவபெருமான் முருகக்கடவுளைப் பார்த்து, "ஓ முருகனே! நீ நான்முகனைச் சிறையிலடைத்தாய். நாம் அதனை நீக்கக்கருதி வந்தோம்; அவனைச் சிறையினின்றும் விடக்கடவாய்," என்று திருவாய்மலர்ந்தருளினார். இதனைக்கேட்ட முருகக்கடவுள், "நான்முகனுக்குப் பிரணவத்தின் பொருள் தெரியவில்லை. பிரணவத்தின் பொருள் தெரியாதவன் உலகத்தைப் படைக்கத் தக்கவனோ? படைப்புத்தொழிலை அவன் பெற்றுள்ளமையின் எவரையுஞ் சிறிதேனும் மதிப்பதில்லை. அவன் உம்மைப் போற்றி வழிபாடு செய்தாலும், ஆணவஞ் சிறிதும் ஒழிந்திலன். ஆகையால், அவனைச் சிறையினின்றும் வெளியே விடுதல் முடியாது," என்றார். சிவபெருமான் சினங்கொண்டவர் போல், "ஓ மகனே! உன் செய்கை நன்றாயில்லை. நந்தியை அனுப்பிக் கூறியபோதுங் கேட்கவில்லை. நாமே வந்து சொல்லும்போதும் மறுக்கின்றாய்!" என்று கடுமையாகப் பேசினார். முருகப்பெருமான் சிவபெருமானுடைய சினத்தைப் பார்த்து, "அவனை விட்டுவிட வேண்டுமென்று

உமக்குத் திருவுள்ளமிருக்குமானால் விட்டுவிடுகிறேன்," என்றார். சில பூதர்களை யனுப்பி நான்முகனைத் தம்முன் கொண்டு வருமாறு கட்டளையிட்டருளினார்.

சில பூதர்கள் போய் நான்முகனை முருகக்கடவுள் திருமுன்பு கொண்டுவந்து நிறுத்தினார்கள். நான்முகன் சிவபெருமானை வணங்கினான். சிவபெருமான் நான்முகனைப் பார்த்து, "நீ சிறையிருந்து வருந்தினையோ," என்று திருவாய்மலர்ந்தருளினார். நான்முகன் இறைவனைப் பார்த்து, "எம்பெருமானே! தங்களுடைய திருமகனார் எனக்களித்த தண்டனை தீமைக்காகவன்று. சிறியேனுக்கு நன்மை யுண்டாதற் பொருட்டேயாம். இதனால் என்னுடைய ஆணவம் ஒழிந்தது. தீவினைகளெல்லாம் தொலைந்தன. உள்ளந் தூய்மை யடைந்தது," என்று கூறினான். சிவபிரான் நான்முகனைப் பார்த்து, "உன்னுடைய படைப்புத்தொழிலை நீ வழக்கம்போல் செய்து கொண்டிரு," என்று கட்டளையிட்டருளினார்.

## முருகக்கடவுள் பிரணவப்பொருள் உரைத்தல்

பிறகு சிவபெருமான் முருகக்கடவுளை மடிமீது கொண்டு மகிழ்ந்தருளினார். "நான்முகனும் அறியாத பிரணவத்தின் பொருள் உனக்குத் தெரியுமா? தெரிந்தால் எனக்குச் சொல்வாயாக," என்று திருவாய்மலர்ந்தருளினார். முருகக்கடவுள் இறைவனைப் பார்த்து, "அதனை மறைமுகமாகக் கூறவேண்டிய முறைப்படி கூறவேண்டுமே யல்லாமல், எல்லோருக்குந் தெரியும்படியாகச் சொல்லலாமா?" என்றார். இறைவன் நகைத்துக், "கூறவேண்டிய முறைப்படி கூறுவாயாக," என்று கூறித் தம் காதுகளைக் கொடுத்தார். அறுமுகக்கடவுள் இறைவனுக்குப் பிரணவப்பொருளை யுரைத்தார். பிறகு சிவபெருமான் திருக்கைலையை அடைந்தார். முருகக்கடவுள் கந்தவெற்பில் நூறாயிரத்தொன்பது வீரர்களும், பூதக்கூட்டங்களுஞ் சூழ வீற்றிருந்தருளினார். தம்மை மெய்யன்போடு வழிபட்ட அகத்தியமுனிவருக்குப் பிரணவப் பொருளையும், வேதசிவாகமங்களையுங் கூறியருளினார்.

## கஅ. விடை பெறுதல்

### அமிர்தவல்லியும், சுந்தரவல்லியும்

அறுமுகக்கடவுள் கந்த வெற்பில் எழுந்தருளியிருக்கும்போது, திருமாலின் புதல்விகளாகிய அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்னும் இருவர் முருகக்கடவுளுக்கு வாழ்க்கைத் துணைவியர்களாக விரும்பினார்கள். அதன்பொருட்டுச் சரவணப்பொய்கையில் அருந்தவம் புரிந்தார்கள். முருகக்கடவுள் அம்மங்கையர் முன்பு எழுந்தருளினார். மாதர்கள் இருவரும் முருகனை வணங்கிப் போற்றினார்கள். "எம்பெருமானே! அடியேங்களைத் திருமணஞ் செய்து கொள்ளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள்.

முருகக்கடவுள் மூத்தவளாகிய அமிர்தவல்லியைப் பார்த்தார். "நீ இந்திரன் மகளாக வளர்வாயாக; பிறகு நாம் வந்து மணஞ்செய்து கொள்வோம்" என்றார். இளையவளாகிய சுந்தரவல்லியைப் பார்த்து, "நீ நிலவுலகில் சிவமுனி மகளாகத்தோன்றி வேடர்களிடத்திலே வளர்வாயாக; பிறகு நாம் வந்து திருமணஞ் செய்துகொள்வோம்" என்றார். அவர்களும் விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்.

அமிர்தவல்லி, ஒரு குழந்தை வடிவங்கொண்டாள். மேருமலையிலிருந்த இந்திரன்முன் சென்றாள். "நான் உன்னுடன் தோன்றிய உபேந்திரனுடைய மகள், என்னை நீ வளர்ப்பாயாக" என்றாள். அவன் அவளை அன்புடன் வளர்க்குமாறு ஐராவதத்திற்குக் கட்டளையிட்டான். ஐராவதமும் அவ்வாறே செய்தது. அதனால் அப்பெண்ணுக்குத் 'தெய்வயானை' என்று பெயர் உண்டாகியது. அவள் முருகக்கடவுளை எண்ணிக்கொண்டிருந்தாள். சுந்தரவல்லி தொண்டைநாட்டுக்குச் சென்றாள்.

### திருமுருகன் திருக்கைலையில் எழுந்தருளுதல்

மங்கையர்க்கு வரங் கொடுத்தபின், முருகக்கடவுள் கந்த வெற்பை யடைந்தார். பிறகு நூறாயிரத்தொன்பது

வீரர்களும், பூதங்களுஞ் சூழத் திருக்கைலையை அடைந்து, தாய் தந்தையர்கட்கு நடுவே எழுந்தருளியிருந்தார்.

## தேவர்கள் முறையீடு

அறுமுகக்கடவுள் இறைவனுடன் எழுந்தருளியிருக்கையில், இந்திரன் முதலிய தேவர்கள், நான்முகனையுந் திருமாலையும் அழைத்துக்கொண்டு திருக்கைலைமலையை அடைந்தார்கள். உள்ளே செல்லுவதற்கு முயன்றார்கள். நந்திதேவர் அவர்களைத் தடுத்து நிறுத்தினார். பலநாள் நின்றார்கள். பிறகு அவர்கள் நந்திதேவரைப் போற்றித் தங்களுடைய துன்பங்களை முறையிட்டுக்கொண்டார்கள். நந்திதேவர் திருவுள்ளம் இரங்கினார். "நான் சிவபெருமானிடம் சென்று தெரிவித்து, உடன்பாடு பெற்று அழைத்துக்கொண்டு செல்லுகிறேன். இங்கேயிருங்கள்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றார். சிவபெருமானை வணங்கி நின்றார். "நான்முகன், திருமால், இந்திரன் முதலியோர் திருக்கோயிலின் முதல் வாசலிலே வந்திருக்கின்றார்கள்," என்று கூறினார். சிவபெருமான், "அவர்களனைவரையும் நம்முன்னே அழைத்துக்கொண்டு வருவாயாக," என்று கட்டளையிட்டார். தேவர்களனைவரும், விரைந்து சிவபெருமானுக்கு முன்சென்று வணங்கினார்கள்.

இந்திரன் சிவபெருமானைப்பார்த்து, "முதற்கடவுளே! அடியவர்களாகிய யாங்கள் பலவூழிகளாக அவுணர்களால் வருந்திக்கொண்டிருக்கிறோம்; அடியேனுடைய மகனாகிய சயந்தனும், தேவர்களும் அரம்பையர்களும் சூரனுடைய ஊரிலே சிறையிருக்கிறார்கள். விண்ணுலகம் அவுணர்களால் அழிந்துவிட்டது. திருமகன் பிறந்து அவுணர்களை அழித்தருள்வான் என்று முன்பு திருவாய் மலர்ந்தருளினீரே! திருமகனும் பிறந்திருக்கின்றாரே! எங்கள் துன்பம் ஒழியவில்லையே! அடியேங்களுடைய தீவினை இன்னும் ஒழிந்திலதுபோலும். எம்முடைய துன்பங்களை வேறு எவரிடஞ்சென்று இயம்புவோம்? சூரனுடைய தொல்லைகள் சொல்லுந்தரத்தனவல்ல. தீயின் மீதும் உறங்கலாம்; நஞ்சையும் உண்ணலாம். இந்தப்

பகைவர்களுடைய துன்பம் பொறுத்தற்கரியது. இனிமேலாயினுஞ் சிறியேங்களைக் காத்தருளும்," என்று பலவாறு கூறி வேண்டிக்கொண்டான்.

## சிவபெருமான் அருள்புரிதல்

இந்திரன் இயம்பியவைகளைச் சிவபெருமான் கேட்டருளினர். "உங்கள் துன்பத்தை விடுங்கள்," என்று அருளிச்செய்தார். அறுமுகக்கடவுளைப் பார்த்து, "சூரன் என்பவன் உலகத்துயிர்களுக்குந் தேவர்களுக்குந் துன்பத்தைச் செய்துகொண்டிருக்கிறன். அவன் கெடுதலில்லாத வலிமையுடையவன். நீ பூதப்படைகளுடன் சென்று அவுணர்களையும் சூரனையுங் கொன்று இந்திரனுக்கு அவனுடைய அரசைக் கொடுப்பாயாக!" என்று பணித்தருளினர். முருகக்கடவுள், "அப்படியே செய்கிறேன்," என்று தம்முடன்பாட்டைத் தெரிவித்தருளினர். சிவபெருமான் பதினொரு உருத்திரர்களையும் உள்ளத்தில் நினைத்தருளினர். அவர்கள் தோன்றினர்கள். அவர்களைப் படைக்கலங்களாக்கி முருகக்கடவுளுடைய திருக்கையிலே கொடுத்தருளினர். பதினொரு உருத்திரர்களும் தோமரம், கொடி, வாள், குலிசம், கணை, அங்குசம், மணி, தாமரை, தடி, வில், மழு என்னும் பதினொரு படைக்கலங்களானர்கள்.

## வேல்

பிறகு சிவபெருமான் ஒரு வேற்படையை யுண்டாக்கினர். அவ்வேல், ஐம்பெரும் பூதங்களையும் அழிக்கக் கூடியது. எல்லா உயிர்களையும் ஒன்றாக முடிக்கக் கூடியது. எவர்மேல் செலுத்தினும் அவருடைய வன்மையையும் மேன்மைகளையுங் கெடுத்து உயிரை உண்ணக் கூடியது. எப்படைக்கலங்களுக்குந் தலைமை பெற்றது. அதனை முருகக்கடவுளுடைய திருக்கையில் கொடுத்தருளினர்.

## வீரர்கட்குக் கட்டளை

பின் நூறாயிரத்தொன்பது வீரர்களையும் பார்த்து, "நீங்கள் முருகனோடு சென்று அவுணர்களைத் தொலைப்ப

தற்குப் பக்கத்துணையாக இருக்கக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டருளினார். அவர்கட்குப் பல படைக்கலங் களைக் கொடுத்தார். அண்டாபரணர், நந்தி, உக்கிரர், சண்டர், தீக்கண்ணர், சிங்கர் முதலிய கணநாதர்களைப் பார்த்து, "நீங்கள் இரண்டாயிரம் வெள்ளம் பூதங்க ளோடு அறுமுகனுக்குப் படைத்தலைவர்களாகச் செல்லக் கடவீர்கள்," என்று கட்டளையிட்டருளினார்.

## தேர்

பிறகு சிவபெருமான், அறுமுகக்கடவுள் ஏறுவதற்கு ஒரு தேரைப் படைத்துக் கொடுத்தருளினார். அத்தேர் ஐம்பெரும் பூதங்களின் வன்மையைக் கொண்டது. நான் முகன் முதலிய தேவர்களுடைய ஆற்றலையுங் கொண்டது. நூறுயிரங் குதிரைகள் பூட்டப்பெற்றது. மனவிரைவினும் விரைந்து செல்லக்கூடியது.

## முருகன் புறப்படுதல்

முருகக்கடவுள் போருக்குப் புறப்பட்டார். இறை வனையும், இறைவியையும் தொழுது வணங்கினார். இரு வரும் முருகக்கடவுளை வாழ்த்தி, விடைகொடுத்தருளினார் கள். மற்றைய வீரர்களும், இறைவனையும் இறைவியையும் தொழுது, முருகக்கடவுளுடன் புறப்பட்டார்கள்.

## கக. படையெழுதல்

திருமால் வாயுதேவனைப் பார்த்து, "நீ முருகக் கடவுளுடைய தேரைச் செலுத்தக்கடவாய்," என்று கட்டளையிட்டார். அவ்வாறே வாயுதேவன் தேரைச் செலுத்தலானான். முருகக்கடவுள் தேரின்மீது ஏறி யருளினார். இந்திரன் முதலிய தேவர்கள் இனிமேல் சூரன் இறந்தான் என்று மகிழ்ந்து ஆரவாரித்தார்கள். நூறுயிரத்தொன்பது வீரர்களும், முருகக்கடவுளைச் சூழ்ந்தார்கள். முனிவர்களும், தேவர்களும், அவ்வீரர் களை மொய்த்தார்கள். திருக்கைலைமலையில், பல வெள்ளம் பூதங்கள் இருந்தன. அவற்றுள், இரண்டாயிரம் வெள்ளம்

பூதப்படைகள் நூற்றெட்டுப் படைத்தலைவர்களுடன் முருகக் கடவுளிடத்திற்கு வந்து சூழ்ந்தன. பலவகை வாத்தியங்கள் முழங்கின. அறுமுகக்கடவுள் படைகளுடன் நிலவுலகின்மேல் வந்து சேர்ந்தார்.

## உ௦. தாரகன் அழிவு

### கிரவுஞ்ச மலையை அடைதல்

முருகக்கடவுள் படையுடன் செல்லும்போது, தாரகாசுரனுக்கு உறைவிடமான கிரவுஞ்ச மலை எதிர்ப்பட்டது. அம்மலையைக் கண்டவுடன், தேவர்கள் மனம் நடுங்கினார்கள். இந்திரன் கலங்கி நின்றான். அப்பொழுது நாரதமுனிவர் வந்து சேர்ந்தார். அவர் முருகக்கடவுளுடைய திருவடிகளை வணங்கினார்.

### நாரதர் வேண்டுகோள்

நாரதர் முருகக்கடவுளைப் பார்த்து, "எம்பெருமானே! இம்மலை மிகுந்த வஞ்சகமுடையது. அகத்திய முனிவருடைய சாபத்தினால் இவ்வாறு நிற்கிறது. இதனுடைய பெயர் கிரவுஞ்சமலை. இம்மலையின் ஒருபக்கத்திலே மாயபுரி என்னும் ஊர் இருக்கிறது. அங்கு சூரனுடைய தம்பியாகிய தாரகன் இருக்கிறான். அவன் யானை முகத்தை யுடையவன். போரிலே திருமாலினுடைய ஆழிப்படையைப் பதக்கமாக அணிந்தவன். இவனை முன்பு கொன்றால் இவனுக்கு மூத்தோனாகிய சூரபதுமனைக் கொல்வது எளிதாக விருக்கும்," என்று கூறினார். நாரதர் நவின்றதைக் கேட்ட முருகக்கடவுள், "அவனை இப்போது இங்கே கொல்வோம்," என்று திருவாய்மலர்ந்தருளினார். தேவர் முதலாயினோர் மகிழ்ச்சியடைந்தனர்.

### வீரவாகுதேவர்க்குக் கட்டளை

முருகக்கடவுள் வீரவாகுதேவரைப் பார்த்தார். 'தம்பி! இம்மலையின் ஒரு பக்கத்திலேயுள்ள மாயபுரியிலே, தாரகாசூரன் தன் படைகளோடு இருக்கிறான். நீ நூறு

யிரத்தொன்பது வீரர்களோடும், பூதப்படைகளோடுஞ் சென்று, அவனுடைய நகரத்தை வளைக்கக்கடவாய்; எதிர்க்கும் அவுணப்படைகளை அழிப்பாயாக! தாரகன் எதிர்ப்பானாயின், அவனோடும் போர் செய். உன்னால் அவனை வெல்வது அரிதாயின் நாம் வந்து வெல்வோம்," என்று கூறியருளினார். வீரவாகுதேவர், அதற்குடன் பட்டு, முருகக்கடவுளை வணங்கி நின்றார். முருகக் கடவுள் தம் பக்கத்தில் நின்ற தேவதச்சனைப் பார்த்து, "வீரவாகுதேவர் முதலிய யாவருக்கும் கொடுப்பதற்குப் பல தேர்களைச் செய்வாயாக!" என்றார். தேவதச்சனும் ஒரு கணப் பொழுதிலே அப்படியே செய்து முடித்தான். அத்தேரில் அரிமாக்களும், பாய்மாக்களும், பூதங்களும் பூட்டப்பட்டிருந்தன. அத்தேர்களை அறுமுகக் கடவுள் வீரவாகுதேவர்க்கும், பிற வீரர்கட்கும் கொடுத்தருளினார். வீரவாகுதேவர் முதலானோர் முருகக் கடவுளை வணங்கிப் படையுடன் புறப்பட்டார்கள். பல வகை ஒலிக் கருவிகள் முழங்கின. படை மாயபுரியை அடைந்தது.

## அவுணர்களுடன் போர்

பூதர்கள் நகரத்தினுள்ளே புகுந்தார்கள். எதிர்ப்பட்ட அவுணர்களோடு, போர் செய்தார்கள். தூதர்கள் விரைந்து அரண்மனைக்குள்ளே நுழைந்தார்கள். தாரகாசுரனை வணங்கி நின்றார்கள். "மன்னனே! சூரபன்மன் தேவர்களை வருத்திச் சிறை வைத்திருக்கிறானல்லனோ? அச்சிறையை நீக்கித் தேவர்கட்கு நன்மையைச் செய்யும் பொருட்டுச், சிவபெருமான் ஒரு திருமகனைப் பெற்றருளினார். அத்திருமகனார் அவுணர்களையெல்லாங் கொன்றுவிடுவாரென்று, விண்ணிற் செல்லும் தேவர்கள் கூறக் கேட்டோம். நாம் அப்பொழுது அந்த மொழிகளை நம்பவில்லை. இப்பொழுது தேவர்கள் கூறியவாறே நேரிட்டிருக்கிறது. இரண்டாயிரம் வெள்ளப் பூதப்படைகள் சூழ அறுமுகக்கடவுள் இங்கு வந்திருக்கிறார். முன்னாலே வந்த தூசிப்படை. நகரத்தை வளைத்துக்கொண்டது," என்று கூறினார்கள்.

தூதர்கள் சொல்லியவைகளைக் கேட்ட, தாரகன் சினங் கொண்டான். அரியணையினின்றும் இறங்கினான். தூதர்களைப் பார்த்தான். "விரைவில் அப்படைகளையெல்லாம் விரட்டியடிப்போம். நம்முடைய படைகள் எல்லாவற்றையும் ஒரு நொடியிற் கொண்டு வாருங்கள்," என்று ஆணையிட்டான். தூதர்கள் விரைந்து சென்றார்கள். தாரகன் தன்னருகில் நின்றவர்களைப் பார்த்து, "தேரைக்கொண்டு வாருங்கள்," என்றான். ஒருகணப்பொழுதில் தேர் வந்தது. தாரகன் அத்தேர்மீது ஏறினான். அமைச்சர்கள் தாரகனைப் போற்றிச் சூழ்ந்தார்கள். சாமரைகள் இரட்டின. வெண்குடைகள் நிழற்றின. வலம்புரிகள் ஒலித்தன. தாரகாசுரனுக்குப் பக்கத்தில் ஒரு தேர் சென்றது. அத்தேர் அரிமாக்கள் பலவால் இழுக்கப்பட்டது. அத்தேரில் மகாமேரு மலையைப்போன்ற ஒருவைரத் தண்டமும், பல படைக்கலங்களும் வைக்கப்பட்டிருந்தன. தூதர்களாலே கூப்பிடப்பெற்ற அவுணப்படைகள், யானை, குதிரை, தேர்களோடு வந்து, நெருங்கின. தாரகன் தன் நகரத்தை நீங்கிச் சென்றான். பூதர்கள் ஆரவாரஞ்செய்து எதிர்த்தார்கள். இருபக்கத்துப் படைகளுக்கும் போர் மூண்டன. பூதர்கள் குன்றுகளையும், மரங்களையும், தடிகளையும், மழுக்களையும், சூலங்களையும், அவுணர்கள் மேலே வீசினார்கள். அவுணர்கள் கணைகளையும், வேல்களையும், உருளை (ஆழி) களையும் வீசிப் போர் செய்தார்கள். அப்பொழுது குருதியாறு பெருகிற்று. தோள்களும், தலைகளும் துள்ளின. குடர்கள் சிந்தின. அவுணர்கள் பலர் மாய்ந்தார்கள். பூதர்கள் சிலர் பொன்றினார்கள்.

## தாரகன் போர்

பூதர்களால், தன்படை அழிதலைத் தாரகன் கண்டான். மிகுந்த சினங்கொண்டான். தேரில் நின்று நிலத்திலே குதித்தான். ஒரு பெருந்தண்டத்தைக் கையில் எடுத்தான். பூதர்கள் பலரைக் கொன்றான். அண்டமுங் குலுங்கும் வண்ணம் ஆரவாரித்தான். கால்களாற் கலக்கிச் சென்றான். தாரகனை எதிர்க்கமுடியாமல் பூதப்படைத் தலைவர்கள்

மனந் தளர்ந்தார்கள். பல பக்கங்களிலுஞ் சிதறி ஓடினார்கள். நூறாயிரம் வீரர்கள் அதனைக் கண்டார்கள். சீற்றங் கொண்டார்கள். பலவகை ஒலிக்கருவிகள் ஒலிக்க, வில்லை வளைத்தார்கள். கணைகளைத் தொடுத்தார்கள். தாரகனைச் சூழ்ந்தார்கள். பூதப்படைத் தலைவர்கள் செலுத்திய கணைகள், தாரகனுக்கு எத்தகைய ஊறுபாட்டையும் விளைத்தில. எல்லாக் கணைகளும் வறிதே மீண்டன. வீரர்கள் அதுகண்டு வெகுண்டார்கள். தெய்வப் படைக் கலங்களைச் செலுத்தினார்கள். அவைகள் தாரகன்மீது பட்டு, வலிகெட்டுச் சென்றன. தேவர்கள் அதனைக் கண்டு கலங்கினார்கள். தாரகன் தன் வைரத்தண்டத்தைச் சுழற்றினான். தன்னைச் சூழுகின்ற தேவர்களையெல்லாம் அடித்து நொறுக்கினான். துளையையுடைய தன்னுடைய கையைநீட்டினான். நூறாயிரம் வீரர்களையும் வாரினான். கடலிற்போய் விழுமாறு வீசியெறிந்தான்.

## ஒன்பது வீரர்களும் தாரகனும்

தாரகனுடைய செயலை வீரகேசரி கண்டார். அவருக்குச் சினமுண்டாயிற்று. முருகக்கடவுளுடைய திருவடிகளை மனத்தில் போற்றினார். வில்லை வளைத்தார். நூறு கணைகளைத் தொடுத்துத் தாரகனுடைய முடியைத் தள்ளினார். கடலும் நாணும் வண்ணம் பேரொலி செய்தார். அவ்வொலியைக்கேட்ட தேவர்கள் அவர்மீது மலர்மழை பொழிந்தார்கள். தாரகன் முடி வீழ்ந்ததுபற்றி நாணமுற்றான். தன் கைத்தண்டத்தை வீரகேசரிமீது எறிந்தான். தேர்மீது ஏறி வேறொரு முடியை அணிந்தான். தாரகன் எறிந்த தண்டம், மார்பிலே பட்டவளவில், வீரகேசரி மயங்கி வீழ்ந்தார். வீரவாகுதேவர் அதைக்கண்டு வெகுண்டார். தாரகனெதிர்சென்று வில்லை வளைத்தார். கணைகளைத் தொடுத்து அவன் உடலை நிறைத்தார். தாரகன் ஒரு வில்லை வளைத்து வீரவாகுதேவர்மீது கணைமழையைப் பொழிந்தான். வீரவாகுதேவர் பதினான்கு கணைகளைத் தொடுத்துத் தாரகனுடைய வில்லை யொடித்தார். தன் வில் முறிபட்டதைக்கண்டு, தாரகன் கனன்றான்.

"இனி நீ இறந்தாய்; இதற்குச் சிறிதும் ஐயமில்லை," என்று கூறி ஒரு சூலத்தை வீசினன். அச் சூலம் வீரவாகுதேவர் மார்பில் பட்டது. அவர் மயங்கினின்றார். தாரகன் இடி போல் ஆரவாரித்தான். வீரவாகுதேவருடைய தம்பியர் எழுவரும் தாரகனேடு போர்செய்து தோற்றார்கள். வீரவாகு தேவர் தம்முடைய தம்பியர் தாரகனை யெதிர்த்துத் தோற்றதைக் கண்டார். தாரகனெதிர் சென்று ஒரு வில்லை வளைத்து நாணெலி செய்தார். அக்காலை மலைகளெல்லாஞ் சுழன்றன. அவுணர்கள் இரு காதையும் மூடிக் கொண்டு கலங்கியோடினர்கள். தேவர்களும் வீரவாகு தேவருடைய நாணெலிக்கஞ்சி யேங்கினர்கள். வில்லை வளைத்துத் தீப்போல் வெகுண்டார். தாரகனைப் பார்த்தார்; 'வீணைக் களிக்காதே; நான் உன்னை விரைவில் கொல்வேன்' என்றார். தாரகன் வீரவாகுதேவரைப் பார்த்துத் "திருமாலின் உருளைப்படையை என் கழுத்திற் பதக்கமாக அணிந்தேன். இத்தகைய என்னுடைய வலிமையை நீ நன்றாக உணரவில்லை. 'நான் உன்னைக் கொல்வேன்,' என்று கூறுகிறாய்; அரிமாவை நரிமா வெல்லுமா? உன்னுடன் வந்த பூதப்படைகளெல்லாம் ஒழிந்தன. வீரர்களெல்லாரும் தொலைந்தார்கள். நீயுந் தளர்ந்து நிற்கிறாய். ஆயினும் இப்போதும் ஆண்மை பேசுகிறாய். உன்னைக் கொல்கிறேன் பார்," என்றான். அப்பொழுது வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைத் தொடுத்தார். தாரகனும் ஆயிரங்கணைகளைத் தொடுத்து வீரவாகுதேவருடைய கணைகளின் ஆற்றலை மாற்றினன். மேலும் நூறு கணைகளைச் செலுத்தினன். வீரவாகுதேவர் அக்கணைகளை மாற்றினர். தாரகன் வீரவாகுதேவரை விற்போரால் வெல்லமுடியாது என்றுணர்ந்தான். தெய்வப்படைக் கலங்களைக்கொண்டு வெல்லவேண்டுமென்று முடிவு செய்தான். தீக்கணையைச் செலுத்தினன். வீரவாகுதேவரும் வெகுண்டு தீக்கணையை ஏவி அதனை அழித்தார். தாரகன் வருணப் படைக் கலத்தை விட்டான். வீரவாகுதேவரும் வருணப் படைக் கலத்தைச் செலுத்தி அதன் ஆற்றலை மாற்றினர். தாரகன் சூரியப்படைக்கலத்தைவிட, வீரவாகுதேவரும் அதனை

விட்டார். தாரகன் காற்றுப்படைக்கலத்தை விட்டான். வீரவாகுதேவரும் அதனைச் செலுத்தினர். தாரகன் பிரம்மப்படைக்கலத்தை விட்டான். வீரவாகுதேவரும் அதனைச் செலுத்தினர்.

## தாரகன் மாயப்போர்

வீரவாகுதேவரின் வியத்தகுபோரைத் தாரகன் கண்டான். "நான் விட்ட தேவப்படைக்கலங்கள் எல்லாவற்றையும் இப்போர்மறவன் தடுத்துவிட்டான். இவனை மாயப்போரினால்தான் வெல்லவேண்டும்." என்று முடிவு செய்தான். மாயமந்திரங்களைச் சொல்லிக்கொண்டு எண்ணில்லாத வடிவங்களைத் தாங்கினன். கணக்கற்ற படைக்கலங்களைச் செலுத்தினன். இருட்கூட்டம் எங்கும் பரவினாற்போல அவனொருவனே எங்குமாய்நின்று போர்புரிந்தான். அவனது மாயப்போரைக்கண்டு தேவர்கள் கலங்கினார்கள். முன்னரே தொலைவில் ஓடிப்போன பூதர்கள் பின்னும் அஞ்சி ஓடினார்கள். அவுண மறவர்கள் போராண்மைகொண்டு கொக்கரித்தார்கள். தாரகன் மாயப்போர் செய்தலை வீரவாகுதேவர் கண்டார். அம் மாயப்போரைக்கண்டு அனைவரும் அஞ்சுதலையும் வீரவாகுதேவர் உணர்ந்தார். தீப்பொறி சிதறும்படியாகப் பார்த்தார். வீரபத்திரப் படைக்கலத்தை விடுவதற்கு எண்ணினார். அதனைக் கையில் எடுத்தார். எடுத்த அளவில் தாரகனுடைய மாயை கதிரவனுக்கு முன் இருள் கெடுதல் போலக் கெட்டது. வீரவாகுதேவரைப் பிறகு மாயையால் வெல்லலாம் என்று தாரகன் எண்ணினன். தன் தேரை விட்டு விரைந்தோடினன். வீரவாகுதேவர் தாரகன் தோற்றோடுவதைக்கண்டார். தோற்றோடுகிறவன் மேலே படைக்கலத்தை விடுதல் ஆண்மையன்றென எண்ணினர். வீரபத்திரப் படைக்கலத்தைத் தூணியுள் வைத்தார். "தோற்றோடிய தாரகனைத் தொடர்ந்து சென்று பிடித்துத் தோள்களைக் கயிற்றாலே கட்டி முருகக்கடவுளுக்கு முன்னே கொண்டுபோய் நிறுத்துவேன்," என்று எண்ணினர். முருகக்கடவுளை உள்ளத்துள் நினைந்தார். கடல் முழக்கம்

போல ஆரவாரித்தார். தாரகனை வைதுகொண்டு தொடர்ந்து அணுகினார். தாரகன் கிரவுஞ்ச மலையின் குகையொன்றினுள்ளே சென்று ஒளித்தான். அவன் சென்ற குகையினுள்ளே வீரவாகுதேவரும் புகுந்தார். அக்குகை மிகுந்த இருள் செறிந்ததாகவிருந்தது. வீரவாகு தேவர் திருவடிகளினாலே தடவி நடந்தார். தாரகனைக் காணமுடியவில்லை. குகையின் மாயையால் மீளும் நெறியுந் தெரியவில்லை. அது மாயையின் செயல் என்று அறிந்தார். மாயையிற் சிறந்த அக் கிரவுஞ்சமலை வீரவாகுதேவரின் அறிவை மயக்கிற்று. அவர் பழைய அறிவுகளையெல்லாம் இழந்து துயின்றார்.

## துணைவர்களும் மயங்குதல்

வீரவாகுதேவர் மயங்கித் துயின்றபோது, அவருடைய தம்பியர்கள் நூறாயிரத்தெண்மரும், பூதப்படைத் தலைவர்களும், வீரவாகுதேவரைக் காணாது வருந்தினார்கள். அவர் மீளாததற்குக் காரணம் யாது? என்று எண்ணினார்கள். மலைக்குகையினுள் தாரகனோடு போர் செய்கிறார் போலும் என்று முடிவுசெய்தார்கள். நாமும் அங்கே போவோம் என்று வீரவாகுதேவர் புகுந்த மலைக்குள் புகுந்தார்கள். வீரவாகுதேவரைப்போல அவர்களும் மயங்கித் தியங்கினார்கள். தாரகன் வந்து பார்த்தான். நம்முடைய மாயையின் ஆற்றலால் அனைவரும் ஒருங்கே இறந்தார்கள் என்று மகிழ்ந்தான். மலைக்கு வெளியே வந்தான்.

## பூதர்கள்மேல் தாரகன் போர்

நூறாயிரத்தொன்பது வீரர்களும் மயங்கியமையைக் கண்டு, விண்ணில் நின்ற தேவர்கள் பதைபதைத்துக் கலங்கியோடினார்கள். படைத்தலைவர்கள் இன்மையால், பூதப் படைகள் அச்சமடைந்தன. மலைக்கு வெளியே வந்த தாரகன் ஒரு தேர்மீது ஏறினான். அவுணர்கள் பலர் அவனைச் சூழ்ந்தனர். தாரகன் வில்லை வளைத்து நாணொலி செய்தான். கோடிகோடிக் கணைகளைப் பூதர்கள்மேற் பொழிந்தான். பூதர்கள் கலங்கியோடினார்கள்.

## நாரதர் தொண்டு

நிகழ்ந்தவைகளை நாரதமுனிவர் கண்டார். உடல் நடுநடுங்கி வருந்தினர். தேவர்களோடு விரைந்து சென்று, அறுமுகக்கடவுளைக் கண்டார். அவருடைய திருவடிகளை வணங்கி நின்றார். "இறைவ! நம்முடைய படைவீரர்கள் அவுணர்களோடு பெரும்போர் செய்தார்கள். அவுணப் படைகளைக் கொன்றொழித்தார்கள். தாரகனோடு போர் செய்தார்கள். தாரகன் தன்னுடைய சூழ்ச்சியினாலே வீரவாகுதேவரையும், நூறாயிரத்தெட்டு வீரர்களையும், பூதப்படைத் தலைவர்களையும், மலைக்குகைக்குள்ளே நுழையச் செய்தான். நுழைந்தவுடன் அனைவரும் மயங்கும் படியாகக் கிரவுஞ்சமலை மாயையைச் செய்தது. அவர்கள் மயங்கியவுடன் தாரகன் போர்க்களத்தை யடைந்தான். நம்முடைய படைகள்மீது கணைகளை மாரியாகப் பொழிந்தான். அவைகள் தோற்றோடின. எங்கும் நிறைந்துள்ள தாங்கள் இவைகளையெல்லாம் அறியாதவரல்லர்," என்று கூறினார்.

## முருகக்கடவுள் போருக்கு எழுதல்

அருட்பெருங்கடலாகிய அறுமுகக்கடவுள் நாரதர் நவின்றவைகளையெல்லாங் கேட்டருளினர். தேவர்களுடைய துன்பத்தைப் பார்த்தார். "நாம் இதோ போருக்குச் செல்லுகிறோம். தாரகனைப் போரிலே வேற்படையினாலே கொல்லுகிறோம். கிரவுஞ்ச மலையைப் பிளக்கிறோம். வீரர்களை நொடிப்பொழுதிலே மீட்கிறோம். நீங்கள் துன்பப்படவேண்டாம்," என்று கூறியருளினார். அனைவரும் மனத்தளர்ச்சி நீங்கினர்கள். மகிழ்ச்சி யடைந்தார்கள். இன்பக் கூத்தாடினர்கள். இசை பாடினர்கள். முருகக்கடவுளைப் போற்றி வணங்கினர்கள். முருகக்கடவுள் தம்முடைய தேரோட்டியாகிய வாயுதேவனைப் பார்த்தார். 'மனத்தினும் விரைந்து செல்லுமாறு தேரைச் செலுத்துவாயாக," என்று கட்டளையிட்டருளினர். வாயுதேவன், 'அப்படியே செய்கிறேன்' என்று வணங்கினன். வாயுக்கள் பக்கத்திலே செல்லக் குதிரைகளைத் தூண்டினன். ஆர

வாரஞ் செய்தான். அப்போது விண்ணும், மண்ணும், கடல்களும், மலைகளும், திக்குயானைகளும் நடுங்கின. தேர் விண்வழியாகச் சென்றது. பூதப்படைகள் முருகக் கடவுளைச் சூழ்ந்துசென்றன. போரில் தோற்றோடிய பூதப்படைகள் முருகக்கடவுளைக் கண்டதும் வந்து சூழ்ந் தன. முருகக்கடவுள் தாரகனுடைய போர்க்களத்தை யடைந்தார். பூதர்களும், அவுணர்களும் போர் செய்தார் கள். பல அவுணர்கள் இறந்தார்கள்; பல அவுணர்கள் தோற்றோடினார்கள்.

## முருகக்கடவுளுக்குந் தாரகனுக்கும் போர்

தன் படைகள் தோல்வியடைதலைத் தாரகன் பார்த் தான். வில்லை வளைத்துப் பல கணைகளைத் தொடுத்தான். பூதர்கள்மேல் பொழிந்தான். முருகக்கடவுளுக்கு முன்பு வந்தான். அவனுடைய கண்களிலே சினத்தீ விளங்கியது. தன்னுடைய தூதர்களைப் பார்த்தான். "இவன்தானோ சிவனுடைய மகன்?" என்று கேட்டான். தூதர்கள் 'ஆம்' என்றார்கள். உடனே தாரகன் தேரை விரைந்து செலுத்திக் கொண்டு முருகக்கடவுளை யண்மினான். முழுத்திங்கள் போன்ற ஆறு திருமுகங்களையும், பன்னிரண்டு திருக் கண்களினின்று பொழிகின்ற திருவருளையும், வேல் முதலிய படைக்கலங்களையும், பன்னிரண்டு திருக்கைகளை யும், செந்தாமரை மலர்போன்ற திருவடிகளையும் கண்டான். முருகக்கடவுளின் வடிவம் முழுவதையும் பார்த்து வியப்படைந்தான். "நம்மீது போர்செய்ய வந் திருக்கும் இவன் முழுமுதற் கடவுளேபோலும்," என்றான். சிவபெருமான் கொடுத்துள்ள மேன்மைகளையும், வீரத்தை யும், வன்மையையும், செல்வத்தையுமே பெரிதாக எண்ணி னான். முருகக்கடவுளைப் பார்த்தான். "திருமாலுக்கும், நான்முகனுக்கும், இந்திரனுக்கு மல்லாமல் சிவபெருமா னுக்கும் எனக்கும் போர்நிகழ்தற்கு ஒருகாரணமும் இல்லை. அவ்வாறாக நீ என்மீது போர்செய்யவந்த காரணம் யாது? கூறுவாயாக," என்றான். முருகக்கடவுள் தாரகனை

நோக்கி, "உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைகளைப் பார்த்து அவைகட்கேற்ப நன்மை தீமைகளைச் சிவபெருமான் செய்தருளுவார். நீங்கள் தேவர்களைச் சிறையில் வைத்து வருத்துதலைச் சிவபெருமான் பார்த்து, உங்களுடைய மேன்மையையும் வன்மையையும் அழிக்கும் பொருட்டு நம்மை விடுத்தருளினார்," என்று மொழிந்தருளினார்.

தாரகன் அறுமுகக்கடவுளைப் பார்த்து, "கருடன் மேல் வந்து எதிர்த்து என்னோடு போர்செய்த திருமாலினுடைய உருளைப்படை என் கழுத்தில் அணிகலமாயிருத்தலை நீ பார்க்கவில்லையா? எம்மோடு போர்செய்ய வந்து எதிர்த்தவர்கள் அனைவரும் சிறிது பொழுதினுள் இறந்தோ அல்லது தோற்றோ போனார்களே யல்லாமல், எம்மை வென்றவர்கள் எவரும் இலர். இதை நீ கேள்விப்பட்டது இல்லையா? நீ போருக்கு அனுப்பிய தூதர்களை நான் வென்று கிரௌஞ்சமலைக்குள்ளே இறக்கும்படியாகச் செய்தேன். மேலும் பல கணங்களைக் கொன்றேன். நீ என்னோடு போர்செய்து வருத்தப்படாது உன்னுடைய தந்தையினிடத்திலே போய்விடு" என்று கூறினான். தாரகன் கூறியவைகளைக் கேட்ட அறுமுகக்கடவுள் அவனைப் பார்த்து, "திருமால் ததீசி முனிவர்மேல் செலுத்திய ஆழிப்படை தன் கூர்மையிழந்து குயவன்கை உருளையைப்போல் ஆனதை நீ கேள்விப்படவில்லையா? படைக்கலங்கட்கெல்லாம் தலைமை பெற்றதாகிய நம்முடைய வேற்படை, திருமாலுடைய உருளைப்படையைப் போலப் பழிப்படையமாட்டாது. அது மிகுவிரைவில் உன்னுயிரை உண்டுவிடும். நிலவுலகம் முழுமையும் சூழ்ந்து பரந்த பேரிருள் கதிரோன் தோன்ற விலகுதல்போல, இவ்வுலகனைத்தையும் வென்ற உங்கள் பேராற்றல் இங்கு நாம் வந்ததும் அழிந்துவிட்டது. மாயைகளைப் புரியும் கிரவுஞ்சமலையையும் உன்னையும் வேற்படையினாலே கொன்று நம்முடைய படையை விரைவிலே மீட்கின்றேம்" என்று கூறியருளினார்.

## தாரகனுக்கும் முருகக்கடவுளுக்கும் போர்

அறுமுகப்பெருமான் கூறியவைகளைக் கேட்ட தாரகன் சினங்கொண்டான். வில்லை வளைத்து, நாணொலி செய்தான். அவ்வொலியைக் கேட்டுத் தேவர்களும், மயக்கமடைந்தார்கள். அறுமுகக்கடவுளும் தமது வில்லை வளைத்து நாணொலி செய்தார். நான்முகன் முதலாயினோரும் நடுங்கினார்கள். உலகங்கள் எல்லாம் ஏங்கின. தாரகனும் தலையை ஆட்டினான். அளவில்லாத கணைகளை அறுமுகக்கடவுள்மீது தூண்டினான். அறுமுகக்கடவுள் ஆயிரங் கணைகளைத் தூண்டி அவைகளையெல்லாங் கெடுத்தார். தாரகன், சினந்து பின்னும் ஆயிரங் கணைகளைத் தூண்டினான். முருகக்கடவுள் பத்துக் கணைகளைச் செலுத்தி ஆயிரங் கணைகளையும் அழித்தார். ஒரு கணையைத் தொடுத்துத் தாரகனுடைய வில்லை முறித்தார். தாரகன் வேறொரு வில்லையெடுத்து வளைத்தான். அறுமுகக்கடவுள் ஆயிரங்கணைகளை அவன்மீது செலுத்தினார். தாரகன் அக்கணைகளைத் தடுத்து வேறு பல கணைகளை முருகக்கடவுள்மீது செலுத்தினான். அறுமுகக்கடவுள் அவைகளை மாற்றிவிட்டுக் கோடிக் கணைகளைத் தாரகன் மீது செலுத்தி அவனுடைய உடலையெல்லாம் நிறைத்தார். அவ்வளவில் தாரகன் மிகுந்த சினங்கொண்டான். இரண்டு கோடிக் கணைகளை முருகக்கடவுள்மீது செலுத்தினான். அறுமுகக்கடவுள் அவைகளை மாற்றினார். இரண்டு கணைகளைச் செலுத்தித் தாரகனது துளையுடைய கையையும் கோடுகளையும் முறித்துத் தள்ளினார். தாரகன் தளர்ந்து வெருண்டான். முருகக்கடவுளுடைய தேர்க்கொடியை அறுத்துத் தள்ளினான். முருகக்கடவுள் எட்டுக் கணைகளினாலே தாரகனுடைய வில்லை முறித்தார். ஆயிரங் கணைகளினாலே அவனுடைய தேரையும் குதிரைகளையும் தேரோட்டியையும் அழித்தார். தாரகன் வேறொரு தேர்மீது ஏறினான். வில்லைவளைத்தான். முருகக்கடவுளுடைய தேரோட்டியாகிய வாயுதேவனின் தோள்களில் ஆயிரங்கணைகளைத் தொடுத்தான். அதனால் வாயு வருந்தி

ஞன். அறுமுகக்கடவுள் ஆயிரங் கணைகளைத் தாரக னுடைய நெற்றியிலே அழுந்தும்வண்ணஞ் செலுத்திஞர். அவன் குருதி பெருகத் தன் தேர்மீது புலம்பி வீழ்ந்தான்.

## அறுமுகக்கடவுளுடன் படைவீரர்கள் போர்

தாரகன் வருந்தி நொந்து வீழ்ந்தமையை அவனுடைய படைவீரர்கள் கண்டார்கள். அறுமுகக்கடவுளைச் சூழ்ந்து கொண்டார்கள். சூலம், ஆழி, தோமரம் முதலிய படைக் கலங்களைச் செலுத்திஞர்கள். முருகக்கடவுள் சில கணை களைத் தொடுத்து அவைகளை யெல்லாம் ஒழித்தார். மேலும் கணைமழைகளைப் பொழிந்து, அவுணர்களுடைய தலைகளையும் மார்புகளையும் கைகளையும் தோள்களையும் தாள்களையும் பலவாறு அறுத்துத் தள்ளிஞர். எல்லா விடங்களினும் குருதி கடல்போலப் பெருகியது. பல அவுணர்கள் இறந்தார்கள். பலர் குருதிக்கடலில் நீந்தி உயிர்பிழைத்தார்கள்.

## மீண்டும் தாரகன் போர்

தாரகன்மயக்கம் நீங்கி யெழுந்தான். தன்படை யைக் காணுமல் துன்பமடைந்தான். "சிவனுடைய மகஞன சிறுவன் ஒருவன் போர்செய்ய என்னுடைய கையையும் தந்தங்களையும் இழந்து மயங்கி விழுந்தேன். என் படைகளையும் இழந்தேன். இங்கே தனியாக நிற்கின் றேன். என்னுடைய ஆண்மை அழகாக இருக்கின்றது!" என்று எண்ணிஞன். தேவபடைக் கலங்களைச் செலுத்தி வெற்றி பெறவேண்டும் என்று முடிவு செய்தான். நாரா யணப் படைக்கலம், நான்முகப் படைக்கலம் முதலியவை களைச் செலுத்திஞன். அவைகள் முருகக்கடவுளிடத் திற்கு வந்தன. அஞ்சி நடுநடுங்கின. பக்கத்திலே போற் றிக்கொண்டு நின்றன. அதனைக்கண்ட தாரகன் தன் ஆணவத்தை விட்டான். யாது செய்யலாமென்று எண்ணி ஞன். சிவப்படைக்கலத்தை யெடுத்தான். உள்ளத்தாலே வழிபாடுசெய்தான். சினத்துடன் செலுத்திஞன். அச் சிவப்படைக்கலம் பல தேவர் படைக்கலங்களையும், நஞ்சை யும், பூதங்களையும் மற்றும் பலவற்றையும் உண்டாக்கிக்

கொண்டு எல்லா உலகங்களும் வருந்தும்வண்ணம் சினந்து சென்றது. அறுமுகக்கடவுள் இறைவனையெண்ணினர். தமது ஒரு கையை நீட்டி அச் சிவப்படைக்கலத்தைப் பற்றிக்கொண்டார். தாரகன் அதைப் பார்த்துக் கலங்கினன். நமது வாழ்வு இன்றே தொலைந்தது என்று முடிவு செய்தான்.

## தாரகன் மாயப்போர்

தாரகன் மாயப்போர் செய்ய எண்ணினன். விரைந்து கிரவுஞ்சமலையின்முன் சென்றான். "நீ பல மாயைகளைச் செய்வாயாக" என்று கட்டளையிட்டான். உடனே கிரவுஞ்சமலை பல மாயைகளைச் செய்யத் தொடங்கிற்று. அது முப்புரங்கள் பலவாய் வந்தது. தாரகன் அப்புரங்களிலுள்ள அவுணர்களாய் வந்தான். கிரவுஞ்சமலை பல முகில்களாய் வந்தது. தாரகன் அம்முகில்களுக்குள்ளே இடியாக வந்தான். கிரவுஞ்சமலை பல கடல்களாய் வந்தது. தாரகன் அவற்றினுள்ளே ஊழித்தீயாக வந்தான். கிரவுஞ்சமலை இருளாக வந்தது. தாரகன் இருளினுள்ளே பூதர்களாக வந்தான். மற்றும் பலவாறான மாயைகளைச் செய்தான்.

## தாரகன் முடிவு

அறுமுகப்பெருமான் அவுணர்பெருமானின் மாயத் திருவிளையாடல்களைக் கண்டார். தம்முடைய திருக்கையின் கண்ணுள்ள வேற்படையைப் பார்த்து, "நீ தாரகாசுரனையும் கிரவுஞ்சமலையையும் ஓர் இமைப்பொழுதிற்குட் பிளந்து உயிரை உண்டுவிடு. நூறாயிரத்தொன்பது வீரர்களையும் பூதப்படைத்தலைவர்களையும் மீட்டுக்கொண்டு இங்கு வா" என்று கட்டளையிட்டுச் செலுத்தினர். வேற்படை விரைந்துசென்றது. தாரகனும் கிரவுஞ்சமலையுஞ் செய்த மாயச்செயல்கள் மாய்ந்தன. கடுமையாக வரும் வேற்படையைத் தாரகன் கண்டான். "இதனைப்பிடித்து நான் முறித்துப்போடுவேன்" என்று வேற்படையின்மீது பாய்ந்தான். வேற்படை தாரகனுடைய மார்பைப் பிளந்து கிரவுஞ்சமலையையுங் கிழித்தது. குருதியிற்படிந்து

மீண்டது. மலையினுள்ளே துயில்கின்ற வீரர்களை எழுப்பிற்று. விசும்பிலுள்ள கங்கையில் நீராடி முருகப்பெருமானுடைய திருக்கையை அடைந்து முன்போல் அமர்ந்திருந்தது. வேற்படை தாரகனுடைய மார்பையுங் கிரவுஞ்ச மலையையும் பிளந்த ஒலி பேரொலியாக உலகம் முழுவதுங் கேட்டது. வேற்படை மார்பைப் பிளந்துவிட்டபடியினால், தாரகன் பேரிடிபோல் பேரொலிசெய்து நிலத்தில் விழுந்து பதைபதைத்து இறந்தான்.

## தேவர்கள் மகிழ்ச்சி

தாரகனும் கிரவுஞ்சமலையும் ஒழிந்தமையைத் தேவர்கள் கண்டார்கள். திருமால், நான்முகன், இந்திரன், தேவர்கள், முனிவர்கள் ஆகியோர் பேரொலிசெய்து இன்பக் கூத்தாடினார்கள். இருகைகளையும் தலைமேற் குவித்து முருகக்கடவுளைப் போற்றினார்கள். பூமாரி பெய்தார்கள்.

## வீரர்கள் மீளுதல்

கிரவுஞ்சமலை அழிந்தவுடனே அம்மலையினுள் மயங்கிக்கிடந்த வீரர்கள் நூறாயிரத்தொன்பதின்மரும் மயக்கம் நீங்கியெழுந்தார்கள். முருகக்கடவுளைப் போற்றிக் கொண்டு அவர் பக்கத்தை யடைந்தார்கள். அனைவருக்கும் முருகக்கடவுள் திருவருள்புரிந்தார். தாம் கைப்பற்றிய சிவப்படைக்கலத்தை வீரவாகுதேவருக்குக் கொடுத்தார். போரில் இறந்த பூதர்களை யெழுப்பினார். அனைவரையும் உடன்கூட்டிக்கொண்டு போர்க்களத்தை விட்டுப் புறப்பட்டார்.

# உக. தேவகிரி

## தேவர்கள் போற்றுதல்

தேவர்களும் பூதர்களும் வீரர்களும் முருகக்கடவுளைச் சூழ்ந்து சென்றார்கள். அனைவருடனும் தென்றிசையை நோக்கிச் சென்றார். கதிரவன் மறையுஞ்சமயத்தில் தேவகிரியை அடைந்தார். திருமால், நான்முகன், இந்திரன்,

தேவர்கள் முதலாயினோர் முருகக்கடவுளுடைய திருவடியைப் போற்றினார்கள். "எம்பெருமானே! தேவரீர் தாரகனைக்கொன்று எங்களுடைய துன்பத்தைப் போக்கியருளினீர்; உம்முடைய திருவடிகளை வழிபட வெண்ணுகிறோம். இம்மலையின்கண் எழுந்தருளுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள். அருட்பெருங் கடலாகிய முருகக்கடவுள் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினார். தேவர்கள் உவகையடைந்தார்கள். முருகக்கடவுள் தேவதச்சனைப்பார்த்து, "அனைவரும் தங்குவதற்கு ஒரு நகரத்தை விரைவில் உண்டாக்குவாயாக," என்று கட்டளையிட்டருளினார். அவ்வாறே அவனும் அழகிய ஒரு நகரத்தை விரைவில் அமைத்தான். அறுமுகக் கடவுள் எழுந்தருளும்பொருட்டு, ஒரு திருப்பொற் கோயிலையும், அதனுள்ளே மணிகளால் ஆகிய அரியணையையும் அமைத்தான். முருகக்கடவுளிடம்வந்து முடிக்கப் பெற்ற செய்தியைத் தெரியப்படுத்தினான்.

முருகக்கடவுள் அனைவரையும் அவ்வவர்க்குரிய இடங்களில் அமர்த்தித் தாம் திருக்கோயிலினுள்ளே புகுந்து அரியணைமேல் எழுந்தருளியிருந்தார். நான்முகன் முதலியோர் வழிபாடாற்ற எண்ணினார்கள். உமாதேவியாருடைய திருக்கையிற்றோன்றிய கங்கையை நினைத்தார்கள். அஃது அங்குவந்தது. மணிக்கலன்கள், ஆடைகள், நறுமலர்கள், வாசனைப் பொருள்கள் முதலிய வழிபாட்டுப் பொருள்களையும் அங்குத் தருவித்தார்கள். நான்முகன் முதலியோர் அறுமுகப்பெருமானுக்கு நீராட்டினார்கள். பிறகு செய்யவேண்டிய வழிபாடுகளையெல்லாஞ் செய்தார்கள். பிறகு புகழ்ந்து போற்றினார்கள். அறுமுகக்கடவுள் அவர்களனைவருக்குந் திருவருள் புரிந்தார்.

## உஉ. அசுரேந்திரன் மகேந்திரஞ் செல்லுதல்

### தாரகன் மனைவியர் வருந்தல்

முருகக்கடவுளுடைய வேற்படையால் தாரகன் மாண்டதைச், சில தூதர்கள் தாரகன் மனைவி சௌரிக்குத் தெரியப்படுத்தினார்கள். அவள் மிகுந்த வருத்தமடைந்

தாள். மற்றைய மனைவியரும் பிறரும் தன்னைச் சூழப் போர்க்களத்தை யடைந்தாள். தன் கணவனுடைய உடலைக்கண்டு பலவாறு வருந்தினள். "தன் ஆழிப் படையை உனக்கு அணிகலமாகத் தந்த திருமாலும், இந்திரனும் மற்றைய தேவர்களும் இன்றல்லவோ தங்களுடைய மனக்கவலை தீர்ந்தார்கள். நான் உன்னைத் தழுவுதல் கண்டும் நீ என்னைத் தழுவாதிருந்தனை! தழுவுதல் பலருங் காணத்தக்கவிடத்தில் நன்று அன்று என எண்ணினையாயின், வாயைத்திறந்து ஒரு மொழியாவது சொல்லக்கூடாதா? என்மேல் நினக்கு யாதேனும் வெறுப்புள்ளதோ? சிவபெருமான் உனக்களித்த மேன்மைகள் உண்மையென்றே இதுவரையில் உறுதியாக நம்பியிருந்தேன். அது பொய்யாகப் போயிற்றோ? தனக்கு நிகரில்லாத இறைவனுடைய புதல்வனை நீயேன் எதிர்த்தாய்? ஊழ்வலியைக் கடந்தவர் இவ்வுலகில் யாவருளர்? அவுணர்கள் சூழ அரியணையில் அமர்ந்திருந்த நீ இவ்வாறு போர்க்களத்தில் அழிந்துகிடக்கிறாய்; சிவபெருமான் உனக்குத் தந்த மேன்மையை உண்மையாக எண்ணினையே; அவருடைய சூழ்ச்சிகளை அறியாமற் போனாயே; இனி ஏழையேன் உன்னை எந்நாள் காண்பேனோ? நீ இறந்ததை அறிந்தும் நான் இன்னும் உயிரோடிருக்கிறேன்!" என்று கூறிப் பலவாறு புலப்பினள். மற்றைய மனைவியரும் பலவாறு புலம்பினர்.

புல்லாதி ருந்தனையான் புல்லுவது கண்டும்அது
பல்லோருங் காணில் பழியென் றொழிந்தாயேல்
மல்லாருந் தோளாய் மயக்குற்றேற்கு ஓர்உரையும்
சொல்லாய் வறிதே துயின்றாய் துனியுண்டோ?

(மல்லாரும் - மற்போர் ஆற்றல் அமைந்த. துனி - வெறுப்பு.)

மையோடு உறழும் மணிமிடற்றோன் தந்தவரம்
மெய்யாம் எனவே வியந்திருந்தேன் இந்நாளும்
பொய்யாய் விளைந்ததுவோ பொன்றினையால் என்துணைவா!
ஐயோ! இதற்கோ அருந்தவமுன் செய்தாயே!

(உறழும்—ஒத்துவிளங்கும். மிடற்றோன்—கண்டத்தையுடையவன்.)

## அசுரேந்திரன் வருதல்

முருகக்கடவுளுக்கும் தாரகனுக்கும் போர் நிகழ்ந்தபொழுது, தாரகனுடையமகன் அசுரேந்திரன் அசுரபுரிக்குப் போயிருந்தான். அவ்வூர் சிங்கமுகாசுரனுடைய இருப்பிடம். அவன் செய்தியை ஒருவாறுணர்ந்து திரும்பி வந்தான். தந்தையின் அழிவைக்கண்டு வருந்தினான். பலவாறு புலம்பினான். பின் ஒருவாறு தேறினான்.

## ஈமச்சடங்கும் உடன்கட்டையேறுதலும்

தந்தையின் உடலை யெரித்து இறுதிக்கடன்களை யெல்லாம் செய்யத்தொடங்கினான். அவுணர்களைக்கொண்டு அதற்கு வேண்டியவைகளைத் தொகுசெய்தான். உடலை ஒருதேர்மீது ஏற்றிச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்றான். சந்தனக் கட்டைகளை யடுக்கி, அதன்மீது வைத்து எரித்தான். அவனுடைய தாயாகிய சௌரியும் மற்றவர்களும் உடன்கட்டை யேற விரும்பினார்கள். அசுரேந்திரன் எவ்வளவோ தடுத்துக் கூறியும் கெஞ்சியும் அவர்கள் கேட்கவில்லை. ஆகவே, அனைவருக்கும் தீ வளர்த்துக் கொடுத்தான். அதில் அனைவரும் விழுந்து இறந்தார்கள்.

## அசுரேந்திரனும் சூரபன்மனும்

தாயும் உடன்கட்டை யேறியதற்கு அசுரேந்திரன் வருந்தினான். தன் சுற்றத்தவர் சிலர் தன்னைச் சூழப் புறப்பட்டான். தென்கடலில் உள்ள வீரமகேந்திரபுரியை அடைந்தான். சூரபன்மனைச் சென்று கண்டான். அவனுடைய கால்களில் விழுந்தான். தன்கைகளால் சூரபன்மனுடைய கால்களைக்கட்டிக்கொண்டு அழுதான். சூரபன்மன், தன் இளவல்மகனாகிய அசுரேந்திரனைப் பார்த்து, "மகனே! வருந்தாதே நிகழ்ந்தது யாது? கூறுவாயாக!" என்றான். அசுரேந்திரன் சூரபன்மனைப் பார்த்து, "சிவபெருமானுடைய மகனாகிய அறுமுகன்

பூதப்படைகளோடு வந்தான். உன் தம்பியைக் கிரவுஞ்ச மலையோடு வேற்படையினுற் கொன்றுவிட்டான். இப்பொழுது நிலவுலகத்திலே வந்திருக்கிறுன்.'' என்று கூறினுன். சூரபன்மன் அதனைக்கேட்டு இடிபோல நகைத்தான். "கிரவுஞ்சமலையோடு கூடிய தாரகனைச் சிவனுடையமகனு கொல்வான்? நீ கூறியது பொய்ம்மொழியாகும். மகனே! நீ சிறிதும் அஞ்சாமல் உண்மையைக் கூறுவாயாக!'' என்று கூறினுன். சூரபன்மன் சொல்லியவைகளைக்கேட்ட தாரகன்மகன், "தந்தையே! நான் கூறிய செய்தி உண்மை. என் தந்தையையும், கிரவுஞ்சமலையையும் சிவனுடைய மகன் வேற்படையினுற் கொன்றுவிட்டுப் போய்விட்டான். நான் செய்யவேண்டிய முறைமைப்படி ஈமக்கடன்களைச் செய்துவிட்டு வந்தேன்," என்றுன்.

## சூரபன்மன் சினம்

அசுரேந்திரன் கூறியவைகளைக் கேட்டஅளவில் சூரபன்மனுடைய மனதிலே சினத்தீ பொங்கிற்று. கண்கள் தீப்பொறியைச் சிந்தின. மூக்கிலிருந்து புகை எழுந்தது. பற்கள், உதட்டைக் கடித்தன. உதடுகள் துடித்தன. இளவலின்மேலுண்டான அன்பினுல் கண்ணீர் தாரை தாரையாக வெளிப்பட்டது. வியர்வை கடல்போலப் பெருகியது. அரியணையினின்றுந் தவறி நிலத்தில் விழுந்தான். இடியைப்போல அழுதான். நகரமெங்கும் அழுகையொலி மிகுந்தது. சிறிது பொழுதில் அவன் தெளிந்தான். தன் ஏவலர்களைப் பார்த்தான். "என் தம்பியை வென்ற கந்தனை நான் சென்று வென்றுவருதல் வேண்டும். என்னுடைய தேரையும் படைக்கலங்களையும் விரைவிற் கொண்டுவாருங்கள்,' என்று கட்டளையிட்டான். அவுணர்கள் படைகளுடன் வந்து சேர்ந்தார்கள்.

## அமோகன் என்னும் அமைச்சன் அறிவுரை

சூரபன்மன் போருக்கெழுதலை அமோகன் என்னும் அமைச்சன் கண்டான். சூரபன்மனுடைய அடிகளை வணங்கினுன். "அரசே! நான் ஒன்று சொல்லுகிறேன்,

அதனைச் சிறிது கேட்டல் வேண்டும். அறிவுள்ள வீரர்களாயினோர், பகைவர்கள் தமது நகரத்தை வளைத்தாலும், நன்கு ஆராயாமல் சினத்தை மேற்கொண்டு போரைத் தொடங்கமாட்டார்கள். பகைவரின் ஆற்றலை அறிந்து கொண்ட பின்னரே போரைத் தொடங்குவார்கள். ஒற்றரைக்கொண்டு பகைவரின் தன்மையை யுணர்ந்து கொள்ளாமல் போரைத்தொடங்கினால் குற்றமாக முடியும். அரசனே! உனக்கு ஒப்பானவர்கள் எவரும் இலர். நீ என்றும் அழிவில்லாதவன். எல்லா உலகங்களையும் ஆள்பவன். தேவர்கள் அனைவரையும் ஏவல் கொண்டவன். நான்முகனாலும், திருமாலாலும் புகழப்பெறுபவன். இத் தகைய நீ சிறுபிள்ளைமேல் போருக்குச் சென்றால் அஃது உனக்கு இழிவாகும். நீ மேற்கொண்டு செய்யவேண்டியவைகளை அமைச்சர்களுடன் ஆராய்ந்து செய்வாயாக! வீரமும் வலியும் மிகுந்தவர்களாயினும் ஊழ்வந்து குறுக் கிடுமாயின், வலியற்றவர்களாலுங் கொல்லப்பெறுவர். தாரகன் உன்னைப்போல் உயர்ந்த நிலைமையைப் பெறாத படியால், ஒரு சிறுவனாற் கொல்லப்பட்டான். தாரகன் ஒரு சிறுவனாற் கொல்லப்பட்டது வியப்பன்று. ஆற்றல் மிக்காரும் ஒருகாலத்தில் ஆற்றல் இழப்பர். ஆற்றல் அற்றவர்களும் ஒருகாலத்தில் வீரராய் விளங்குவர். நீ அச் சிறுவனின் ஆற்றலை அறிந்துகொண்டு படைகளையேவி வெற்றிபெறக்கடவாய்,” என்று கூறினான்.

## தூதர்களை அனுப்புதல்

அமோகன் கூறியவைகளைக்கேட்ட சூரபன்மன் ஒருவாறு தெளிந்தான். சினத்தை விட்டான். சிலரைப் பார்த்துப், ‘பகன், மயூரன், சேனன், சக்கரவாகன், சுகன் முதலிய தூதர்களைக் கூப்பிடுங்கள்,” என்று கட்டளையிட்டான். அவர்களும் அவ்வாறே சென்று கூப்பிட்டுக் கொண்டு வந்தார்கள். சூரன் அவர்களைப் பார்த்து, “நீங்கள் விரைந்துபோய் அறுமுகனுடைய இயல்பையும் அவனுடைய படைகளின் தன்மையையும் பிறவற்றையும் ஆராய்ந்து அறிந்துகொண்டு வாருங்கள்,” என்று கூறினான். அவர்களும் விரைந்து சென்றார்கள்.

# உகூ. வழிநடை

தேவகிரியில் எழுந்தருளியிருந்த முருகக்கடவுள் கதிரவன் எழுந்தவுடன் அதனை நீங்கித் தென்திசையை நோக்கிப் புறப்பட்டார்.

## திருக்கேதாரம்

உமாதேவி, தம்மைநீக்கி வலஞ்செய்யும் பிருங்கி முனிவர் உணர்ந்த மறைமுடிவை யுணர்ந்து, சிவபெருமானுடைய இடப்பாகத்தை அடையவிரும்பி வழிபாடு செய்த திருக்கேதாரத்தை முன்னே கண்டு வணங்கினார்.

## திருக்காசி

திருமாலுக்கும் முக்கண் இறைவனே பரம்பொருள் என்னும் மெய்ம்மையை, மக்கட் பிறப்பினர் தெளியும் வண்ணம் வியாசமுனிவர் எடுத்த கையே உணர்த்திய காசியைக் கண்டார்.

## திருப்பருப்பதம்

சிலாதமுனிவருடைய திருமகனாகிய திருநந்தி தேவர், சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் பொருட்டு மலையாவேன் என்று, அருந்தவஞ்செய்து, மலையாகி இறைவனைத் தம் முடிமேற்றாங்கிய திருப்பருப்பதத்தைக் கண்டு போற்றினார்.

## திருவேங்கடமலை

உமாதேவியோடு சிவபெருமான் மாறுபாடு கொண்டு கைலைமலையை விடுத்துப் பாதாளத்திற்குச் சென்று, பிறகு ஒரு குகைவழியே வந்ததும், திருமால் முதலிய தேவர்கள் தம்மை வழிபாடு செய்ததுமாகிய திருவேங்கடமலையைக் கண்டார்.

## திருக்காளத்தி

சிலந்தியும், பாம்பும், யானையும், சிவகோசரியாரும், கண்ணப்பநாயனாரும், நக்கீரதேவரும், கன்னியரும், வீடுபேற்றையடைந்த தென்கயிலையாகிய திருக்காளத்தியைப் பார்த்தார்.

## திருவாலங்காடு

காளியானவள் நிலவுலகம் முழுமையும் அழிப்பதற்கு எழுந்த காலத்திலே, நான்முகன் முதலியோர் அச்சத்தை யடைய, அக்காலை காளியின் செருக்கு அழியவும் உலகம் மகிழ்ச்சியை அடையவும், இறைவன் தமது ஆடலால் வென்றருளிய திருவாலங்காட்டைக் கண்டார்.

## காஞ்சி

ஊழிக்காலத்திலும் அழிவற்றதாய், நான்முகன் முதலிய தேவர்கட்கு இருப்பிடமாய், இறைவன் மாமர நிழலில் அமரப்பெற்றதாய், இறைவியினால் வழிபாடு செய்யப் பட்டதாய் விளங்கும் காஞ்சிமாநகரைப் பார்த்தார்.

## திருவண்ணாமலை

பின்னர் திருவண்ணாமலை யென்னும் அருணகிரியைக் கண்டார். அப்பதி; "யானே பரம்பொருள், யானே பரம் பொருள்," என்று நான்முகனும் திருமாலும் போரிட்ட காலத்திலே அவர்களின் நடுவே தோன்றியது. அவர்களால் அடிமுடி காணப்பெறாதது. நினைப்பவர் கட்கு வீடு பேற்றையளிப்பது.

## திருவெண்ணெய் நல்லூர்

இறைவன் முதிய பார்ப்பனக் கோலம் கொண்டுவந்து அடிமை ஓலையைக் காட்டித், திருமணத்தைத் தடுத்துச் சுந்தரமூர்த்தி யடிகளை ஆட்கொண்டருளிய திருவெண் ணெய்நல்லூரைக் கண்டார்.

## பழமலை

உமாதேவியார் தமது ஆடையால் வீசச், சிவபெரு மான் இறந்த உயிர்களைத் தமது தொடையின்மேற் கிடத்தித் திருவைந்தெழுத் துண்மையைப் போதித்து வீடுபேற்றைக் கொடுத்தருளும் பெருமையினால், காசி போலச் சிறப்புடையதாகிய விருத்தாசலம் என்னும் பழ மலையைக் கண்டார்.

## சிதம்பரம்

பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் முனிவர்கள் பொருட்டுச், சிவபெருமான், இனிது பேரின்பக் கூத்தாடி யருளும் திருத்தில்லை என்னுஞ் சிதம்பரத்தை யடைந்தார். சிவகாமியம்மையாரையும் கூத்தப்பிரானையும் கண்டு போற்றினார். பிறகு அவ்விடம் விட்டுக் காவிரியாற்றின் கரையை அடைந்தார்.

# உச. குமாரபுரி

## நகர் அமைத்தல்

அப்பொழுது கதிரோன் மறைந்தான். திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் முருகக்கடவுளை வணங்கி னார்கள். "இந்த இடம் பொழில்களாலும் சிவப்பதிக ளாலும் சிறந்து விளங்குகின்றன. ஆதலால் ஈண்டு எழுந் தருள்க" என்று வேண்டிக்கொண்டார்கள். முருகக் கடவுள் அவ்வேண்டுகோளுக்கு இணங்கியருளினார். தேவ தச்சனைப் பார்த்து, "இவ்விடத்திலே ஒரு நகரத்தை அமைப்பாயாக," என்று கட்டளையிட்டார். அவ்வளவில் தேவதச்சன் ஓர் அழகிய திருநகரத்தை உண்டாக்கினான். முருகக்கடவுளை வணங்கி, "இந்நகரத்தினுள்ளே எழுந் தருள்க," என்று வேண்டிக்கொண்டான்.

## திருச்சேய்ஞலூர்

முருகக்கடவுள் தேரினின்றும் இறங்கினார். படைகள் புடைசூழ நகரத்துக்குள் நுழைந்தார். நகரத்தின் சிறப் புக்களையெல்லாம் பார்த்தார். "நாம் எழுந்தருளியிருப்ப தற்கு இது நல்ல நகரம்" என்று திருவாய் மலர்ந்தருளி னார். அதனைக்கேட்ட தேவர்கள் அந்நகரத்திற்குத் திருச் சேய்ஞலூர் என்று பெயரிட்டார்கள். முருகக்கடவுள் தம்பியர்சூழ அங்குள்ள திருக்கோயிலில் எழுந்தருளினார். நான்முகன் முதலியோர் அவரவர்கட்கு அமைக்கப்பட்ட இடங்களில் அமர்ந்திருந்தார்கள்.

## இந்திரனும் துன்பமும்

இந்திரன், தாரகாசுரனும் கிரௌஞ்சமலையும் அழிந்தமையால் துன்பம் நீங்கிப் பெருமகிழ்ச்சியோடிருந்தான். அப்பொழுது சீகாழியிலிருந்து ஒரு வனதேவதை அங்கு வந்தது. அது முன்னாளில் இந்திரன் தன்னிடத்தில் வைத்துச்சென்ற ஒரு மூட்டையை இந்திரனிடங் கொடுத்தது. அஃது இந்திரனைப்பார்த்து! "ஓ இந்திரனே! இது முன்னாளில் நீ என்னிடத்தில் வைத்ததாகும். இதனுள்ளே உன் மனைவியின் அணிகலங்கள் இருக்கின்றன," என்று சொல்லிவிட்டுச் சென்றது. இந்திரன் மூட்டையை அவிழ்த்தான். இந்திராணியின் அணிகலங்கள் காணப்பட்டன. அவைகளைக் கண்ட அளவில் இந்திரனுக்குக் காமநோய் உண்டாயிற்று. அதனைக் கட்டிவைக்குமாறு தன் ஏவலர்க்குக் கட்டளையிட்டான். இரவு முழுவதும் இந்திரனைக் காமநோய் மிகவும் வருத்தியது.

## காமத்தீமை

மறுநாள், கதிரவன் தோன்றினன். இந்திரனுடைய காமநோய் மறைந்தது. இந்திரன் பதைபதைத்து விரைந்து எழுந்தான். மிகுந்த நாணத்தை யடைந்தான். "அந்தோ! எனக்கு, அறுமுகக் கடவுளோடிருக்கும் இந்தச் சமயத்திலும் இந்நோய் வந்ததே!" என்று வருந்தினன். "காமமானது தீமைகள் எல்லாவற்றையும் உண்டாக்கும். பெருமையையும் செல்வத்தையும் அழிக்கும். நல்லறிவைப் போக்கும். நரகத்தை ஆக்கும். ஆராய்ந்து பார்க்குமிடத்திற் காமத்தைப்போல் கொடியது வேறொன்றும் இல்லை," என்று, தனக்குத்தானே உரைத்துக்கொண்டான். தனியிடத்தை நீங்கி முருகக்கடவுள் திருமுன்பை யடைந்தான். பலமுறை வணங்கிப் போற்றிக்கொண்டு பக்கத்திலே நின்றான்.

தீமை உள்ளன யாவையுந் தந்திடும்; சிறப்பும்
தோமில் செல்வமும் கெடுக்கும்; நல் உணர்வினைத் தொலைக்கும்;
ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும்; இதனல்
காமம் அன்றியே ஒருபகை உண்டுகொல் கருதில்.

### முருகக்கடவுளின் இறைவழிபாடு

முருகக்கடவுள் இந்திரனை நோக்கினர். "நாம் இறைவனை வழிபட எண்ணுகிறோம். நீ அதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தேடித் தருவாயாக," என்று கட்டளையிட்டருளினர். உடனே இந்திரனும் ஏவலர்களை அனுப்பி வழிபாட்டிற்குரிய நறுமலர், பொன்னுடை, திருவமுது, நறும்புகை, திருவிளக்கு முதலிய யாவற்றையும் தேடித்தொகுத்தான். அறுமுகக்கடவுள் தேவ தச்சனைக்கொண்டு இறைவனுக்கு ஒரு திருக்கோயிலைச் செய்வித்தார். மறைமுறைப்படி ஒரு சிவக்குறியை அமைத்தார். வழிபாடுகள் செய்து போற்றினர். சிவ பெருமான் உமையவளோடு எருதின்மீது தோன்றியருளினர். முருகக்கடவுளும், நூறாயிரத்தொன்பது வீரர்களும், தேவர்களும், பூதர்களும் சிவபெருமானைப் போற்றி வணங்கினர்கள். அனைவருக்கும், சிவபெருமான் திருவருள் புரிந்தார். முருகக்கடவுளுக்கு அதுவரையிலும் யாருக்குங் கொடுக்கப்பெறாத உருத்திரபாசுபதப் படைக் கலத்தைக் கொடுத்தருளினர். பிறகு அங்குநின்றும் மறைந்தார்.

## ௨௫. சுரம்புகுதல்

### பாலைநிலத்தில் குளிர்ச்சி

சிவபெருமான் மறைந்தபிறகு முருகக்கடவுளும் மற்றவர்களும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டனர். திருச்சேய்ஞலூரை நீங்கினர். திருவிடைமருதூர், மாயூரம், திருப்பறியலூர் முதலிய சிவப்பதிகளை வணங்கிக் கொண்டு திருவாரூரை யடைந்தனர். அங்கு இறைவனை வணங்கிக்கொண்டு மிகுந்த வெப்பத்தையுடைய பாலை நிலத்திலே சென்றார்கள். அப்பாலைவனம் நறுமலர்ச் சோலையைப்போலக் குளிர்ச்சியுடையதாயிற்று.

### பராசரர் புதல்வர்கள் அறுவர்

முருகக்கடவுள் படையினருடன் பாலைநிலத்திற் சென்றுகொண்டிருந்தார். திருப்பரங்குன்றில் தவஞ்

செய்துகொண்டிருந்தவர்களும். பராசர முனிவருடைய மக்களுமாகிய தத்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்கிர பாணி, மாலி என்னும் அறுவரும் அறிவுப்பார்வையினாலே முருகக்கடவுளுடைய வருகையை உணர்ந்தார்கள். திருப் பரங்குன்றை நீங்கி முருகக்கடவுளை எதிர்நோக்கி வந்தார் கள். முருகக்கடவுளைப் போற்றி வணங்கினார்கள். "அடி யேங்கட்குத் திருவருள் செய்யவேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள்.

## அறுவர் வரலாற்றை இந்திரன் கூறுதல்

அப்பொழுது இந்திரன் முருகக்கடவுள் முன்புவந்து வணங்கினான். "இவர்கள் பராசர முனிவருடைய மைந் தர்கள். சிறுபிள்ளைக் காலத்திலே சரவணப்பொய்கையிலே பாய்ந்து விளையாடி, நீரைக் கலக்கினார்கள். அங்குள்ள மீன்கள் வருந்தி இங்குமங்குந் துள்ளின. அவர்கள் அவை களைக் கரையிலே யெடுத்துப்போட்டார்கள். நண்பகல் வேளையிற் பராசரமுனிவர் அங்குவந்தார். மக்களுடைய இழிதொழிலைக்கண்டார்; சினங்கொண்டார். "நீங்கள் இப் பொய்கையிலே மீன்களாகத் திரியக்கடவீர்கள்," என்று கடுமொழி கூறினார். உடனே அறுவரும் கயல்க ளானார்கள். அவர்கள் தந்தையைப்பார்த்து, "இக்கயல் வடிவம் நீங்குவது எப்போது?" என்று வேண்டிக்கொண் டார்கள். "இப்பொய்கையில் அறுமுகக்கடவுள் சிவ பெருமானது திருவருளினாலே எழுந்தருளுவார். அவரை உமாதேவியார் எடுக்கும்போது திருமுலைப்பால் மிகுதி யாகப்பெருகும்; அதனை நீங்கள் உண்டால் முன்னைய வடிவத்தை யடைவீர்கள்," என்று கூறிச்சென்றார். இவர்கள் சரவணப்பொய்கையில் பலகாலம் திரிந்தார்கள். நீர் அப்பொய்கையில் எழுந்தருளியிருந்தபோது எம்பெரு மாட்டியார் உம்மையெடுத்தார். அப்பொழுது பால் சொரிந்தது. அதனை இவர்கள் உண்டு பழைய வடிவத்தை யடைந்தார்கள். சிவபெருமான் அருளால் திருப்பரங் குன்றத்தில் தவஞ் செய்துகொண்டிருந்தார்கள். இப் பொழுது தாம் வருதலையுணர்ந்து இங்கு வந்தார்கள்,"

என்று கூறினன். முருகக்கடவுள் அவர்களையும் உடனழைத்துக்கொண்டு சென்றார்.

## உசா. திருச்செந்தூர்

முருகக்கடவுள் மேலும் வழிநடந்து திருச்செங்குன்றாரைப் பார்த்துக்கொண்டு, கடற்கரையிலுள்ள திருச்செந்தூரை யடைந்தார். தேவதச்சனைக்கொண்டு ஒரு திருக்கோவில் உண்டாக்கினர். தேரினின்றும் இறங்கி அதனுள்ளே புகுந்தார். வீரர்களும் பூதப்படைத் தலைவர்களும் தேவர்களும் போற்ற அரியணைமேல் வீற்றிருந்தருளினர்.

### அறுமுகக்கடவுள் அவுணர் வரலாறு கேட்டல்

முருகக்கடவுள், இந்திரனைப்பார்த்து, "சூரன் முதலாயினோர் தோன்றியதும், தவஞ்செய்ததும், மேன்மையுடன் அரசுபெற்றதும், அவர்களுடைய மாயங்களும் வெற்றியும் ஆண்மையும், உங்களுக்கு இதுவரையிற் செய்த துன்பங்களும் ஆகிய எல்லாவற்றையும் நாமறியுமாறு கூறக்கடவாய்," என்று கட்டளையிட்டருளினர். இந்திரன் தன் குருவாகிய வியாழனைப்பார்த்து, "எல்லாவற்றையும் நீர் கூறியருளும்," என்றான். வியாழன் அதற்குடன்பட்டார். அறுமுகக்கடவுளுடைய திருவடிகளை வணங்கினர். "முருகப்பெருமானே! உயிர்கடோறும் நிறைந்துள்ள தாம், அறியாதது ஒன்றுமில்லை. ஆயினும் கேட்டற்கு நீர் விரும்பியருளியபடியால் யானறிந்தவாறு அச் செய்திகளைக் கூறுகிறேன் கேட்டருளும்," என்று கூறி அவுணர்களின் பிறப்பு முதலாகிய வரலாறுகளைக் கூறலானர்.

முதலாவது
உற்பத்தி காண்டம் முற்றிற்று.

# 2. அசுர காண்டம்

## கடவுள் வணக்கம்

ஊரி லான்குணங் குறியிலான் செயல்இலான் உரைக்கும்
பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான்.

## க. மாயை தோன்றுதல்

### அசுரேந்திரனும் மங்கலகேசியும்

அவுணர்கட்கு அரசனாகிய அசுரேந்திரன் என்பவன் மங்கலகேசி என்னும் அரக்கியை மணந்தான். அவ்விருவருக்கும் ஒரு மகள் தோன்றினாள். அவளுடைய பெயர் சுரசை. அவள் நன்கு வளர்ந்தாள். அசுரகுருவாகிய சுக்கிராச்சாரியார் மாயையின் திறங்களனைத்தையும் அவளுக்குக் கற்பித்தார். அவளுடைய ஆற்றலை நோக்கி அவளுக்கு மாயை என்று பெயரிட்டார். பிறகு அவர் மாயையைப் பார்த்து, "ஓ மாயையே! நான் கூறுவதைக் கேள். திருமாலாலும் இந்திரனாலும் முனிவர்களாலுந் தேவர்களாலும் பல அவுணர்கள் இறந்தொழிந்தார்கள். உன் தந்தையும் ஆற்றலழிந்தான். மேற்கொண்டு உன்னால் தான் அவுணர்கட்கு மேன்மை யுண்டாகவேண்டும். நீ திருமகளும் போற்றத்தக்க பேரழகையுடைய ஒரு வடிவத்தைக் கொள். காசிபமுனிவரிடம் செல். உன் ஆற்றலை அவரிடம் காட்டு. காமநோயை ஊட்டு. இரவிலே அம்முனிவருடன் சேர். அளவில்லாத அவுணர்கள் உண்டாவார்கள். அவர்கள் செய்யவேண்டியவைகளை அவர்களுக்குச் சொல்லிவிட்டு மீள்," என்று கட்டளையிட்டருளினார். மாயை அதற்கு இசைந்தாள். சுக்கிராச்சாரியாரிடம் விடைபெற்றாள். தன் தந்தையிடஞ் சென்று சுக்கிராச்

சாரியார் சொல்லியவைகளைச் சொன்னாள். விடை பெற்றுக்கொண்டு காசிபமுனிவர் தவஞ்செய்யும் இடத்தை அடைந்தாள். அந்த இடம் மகாமேருமலைக்கு வடக்கில் இருந்தது.

## மாயையின் கூத்து

காசிபமுனிவருடைய இருக்கையை அடைந்த மாயை அங்குத் தடாகங்களையும், பூம் பொழில்களையும், மண்டபங்களையும், அழகியபடுக்கைகளையும் உண்டாக்கினாள். காசிபமுனிவர் அவைகளைக் கண்டு வியப்படைந்தார். அவைகளின்மீது அவாமீக்கூரப் பார்த்தார். அவைகளையெல்லாம் அங்கு ஏற்படுத்தியவர் யாவரோ என்று எண்ணமிட்டார். நாற்புறங்களினும் பார்த்தார். ஒருவரையுங் காணாது திகைத்தார். அங்கு தோன்றியுள்ள புதுமைகளைக் கண்டு அவருள்ளங் கலங்கிற்று. இவைகளால் நன்மை விளையப்போகிறதோ தீமை விளையப்போகிறதோ தெரியவில்லை. யாது நிகழ்ந்தாலும் நிகழட்டும் என்று, முடிவு செய்துகொண்டு தவம்புரிதலாகிய தந் தொழிலைப் புரியச் சென்றார். அப்பொழுது மாயை மிகுந்த பேரழகுடன் ஒரு மணிக்குன்றின்மீது தோன்றி நின்றாள். காசிப முனிவர் மாயையைக் கண்டார். அவ்வளவில் அவர் அறிவு அறைபோயிற்று. மையல்கொண்டார். தவத்தைவிட்டார். அவளெதிரிலே சென்று நின்றார். "திருமகளினும் அழகிய பொற்கொடி! நின் வரவு நல்வரவாகுக," என்று வரவேற்புக்கூறினார். "எனக்கு மையலை விளைவித்த தையலே! உன் குலம் யாது? உன் ஊர் எது? உன் பெயர்என்னை? நின்னை யீன்றவர் யாவர்?" என்று பல கேள்விகளை அடுக்கினார். மாயை முனிவரைப் பார்த்தாள். "ஓ முனிவரே! நீர் என்னை இவ்வாறு கேட்டல் தகுதியன்று. நான் தனியாக இருக்கின்றேன். தவஞ்செய்யும் முனிவர்க்கு இது நல்லதன்று. தவஞ் செய்தலை விட்டுவிட்டு அறிவிலார்போலப் பேசிக்கொண்டு என்னிடம் வருகிறீர். இவ்விடம் விட்டுச் சென்று உம்முடைய தவத்தைச் செய்யும்", என்று கூறினாள்.

காசிபமுனிவர் மாயையைப் பார்த்தார். "ஓ மாதே! நான் கூறுவதைக் கேள். உடல் வருந்த உள்ளம் மெலியத் தவஞ் செய்தல், வேண்டிய பொருளை அடைதற்கன்றோ? நான் தவஞ் செய்தது உன்னையடைதற் பொருட்டேயாம். நீயும் இங்குத் தோன்றினை. என் தவத்திற்குப் பயன் கிடைத்துவிட்டது. இனிமேலுந் தவஞ்செய்தல் வேண் டுமோ? பேர் ஊர் முதலியவைகளைக் கேட்டதற்கு ஒரு பதிலுங் கூறவில்லை. ஆயினும் அவைகளைப் பிறகு அறிந்துகொள்கிறேன். என்னைக் காமநோய் மிகுதியும் வருத்துகின்றது. இரங்கி அருள்புரிதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்.

காசிபர் கழறியவைகளைக் கேட்டு மாயை நகை புரிந்தாள். "நீர் இவ்வாறு பெருந்தவஞ்செய்தது என்னை யடைதற்பொருட்டா? நீர் கூறுவது நன்றாக இருக்கின் றதே! இவ்வாறு பொய்யுரை புகலல் முனிவர்கட்கு ஏற்ற தாகுமா?" என்றாள். நான் பொய் சொல்லவில்லை. உண்மையையே சொல்லுகின்றேன். நான் நெடுங்காலந் தவஞ்செய்தது வீடு பேறடைதற்பொருட்டேயாம். அவ் வீடுபேற்றை இப்பொழுது நீ கொடுப்பதற்கு வந்திருக் கின்றாய். உன்னையடைந்து மகிழ்வதைத்தவிர எனக்கு வேறொரு வீடுபேறும் இல்லை" என்றார்.

## மாயை மறுமொழி

"நான் வடநாட்டில் உள்ளேன். மேருமலைக்குத் தென் றிசையிலுள்ள கங்கையாற்றில் நீராடுவதற்குச் செல்லு கின்றேன். நான் போய்வருகிறேன். நீர் ஈண்டே இரும்," என்று பதிலுரை பகர்ந்தாள் மாயை.

## காசிபர் பதில்

கங்கை முதலிய ஆறுகள் ஏழையும் இவ்விடம் அழைப்பேன். சிவப்பதிகள் யாவையும் திருமால் பதிகள் யாவையும் இங்கு வரவழைப்பேன். எல்லா உலகங்களையும் இங்கு விரைந்தழைக்கவல்லேன். மும்மூர்த்திகளையும்

மூவுலகத்திலுள்ளவர்களையும் நீ காண விரும்பினாலும் இங்கே அழைப்பேன். உனக்கு வேண்டுமாயின் விரைந்து தேவாமுதத்தையும் இங்கு அழைத்துத்தருவேன். நீ மக்கட்பேற்றை விரும்பினாலும் உண்டாக்குவேன். அம் மக்களை விண்ணுலகத்தினும் இருத்துவேன். மேனகை அரம்பை முதலிய தேவமாதர்கள் உனக்குப் பணிவிடைக் காரிகள்ாகுமாறு செய்வேன். மையல்கொண்டு நையும் எனது உயிர் உய்யும்வண்ணம் நீ திருவருள்புரிதல் வேண்டும்.'' என்று கூறினார்.

மாயை

"நான் தனித்தவளாக இருக்கிறேன் என்று இவ்வாறு இயம்புகின்றீர்? இனி இவ்வாறு உரையாடுதலை விட்டு விடும். பெரியோர்கட்கு இது தக்கதன்று. நான் விரும்பிய இடத்திற்குச் செல்லுகிறேன். நீர் இங்குத் தவஞ்செய்து கொண்டு இரும்,'' என்று கூறினாள். போக்குக்காட்டி மறைந்து போனாள்.

## உ. காசிபர் புலம்புதல்

மாயை மறைந்துநின்ற அளவில் காசிபருக்குக் காமக் காழ்ப்பு மிகுந்துவிட்டது. அவர் அங்குள்ள வண்டுகள் மான்கள் குயில்கள் முதலியவைகளைப் பார்த்துப் புலம்ப லானார். காசிபர் பார்க்குமிடமெங்கும் மாயையின் உரு வெளித்தோற்றமே காணப்பட்டது. அன்று அவர் புலம்பியவற்றுட் சில காண்க.

மான்கள்

சிலைவா ணுதலாள் திறல்மா யையெனும்
வலைவீ சியெனு ருயிர்வவ் வினளால்
கலையீர்! இவண்நீர் அதுகண் டனிரோ
நிலையீர் வெருளா நெடிதோ ருதிரால்.

வண்டு

அருளா லுனையே அளியென் றனரால்
பெரியார் அவர்சொல் பிழையா குவதோ
தரியா அரியே தமியேன் உயிரைத்
தெரிவான் நினைவோ திரிகின் றனையே.

குவளை

மேவிப் பிரிவாள் விழிபோல் அடுவாய்
ஆவிக் குறவோ அலைமன் மதன் அப்
பாவிக் குமினிப் படையாய் வருவாய்
வாவிக் குவளாய்! எனைவாட் டுதியோ.

அன்னப் பெடைகள்

பொன்னிற் பொலிவுற் றிடுபூங் கமலம்
தன்னில் துணையோடு தழீ இத் தணவா
அன்னப் பெடைகாள்! அறனே புகலீர்
என்னைத் தனிவைத் தவளே கியதே.

குயில்

மயிலே ரியலால் ஒருமா யவளே
இயலே தறியேன் இவண்நின் றனளோ
பயிலே சிலநீ பகர்வாய் அதனால்
குயிலே! எனதா ருயிர்கொள் ளுதியோ.

தென்றல்

நின்பால் வரவே நினைவாய் மொழிவாள்
என்பால் இலைஇவ் வழிஏ கினளால்
மென்பால் எனமே வியமா ருதமே!
தென்பால் வருவாய் செயல்கூ றுதிநீ.

பல

களிசேர் மயிலே! கவிரா கியவாய்க்
கிளியே! குயிலே! கிளைதான் அலவோ
தளரா வகைநீர் தகவே மொழியா
அளியேன் உயிருக்கு அரணா குதிரால்.

இவ்வாறு காசிபமுனிவர் பல கூறி மிகப் புலம்பினார். கதிரோன் மறைந்தான். இரவு வரவே காமநோய் மிகுதியாயிற்று. மேலும் பலவாறு கூறிச் செயலழிந்தார்.

## ௩. அசுரர்கள் பிறப்பு

### மாயை காட்சி

காசிபர் புலம்பிச் சோர்ந்த சமயத்தில், மாயை காசிபர் முன்பு வெளிப்பட்டு நின்றாள். அவளைக்கண்டு காசிபர் மகிழ்ச்சிகொண்டார். அவள்முன்பு சென்றார். "நீ என்னை விரைவில் ஆட்கொள்ளவேண்டும்," என்று வேண்டினார்.

## மாயையின் கட்டளை

மாயை காசிபரைப் பார்த்தாள். "நீர் காமனுக்காக அஞ்சுதல் வேண்டாம். நான் உமக்குத் திருவருள் செய்கின்றேன்," என்றாள். பிறகு காசிபரைப் பார்த்து, "நீர் முதலில் இப்பொழுது இங்கு நிற்கும் என் பேரழகுக்குத் தக்க வடிவங்கொள்ளுதல் வேண்டும். பிறகு நான் கொள்ளும் ஒவ்வொரு வடிவத்திற்கும் தக்கவாறு நீரும் வடிவங் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு கொள்வீராயின் நான் உம்மைக் கூடுவேன்" என்று கூறினாள்.

## காசிபர் உடன்பாடு

காசிபமுனிவர், மாயையின் கட்டளைக்கு இணங்கினார். மனங்களித்தார். பேரழகுடைய ஒரு தேவ வடிவத்தைக் கொண்டார். மாயை வியந்தாள். மகிழ்ந்து அவரது கையைப் பற்றிக்கொண்டு ஒரு மண்டபத்தினுள்ளே புகுந்தாள்.

## சூரபன்மன் முதலியோர் தோன்றுதல்

முதல் யாமத்திலே அவரோடு கூடினாள். உடனே சூரபன்மன் தோன்றினான். சேர்க்கைக்கண் இருவர் உடலிடத்துந் தோன்றிய வியர்வையினின்றும் முப்பதினாயிரவெள்ளம் அவுணர்கள் தோன்றினார்கள். மாயை சூரபன்மனையும் அவுணர் கூட்டத்தையும் அங்கே நிறுத்தி விட்டுக் காசிபமுனிவரோடு வேறொரு மண்டபத்திற் புகுந்தாள்.

## சிங்கமுகாசுரன் முதலியோர் தோன்றுதல்

மண்டபத்திற் புகுந்ததும் மாயை பெண்சிங்கத்தின் வடிவங்கொண்டாள். காசிபர், ஆண்சிங்கத்தின் வடிவங் கொண்டார். இருவரும் இரண்டாம்யாமத்திற் கூடினார்கள். அப்பொழுது ஆயிரம் முகங்களும் இரண்டாயிரங்கைகளு முடைய சிங்கமுகாசுரன் பிறந்தான். இருவர் உடலினின்றுந்தோன்றிய வியர்வையினின்றும், நாற்பதினாயிரம்

வெள்ளம் அவுணர்கள் அரிமாமுகத்துடன் பிறந்தார்கள். மாயை சிங்கமுகாசுரனையும் அவுணர்களையும் அங்கு நிறுத்தி விட்டு வேறொருமண்டபத்திலே புகுந்தாள்.

## தாரகாசுரன் முதலியோர் தோன்றுதல்

அப்பொழுது மாயை பெண்யானை வடிவங்கொண் டாள். காசிபமுனிவர் ஆண்யானை வடிவங்கொண்டார். இருவரும் மூன்றும்யாமத்திற் கூடினார்கள். அப்பொழுது யானை முகத்தையுடைய தாரகாசுரன் பிறந்தான். இருவர் வியர்வையினும் நாற்பதினாயிரம் வெள்ளம் அவுணர்கள் யானை முகத்தை யுடையவர்களாகப் பிறந்தார்கள். மாயை யானவள் தாரகாசுரனையும் அவ்வவுணர்களையும் அங்கே நிறுத்திவிட்டு, வேறொரு மண்டபத்தினுள்ளே புகுந்தாள்.

## அசமுகி முதலியோர் தோன்றுதல்

மாயை பெண்ணாட்டின் வடிவங்கொண்டாள். காசிப முனிவர் ஆண்ஆட்டின் வடிவங்கொண்டார். இருவரும் நான்காம் யாமத்தில் கூடினார்கள். அப்பொழுது அசமுகி என்பவள் பிறந்தாள். இருவர் உடல் வியர்வையினின்றும் முப்பதினாயிரவெள்ளம் அவுணர்கள், ஆட்டுமுகத்துடன் தோன்றினார்கள். அவர்களை அங்கு நிறுத்திவிட்டு இருவரும் வேறு மண்டபம் புகுந்தார்கள்.

## அறுபதினாயிரம்வெள்ளம் அவுணர்கள் தோன்றுதல்

யாளி, புலி, குதிரை, மான், ஆ, கரடி, பன்றி, கூளி முதலிய வடிவங்கள்கொண்டு பற்பல மண்டபங்களில் கூடினார்கள். அச் சேர்க்கையால் அறுபதினாயிரம் வெள்ளம் அவுணர்கள் தோன்றினார்கள். கதிரவனும் கீழ்த்திசையிலே யெழுந்தான். சூரபன்மன் முதலிய நால்வர்களையும் இருநூறு ஆயிரம் வெள்ளம் அவுணர் களையும் இருவரும் கண்டு மகிழ்ந்தார்கள்.

## ௪. காசிபர் அறிவுரை

சூரபன்மன், தன் உடன்பிறந்தார்களாகிய சிங்கமுகன் தாரகன் முதலியோர் தன்னுடன் வரச்சென்று, தாய் தந்தையர்களாகிய மாயையையும் காசிபரையும் கண்டு வணங்கினான். "நாங்கள் செய்யவேண்டியதென்னை? கூறுங்கள்'' என்று கேட்டான்.

### காசிபர் கூறுதல்

காசிபமுனிவர் தம் மக்களைப் பார்த்துக் கூறலானார். "ஓ மைந்தர்காள்! நான் உங்கட்கு உறுதியானவைகளைக் கூறுகிறேன். நீங்கள் அந்நெறியே நிற்பீர்களாக! அறிவு மிகுந்த பெரியோர்கள் மெய்ப்பொருளையே ஆராய் வார்கள். என்றும் உள்ளவராய், எங்கும் நிறைந்தவராய், அறிவுவடிவராய் உயிர்த் தொகைகளின்பொருட்டு ஐந் தொழில்களாகிய படைத்தல், காத்தல், மறைத்தல், அருளல், அழித்தல் ஆகியவைகளைப்புரியும் சிவபெரு மானே அனைவர்க்கும் தலைவர் எனப்பெறுவர். சிவபெரு மானுடைய தன்மையைக் கூறுதல் எவர்க்கும் அருமை யாகும். மறைகளாலும் உறுதிசெய்யப்பெறாத அவ ருடைய மாண்பு மிகவுயர்ந்தது. மும்மலங்களாலே கட்டப் பெற்றுள்ள உயிர்கள் எண்ணிறந்தன. அவை முதலற்றவை; அவை தாம் தாம் செய்த நல்வினை தீவினைப் பயன்கட் கேற்பப் பிறந்தும், இன்பதுன்பங்களை நுகர்ந்தும், இறந்தும் உழல்வனவாகும். உயிர்த்தோற்றங்கள் தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, மரஞ்செடி கொடிகள் என்னும் எழுவகைத் தோற்றங்களையுடையன. அவைகள் பலவாறாக அழிந்தொழியும். கல்வியும், ஆண்மை யும், செல்வமும், ஆற்றலும் பிறவும் நீர்க்குமிழிபோல விரைவில் அழிவனவாம். அறம் என்று சொல்லப்பெறும் ஒன்றுண்டு. அஃது இருமை யின்பத்தையும் எளிதில் அளிப்பதாகும். அது மிகச் சிறந்த பொருள். அதனை ஓர் உயிர் செய்யுமாயின், அதனால் அன்பும் அருளும் உண் டாகும். அவை யுண்டானால் தவமுண்டாகும். தவமுண்

டாஞல் உயிர் சிவபெருமானையடையும். அவ்வாறடையின் மூவகை அழுக்குகளில்நின்றும் நீங்கும். அவ்வழுக்கு நீங்கவே பேரின்பம் உண்டாகும். ஆகையால், தவம்போல உயர்ந்தது வேருென்றுமில்லை. ஐம்பொறிகளையும் அடக்கித் தவஞ்செய்து விடுபேற்றை யடையலாம். மேலும் எல்லா நலங்களையும் தவமானது உண்டாக்கும்.

தவத்தைப் புரியாது, பிறவுயிர்களுக்குத் துன்பஞ் செய்யும் தீவினையாளர்களுக்கு இருமை இன்பமும் இல்லை. அவர்கள் தொடர்ந்து பிறவித்துன்பத்தில் அழுந்து வார்கள். தீவினையின் ஆற்றலாலே உலகினர் தீநெறிக் கண்ணிருந்து நன்னெறியில் திரும்பமாட்டார்கள். அதஞல் அவர்கட்கு விடுபேற்றின்பமும் உண்டாக மாட்டாது. இருமையின்பத்துக்கும் ஏதுவாயுள்ள தவத்துக்கு நிகர் ஒன்றுமில்லை. தவத்துக்கு நிகர் தவமேயாகும். ஆதலால், பிள்ளைகளே! நீங்கள் அறத்தை ஆற்றுங்கள். மறத்தை அகற்றுங்கள். இறைவனை எண்ணிப் பெருந்தவம் இயற்றுங்கள். வருந்தித் தவஞ்செய்வோர் சிறப்பாக வாழ்வர். தவத்திஞல் பகைவரை அழிக்கலாம். விரும்பிய பொருள்களை அடையலாம். என்றும் நிலைபெற்று வாழலாம்.

### தவத்தின் பெருமை

தருமம்என் றொருபொருள் உளது தாவிலா
இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையில் வரும்பொருள் ஆகும் அன்னது
ஒருமையி ஞேர்க்கலால் உணர்தற் கொண்ணுமோ ?

(தாவிலா - குற்றமில்லாத, ஒருமையிஞேர் - மனவொருமையையுடையவர்.)

தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும்
அருள்எனுங் குழவியும் அணையும் ஆங்கவை
வெருவழித் தவம்எனும் மாட்சி எய்துமேல்
தெருளுறும் அவ்வுயிர் சிவனைச் சேருமால்.

(தெருள்உறும் - தெளிவினைப்பெறும்.)

சேர்ந்திடிப் பிறவியுந் தீருந் தொன்மையாய்ச்
சார்ந்திடும் மூவகைத் தளையும் நீங்கிடும்

பேர்ந்திடல் அரியதோர் பேரின் பந்தனை
ஆர்ந்திடும் அதன்பரிசு அறைதற் கேயுமோ

(ஆர்ந்திடும் - பொருந்தும், பரிசு - தன்மை.)

ஆற்றலை யுளதுமா தவம தன்றியே
வீற்றும்ஒன் றுளதென விளம்ப லாகுமோ
சாற்றருஞ் சிவகதி தனையும் நல்குமால்
போற்றிடின் அனையதே போற்றல் வேண்டுமால்.

(வீற்றும் - வேறும்.)

அத்தவம் பிறவியை அகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை யாக்குறும்
இத்துணை அன்றியே இம்மை இன்பமும்
உய்த்திடும் உளந்தனில் உன்னுந் தன்மையே.

(மேதகு - மேன்மைதங்கிய.)

பல்லுயிர் தன்னையும் மாய்த்துப் பாரினுக்(கு)
அல்லல்செய்(து) அருந்தவம் ஆற்றிடா தவர்க்(கு)
இல்லையே இருமையும் இன்பம் ஆங்கவர்
சொல்லரும் பிறவிகள் துன்பத் தாழுவார்.

(இருமை - இம்மையும் மறுமையும்.)

அறிந்திவை உரைப்பினும் அவனி மாக்கள்தாம்
மறங்கொலை களவொடு மயக்கம் நீங்கலர்
துறந்திடு கின்றிலர் துன்பம் அற்றிலர்
பிறந்தனர் இறந்தனர் முத்தி பெற்றிலார்.

(மறம் - தீமை.)

தவந்தனில் மிக்கதொன்(று) இல்லை தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானும் இல்லையால்
தவந்தனில் அரியதொன்(று) இல்லை சாற்றிடில்
தவந்தனக்(கு) ஒப்பது தவம தாகுமே.

ஆதலின் மைந்தர்காள்! அறத்தை ஆற்றுதிர்
தீதினை விலக்குதிர் சிவனை உன்னியே
மாதவம் புரிகுதிர் மற்ற தன்றியே
ஏதுள தொருசெயல் இயற்றத் தக்கதே.

தாம் கூறியது தம் மக்கள் உள்ளத்தில் நன்கு பதியும் பொருட்டு மார்க்கண்டேயர் கதையைக் கூறலானார்.

## மிருககண்டூயர்

கடகம் என்னும் பெயரையுடைய ஒரு நகரம் இருந்தது. அந்நகரத்திற் குச்சகர் என்னும் பெயரையுடைய ஒரு பார்ப்பனர் இருந்தார். அவருக்கொரு மகன் தோன்றினான். அம்மகனுக்குக் கவுச்சிகன் என்னும் பெயரிட்டு வளர்த்தார். அவன் மறை முதலிய கல்விப்பயிற்சியிற் சிறந்தவனாகி விளங்கினான். பிறவிக்கடலைக் கடத்தற்காகச் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய எண்ணினான். ஒரு தடாகக்கரையை அடைந்தான். உண்டியும், உறக்கமும் ஒழித்தான். பேசாநிலையை மேற்கொண்டான். ஆத்தீண்டு குற்றிபோல அசைவில்லாமல் அமர்ந்தான். திருவைந்தெழுத்தை யுள்ளத்திற்கொண்டான். பேரின்பக் கடலில் முழ்கித் தவஞ்செய்தான். விலங்குகள் தங்கள் உடம்பிலுள்ள தினவு தீரும்பொருட்டு அவனுடைய உடலிலே தேய்த்துக்கொள்ளும். இதனைக் கவுச்சிகன் அறியான். கவுச்சிகன் தவத்தைத் திருமால் உணர்ந்தார். தேவர்கள்சூழ அங்கு வந்தார். அருந்தவத்தைக் கண்டு வியந்தார். கவுச்சிகன்முன் சென்று அவனுடைய உடலைத் தம்முடைய கைகளினாலே தடவிக்கொடுத்தார். "உன்னுடைய பெயர், 'மிருககண்டூயன்'" என்றார். கவுச்சிகன் எழுந்து கைதொழுது நின்றான். திருமால் கவுச்சிகனுக்கு அருள்செய்து மறைந்தருளினார்.

## குச்சகர் தம் மகனை இல்லறம் ஏற்கக் கூறுதல்

திருமால் மறைந்தபின்னர் மிருககண்டூயர் தம்முடைய தந்தையாரிடஞ் சென்றார். தந்தையார் தவத்தின்போது நிகழ்ந்தவைகளைக் கேட்டார். மிருககண்டூயர் திருமால் தோன்றித் திருவருள் புரிந்ததைக் கூறினார். குச்சகர் மைந்தன் கூறியவைகளைக்கேட்டு மனமகிழ்ந்தார். தம்

முடைய மகனைப் புகழ்ந்து போற்றினர். முறைப்படி இல்லறத்திலே நிற்கவேண்டுமென்று சாற்றினர்.

## மிருககண்டுயேர் இல்லறம் ஏற்க மறுத்துரைத்தல்

மிருக்கண்டுயர், தம் தந்தையாரைப் பார்த்துப் பதிலுரை பகரத்தொடங்கினர். "முன்பே தொடர்ந்துள்ள பிறவித்தளையை அறுக்கவேண்டிய நான், இன்னும் ஒரு தளையினலே பிணிக்கப்படுவேனுயின், இறைவனை எவ்வாறு அடைவேன்? தவஞ்செய்தலானது இருக்க, இல்லறத்தை மேற்கொண்டு தீவினைகளைப்போக்க எண்ணுதல் எதுபோலுமெனின், நல்ல நீர் இருக்கச் சேற்றிலே மூழ்கி உடலழுக்கைப்போக்க எண்ணுவதுபோலும். நிலவுலகத்தினுள்ள அளவில்லாத பெருந்தீவினைகளை நான்முகன் பெண்ணுருவமாகப் படைத்தனன். அத்தகைய பெண்களை உள்ளத்தின்கண்ணே நினைக்குந் தீவினை எழுபிறப்பினும் ஒழியாது"

> மண்ணுலகில் உள்ள வரம்பில் பெரும்பவத்தைப்
> பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனுல்
> அண்ணலவஃ துணர்தி அன்னவரைச் சிந்தைதன்னில்
> எண்ணவரும் பாவம் எழுமையினும் நீங்குவதோ.

(வரம்பில்—எல்லையில்லாத.)

அவாக்கொண்டு சுழலாநின்ற ஐம்பொறிகளாகிய பூதங்கள் இழுக்கப் பரிந்து வருந்தும் என்னைப், பெண்ணுகிய பேயும் வந்து பற்றிக்கொண்டால் நான் என்ன செய்வேன்? பெண்ணுசையானது பலநாளுந் துன்பத்தை யுண்டாக்கும். பின்னுளிலே நரகத்தில் தள்ளிவிடும். பெண் பற்றுனது ஆடவர்க்கு ஒருநாளும் இன்பத்தை யுண்டாக்க மாட்டாது. தீவினைகளை மிகுதியாகவுடையவர்கள், இன்பத்தை யடைவார்போலப் பெண்களின் வழியிற்படுகின்றனர். நாயானது எலும்பைக் கடித்தால் இனிமையைப் பெறுமா? பெண்பற்றுனது ஒருவருள்ளத்தே புகுமாயின், அது பின்னர் நீங்குவது அரிது. அஃது உயிரைப்பற்றி எந்நாளும் வருத்தும். பெண்களினும் நஞ்சு மிக இனிது. அது பின் ஒருநாளும் வருத்தாது. பெண்களுடைய உள்ளக்

கருத்துப் பிறரால் அறிதற்கரியது. மனமொன்று, மொழியொன்று, செயலொன்ருகப் பேதைமையையே பின்பற்றிப் பெருந் தீவினையைச் செய்யும். பெண்வலையிற்பட்டு மயங்கியவர்களே பிறந்து இறந்து உழல்கின்றவர்களாவர். கற்புடைய மகளிருஞ் சிலர் உளர். ஓரிடத்துத் தோன்றிய காமம் பலவிடங்களினும் பரவும். இந்திரனுக்குப் பேரழகு பொருந்திய மாதர்கள் பலர் இருந்தும், அகலிகையினுலே பெரும்பழி உண்டாகியது. நான்முகன் தன்ஞல் படைக்கப் பெற்ற திலோத்தமையின்மேல் மையல்கொண்டு நான்கு முகமுடையவன் ஆஞன். மற்றைத் தேவர்களும் முனிவர்களும் அடைந்த துன்பங்கள் அளவிடப்படா. பிறவித் துன்பத்தை நீக்க விரும்பிய யான், அத்துன்பத்தை வளர்க்கும் பெண்களை விரும்பேன். தவத்தையே செய்து இன்பமடைவேன்,'' என்ருன்.

பன்ஞளும் பாரில் பருவரலின் ஆழ்குவிக்கும்
பின்ஞள் நிரயப் பெரும்பிலத்தின் ஊடுய்க்கும்
என்ஞளில் ஆண்டகையோர்க்(கு), இன்பம் பயந்திடுமோ
மின்ஞர்கள் தம்மை விழைவுற்ற வேட்கையதே.

(பருவரல்—துன்பம்.)

துன்பம் நுகரும் வினையின் தொடர்ச்சியிஞேர்
இன்பம் நுகர்வார்போல் ஏந்திழையார் கட்பட்டார்
தன்பல் மிகநடுங்க ஞாளி தசையில்லா
என்பு கறித்திட்டால் இருஞ்சுவையும் பெற்றிடுமோ ?

(ஞாளி - நாய்.)

அஞ்சனவை வேற்கண் அரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகின்ஒருவர் நீங்கும் நிலைமைத்தோ
எஞ்சல்புரி யாதுயிரை எந்நாளும் ஈர்ந்திடுமால்
நஞ்சம் இனிதம்ம ஓர்நாளும் நலியாதே.

(அஞ்சனம் - மை. ஈர்ந்திடும் - பிளக்கும்.)

கள்ளுற்ற கூந்தல் கனங்குழைநல் லார்கருத்தில்
கொள்ளப் படும்எண் குணிக்குந் தகைமையதோ
தள்ளற் கரிதாகித் தம்மொடுபன் ஞட்பழகி
உள்ளுற்ற தேவும் உணர்தற் கரிதன்றே.

(எண் - எண்ணம். குணிக்கும் - அளவுபடுத்தும்.
தே -தெய்வம்.)

ஓதலும் ஒன்று உளமொன்றுச் செய்கைஒன்றுப்
பேதை நிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்றார் அல்லரோ
சாதல் பிறப்பில் தடுமாறு கின்றாரே.

(பேதைநிலைமை - அறிவில்லாத்தன்மை.)

## குச்சகமுனிவர் இல்லறத்தை வற்புறுத்திக் கூறுதல்

மிருககண்டியர் கூறியவைகளைக் குச்சகர் கேட்டார். இவன் தவத்தினிடத்திலே மிகுந்த பற்றுக்கொண்டிருக்கிறான் என்று உணர்ந்தார். மிருககண்டியரைப்பார்த்து, "ஓ மகனே! ஒரு மங்கையை மணஞ்செய்து மக்கட்பேற்றை யடைந்தபின்பன்றோ, தவஞ்செய்து வீடுபேறடைதல் வேண்டும். உலகமக்கள்போன்று காமஇன்பத்தை நுகர்தற்பொருட்டு நான் உன்னை இல்லறத்தை மேற்கொள்ளச் சொல்லவில்லை. இறந்த முன்னோர்களுடைய துன்பத்தையும் நரகத்தையும் நீக்கும்பொருட்டு மணஞ்செய்து மக்கட்பேற்றை யடைதல்வேண்டும். இவ்வுண்மையை நீ ஆராய்ந்துணர்ந்து, இல்லறத்தை மேற்கொண்டு நிற்றலே நல்லற நெறி. தவத்தின் ஒழுக்கமும் அதுவே. மலைமீதேற விரும்பினோன் படிப்படியாகவே மேலே ஏறுதல்வேண்டும். அதைப்போலவே நீ முறைமையாக இல்லறத்தில் நின்று துறவறத்திற் செல்லவேண்டும். இல்லறமும் மக்கட் பேறுமாகிய பயன்களின் பொருட்டே நீ இல்லறத்தை மேற்கொள்ளுதல்வேண்டும். இல்லொழுக்கத்தில் நிற்பவர்கள் அவ்வொழுக்கத்தில் தவறினும் கழுவாய் உண்டு. தவஒழுக்கத்தினருக்குத் தவறுண்டாயின் அதற்குக் கழுவாய் இல்லை. தவஒழுக்கத்தினர் தம் நிலையில் தவறுதல் மலைமுடியினின்றும் தவறி விழுவதைப்போலும். நீ பிறவித்துன்பத்திற்கு அஞ்சினையாயினும் இவ்வளவு விரைவில் துறக்கலாமா? நம் முன்னோர்களைப்போலவே நீயும் இல்லறத்தை மேற்கொள்வாயாக! இறைவன் உமாதேவியாரோடும் எழுந்தருளி மற்றவர்களையும் இல்லறத்திலே நிற்கப் பணித்தருளினார். சிவபெருமான் நிலைநாட்டிய முறையை நீ கடவாதே. மகப்பேற்றை விரும்புவாயாக!

என் சொல்லை மறுக்காது மேற்கொள்வாயாக! வசிட்ட முனிவர் அருந்ததியைத் தம் பக்கத்திருத்தியும் மேன்மையொடு விளங்கவில்லையா? விருப்பு வெறுப்பற்ற பெரியோர்கள் 'பெண்களோடு கூடியிருப்பினும் தவஞ்செய்யினும் அவர்களுள்ளம் மாறுபடமாட்டாது. நல்லியல்பு உடைய மங்கையைத் திருமணஞ்செய்யின் மேன்மையுஞ் சிறப்பும் உளவாகும். மண்ணக இன்பமும் விண்ணக இன்பமும் ஒருங்கே எய்தும். தங்கணவரைத் தெய்வமாகக்கொண்டு வழிபடும் கற்புமிக்க கனங்குழையாரது மொழியின்வழியே முகிலுந்தெய்வமும் நிற்கும். இல்லொழுக்கத்தை முன்னே நடத்தாது தவத்தைத் தொடங்குவையாயின், காமம்வந்து சேரும். அதனை விலக்குதல் அரிது. துறவர்கட்கு உணவு முதலியன கொடுத்தும், இறந்தவர்கட்குக் கடன்களைச் செய்தும், விருந்தோம்பும் இல்லறமல்லாமல் மக்கட் பிறவியாலாகும் பயன்வேறு யாதுளது? ஆண்களும் பெண்களும் நன்மை தீமைகளைச் செய்தல் ஊழ்வலியாகும். எனவே முதற்கண் இல்லறத்தைமேற்கொள். பிறகு துறவறம் கொள்ளலாம். இதுநமது ஆணையாகும்'' என்று கட்டளையிட்டார்.

## மிருககண்டேயர் உடன்பாடு

தந்தை கூறியவைகளையெல்லாம் கேட்டார் மிருககண்டேயர். "எந்தை இல்லறவாழ்வு மறைமுறையோடு இறை பணியுமாம் என்கிறார். தாய்தந்தை ஆசிரியர்கள் யாது கூறினும் அதனை மறுக்காது நிறைவேற்றுதலே மக்கள் கடனாம். யான் இதனை மறுக்காது செய்கிறேன். பெரியோர் கூறியவற்றை மறுப்பின் மறுமையில் நிரயமுண்டாம்,'' என்று முடிவுசெய்துகொண்டு, தந்தையைப்பணிந்தார். நீர் கூறுகிறபடியே இல்லறத்தில் நிற்கிறேன். கற்புடைய மாதினைத்தேடி எனக்குக் கடிமணம்புரிதல்வேண்டும். தன் சொல்லைக்கேளாத இல்லாளோடு கூடி வாழ்வதைப் பார்க்கினும் ஆளற்றின்கண்ணே வீழ்ந்து வருந்தல் இனிது. அவளோடு கூடிவாழும் ஆடவனுக்கு அவளையல்லாமல் வேறோர் நமனும் நோயும் இல்லை.

'தன்னுரைகொளாதமனை வாழ்க்கையது தன்னின்
வெந்நிரயம் வீழும்வகை யேவிழுமி தம்மா
அன்னரொடு மேவியமர் ஆடவர் தமக்குப்
பின்னுமொரு கூற்றமுள தோபிணியும் உண்டோ?'

ஆகையால், அடியேன் கூறும் இயல்புகள் நிறைந்த பெண் கிடைப்பாளாயின் அவளை நான் மணஞ்செய்து கொள்ளுகிறேன்,'' என்றார்.

## குச்சகர் கூளுரை

மிருககண்டுயர் கூறியதைக் கேட்டுக் குச்சகமுனிவர் மகிழ்ச்சி யடைந்தார். "மகனே! நீ என் சொல்லைமாறாது ஏற்றாய். நான் சிறப்படைந்தேன்; உன் தாயுஞ் சிறப்படைந்தாள். என் சுற்றங்களும் பிழைத்தன. தவங்களுஞ் சிறந்தன. மண்ணகத்தோரும் விண்ணகத்தோரும் உய்ந்தனர்; இந்திரனும் உய்ந்தான். உன் நோக்கத்தைக்கூறு. நீ கூறிய இயல்புகளெல்லாம் அமைந்து, குற்றஞ் சிறிதுமில்லாத ஒரு மங்கையைத்தேடி மணஞ்செய்து வைக்கிறேன். அவ்வாறு செய்துவைக்கா தொழிவேனாயின் என்னுடைய தவம் குறைக'' என்றார். மிருககண்டுயர் தந்தையின் திருவடிகளை வணங்கினார். தம் தந்தையைப் பார்த்துக் கூறலானார்.

## நல்லியல்பமைந்த நங்கை

திருமணஞ் செய்தற்குரிய பெண் எவ்வாறிருத்தல் வேண்டுமெனின் கூறுகிறேன்; தந்தை தாயை இழந்தவர் கூடாது. தமக்கை தங்கை யில்லாதவர் கூடாது. ஆடவரொடு பிறவாது தனித்துப்பிறந்தவர் கூடாது. இவர்களை இழந்தவர்களுங்கூடாது. உறவினரற்றவர்களும் அழகற்றவர்களும் கூடாது. உயர்குடியிற் பிறவாதவர்களும் நோயாளிகளான தாய்தந்தையர்களிடத்திற் பிறந்தவர்களுங் கூடாது. விலங்குகளுக்குரிய பெயரைப் பெற்றவர்கள் கூடாது. பேய்களின் பெயரைப் பெற்றவர்களும், புறச்சமயப் படுகுழியில் வீழ்ந்தவர்களும் ஆகார். நோயுடைய

வர், ஊமையர், முடவர், செவிடர், பிறர் வீட்டிற்குச் செல்வோர் ஆகியவர்களும் மணத்திற்கு ஆகார். பொது மகளிர் போல விழிப்பவர், ஆடவரை நோக்கித் தெரு வாசலில் நிற்பவர் ஆகியவர்களும் நல்லவர்களல்லர். தம்மை அழகுசெய்து கொள்பவர், உணவை மிகுதியாகவுண்பவர் ஆகியவர்களும் மணத்திற்குத் தக்கவர்களல்லர். பேருறக் கத்தையுடையவர்களும் அகவையில் மூத்தவர்களும் மணத் திற்கு ஆகார். தன் கோத்திரத்திற்பிறந்தவர், நெட்டையான வர், குட்டையானவர், பருத்தவர், மெலிந்தவர், ஆகியவர் களையும் மணத்திற்கு ஏற்கக்கூடாது. மேலும், கருநிறத்த வர், பொன்னிறத்தவர், பசப்பையுடையவர், குருதிநிறத்தை யுடையவர் விளர்ப்பையுடைவர், ஆகியவர்களையும் விலக்க வேண்டும். நாணமில்லாதவர், நகைப்பவர், வலிமிகுந்தவர், தாய்தந்தையருடைய சொற்கேளாதவர், சினமுடையவர், கூத்து முதலியன பார்க்க விரும்புவோர் ஆகியவர்களையும் நீக்கவேண்டும். சிவபிரானிடத்து அன்பில்லாதவர், முனி வர்களை இகழ்பவர், உயிர்களிடத்தில் அருள் இல்லாதவர், தீக்குணமுடையவர், நிறையில்லாதவர் ஆகியோரும் ஆகார். தேவரைக் கல் என்பவர், இடிபோலப் பேசுபவர், பெருமிதமுடையவர், பூனைக்கண்ணையுடையவர், நரைமயி ருடையவர், பெருங்கூந்தலுடையவர் ஆகியவர்களும் மணத்திற்கு ஏற்றவர்களல்லர். சிறுத்த கண்ணையுடைய வர், நீண்ட மூக்கையுடையவர், நீட்டிய பல்லையுடையவர், வளைந்த கழுத்தையுடையவர் ஆகியவர்களும் இல்லற வாழ்வில் நன்மையை உண்டாக்கார். மயிர்பரந்த கால்களை யுடையவர், அன்னம்போலும் மெல்லிய நடையில்லாதவர், வாய், உள்ளங்கை, நகங்கள், உள்ளங்கால்கள் ஆகியவை களிற் சிவப்பில்லாதவர்களும் சிறந்தவர்கள் அல்லர். இங்குக் கூறப்பட்ட குற்றம் சிறிதும் இல்லாத பெண்ணை யின் மணஞ்செய்து கொள்ளுகிறேன்,'' என்றார். மிருக கண்டுயர் கூறியவற்றைக் கேட்டுக் குச்சகர் மகிழ்ச்சி கொண்டார். 'அத்தகைய பெண்ணைத்தேடி மணஞ் செய்து வைக்கிறேன்' என்றார்.

## குச்சகர் பெண் தேடுதல்

குச்சகமுனிவர், உலகம் எங்குஞ் சென்று பெண் தேடித் திரியலானர். தமக்கு எதிர்ப்பட்ட சில முனிவர் களை உசாவினர். சோழநாட்டில் அநாமயன் என்னுங் காட்டிலுள்ள உசத்திய முனிவர் என்பவரிடத்திலே ஒரு பெண் இருப்பதாக அறிந்தார். அவர் இடத்திற்குச் சென்றார். உசத்தியமுனிவர் குச்சக முனிவரை எதிர் கொண்டு வணங்கினர். தமது இருப்பிடத்திற்கு அழைத் துக்கொண்டு சென்றார். தம் மனைவி மக்கள் முதலாயி னோரை யழைப்பித்துக் குச்சக முனிவரை வணங்கச் செய்தார். முறைப்படி வழிபாடுசெய்து உணவு செய் வித்தார். பிறகு உசத்திய முனிவர் குச்சக முனிவரைப் பார்த்து, "அடியேனிடத்தில் எழுந்தருளிவந்த காரணம் யாதோ!" என்று கேட்டார். குச்சகமுனிவர் உசத்திய முனிவரைப் பார்த்து, "உம்முடைய அரும்பெறற் புதல் வியை என்னுடைய மகனுக்கு மணம் பேசும்பொருட்டு வந்தேன்", என்று கூறினர். உசத்தியமுனிவர் தம் முடைய மகளைக் கொடுப்பதற்கு மகிழ்ச்சியுடன் உடன் பட்டார். குச்சகமுனிவரைத் தமது இருப்பிடத்தில் சிலநாள் இருக்கச்செய்தார்.

## விருத்தை கிணற்றில்விழுந்து இறத்தல்

உசத்திய முனிவருடைய மகளாகிய விருத்தை ஒரு நாள் தன் தோழியர்களுடன் நீராடச் சென்றாள். காட் டாற்றிலே நீராடினள். சோலைகளிலே மலர் கொய்து விளையாடினள். பிறகு அனைவரும் திரும்பினர். அப் பொழுது மதயானை ஒன்று எதிரே வந்தது. அதனைக் கண்டோர் அனைவரும் அஞ்சித் தனித்தனியே ஓடினர்கள். விருத்தை விரைந்தோடும்போது புதர்களால் மூடப்பெற்ற கிணறு ஒன்றிலே விழுந்து இறந்தாள். யானை வேறு பக்கந் திரும்பியது. விருத்தையின் தோழியர்கள் ஒன்று கக் கூடினர்கள். விருத்தையைத் தேடினர்கள். காணமல் துன்பம் அடைந்தார்கள். உசத்திய முனிவருடைய இருப்பிடத்தை யடைந்து நிகழ்ந்ததை உரைத்தார்கள்.

உசத்தியமுனிவர் மனங்கவன்றார். புதல்வியோடு சென்று மீண்ட தோழியர்களைப் பார்த்து, "என் மகளை யானை கொன்றுவிட்டதா?," என்று கேட்டார். தோழியர் நடந்ததைச் சொன்னார்கள். உசத்தியமுனிவர் யானை துரத்திய பக்கத்திற்சென்று தம் மகளைத் தேடினார். அணி கலன்கள் சிந்திக்கிடக்கும் வழியே தேடிக்கொண்டு சென்றார். எதிரே கிணறு ஒன்று காணப்பட்டது. அதில் விருத்தை இறந்து கிடத்தலைக் கண்டார். குதித்துக் கரையிலே தூக்கினார். அனைவரும் விருத்தையைச் சூழ்ந்து அழுதார்கள். தாயாகிய மங்கலை பெருந்துன்ப மடைந்து புலம்பினாள்.

## குச்சகர் உரைப்படி விருத்தையின் உடலை எண்ணெயில் இட்டு வைத்தல்

மணம்பேச வந்திருந்த குச்சகமுனிவர் அழுகின்ற வர்களின் துன்பத்தைக் கண்டார். "நீங்கள் யாரும் துன்புறவேண்டாம். இந்தப் பெண்ணை நான் பிழைக்கச் செய்கிறேன். அழாதொழியுங்கள்," என்று தேற்றினார். உசத்தியமுனிவரைப் பார்த்துப் பல அறிவுரை பகர்ந்தார். "நீர் ஊழ்வினையின் முறைமையை நன்கு உணரவில்லை. விருத்தையின் உடலை எண்ணெய்த்தோணியில் இட்டு வைத்திரும். நான் தவஞ்செய்து உயிரை மீட்டுத் தருகிறேன்," என்றார். உசத்திய முனிவர் அவ்வாறே தம் மகளின் உடலை எண்ணெயில் இட்டுவைத்தார்.

## குச்சகமுனிவரை மதயானை யெடுத்துச்செல்லுதல்

குச்சகமுனிவர் ஒரு பொய்கையில் மூழ்கித், தவஞ் செய்தார். முன்பு பெண்கள் அஞ்சுமாறு வந்த யானை மீண்டும் வந்தது. பொய்கையிற் புகுந்தது. குச்சக முனிவரைப் பிடித்துத் தூக்கித் தன் பிடரியின்மேலே வைத்துக்கொண்டது. நெடுந்தொலை சென்றது. குச்சக முனிவர் அந்த யானையின் செயலைப்பார்த்து, இது இவ்வாறு என்னை எடுத்துக்கொண்டு செல்லவேண்டிய காரணம் யாதென்று அறிவுப் பார்வையினாலே நோக்கினார்.

## தருமதத்தன் கதை

### பொன் செய்வதாக மோசடி செய்தல்

கலிங்கநாட்டிலே அரிபுரம் என்னும் ஓர் ஊர் உள்ளது. அவ்வூரில் தேவதத்தன் என்னும் பெயருடைய ஒரு வணிகன் இருந்தான். அவனுடைய மகன் தருமதத்தன் மிகுந்த செல்வத்தை யுடையவன். பல அறங்களைச் செய்து பெரும்புகழ் பெற்றான். அவனுடைய தாயும் தந்தையும் இறந்தனர். அவன் தனித்தவனாக இருந்தான். அப்பொழுது ஓர் இரசவாதி தருமதத்தன் வீட்டிற்கு வந்தான். அவன் தலை மொட்டையாகவும், காதிற் குண்டலம் உடையவனாகவும், பூணூல் அணிந்த மார்பினனாகவும், திருநீறணிந்த நெற்றியை யுடையவனாகவும், அக்கமாலையும் பிரம்பும் பொருந்திய கையை யுடையவனாகவும் காட்சி யளித்தான்.

தருமதத்தன் அந்தப் போலித்துறவியைப் போற்றி வழிபட்டான். வீட்டினுள் அழைத்துச்சென்று உண வருத்தினான். பிறகு, "அடிகள் இவ்விடத்திற்கு எழுந் தருளிய காரணம் யாதோ?" என்று கேட்டான். போலித் துறவி தருமதத்தனைப் பார்த்து, "சிவபெருமான் அருளிச் செய்த வித்தை ஒன்று நம்மிடத்தில் இருக்கிறது. அது மிகவுயர்ந்தது. எல்லாருக்கும் கூறக்கூடியதன்று. நெஞ்சிற் சிறிதும் குற்றமில்லாத உனக்கு அதனைத் தெரியப்படுத்து வோம். அதனால் வேண்டிய அளவு பொன்னைச் செய்து கொள்ளலாம். நாம் பொன் செய்தலாகிய இரசவாத வித்தையிற் சீர்த்திபெற்றுள்ளோம். கரிய இரும்பைப் பொன்னாக்குவோம். ஈயத்தையும் இரசத்தையும் வெள்ளி யாக்குவோம். இரும்பிற் செம்புண்டாக்குவோம். கணக் கற்ற அண்டங்களையெல்லாம் பொன்மயமாக்குவோம். நமது ஆற்றலைக் கூறவேண்டுமாயின் பல ஆண்டுகள் வேண்டும். ஒரு பொன்னைக் கோடி பொன்னாக்குவோம். கோடி பொன்னை மலைபோலக் கோடிகோடி பொன்னாக்கு வோம். உன் பொருள்கள் எல்லாவற்றையுங் கொடுப்பா யாகில் உன் வீட்டில் அப்பொருளை வைத்தற்கு இடம்

இல்லையென்னும்படி மிகுதியாகப் பெருக்குவோம்' என்றான்.

இவ்வாறு கூறிய போலித்துறவியைத் தருமதத்தன் வணங்கினான். முன்னே தன்னிடத்திலிருந்த செல்வத்தையும், பிறகு தன்னால் தேடப்பட்ட செல்வத்தையுங் கொண்டுவந்து இரசவாதி என்று சொல்லிக்கொள்ளும் போலித்துறவிக்கு முன்பு வைத்தான். போலித்துறவி அவைகளைப் பார்த்துவிட்டு, 'வணிகரிற் சிறந்தவனாகிய நின்னிடத்தில் உள்ள செல்வம் இவைதாமோ? இப்பொருள் நமது வித்தையில் இறைபடும் பொருளுக்குக்கூட ஈடாகமாட்டாது. நீ நமது பின்னாலே திரிகுவையானால் அளவற்ற பொருள் தருவோம்,'' என்றான். போலித்துறவி புகன்ற மொழிகளைக் கேட்ட தருமதத்தன், "அடிகாள்! சினந்துகொள்ளுதல் வேண்டாம். இன்னுங் கொண்டுவருகிறேன்'' என்று கூறித் தன்னுடைய நிலங்களையும், மணிகளையும் வீடுவாசல்களையும் ஆடுமாடுகளையும் விற்றான். அறிவு மயக்கத்தினாலே தான் அதுவரையில் புரிந்த தருமத்தையும் விற்றான். இவ்வாறு தேடிய பெரும் பொருள் முழுவதையுங் கொண்டுவந்து இரசவாதி முன்பு வைத்துநின்றான். இரசவாதி மனமகிழ்ந்து அவைகளையெல்லாம் உருக்கித்திரட்டினான். ஓர் உருவாக்கினான். அதைப்போல் இரண்டுபங்கு எடைகொண்ட இரசத்தை ஓர் அம்மியிலிட்டு அப்பொன் முழுவதையும் உரைத்தான். அதனையுருட்டி மட்குகையினுள்ளே செலுத்தினான். வேறு சில செயல்களையுஞ் செய்தான். காற்றில்லாத ஓர் அறையைக் காட்டச்செய்து, அதனுள்ளே போய்த் தீயைக் கொண்டு புகைப்பித்தான். அதனாலே தருமதத்தனுக்குக் கண்ணீர் பொழிந்தது. கண் எரிச்சல் உண்டாகியது. உடல் வியர்த்தது. வெளியே போய்விட முடியாமலும், ஒன்றும் பேசாமலும் ஊமையைப்போலச் சும்மா இருந்தான். அப்பொழுது இரசவாதி பொற்குகையை யெடுத்தான். தன்னுடைய ஆடைக்குள்ளே மறைத்துக்கொண்டான். அதுபோலத் தன் இடத்திலேயிருந்த வேறொரு குகையை எடுத்துப் பொற்குகை இருந்த இடத்தில்

வைத்துவிட்டான். புகையைத் தணித்தான். தரும தத்தனைப் பார்த்தான். "இக்குகையை உன் கையினாலே யெடுத்து இத் தீமேல் வைப்பாயாக!" என்றான். தரும தத்தனும் அவ்வாறே செய்தான். இரசவாதி தரும தத்தனைப் பார்த்து, "நீ உணவில்லாமலும், ஒருவரோடும் உரையாடாமலும் பெண்களை விரும்பாமலும், பிறரைப் பாராமலும் மூன்றுநாட்களுக்கு நம்மையே எண்ணிக் கொண்டிருப்பாயாக! நாம் காளி முன்பு ஒருவேள்வி செய்தல் வேண்டும். அதனை முடித்துக்கொண்டு நான்காம்நாள் இங்கே வருவோம்" என்றான். தருமதத்தன், "அவ்வாறே செய்க" என்றான். இரசவாதியை மும்முறை வலம்வந்து வணங்கினான். அவன்பின் செல்லாது நின்றுவிட்டான். இரசவாதி அங்குநின்று விரைந்து நெடுந்தொலைபோய் வடிவம் மாறி வேறோர் இடத்திற்குச் சென்றுவிட்டான்.

தருமதத்தன் இரசவாதி இயம்பியபடியே மூன்று நாட்களும் இருந்தான். "பெரியவர் கூறிய எல்லை கடந்து விட்டதே! இன்னும் வந்திலரே! அவர் கூறியமொழி தப்புவாரா" என்று தளர்ந்தான். காளிகோவிலிலும் நகரத்திலுந் தேடிப் பார்த்தான். எங்குங் காணமல் மயங்கித் தியங்கி வீடுதிரும்பினான். முன்வைத்த குகையை எடுத்துப் பார்த்தான். இரும்பாக இருந்தது. மிகுந்த துன்பமடைந்து வீழ்ந்து இறந்தான். அவன் தருமத்தை விற்ற தீவினையினாலே யானையாய்ப்பிறந்து திரிந்து உழல்கிறான் என்று தெரிந்தது.

## குச்சகமுனிவர் யானைக்கு நல்வினை அளித்தல்

முன்பிறப்பில் தருமதத்தனாகவிருந்த மதயானையின் தீவினையைப்போக்கி, நல்வினையை அளிக்கவேண்டுமென்று குச்சகமுனிவர் எண்ணினார். தாம் முன்பு செய்துள்ள தவத்தில் ஒருநாள் தவத்தை அந்தயானைக்கு அளித்தார். அவ்வளவில் தருமதத்தன் யானை வடிவத்தையொழித்துத் தேவடிவத்தைப் பெற்று விமானம்மீது ஏறினான். குச்சகமுனிவரைத் தொழுது வணங்கினான். விண்ணுலகத்தை யடைந்தான். அதன்பிறகு குச்சக

முனிவர் முன்போற் பொய்கையுட்சென்று தவத்தைத் தொடங்கினர்.

## குச்சகமுனிவர்க்கு இயமன் காட்சிதர, விருத்தை உயிர் பெறுதல்

குச்சகமுனிவரின் தவத்திற்குப் பலன்வழங்க எண்ணிய நமன் குச்சகமுனிவர் முன்பு தோன்றினன். "முனிவரே! உம்முடைய தவத்தைக்கண்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். உமக்கு வேண்டியது யாது? கூறும்" என்றான். குச்சகமுனிவர் இயமனைப் போற்றினர். "நான் உசத்தியமுனிவருடைய மகளை என் மகனுக்கு மணம்பேச வந்தேன். அவள் நெருநல் மரித்தாள். அவளை முன் போலத் தந்தருளும்" என்று வேண்டிக்கொண்டார். நமன் தன்னுடைய தூதன் ஒருவனைப் பார்த்து, "இம்முனிவர் வேண்டிய கன்னிகையினது உயிரை நீ விரைவில்மீட்டு இங்கே கொண்டுவந்து விடுவாயாக!" என்று கட்டளையிட்டு மறைந்தான். தூதிவன் அவ்வுயிரைக் கொண்டுவந்து அவளுடைய உடலுக்குள் விட்டான்.

உடலுக்குள் உயிர்வந்த அளவில் விருத்தை தூங்கியெழுந்தவள்போல் எழுந்தாள். ஏங்கியிருந்த அனைவரும் அவளைச் சூழ்ந்தார்கள். விருத்தையின் தாயாகிய மங்கலை அவளைத் தழுவிக்கொண்டாள். தந்தையாராகிய உசத்திய முனிவர் களிப்படைந்தார். தன் மகள்பால் நிகழ்ந்தவைகளைக் கேட்டார். அவளும் விளக்கமாகச் சொன்னாள்.

## குச்சகரைப் போற்றுதல்

எல்லோருங் களிப்புடன் இருக்கும்போது இயமனுடைய அருளைப்பெற்ற குச்சகமுனிவர் வந்து சேர்ந்தார். அனைவருங் குச்சகமுனிவரை மிகவும் போற்றிப் புகழ்ந்து கொண்டாடினார்கள். "நீர் உம்முடைய மகனுக்கு என்னுடைய மகளை மணம்பேச வந்தீரோ? இறந்துபோனவளை யெழுப்பிக்கொடுப்பதற்கு வந்தீரோ?" என்று உசத்திய முனிவர் புகழ்மொழி பல புகன்றார். குச்சகமுனிவரைச்

சிலநாள் தமது இருப்பிடத்தில் இருக்கச் செய்தார். பிறகு குச்சகமுனிவரைப் பார்த்து, "உம்முடைய மகனை இங்கே அழைத்துக்கொண்டு வாரும்; என் மகளைத் திருமணஞ் செய்து கொடுக்கிறேன்," என்றார்.

## திருமணம்

குச்சகமுனிவர் தமதிருப்பிடஞ்சென்று மிருகசுண்டியை அழைத்துக்கொண்டு வந்தார். ஒரு நன்னாளிலே விருத்தைக்கும், மிருகசுண்டியருக்கும் திருமணம் நடைபெற்றது.

## குச்சகரும் மிருகசுண்டியருந் தவம்புரியச் செல்லுதல்

மிருகசுண்டியரும் விருத்தையும் அன்பினோடு பொருந்தி இல்லறத்தை நடத்தினார்கள். குச்சகமுனிவர் தம் மகனது இல்லற வாழ்வைப் பலநாள் இருந்து கண்டு மகிழ்ந்தார். பிறகு தவஞ் செய்யும்பொருட்டுச் சென்றார். மிருகசுண்டியர் இல்லறத்தை இனிது நடத்தினர். மிருகண்டு என்னும் ஒரு மகனைப்பெற்றார். அவருக்கு அகவை ஆறு நடக்கும்போது, தாம் தம்முடைய தந்தையாரைப் போலத் தவஞ்செய்யச் சென்றார்.

## மிருகண்டு இல்லறம்

மிருகண்டு தருந்த காலத்தை யடைந்ததும் முற்கல முனிவருடைய மகளாகிய மருத்துவதியை மணஞ்செய்தார். இல்லறத்தை நடத்தினர். நாட்பல சென்றும் மக்கட்பேறின்மையால் வருந்தினர். காசியை அடைந்தார். கங்கையாற்றில் நீராடினர். மணிகன்னிகை என்னுந் திருக்கோயிலிற்சென்று சிவபெருமானை வணங்கிப் போற்றினர். சிவாகமமுறைப்படி வழிபாடாற்றினர். மக்கட்பேற்றை விரும்பிச் சிவபெருமானை எண்ணினர். வெய்யில், பனி, மழை, காற்று முதலிய எதற்கும் அஞ்சாமல் ஓராண்டு அருந்தவம் புரிந்தார்.

## சிவபெருமான் எழுந்தருளி மக்கட்பேறருளல்

மிருகண்டுவின் தவத்திற்கு மகிழ்ந்த சிவபெருமான். மிருகண்டு முனிவருக்குக் காட்சியளித்தார். "அன்பனே! நீ எதனை விரும்பினாய்? விரும்பியதைக் கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். மிருகண்டுமுனிவர், "எம்பெருமானே! அடியேனுக்கு மக்கட்பேற்றைத் தந்தருள்க," என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமான் மிருகண்டுமுனிவரைப் பார்த்து, "கெட்ட இயல்புகளுடையவனாய், அறிவு சிறிதும் இல்லாதவனாய், ஊமையும் செவிடும் முடமும் குருடுமாய் அகவை நூறினும் நோயால் வருந்துவோனாகிய ஒரு மகனை விரும்புகிறாயா? அல்லது அழகுமிக்குடையவனாய், உறுப்புக்குறைவில்லாதவனாய், நோய்கள் அற்றவனாய், அறிவு மிக்கானாய் நம்மிடத்தில் அன்பு உள்ளவனாய், பதினாறாண்டுமட்டும் இருப்பவனாய் ஒரு மகனை விரும்புகிறாயா? உன் எண்ணம் யாது? கூறு," என்று கேட்டார். மிருகண்டுமுனிவர் இறைவன் இயம்பியவைகளை நன்கு ஆராய்ந்தார். பிறகு இறைவனைப்பார்த்து, "அகவை குறைவாக விருப்பினும் பழுதற்றவனாய் உம்மிடம் அன்புள்ளவனாய், அறிவுமிக்கானாய் உள்ள ஒரு மகனையே கொடுத்தருளும்" என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமான், "உனக்கு நன்மகனைத் தந்தோம்!" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். மிருகண்டுமுனிவர் மனமகிழ்ந்தார். சிவபெருமானைப் போற்றினார். காசியில் தானே தங்கியிருந்தார்.

## மார்க்கண்டேயர் பிறப்பு

நாளடைவில் மிருகண்டு முனிவருடைய மனைவி சூல் கொண்டாள். மிருகண்டுமுனிவர் மகிழ்ச்சியடைந்தார். செய்யவேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்தார். பங்குனித்திங்களிலே இரேவதிநாளிலே மிதுன இலக்கினத்திலே, வெள்ளி, வியாழன் உச்சத்தானத்திலே அமைந்த நன்னாள் ஒன்றிலே மருத்துவதி ஓராண்குழந்தையைப் பெற்றாள். அப்பொழுது சுற்றத்தார்கள் மணிகளையும், பொன்னையும், நறுமலர்களையும், கலவைச்சாந்தையும், கத்

தூரிச்சேற்றையும் இடந்தோறும் வீசி ஆரவாரித்தார்கள். தேவ துந்துபிகள் முழங்கின. தேவர்கள் வாழ்த்துரை கூறினார்கள். காசிநகரமேயல்லாமல் உலகமெங்கும் களிப் படைந்தது. மிருகண்டுமுனிவர் கங்கையிலே நீராடினார். பார்ப்பனர் முதலியோர்கட்குத் தானந்தொடுத்தார். பிறந்த நாட் குறிப்பு முதலியவைகளை யெழுதினார். நான்முகன் தோன்றி அம்மகவுக்கு 'மார்க்கண்டேயர்' என்று பெயரிட்டான். குழந்தை மறுவற்ற திங்கள்போல வளர்ந்தது. அவ்வக்காலங்களில் குழந்தைக்குச் செய்யப்பெறவேண்டிய சடங்குகளெல்லாம் நன்கு செய்யப்பட்டன. ஐந்தாம் அகவையிலே உபநயனஞ் செய்து மறை முதலிய கலைக ளெல்லாவற்றையும் உணர்த்துவித்தார். மார்க்கண்டேயர் அக்கலைகளின் உண்மைப்பொருளை யுணர்ந்து சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்று தெளிந்தார். இறைவனுடைய திருவடிகளையே புகலிடமாகக் கொண்டார். இறைவன், தாய்தந்தையர், ஆசிரியன் முதலியவர்களை மெய்யன்போடு போற்றினார். பிரமசரிய விரதத்தைக் கடைப்பிடித்தார்.

## மார்க்கண்டேயர் தவம்புரிதல்

இவ்வாறிருக்கும் நாளிலே மார்க்கண்டேயருக்கு அகவை பதினாறு நிரம்பியது. அதனைத் தாய்தந்தைர்கள் உணர்ந்து தனித்தனியே அமர்ந்து துன்பக்கடலில் மூழ்கி வருந்தினார்கள். மார்க்கண்டேயர் அவர்களுடைய துன்பத்தைக் கண்டு வருந்தினார். 'நிகழ்ந்தது யாது? கூறுங்கள்' என்று வற்புறுத்தினார். உண்மையை மறைக்க முடியாத தாய்தந்தையர்கள், முன்னாளில் சிவபெருமான் பதினாறு ஆண்டு ஆயுள் கூறியதை உரைத்தார்கள். மார்க்கண்டேயர், "நீங்கள் இதன்பொருட்டு வருந்துதல் வேண்டாம். உயிர்க்குயிராய் எங்கும் நிறைந்துள்ள இறைவனைப் போற்றிக், கூற்றுவனுடைய ஆற்றலையும் மாற்றி, மீள்வேன்" என்று சாற்றி அவர்களைத் தேற்றினார். அவர்களுடைய அடிகளில் விழுந்து வணங்கினார்.

விரைந்துசென்று மணிகன்னிகை என்னும் திருக் கோயிலில் நுழைந்தார் அன்புமிகச் சிவபெருமானைப் போற்றினர். தென்திசையின் ஓரிடத்திலே ஒரு சிவலிங் கத்தை அமைத்தார். பலநாள் அன்போடு வழிபட்டுப் போற்றினர். அருந்தவத்தைத் திருந்திய கருத்துடன் பெருந்தவத்தினரும் வியப்பச்செய்தார். மார்க்கண்டேய ருடைய வழிபாட்டிற்குச் செக்கர்மேனியஞ் செம்பொரு ளாகிய முக்கட்பெருமான் மனம் மகிழ்ந்தார். வெளிப் பட்டுக் காட்சி தந்தார். 'நீ விரும்பியது யாது? விளம்பு வாயாக!' என்று திருவாய்மலர்ந்தருளினர். மார்க்கண் டேயர் இறைவனைப் பணிந்து போற்றினா. "அழுக்குகள் யாதும் அற்றவராக எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளே! அடியேன் நமனுடைய கைப்படாமல் திருவருள் புரிய வேண்டும்' என்று வேண்டிக்கொண்டார். அருட்கட லாகிய அண்ணல், "நீ கூற்றுவனுக்கு அஞ்சாதே" என்று திருவாய்மலர்ந்தருளினர். தம்முடைய திருவடிகளை மார்க் கண்டேயருடைய தலையின்மீது வைத்தருளினர். முன் போலச் சிவலிங்கத்துள் மறைந்தருளினர்.

## மார்க்கண்டேயரும் எமதூதன் காலன் ஆகியவர்களும்

மார்க்கண்டேயருக்கு அகவை பதினாறு நிரம்பியது. ஓர் எமதூதன் மார்க்கண்டேயர் முன்பு தோன்றினன். மார்க்கண்டேயருடைய சிவ வழிபாட்டைக்கண்டு அஞ்சி னன். அணுகமுடியாமல் விலகிநின்றான். விரைந்து மீண்டு போனன்; இயமனைக் கண்டான்; வணங்கி நின்றான். "காசியில் மார்க்கண்டேயன் என்னும் பெயருடைய ஒரு பார்ப்பனன் இருக்கின்றான். அவன் சிவபெருமானிடத்தே பொருந்திய உள்ளத்தையுடையவன். அவருடைய திரு வடிகள் பொருந்திய தலையையுடையவன். அவன் சிவவழி பாடு செய்கிறான். அவனை அணுகுவதற்கு நான் அஞ்சி னேன். அவனுடைய முன்புகூடச் செல்லவில்லை. அவன் சிவபெருமானிடத்திலே இருக்கிறான்" என்றுஇயம்பினன்.

தூதன் கூறியவைகளைக் கேட்ட இயமன் மிகுந்த சினங்கொண்டான். பெருமூச்சுவிட்டான். பின்பு கணக்கர்

களை யழைத்துக்கொண்டு வருமாறு கட்டளையிட்டான். கணக்கர்கள் வந்து காலனைத் தொழுதார்கள். இயமன் அவர்களைப் பார்த்தான். "காசியில் உள்ள மார்க்கண்டேயனுக்கு அகவை எவ்வளவு? கூறுங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்கள் கணக்கைப் பார்த்தார்கள். "சிவபெருமான் முன்னாளில் பதினாறு ஆண்டு கூறினார். அவ்வாண்டுகள் தாண்டிவிட்டன. அச்சிறுவன் செய்த சிவவழிபாடு அறத்தின்பாலது. உலகத்தில் தோன்றியவர்கள் எத்தன்மையுடையவர்களாக விருப்பினும் ஊழை வெல்லவல்லவர் ஒருவரும் இலர். அச்சிறுவன் விண்ணுலகம் அடைதற்கு உரியவன்," என்றார்கள். இயமன் சினங்கொண்டான். தன் அமைச்சனாகிய காலனை விளித்தான். "காசியிலுள்ள மார்க்கண்டேயன் என்னும் பார்ப்பனனை இங்கே கொண்டுவா" என்று கட்டளையிட்டான். காலன் காசியை அடைந்தான். மார்க்கண்டேயர் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அவருடைய சிவவழிபாட்டையுங் குறிப்பையுங் கண்டான். இவர் வருவது எவ்வாறு என்று எண்ணி ஏங்கினான். மார்க்கண்டேயர் கண்ணுக்குத் தெரியும்வண்ணஞ் சென்று அவரை வணங்கினான். மார்க்கண்டேயர் காலனைப் பார்த்தார். "நீ யார் சொல்?" என்றார். "நான் இயமனுக்கு அடிமை செய்கிற காலன். உமக்கு இறைவன் அருளிய பதினாறு ஆண்டுகளுஞ் சென்றுவிட்டன. இனிமேல் நீவிர் தென்புலத்திற்கு வருதல்வேண்டும். இது தடுக்கக்கூடியதன்று. படைத்தல் காத்தல்களைப்போல அழித்தலும் சிவபெருமான் ஏற்படுத்திய பணியேயாம். ஆதலால், இயமன் உம்மை அழைக்கின்றனன். உம்முடைய நல்வினைகளைக் கேள்விப்பட்டுப் பார்ப்பதற்கு மிகுந்த விருப்பமுடையவனாக இருக்கிறான். நீர் அங்கு வருவீராயின் இயமன் உம்மை வணங்கிப் போற்றி உயர்ந்த நிலைமையை அளிப்பன்," என்றான்.

காலன் கூறியவைகளைக் காலகாலனது மெய்யன்பராகிய மார்க்கண்டேயர் கேட்டார். காலனைப் பார்த்து, "யாவருக்கும் மேலாகிய இறைவனை வழிபடுவோர் எமலோகத்திற்குந் தேவலோகத்திற்கும் ஏகமாட்டார்கள்.

எல்லாவுலகங்களுக்கும் மேலாகிய சிவலோகத்தை யடைந்து இனிது வாழ்வார்கள். நானும் சிவபெருமானுடைய அடியவனாதலின் உங்களுடைய எமலோகத்துக்கு வரமாட்டேன். விரைந்து போய்விடு,” என்று கூறினார். காலன் விரைந்து நமனிடஞ் சென்றான். நிகழ்ந்தவைகளைக் கூறினான்.

## மார்க்கண்டேயரும் இயமனும்

மார்க்கண்டேயர் கூறியவைகளைக்கேட்ட இயமன் உள்ளம் பதைபதைத்தான். அவனுடைய கண்கள் கனலைப் பொழிந்தன.‘கொண்டு வாருங்கள்; என்னுடைய எருமைக் கடாவை’ என்றான். உடனே எருமைக்கடா வந்தது. அதன்மீது ஏறிக்கொண்டு மார்க்கண்டேயரிடம் புறப் பட்டான். மார்க்கண்டேயரை நெருங்கினான். பாசம், தண்டம், சூலம் முதலியவற்றுடன் மார்க்கண்டேயரை எதிர்த்தான். மார்க்கண்டேயர் இயமன் வந்துவிட்டான் என்று உணர்ந்துகொண்டார். சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிப் போற்றினார். இயமன் மார்க்கண் டேயரைப் பார்த்தான். “சிறுவனே! நீ யாது எண்ணினாய்? யாது செய்தாய்? ஊழின் முறைமையையுஞ் சிவபெருமானது கட்டளையையும் மறுக்கலாமா? நீ சிவபெருமானுடைய திருவடிகளிலே மிகுந்த அன்புடையவன் என்பது உண்மை. நீ நாடோறுஞ் செய்யுஞ் சிவவழிபாடு உன் தீவினையைப் போக்குமேயல்லாமல், நான் வீசும் பாசத்தை விலக்குமா? பிறப்பும் இறப்பும் நான்முகன், திருமால் முதலிய தேவர்கட்கும் உள்ளன. அவ்வாறாயின், நீ மட்டும் அதனைத் தடுத்துவிட முடியுமோ? நான் என்னுடைய தொழிலை இறைவன் அருளால் பெற்றிருக்கிறேன். தேவர்கள் காத்தாலும், மும்மூர்த்திகள் காத்தாலும், மற்றெவர் காத்தாலும் காக்கட்டும். நான் இன்று உன்னுடைய உயிரைப் பற்றிக்கொண்டுதான் போவேனேயன்றிச் சும்மா போகமாட்டேன். ஆகையால், நீ என் பின் வருவாயாக,” என்றான்.

இயமன் கூறியவைகளை மார்க்கண்டேயர் கேட்டார். மார்க்கண்டேயர் இயமனைப் பார்த்து, "முடிவு என்பது சிவபெருமானுடைய அடியார்கட்கு இல்லை. உண்டாயினும் உன்னுடைய எமலோகத்துக்கு வரமாட்டார்கள். திருக் கைலைமலைக்குத்தான் செல்வார்கள். அவர்கள் துறவிகளாயினும், இல்லறத்தார்களாயினும் வீடுபேற்றின்பத்தை யடைவார்கள். அவர்கள் உண்மைப்பொருளை உணர்ந்தவர்கள். பிறவித் துன்பத்தினின்றும் நீங்கினவர்கள். அவர்கள் உன்னை ஒருபொருட்படுத்தமாட்டார்கள். தேவர்களையும் மதியார்கள். சிவபெருமானுக்கும் அவருடைய அடியார்கட்கும் வேற்றுமை கருதுதல் அறியாமையாகும். சிவனடியார்கள் சிறந்ததான நன்மையையுடையவர்கள். செம்மையாகிய சிந்தையை உடையவர்கள். பற்றற்றவர்கள். தம்மையுந் துறந்து நிற்பவர்கள். நன்மையென்பதே இயல்பாக அமையப்பெற்றவர்கள். அவர்களுடைய தன்மை எவராலுங் கூறமுடியாது. அவர்களுடைய ஆற்றலை நீ சிறிதும் அறிந்திலை! உலகத்தார்களைப் போல அவர்களையும் நினைத்தாய்! என்னுடைய உயிருக்குந் தீங்கு நினைக்கின்றாய்! இவைகளெல்லாம் உன்னுடைய உயிரும் தலைமையும் ஒழிதற்குக் காரணமாகும். நிகழக் கூடியவைகளை நீ எண்ணிப்பார்க்கவில்லை. அறிவற்றவனே! இங்கு நிற்காமற் போய்விடு," என்று கூறினார்.

## இயமனும் அவன் படைகளும் இறத்தல்

மார்க்கண்டேயர் கூறியவைகளைக்கேட்ட இயமனுக்கு மிகுந்த சீற்றம் உண்டாகியது. கண்களிலிருந்து தீப்பொறிகள் எழுந்தன. இடியேறுபோல ஆரவாரித்தான். மார்க்கண்டேயர் முன் சென்றான். பாசத்தை வீசி இழுத்தான். மார்க்கண்டேயர் சிவபெருமானைப் போற்றிக் கொண்டு நின்றார். மார்க்கண்டேயர்மீது இயமன் பாசத்தை வீசியதுகண்டு தேவர்களுந் தியங்கினார்கள். இயமன் கைப்பாசம் மார்க்கண்டேயர்மீது விழுந்தும் அவருக்கு எத்தகைய துன்பமும் உண்டாகவில்லை. "மகனே! அஞ்சாதே! உனது துன்பத்தைத் தீர்க்கின்றோம்" என்று திரு

வாய்மலர்ந்துகொண்டு சிவபெருமான் வெளிப்பட்டருளி னார். இயமனுக்கு மதம் மிகுதியாகவிருக்கிறதென்று சினங்கொண்டார். தமது இடது திருவடியாலே இயமனைச் சிறிது உதைத்தருளினார். அவ்வளவில் இயமன் நிலத்தில் வீழ்ந்து இறந்தான். அவன் பக்கத்தில் நின்ற படைகள் அழிந்தன. ஊர்தியாகிய எருமைக்கடாவும் இறந்தது.

## இறைவன் மார்க்கண்டேயருக்கு அருள்செய்து மறைதல்

இயமன் உதைபட்டு வீழும்போது மார்க்கண்டேயர் சிவபெருமானைப் போற்றிக்கொண்டு நின்றார். இறைவன் மார்க்கண்டேயருக்கு அருள்புரிந்தார். "மகனே! நாம் உனக்கு முடிவில்லாத ஆயுளைத்தந்தோம்," என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

## மார்க்கண்டேயர் தாய்தந்தையரைக் காண்டல்

மார்க்கண்டேயர் மணிகன்னிகைத் திருக்கோயிலின் உள்ளேபுகுந்து சிவபெருமானை வணங்கினார். பிறகு வருந்திக்கொண்டிருக்குந் தாய்தந்தையர்களிடத்திற்குச் சென்று அவர்களைப்பணிந்தார். அவர்களுடைய துன்பங்களை மாற்றினார். அந்நகரிற் பன்னாளிருந்து பின்னர் பல சிவப்பதிகட்குஞ் சென்றனர். மார்க்கண்டேயர் பல கற்பகாலம் மண்ணுலகில் இருந்தார். இன்றும் விண்ணுலகில் இருக்கின்றார்.

## இறைவன் இயமனைப் பிழைப்பித்தருளல்

மார்க்கண்டேயரிடஞ் சென்று இயமன் இறந்துபோனபடியால், உலகின்கண் உள்ள உயிர்கள் இறப்பில்லாமல் நெடுங்காலம் வளர்ந்து பெருகின. நிலமகள் சுமை பொறுக்கமுடியாமல் திருமாலிடஞ்சென்று முறையிட்டுக் கொண்டாள். திருமால், நான்முகன் முதலிய தேவர்களை அழைத்துக்கொண்டு சிவபெருமானிடஞ்சென்றார். அனைவருஞ் சிவபெருமானை வணங்கிப் போற்றினார்கள். திருமால் இறைவனைப்பார்த்து, "நாங்கள் அனைவரும்

எங்கட்குரிய தொழில்களை ஒழுங்காகச் செய்துகொண்டிருக்கிறோம். இயமன் இறந்துபோனமையால் உலகிலுள்ள உயிர்கள் வளர்ந்து பெருகிவிட்டன. அவைகளை நிலமகள் தாங்கமாட்டாமல் துன்பமடைகிறாள். ஆகையால் இயமனைப் பிழைப்பித்தருளல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமான் "ஓ இயமனே! எழுவாயாக" என்று உரைத்தருளினார். அவ்வளவில் இயமன் உயிர்பெற்று எழுந்தான். இறைவனை வணங்கினான். "எம்பிரானே! உம்முடைய திருவடிபட்டமையினாலே நான் கடைத்தேறினேன்'' என்றான்.

## சிவபிரான் இயமனுக்கு அறிவுரை கூறல்

சிவபெருமான் இயமனைப்பார்த்து, "ஓ நமனே! நீ நம்முடைய அறிகுறிகளாகிய திருநீறு அக்கமணி முதலியவைகளை அணிந்துகொண்டு நம்மைப்போற்றும் அன்பர்களிடத்திலே செல்லாதே! நம் அடியார்களை மக்கட்பிறப்பினர் என்று எண்ணாதே! அவர்களை நாம் என்றே எண்ணக்கடவாய்! அவர்களைக்கண்டால் அவர்களுடைய காலிலே வீழ்ந்து வணங்கக்கடவாய்; மனமொழிமெய்களாலே நல்வினை தீவினைகளைச்செய்யும் மற்றவர்களை விண்ணுலகினும், அளற்றினும் அமர்த்தக்கடவாய்!'' என்று அருள்புரிந்து அவனை அவனுடைய படைகளோடு அனுப்பியருளினார்.

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடு கின்றனன் தயங்கு கண்டிகை
நீற்றொடு புனைந்தெமை நினையும் நீரர்பால்
கூற்றுவன் யான்எனக் குறுகு வாய்அலை.

(புராரி - இறைவன். தயங்கு - விளங்குகின்ற.)

நண்ணருங் கதிபெறு நமது தொண்டரை
மண்ணுல கத்தவர் மனித ரேயென
எண்ணலை. அவர்தமை யாமென் றெண்ணுதி
கண்ணுறின் அன்னவர் கழலின் வீழ்தியால்.

(நண்ணரும் - அடைதற்கரிய. கழலின் - அடிகளில்.)

கண்ணிய மனமொழி காயம் ஈறதா
எண்ணிய கருவிகள் இடைய தாகவே
புண்ணியம் ஒடுபவம் புரியும் வனையர்
விண்ணொடு நிரயமேல் மேவச் செய்திநீ.
(கருவிகள் - ஐம்புலன்கள்.)

### இயமன் செல்லுதல்

இயமன் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிக் கொண்டு தன் படைகளோடு புறப்பட்டான். தென் புலத்தை யடைந்து தன் அரசியலை நடத்திக்கொண்டிருந் தான். திருமால் முதலியவர்களும் சிவபெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள். இயமன் முன்போல ஏதேனும் தீது நிகழ்ந்து விடாதவாறு அச்சத் துடன் தன் ஆட்சியை நடத்திக்கொண்டிருந்தான்.

### தவத்தின் பெருமை

"தவத்தின் பெருமையினால் குச்சகமுனிவர் ஒரு பெண்ணின் உயிரை மீட்டார். ஒரு யானையை விண்ணவ னாக்கினார். மிருககண்டூயமுனிவர் திருமால் நான்முகன் முதலானவர்களும் போற்றும் மேன்மையைப் பெற்றார். மிருகண்டுமுனிவர் ஒப்பற்ற புதல்வனைப் பெற்றார். மார்க்கண்டேய முனிவர் ஊழையுங் கடந்து கூற்றுவன் ஆற்றலையும் மாற்றினார். ஒருகாலும் இறப்பற்றவராகவும் ஆனார்," என்று காசிபமுனிவர் தம் மக்களாகிய அவுணர் கூட்டத்திற்குக் கூறினார்.

## ௬. மாயை அறிவுரை

### மாயை கூறுதல்

காசிபமுனிவர் கூறியவைகளை யெல்லாம் மாயையுங் கேட்டுக்கொண்டிருந்தாள், அவள் காசிபமுனிவரைப் பார்த்து நகைத்து, "ஓ முனிவரே! நீர் உண்மையையே உரைத்தீர். ஆயினும் வீடுபேற்றில் விருப்புடைய முனிவர் களுக்கல்லாமல் நம்முடைய சிறுவர்கட்கு இவ்வாறு சொல்லலாமா? இவர்கள் பெருஞ் செல்வத்தையும், மேன்மையையும், இன்பத்தையும், குறைவற்ற ஆயுளையும்,

பெரும் புகழையும், நல்ல வாழ்வினையும் பெறுதல் வேண்டும். அவைகளை இவர்கள் விரைவில் அடைவதற்குச் சூழ்ச்சி சொல்லும்" என்று கூறினாள். மாயை கூறியதைக் கேட்ட காசிபர், "இதுவா உன்னுடைய எண்ணம்? அதனை நீயே இவர்களுக்குக் கூறுவாயாக!" என்றுரைத்தார். அவ்வளவில் மாயை தனது அறிவுரையைக் கூறலானாள்.

"ஓ சிறுவர்காள்! இம்முனிவர் கூறியது உண்மை. ஆயினும், அஃது உங்கட்கு ஏற்றதன்று. அறிவுமிக்க உயிர்கட்கெல்லாம் கல்விப்பொருள் செல்வப்பொருள் என்னும் இரண்டுமே பிறவியால் ஆகும் பயனை யளிக்கும். ஒருயிர் இந்த இரண்டினுள் ஒன்றை யடையாதாயின், அவ்வுயிரினும் பேய்ப் பிறப்பே மிகவுஞ் சிறந்தது. கல்விப் பொருளினுஞ் செல்வப்பொருளே சிறந்தது என்னலாம். கலைகளை நன்கு கற்றவராயினும் செல்வப்பொரு ளற்றவராயின், செல்வத்தை விரும்பித் தம் பகைவரையும் பணிந்து நிற்பர்.

சொற்றிடு கலையெலாந் தொடர்ந்து பற்பகல்
கற்றவர் ஆயினும் கழிநி ரப்பினல்
அற்றவர் ஆவரேல் ஆக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால்.

(கழிநிரப்பு - மிகுந்த வறுமை. ஆக்கம் - செல்வம். பற்றலர் - பகைவர்.)

கல்வியையும் பலவகைச் சிறப்புக்களையும் அடைதற்கும், அவற்றைக் குறையாது வளர்த்தற்கும் செல்வப் பொருளே காரணமாகையால் அதுதான் உயர்ந்தது. கல்வியறிவினால் மிகச் சிறந்தவரும் வறியவர்களாக இருப்பின், உலகம் அவர்களைக் குற்றமுடையவர்களாக எண்ணும். கல்வியையே அல்லாமல் மேன்மையையும், அறத்தையும், புகழையும், வெற்றியையும், பிறவற்றையும் ஆக்கலால் செல்வத்திற் சிறந்தது பிறிதொன்றும் இல்லை. ஒருவர் செல்வத்தை யடைய விரும்புவாராயின் ஊக்கமுடையவராதல் வேண்டும். ஊக்கம் உண்டானால் செல்வம் உண்டாகும். அவ்வூக்கத்திலே இடையறுது

நிலைபெறுவராயின் பெருஞ்செல்வம் உண்டாகும். செல்வம் பலவகைப்படும். அவைகள் எல்லாவற்றைம் நீங்கள் அடைதல் வேண்டும். இதுவே உங்கட்கு உறுதியாகும். நீங்கள் நேற்றிரவு எங்கட்குப் பிறந்தமையின் அவுணர்களானீர்கள். தேவர்கள் அனைவரும் உங்களுக்குப் பகைவர்கள். நீங்கள் தேவர்களினும் மிகுந்த சிறப்படைதற்கு முயற்சி செய்யுங்கள். நீங்கள் மேன்மையடைதற்குரிய வழியை நான் சொல்லுகிறேன்.

நீங்கள் வடதிசையை நோக்கிச் செல்லுங்கள். அவ்விடம் தவஞ் செய்வதற்கு மிகவும் ஏற்றது. நச்சுச் சமித்துகளிட்டுத் தீ வளருங்கள். ஓமப்பொருள்களையும், குருதியையும், ஊன்களையும் சொரிந்து சிவபெருமானைப்போற்றி வேள்வி செய்யுங்கள். அவ்வாறு செய்வீர்களாயின், சிவபெருமான் வெளிப்பட்டுத் திருவருள் புரிவார். நீங்கள் விரும்பியவைகளை யெல்லாந் தந்தருள்வார். நீங்கள் மூவரும் உங்கள் கூட்டங்களோடு அங்குச் செல்லுங்கள். வேண்டும் பொருள்கள் அனைத்தையும் நான் தருகிறேன்," என்று கூறி வேள்வி முறைகளையும் மறைகளையும் அவர்களுக்குக் கூறினாள். சூரபன்மன் தாய்தந்தையர்களை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தம்பியர்களோடு புறப்பட்டான்.

## எ. மாயை நீங்குதல்

### காசிபர் கலக்கம்

மாயையுந் தன்மக்களோடு புறப்பட்டாள். காசிப முனிவரை நோக்கி, "நான் மக்களைக் காப்பாற்றும் பொருட்டுப் போகிறேன். நீர் வருத்தப்படாமல் இரும்," என்று கூறிவிட்டுச் சென்றாள். காசிபமுனிவருக்கோ மாயைமீது ஏற்பட்ட மையல் தணியவில்லை. அவள் பின்னே சென்று, "நீ என்னை விட்டு நீங்குதல் முறைமையோ?" என்று அலறினார். மாயை முனிவரைப் பார்த்து "முனிவரே வருந்தாதீர்! நான் உம்மிடம் வந்தது மக்கட்பேற்றின் பொருட்டேயல்லாமல், உம்மோடு தங்கி

யிருத்தற் பொருட்டன்று. நான் மாயை என்பதை யுணர்ந்துகொள்ளும்" என்று கூறி மறைந்துபோனாள். மாயை வந்தபொழுது அங்குத் தோன்றிய பொருள்களும் மறைந்துபோயின. காசிபமுனிவர் மாயையைக் காணாமல் கலங்கிப் பலவாறு புலம்பி வருந்தினார்.

## நான்முகன் தேற்றுதல்

தன் மகனாகிய காசிபருடைய கலக்கத்தை நான்முகன் அறிந்தான். அங்கு வந்தான். காசிபமுனிவர் தம் தந்தையை வணங்கினார். நான்முகன் வாழ்த்துரைகள் கூறினான். "மகனே! உன்னுடைய அருந்தவத்தைவிட்டு ஏன் வருந்திப் புலம்புகிறாய்?" என்று கேட்டான். காசிபமுனிவர் நிகழ்ந்தவைகளைக் கூறினார். நான்முகன் அவற்றைக் கேட்டு நாணினான். பிறகு காசிபரைப்பார்த்து, "மறை முதலியவைகளைப் படித்தறிந்த முனிவனே! அறிவற்றவர்களைப்போல நீயும் ஒரு பெண்ணின்பொருட்டு மையல் கொண்டு வருந்திப் புலம்புகிறாயோ? கள் எனவும், காமம் எனவும் கொடிய பொருள்கள் இரண்டிருக்கின்றன. அவற்றுள் கள்ளானது உண்டால் அறிவைக் கெடுக்கும். காமமானது நினைத்தாலே அறிவைக் கெடுத்துவிடும். காமமானது கள்ளினுங் கொடியது. பிறப்புக்களையும் வினைகளையும் உண்டாக்குவது காமமேயாகையால் மெய்யுணர்வினால் காமநோயை அகற்றவேண்டும். காமநோயை ஒழித்தவர்கள்தாம் வீட்டின்பத்தை யடைவார்கள். அறிஞர்கள் காமத்தை உள்ளத்தில்கூட நினைக்கமாட்டார்கள். காமமானது நினைந்தவர்களை இம்மையில் துன்பத்தில் அழுத்தும். மறுமையிற் பிறவிக்கடலில் வீழ்த்தும். ஆதலால் காமம் நஞ்சினுங் கொடியது.

கண்டதோர் நறவமே காம மேஎன
எண்டரு தீப்பொருள் இருமைத் தென்பரால்
உண்டுழி அழிக்கும்ஒன்(று) உணர்வை உள்ளமேல்
கொண்டுழி உயிரையும் கொல்லும் ஒன்றரோ.

(நறவம் - கள். தீப்பொருள் - தீய பொருள்.)

உள்ளினுஞ் சுட்டிடும் உணரும் கேள்வியில்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினால்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே..

(உள்ளினும் - நினைத்தாலும்.)

ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையும்
காட்டிய தினையதோர் காம மாதலின்
வாட்டம்இல் புந்தியான் மற்றந் நோயினை
வீட்டின ரல்லரோ வீடு சேர்ந்துளார்.

(புந்தி - அறிவு. வீட்டினர் - அழித்தவர்.)

நெஞ்சினும் நினைப்பரோ நினைந்து ளார்தமை
எஞ்சிய துயரிடை ஈண்டை உய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்தும் ஆதலால்
நஞ்சினுந் தீயது நலம்இல் காமமே.

(எஞ்சிய - மிகுதியான. ஈண்டை-இவ்வுலகு. விஞ்சிய - கணக்கற்ற. பவக்கடல் - பிறவிக்கடல்.)

ஆகையால், நீ காமக்காழ்ப்பினாற் கலங்காதே. நீ கூடிய பெண்ணும் வஞ்சகத்தையுடைய மாயை. நீ இழிவான செயலைச் செய்துவிட்டாய். அவ்விழிவு தீரும் பொருட்டு முன்போலத் தவஞ்செய்வாயாக,” என்று அவருள்ளத்தைத் தெளியச்செய்து சென்றான். காசிப முனிவர் ஒருவாறு தெளிவடைந்து தவஞ்செய்யச் சென்றார். மாயையானவள் தன் மக்களுக்கு வேள்வி செய்யும் பொழுது உதவி செய்வதற்கு எண்ணினாள்; வேண்டியதைக் கொடுக்குந்தவத்தைச் சுக்கிராச்சாரியார் கட்டளையினால் சிவபெருமானை நினைத்துச் செய்யலானாள்.

## அ. அவுணர் வேள்வி

### சூரபன்மன் வேள்விக்குப் புறப்படுதல்

தன் தாயினுடைய கட்டளைப்படி சூரபன்மன் வேள்வி செய்தற்பொருட்டு வடதிசையை நோக்கிப் புறப்பட்டான். தன் தம்பியர்களிருவரையும் பார்த்து, “நீங்கள் நம்முடைய படைகளின் முதலிலும் இறுதியிலும் காவலாக வாருங்கள்” என்று கட்டளையிட்டான். தாரகாசுரன் சூரபன்மனை

வணங்கி, "அடியேன் படையின் கடைசியிலே வருகிறேன்" என்றான். சிங்கமுகாசூரன், "அடியேன் படையின் முன்பு செல்லுகிறேன்," என்றான். இளவல்கள் இருவரும் இவ்வாறு இயம்பி மூத்தோனிடம் விடைபெற்றுக்கொண்டு தனித்தனியே பிரிந்து சென்றார்கள். சூரபன்மனுடைய படைவெள்ளம் பதினாயிரம் யோசனை யெல்லை விண்ணினும் மண்ணினும் பரவி, வடதிசையை நோக்கி ஆரவாரத்துடன் சென்றது. நிலமகள் ஆற்றாது வருந்தினாள். நிலந்தாங்கும் பாம்பு (ஆதிசேடன்) தளர்ந்தது. திக்கு யானைகளும் குலமலைகளும் மேருமலையும் சலித்தன. இந்திரன் முதலிய திக்குப்பாலகர்கள் அஞ்சினார்கள். அவுணப்படை வெள்ளத்தின் நடுவே சூரபன்மன் சென்றான்.

## சுக்கிராச்சாரியார் தோன்றுதல்

படை சென்றுகொண்டிருக்கும்போது, அவுணர்களின் ஆசிரியராகிய சுக்கிராச்சாரியார், சூரபன்மனையும் அவனுடைய துணைவர்களையுங் காண எண்ணினார். விண்வழியாகச் சூரபன்மனை அண்மினார். சூரபன்மனையும் அவனுடைய படையையுங்கண்டு அஞ்சி நடுங்கினார். பலவாறு எண்ணினார். சூரனுக்கு முன்னே செல்ல விரும்பினார். செல்வது அருமையென்று கண்டார். உயிர்களைத் தன்வழிப்படுத்தும் ஒரு மறையை (மந்திரம்) எண்ணிக்கொண்டு சூரபன்மன் முன் சென்றார். மறையின் ஆற்றலாலே அவுணர்கள் சுக்கிரனைப் போற்றினார்கள். சுக்கிரன் சூரபன்மன்முன் சென்று வாழ்த்துரை கூறினார். சூரபன்மன், "ஐயரே! நீர் எவ்வுலகத்துள்ளீர்? உம்முடைய இடத்திலே என் மனம் உருகுகின்றது. என்னையறியாமலே அன்பு உண்டாகின்றது. நீர் மிகப்பெரியவர் போலும்," என்று இன்னுரை மொழிகள் பல இயம்பினான். சுக்கிரன் சூரபன்மனைப்பார்த்து, "நான் விண்வழியிற் செல்வேன். உன்னுடைய குலத்துக்கு ஆசிரியனாக இருக்கின்றேன். என்னுடைய பெயர் சுக்கிரன். உனக்கு உறுதி சொல்லும்பொருட்டு வந்திருக்கிறேன்," என்றார்.

சூரபன்மன் சுக்கிரன் உரையைக்கேட்டு மகிழ்ச்சி யடைந்தான். "அடிகாள்! நான் கடைத்தேறினேன்," என்று கூறிச் சுக்கிரனை அணுகிப் பணிந்தான். சுக்கிரன் சூரபன்மனைப்பார்த்து, "அரசனே! நீ வேள்விசெய்யும் பொழுது பகைவர்கள் இடையூறு செய்வார்கள். அஃது உன்னை அணுகாவண்ணம் ஓர் உறுதி சொல்லுகிறேன்," என்று கூறிச் சிவபெருமானுடைய மந்திரம் ஒன்றை முறைப்படி காதிலுரைத்தருளினர். "நீ நாடோறும் இம் மறையைச் சொல்லிக்கொண்டு நன்மனத்துடன் வேள்வியைச் செய்யக்கடவாய்," என்று கூறி மறைந்துபோனர்.

## வேள்விச் சாலை

சூரபன்மன் விரைந்து வடபுலத்தை யடைந்தான். ஆங்கிருந்த ஓராலங்காட்டைச் சேர்ந்து வேள்விச்சாலை அமைக்கத் தொடங்கினன். பதினுயிரம் யோசனைப்பரப்பு உள்ளிடம் வைத்து, அதனைச் சூழ மலைகளினலே மதில் செய்வித்தான். மதிலைச் சுற்றி அளவற்ற படைகளைக் காவலாகவைத்தான். நான்கு திக்குகளினும் வாயில் அமைப்பித்தான். அவ்வாயில்கள்தோறும் வீரமடந்தையைக் காவலாக மந்திரமுறைப்படி நிறுத்தினன். மதிலைச் சுற்றிப் பூதங்களையும், காளிகளையும், கூளிகளையும் காவல் நிறுத்தினன். வைரவர் கூட்டத்தை மறைமுறைப்படி யழைத்து வேள்வியைப் பாதுகாக்கும்பொருட்டு வைத்தான். நடுவே ஆயிரம்யோசனை அகலமும் ஆயிரம்யோசனை ஆழமுமுடைய ஒரு வேள்விக்குழியை அமைப்பித்தான். அதனைச்சூழ நூற்றெட்டுக் குழிகளும் அவைகளைச்சூழ ஆயிரத்தெட்டுக் குழிகளும் அமைப்பித்தான்.

## வேள்விப் பொருள்கள்

வேள்விச்சாலை முடிவுபெற்றபின்பு, வேள்விக்குரிய பொருள்களை நாடி மாயையை எண்ணினன். தவஞ் செய்து இறைவனருள் பெற்றிருந்த மாயை உடனே தோன்றினள். அரிமா, புலி, யாளி, கரடி, யானை, குதிரை, ஆட்டுக்கடா முதலிய விலங்குகளின் ஊன், குருதி,

எண்ணெய், நெய், பால், தயிர், மது, கடுகு, மிளகு முதலியவற்றாலும், நெய்யுண்டி, வேள்வி ஆள்கள், செந்நெல்அரிசி, அரிசனங்கலந்த அரிசி, மலர், கத்தூரி முதலிய நறுமணப் பொருள்கள், தருப்பை, நெற்பொரி, சுருக்குச்சருவம், ஒன்பான்வகைக் கூலங்கள், நச்சுச் சமித்துக்கள், கொள் கலங்கள் ஆகியவற்றையும், ஒரு வச்சிரத் தூணையும் வருவித்தாள். மூவாயிரம்யோசனை இடத்தை அப்பொருள்களால் நிறைத்துவிட்டுச் சென்றாள்.

## சூரபன்மன் வேள்விசெய்தல்

வேள்விப் பொருள்களெல்லாம் அமைக்கப்பெற்றமையைக்கண்ட சூரபன்மன் வேள்வியைச் செய்யத் தொடங்கினான். வச்சிரத்தூணை நடுவே நிறுத்தினான். மதிலின் நான்கு பக்கவாயில்கட்குஞ் சென்றான். வீர மடந்தையை வழிபட்டான். ஊன்பலி கொடுத்தான். மதில் நடுவிலுள்ள பூதங்களுக்கும் பேய்களுக்கும் பலி கொடுத்தான். ஆயிரத்தெட்டு வேள்விக்குழிகளினும் நச்சுவிறகிட்டுத் தீ மூட்டினான். தன் தம்பியர்களோடு சிவபெருமானுடைய பெயரைச்சொல்லி அவிகொடுத்தான். தாரகனைப் பார்த்துக் குழிகள்தோறுஞ் சென்று தீயைக் குறையாமல் வளர்க்கக் கட்டளையிட்டான். நூற்றெட்டுக் குழிகட்குஞ்சென்று வேள்வியைத் தொடங்கினான். அவைகளைப் பாதுகாக்குமாறு அரிமாமுகனுக்கு ஆணையிட்டான். தான் நடுக்குழியை அடைந்து சிவபெருமானை எண்ணினான். முறைப்படி வழிபாடு செய்து வேள்வியைச் செய்தான். நச்சு விறகுத்துண்டங்களை வேள்விக் குழிக்குள் இட்டான். நச்சுமரத் தீக்கடை கோலால் ஆக்கிய தீயைக்கொண்டு வேள்வித்தீயை மூட்டினான். நெய்யை மந்திரத்தோடு சொரிந்தான். ஊன் துண்டங்களைப் போட்டுக் குருதியைச் சொரிந்தான். பாலையும் தயிரையும் ஊற்றினான். நெற்பொரியை இட்டான். தேனையுங் கள்ளையுஞ் சிந்தினான். ஒன்பான்வகைக் கூலங்களையும் போட்டான். வெய்ய பொருள்கள் பலவற்றையும் கொட்டினான். இவ்வாறே சிவபெருமானை யெண்ணிச் சூரபன்மன் வீர

வேள்வி செய்தான். வேள்வித்தீ மிக்கெழுந்து திக்குகளையும் மேல் உலகங்களையுஞ் சுட்டது.

## தேவர்கள் அச்சம்

சூரபன்மன் வீரவேள்வி செய்ததை நான்முகன், திருமால், இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் கேள்வியுற்றார்கள். அஞ்சி நடுநடுங்கினார்கள். பெருந் துன்பக்கடலில் அமிழ்ந்தினார்கள்.

## சூரபன்மன் வேள்விக்குழியிற் குதித்து எரிதல்

சூரபன்மன் தன் தம்பியர்களோடு பதினாயிரம் யாண்டுகள் வேள்விசெய்தான். ஆயினும், இறைவன் தோன்றவில்லை. இச்செயலுக்கு இறைவன் எழுந்தருளுவாரோ மாட்டாரோ என்று எண்ணிய சூரபன்மன் வேள்வித்தீ வளர்க்கும் பணியைத் தன் தம்பியர்களிடத்தே பணித்தான். தான் விண்ணிற்சென்று அங்கு நின்று கொண்டான். வாளினாலே தன் உடற்சதைகளையெல்லாம் அரிந்தரிந்து வேள்வித்தீயிற் சிந்தினான். குருதியை நெய் போலச் சொரிந்தான். உடலிலுள்ள சதைகள் அரிய அரிய முன்போல வளர்ந்தன. அதுகண்டு மகிழ்ந்தான். யாவரும் அஞ்சும்படி உரப்பினான். பின்னும் ஆயிரம் ஆண்டுகள் விண்ணில் நின்று தன் உடற்சதைகளை அரிந்து வேள்வித் தீயிற் சிந்தினான். அவ்வாறு செய்தும் சிவ பெருமான் எழுந்தருளி வந்திலர். சூரபன்மன் மனம் வருந்தினான். தான் மாண்டுபோவதே தக்கது என்று உறுதிசெய்தான். தீயினாற் சூழப்பட்டு அதனால் எரியாமல் முதற்குழியிற் பொருந்திய வச்சிரத் தூணின்மேலே குதித்தான். அதன் உச்சியினின்றும் உருவி அடியில் விழுந்து எரிந்துபோனான்.

## அவுணர்குழாம் அரற்றிப் புலம்புதல்

முன்னவன் வேள்விக்குழியில் விழுந்து எரிந்து போனதை அரிமாமுகன் கண்டான். உள்ளம் பதைத்தான். குருதிக்கண்ணீர்விட்டு அழுதான். வேள்வித்

தொழிலை மறந்தான். உயிர் உண்டோ இல்லையோ என்று சொல்லும்படி வருந்தித் துன்பக்கடலுள் ஆழ்ந்தான். ஒருவாறு அறிவுண்டாகப்பெற்றுப் பெருமூச்செறிந்தான். "மாயையினுடைய மகனே! அவுணர் குலத்துக்கு அரசனே! நீ எங்கே ஒளித்தாய்? தீய வேள்வியைப் பல நாட்செய்து பெற்ற பேறு இதுதானோ? தாயும்நீ; தந்தையும் நீ; எங்கள் உயிரும் நீ; எல்லாமும் எங்கட்கு நீயே என்று எண்ணியிருந்தோம். நீ அதனை எண்ணாமல் இறந்தாயோ? மிகுந்த புகழையுடைய சூரபன்மனே! உன்னைப்போல இந்த வேள்வியைப் பலநாட்கள் செய்தவர்கள் யார்? அன்பில்லாமல் எங்களை விட்டுவிட்டுப் போய்விட்டாயே! இறைவன் உன்னிடத்தில் அன்பற்றவரென்பதை அறியாது அவரைக் குறித்தோ வேள்வி செய்தாய்? 'இவர்கள் வேள்வியைச்செய்து, திருவருள்மிக்க இறைவன் செயலால் ஆற்றலைப்பெற்று நமது உயிரையுஞ் செல்வங்களையும் நீக்குவார்கள்' என்று நமக்கு அஞ்சியிருந்த இந்திரனுடைய மனக்கவலை தீர்ந்ததும் இன்றைக்குத்தானோ? எல்லாரும் போற்றும்படி வேள்வியைச்செய்து, பல்லாயிர நாட்கள் பழகி இதனைச் சொல்லாமலிறந்துபோனாய். புலம்பும் யாங்கள் இறந்தாயினும் உன் முகத்தைக் காண்போமோ?" என்று பலவாறு சொல்லிப் புலம்பியழுதான். தாரகனும் கைகளை யுதறி அரற்றிவிழுந்து துன்பக்கடலுள் ஆழ்ந்து புலம்பினான். மற்றைய அவுணர்களும் கடல் போலப் புலம்பினார்கள். வேள்விச்சாலை அழுகைச்சாலையாக விளங்கியது.

## இந்திரன் மகிழ்ச்சி

அவுணர்கள் புலம்பும் ஒலியை இந்திரன் கேட்டான். சூரபன்மன் வேள்வித்தீயில் விழுந்து இறந்தமையை ஒற்றுவரால் உணர்ந்தான். துன்பங்களெல்லாம் நீங்கப்பெற்றான். மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தான். தேவர்கள் சூழ வெள்ளையானையில் ஏறி அவுணர்களுடைய துன்பத்தைப் பார்க்கும்படியாக வந்தான். விண்ணில் நின்று மகிழ்ந்தான். தன்னுடைய தவத்தை யெண்ணி வியந்தான்.

### அரிமாமுகன் முதலியோர் வீரவேள்வி புரிதல்

அவுணர்களுடன் துன்பக்கடலுள் ஆழுகின்ற அரிமாமுகன் தானும் வீரவேள்வி செய்ய எண்ணினான். "தமையன் இறக்க நான் உயிரோடிருக்கலாமா?" என்றான். தன் ஆயிரம் தலைகளையும் வாளினால் அறுத்தான். தன் தமையன் வீழ்ந்து எரிந்த முதலாவது வேள்விக் குழியில் போட்டான். தலைகள் மீள மீள வளர்ந்தன. பின்னும் அவைகளை யறுத்து வேள்விக்குழியில் வீழ்த்திக் கொண்டிருந்தான். அதனைக்கண்ட தாரகன் தன் தலையையும் அறுத்து வேள்வித்தீயில் இட்டான். அதுவும் வளர்ந்தது. அவனும் வளர வளர அரிந்து போட்டுக்கொண்டிருந்தான். இவர்களுடைய செயலைக்கண்ட அவுணர்கள் சிலர் தங்கள் தலைகளையும் அறுத்து வேள்வித்தீயில் இட்டார்கள். சிலர் வேள்வித்தீயில் விழுந்து இறந்தார்கள். அரிமாமுகனுந் தீயில் பாய்வதற்காக விண்ணிலெழுதற்கு எண்ணினான்.

## கூ. மேன்மை பெறுதல்

### இறைவன் மாறுகோலத்துடன் தோன்றுதல்

சிவபெருமான் சிங்கமுகன் எண்ணத்தை யறிந்தார். ஒரு கிழப்பார்ப்பானாகி மாறுகோலம் தாங்கினார். தடியைக் கையில் ஊன்றிக்கொண்டு வேள்விக்குழியை நெருங்கினார். அரிமாமுகனைப் பார்த்தார். "இங்கு நீங்கள் அனைவரும் ஏன் வருந்துகின்றீர்கள்? உங்கள் வரலாற்றைச் சொல்லுங்கள்" என்று கேட்டார். சிங்கமுகன் அம்முதியவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினான். நிகழ்ந்தவைகளை யெல்லாம் கூறினான். பார்ப்பனக் கோலம் கொண்ட சிவபெருமான் அவைகளைக் கேட்டார். "நீங்களும் உங்கள் மூத்தவனைப்போன்று இறத்தல் வேண்டாம். வேள்வித்தீயினின்றும் அவனை இப்பொழுதே எழுப்பித் தருகின்றோம்; உங்கள் தளர்ச்சியை விடுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். தேவகங்கையை வரும்படி எண்ணினார். அது விரைந்து வந்தது. சிவபெருமானுடைய

திருவடிகளை வணங்கியது. அவருடைய கட்டளையினால் சூரபன்மன் இறந்த நடுக்குழியிற் புகுந்தது. சூரபன்மன் ஆரவாரித்தெழுந்தான். அரிமாமுகனுந் தாரகனும் அளவற்ற மகிழ்ச்சியை அடைந்தார்கள். விரைந்தோடிச் சூரபன்மனை வணங்கினார்கள். அவுணர்கள் மகிழ்ச்சியடைந்து வாழ்த்துரை கூறினார்கள். இவைகளைக் கண்ட விண்ணவர்கள் முகிலின் வரவைக் கண்ட குயில்கள்போல அஞ்சித் துன்பத்துடன் ஓடித் தம்மூரை யடைந்தார்கள்.

## சிவபெருமான் வெளிப்படையாகக் காட்சியளித்தல்

தம்பியர்களும் அவுணர்களும் வாழ்த்தச் சூரபன்மன் நிற்கும்போது சிவபெருமான் தமது பார்ப்பனக் கோலத்தை மாற்றினார். எருதின்மீது உமாதேவியோடு தோன்றியருளினார். சூரபன்மன் நிலத்தில் வீழ்ந்து வணங்கிப் பலவாறு போற்றினான். சிவபெருமான் சூரபன்மனைப் பார்த்தார். "நெடுங்காலம் நம்மை நினைந்து பெரிய வேள்வியைச் செய்து இளைத்தாய். உனக்கு வேண்டுவது யாது? கூறுவாயாக," என்று அருள்புரிந்தார்.

சூரபன்மன் இறைவனைப்பார்த்து, "உலகில் உள்ள அண்டங்கள் அனைத்திற்கும் நான் அரசனாக இருத்தல் வேண்டும். அவைகளைக் காத்தற்குரிய ஆட்சியுருளையும் என்பால் வருதல்வேண்டும். நினைத்தவுடனே அவ்வுலகங்களுக்கெல்லாஞ் செல்லும் ஊர்தியும் வேண்டும். எப்பொழுதும் அழியாமலிருக்கிற உடம்பையும் எனக்கு ஈதல் வேண்டும். திருமால் முதலிய தேவர்கள் போர் செய்தாலும் அவர்களையும் வெல்லுதல் வேண்டும். அதற்குரிய ஆற்றலும் படைக்கலங்களும் அருளுதல் வேண்டும். எந்நாளும் அழியாதிருத்தலும் வேண்டும்," என்று வேண்டினான்.

## இறைவன் அருள்புரிதல்

சிவபெருமான் சூரபன்மனைப் பார்த்து, "உலகிலுள்ள ஆயிரகோடி அண்டங்களுள் ஆயிரத்தெட்டு

அண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆளுக," என்று அருள் புரிந்தார். அவ்வுலகெங்குஞ் செல்லத்தக்க ஆற்றலமைந்த இந்திரஞாலம் என்னுந் தேரைக் கொடுத்தார். அவ்வண்டங்களைப் பாதுகாக்குமாறு ஆட்சி யுருளையையும் அரிமா ஊர்தியையுங் கொடுத்தார். தேவர்கள் அனைவருக்கும் முதல்வனாகும் மேன்மையைக் கொடுத்தார். தேவர்களையும் அவுணர்களையும் வெற்றிகொள்ளும் ஆற்றலைக் கொடுத்தார். பாசுபதப் படைக்கலம் முதலிய தெய்வப் படைக்கலங்களை யருளினார். எந்நாளுங் கெடாமலிருக்கிற வச்சிரயாக்கையையுங் கொடுத்தார். நால்வகைப் படைகளையும் உண்டாக்கிக் கொடுத்தார்.

இவ்வாறு சூரபன்மனுக்கு அருள் செய்தபொழுது அவனுடைய தம்பியர்கள் இறைவனைப் பணிந்தார்கள். இறைவன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் உங்கள் தமையனுக்குத் தோள்கள்போலப் பொருந்தி நூற்றெட்டு யுகம் சிறப்போடு வாழுங்கள். தேவர்களைப் புறங் காணுங்கள். உங்கள் மூவரையும் நம்முடைய சத்தி ஒன்றையல்லாமல் வேறொன்றும் அழிக்காது," என்று கூறி மேலுந் திருவருள்செய்து மறைந்தருளினார்.

## கo. சுக்கிரன் சூரனுக்குரைத்தல்

### சூரபன்மன் காசிபமுனிவரைக் காண்டல்

சூரபன்மன் அருள் பெற்றமையைக் கண்டு அவுணர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தார்கள். சூரபன்மனைச் சூழ்ந்தார்கள். சூரபன்மன் அவுணப் படைத்தலைவர்களை நலம் வினவினான். சூரபன்மன் தன் தம்பியர்களோடு பேராற்றல் அமைந்தவனாக விளங்கிநிற்றலைக் கண்டு தேவர்கள் கலங்கினார்கள். பழைய அவுணர்கள் போந்து வாழ்த்துரை கூறினார்கள். சூரபன்மன் தன் படைகளோடு புறப்பட்டுச் சென்று தன்னுடைய தந்தையாகிய காசிபரைக்கண்டு வணங்கினான். சிவபெருமானிடத்திலே தான் பெற்ற மேன்மைகளைக் கூறினான். "இனிமேல் யாது செய்வது?" என்று வினவினான். காசிபர், "நீங்கள்

சுக்கிராச்சாரியாரிடத்திலே செல்லுங்கள்; எல்லாவற்றை யும் அவர் சொல்லுவார்" என்று கூறினார்.

## சுக்கிராச்சாரியாரைக் காண்டல்

சூரபன்மன் சுக்கிராச்சாரியாரிடஞ் சென்றான். அவர் இவனுடைய வரவையறிந்து மாணவர் கூட்டத் தோடு எதிர்கொண்டார். சூரபன்மன் படைகளுக்கு முன்னே சென்று அவரை வணங்கினான். சுக்கிரனார் ஆசி கூறித் தழுவினார். தமது இருப்பிடத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றார். "நீ என்பால் வந்த காரணம் யாதோ?" என்று கேட்டார். சூரபன்மன் நெடுங்காலம் வீரவேள்வி செய்தமையையும், சிவபெருமான் எழுந்தருளி வந்து அளவற்ற மேன்மைகளை வழங்கியமையையும், காசிபமுனிவரிடத்திற் சென்றமையையும் அவர் கூறியமை யையுங் கூறினான். "நீங்கள் இனிமேற் செய்யவேண்டி யவைகளைக் கூறியருள வேண்டும்," என்று வேண்டிக் கொண்டான்.

## சுக்கிரனார் உரை

"பாசம் உண்டு என்றல் பொய். பதியும் பசுவும் ஒன்றுதான். இருவினைகளும் அவற்றின் பயன்களாகிய இன்ப துன்பங்களும் பொய். வீடுபேறு என்று ஒன்று உண்டென்பதும் அதற்காக முயலுதல்வேண்டும் என்ப தும் பொய். பொறிகளும் புலன்களும் பொய். அறிவும் மொழியும் வடிவமும் செயல்களும் பொய். இன்ப துன் பங்களும் பொய். பிறப்பதும் இறப்பதும் செயல்களைச் செய்வதும் சிவபெருமானுக் கில்லை. இவைகள் உடம் பிற்கேயாம். 'அறம் நமக்குத் துணையாகும் என்பதும், தீவினை தீது அதனைச் செய்யலாகாது' என்பதும் அறி வின்மையாகும். செய்யும்படி நேர்ந்தவைகளை யெல்லாம் அஞ்சாது செய்வதே முறைமையாகும். 'அறத்தைச் செய்க! மறத்தைச் செய்யாதொழிக!' என்று சில அறிவற்றவர்கள் கூறுவார்கள். இவைகளை யார் செய்த

போதினும் மேலே ஏற்படக்கூடிய பயனென்றும் இல்லை. இப்பிறப்பிற் செய்யப்பெறும் நல்வினை தீவினைகள் மறு பிறப்பிற் பயன்படமாட்டா. மறு பிறப்பு ஒன்று இருந் தால் அல்லவா இப்பிறப்பின் நல்வினை தீவினைகள் தொட ரும். மறு பிறப்பென்பது கிறுகிறுப்பாதலால், அக் கிறு கிறுப்பில் உண்டாவது உண்மையாகுமோ? சிலரைச் சிறியர் என்றும், சிலரைப் பெரியர் என்றும் எண்ணுவது தக்கதன்று. உயிர்களெல்லாம் ஒன்றே என்று உணர்தல் வேண்டும். இஃது உண்மையே. இவைகள் அறிவாளி கள் அறியத்தக்க நுண்பொருள்களாம்.

தேவர்களைப் பார்க்கினும் மேலான அரசுரிமையும், வெற்றியும் ஆணையும் அழியாத செல்வங்களும் உனக்கு வந்துள்ளன. இந்த மேன்மைகளால் உன்னை நீயே பிரமம் என்று உணர்ந்துகொள்வாயாக!'' நான்முகன் முதலிய தேவர்களை உயர்ந்தவர்களென்று எண்ணுதே. தேவர்கள் உங்கட்குப் பகைவர்கள். அவர்களுடைய செல்வங்களைப் பறித்துக்கொண்டு அவர்களைத் தண்டிப்பா யாக! இந்திரன் என்பவன் தேவர்களுடைய அரசன். முன்னாளில் அவன்தான் பல அவுணர்களுடைய உயிரைக் கவர்ந்தான். அவனைப் பிடித்து விலங்கிட்டுச் சிறையில் வைப்பாயாக! மேலும், அவனுக்குப் பலவகைத் தீமை களையும் இயற்று. முனிவர்களையுந் தேவர்களையுந் திக்குப் பாலகர்களையும் உனக்கு ஏவலர்களாக்கிக்கொள். அவர்க ளுடைய மேன்மைகளை அவுணர்களுக்குக் கொடு. கொலை களவு காமம் முதலிய தீமைகளை உறுதியென்று செய். அதனுல் உனக்கு எத்தகைய கேடும் ஏற்படாது. அவை களை நீ செய்யாவிட்டால் நீ விரும்பியவைகளையெல்லாம் அடையமாட்டாய். சிவபெருமான் உனக்குக் கொடுத்த ஆயிரத்தெட்டு அண்டங்களையும் படைகளோடு இப் பொழுதே போய்ப் பார். ஆங்காங்கு செய்யவேண்டி யவைகளைச் செய்துவிட்டு இந்த அண்டத்திற்கு மீண்டு வருவாயாக!'' என்று கூறினர்.

## கக. அண்டகோசங்கள்

### அண்டத்தைப்பற்றிய செய்திகளை அறிதல்

சுக்கிராச்சாரியருடைய தீயஉரைகளைச் சூரபன்மன் கேட்டான். "நல்லது உம்முடைய கட்டளையின்படியே நிற்கிறேன்" என்றான். "சிவபெருமான் எனக்குக் கொடுத்துள்ள ஆயிரத்தெட்டு அண்டங்களையும்பற்றிய செய்திகளை எனக்குக் கூறும்" என்று கேட்டான். சுக்கிராச்சாரியார் சொல்லலானார். மூலப்பிரகிருதியில் அறிவுத் தத்துவம் தோன்றும். அதில் அகங்கார தத்துவந் தோன்றும். அதில் ஒலி முதலிய ஐம்புலன்களுந் தோன்றும். அவற்றில் விண், காற்று, தீ, நீர், மண் என்னும் ஐந்து தத்துவங்களுந் தோன்றும். மண் தத்துவத்திற்கு ஆயிரகோடி அண்டங்கள் உள்ளன. அவை பொன்னிறமுடையனவாய் விரிந்திருக்கும். அவைகளில் ஆயிரத்தெட்டு நீ பெற்றவைகள். அவற்றுள் ஓரண்டத்தின் இயல்பைச் சொல்லுகிறேன் கேள்.

### அண்டத்தின் அகலமும் உயர்ச்சியும்

"துகள் இருபத்துநான்கு கொண்டது ஒரு மயிர் நுனி; மயிர் நுனி எட்டு அடங்கியது ஓர் ஈர்; ஈர் எட்டு அடங்கியது ஒரு பேன்; பேன் எட்டு அடங்கியது ஒரு நெல்; நெல் எட்டு அடங்கியது ஓர் அங்குலம்; அங்குலம் இருபத்துநான்கு கொண்டது ஒரு முழம்; முழம் நான்கு அடங்கியது ஒரு தனு; தனு இரண்டு அடங்கியது ஒரு தண்டம்; தண்டம் இரண்டாயிரம் அடங்கியது ஒரு குரோசம்; குரோசம் நான்கு கொண்டது ஒரு யோசனை; இந்த யோசனை நூறுகோடி கொண்டது ஓர் அண்டத்தின் அகலமும் உயர்ச்சியுமாகும். மற்ற அண்டங்களும் இதே அளவையுடையன. நிலத்தின் மேற்பரப்புக்குக் கீழே ஐம்பதுகோடி யோசனையும், மேருமலையின் நடுவில் இருந்து அண்டகடாகத்தின் எல்லைவரையும் ஐம்பதுகோடி யோசனையும் ஆகும்.

நிலவுலகில் சம்புத்தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலித்தீவு, கோமேதகத்தீவு, புட்கரத் தீவு என ஏழு தீவுகள் உள்ளன. உவர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன் கடல், நன்னீர்க்கடல் என்னும் ஏழு கடல்கள் முறையே இத்தீவுகளைச் சூழ்ந்துள்ளன. சம்புத்தீவின் பரப்பும் அதனைச் சூழ்ந்த உவர்க்கடலின் பரப்பும் தனித்தனி ஒரிலக்கம் யோசனை. மற்றைத் தீவுகளுக்கும் கடல்களுக் கும் உள்ள பரப்பு இவற்றிலிருந்து முறையே தனித்தனி இரட்டித்த யோசனை அளவாகும். ஏழு தீவுகளுக்கும் கடல்களுக்கும் உள்ள பரப்பு இரண்டு கோடியே ஐம்பத்து நான்கு இலக்கம் யோசனைகளாம். பொன்னிலம் இவற்றைச் சூழ்ந்திருக்கும். அதன் அகலம் பத்துக்கோடி யோசனை. அதனைச் சூழ்ந்த சக்கரவாளகிரியின் அகலம் பதினாயிரம் யோசனை. அதனைச் சூழ்ந்த புறக்கடலின் அளவு ஒரு கோடியே இருபத்தேழிலக்கம் யோசனை. அதனைச் சூழ்ந்த இருள் நிலத்தின் பரப்பு முப்பத்தைந்து கோடியே பத் தொன்பதிலட்சத்து நாற்பதினாயிரம் யோசனை.

## பிரிய விரதன்

நான்முகனுடைய வலத்தோளில் தோன்றிய சுவாயம் புவின் மகனாகிய பிரிய விரதன் என்பவன் இப்பூவுலகம் முழுவதையும் ஆண்டான். அப்பிரிய விரதனுக்கு, அங்கு தீரன், மேதாதி, வபுட்டு, சோதிட்டு, துதிமான், அவ் வியன், சவநன் என்று பெயருடைய ஏழுமக்கள் இருந் தனர். அவர்கள் எழுவரும் முறையே சம்புத்தீவு முதலிய ஏழு தீவுகளையும் ஆண்டார்கள். சம்புத்தீவுக்கரசனாகிய அங்கிதிரன் தன்னுடைய மக்களாகிய பாரதன், கிம்புரு டன், அரி, கேதுமாலன், பத்திராசுவன், இளாவிருதன், இரமியன், இரணியன், குரு என்னும் ஒன்பது பேர்கட்கும் ஒன்பது கண்டங்களாக்கிக் கொடுத்தான்.

## மேருமலை

மேருமலை சம்புத்தீவின் நடுவில் இருக்கிறது. அது நிலத்திற்குமேலே எண்பத்துநாலாயிரம் யோசனை உயர்ந்

தும், கீழே பதினாறாயிரம் யோசனை ஆழ்ந்தும் உள்ளது. முடி முப்பத்தீராயிரம் யோசனையும் அடி பதினாறாயிரம் யோசனையும் அகன்று தாமரைமொட்டைப்போல விளங்கும். அதில் மூன்று அடுக்குகள் உள்ளன. மேலுள்ள அடுக்கில் பல முடிகளிருக்கின்றன. அம்முடிகளிலும் பல முடிகளிருக்கின்றன. அவற்றுள் நடுமுடியில் நான்முகன் இருப்பிடமாகிய மனோவதி இருக்கின்றது. மேற்றிசை முடியில் திருமாலின் இருப்பிடமாகிய வைகுண்டம் இருக்கின்றது. வடகீழ்த்திசை முடியில் சிவபெருமானுடைய இருப்பிடமாகிய சோதிட்கம் இருக்கின்றது. இவற்றின் மருங்கே எட்டுத் திசைகளினுமுள்ள முடிகளில் இந்திரன் முதலிய திக்குப்பாலகர் எண்மருடைய இடங்களும் இருக்கின்றன. மேருமலையின் கீழ்த்திசையில் வெண்ணிறமுடைய மந்தர மலை இருக்கின்றது. தெற்கில் பொன்னிறமுடைய கந்த மாதனமலை இருக்கிறது. மேற்கில் நீலநிறமுடைய விபுல மலை இருக்கின்றது. வடக்கில் மாதுளம்பூவின் நிறமுடைய சுபார்சுவமலை இருக்கின்றது. இவற்றில் கடம்பும் நாவலும் அரசும் ஆலும் முறையே நிற்கின்றன. நாவன்மரத்தின் உயர்ச்சியும் பரப்பும் தனித்தனி இரண்டாயிரம் யோசனையாகும். மற்றைய மூன்று மலைகளினுயர்ச்சியும் பரப்பும் தனித்தனி ஆயிரம் யோசனையாகும்.

### நாவலந்தீவு

மேருமலையின் தெற்கில் நாவல்மரம் நின்ற காரணத்தால், பாரதவருடம் முற்றும் நாவலந்தீவென்னும் பெயரைப்பெற்றது. இம்மரத்தின் பழச்சாறு ஆறாய்ப்பெருகி அம்மலையைச் சூழ்ந்து வடபாற்சென்று சாம்பூநதம் என்னும் பெயரைப்பெறும். அதனைப் பருகினோர் உடல் பொன்மயமாக மாறும். அவர்கள் பதின்மூவாயிரம் ஆண்டு உயிர்வாழ்வர்.

### வருடங்கள்

வடகடல் முதல் சிருங்கமலைவரை குருவருடம் எனப் பெறும். சிருங்கமலைமுதல் சுவேதமலைவரையில் இரணிய

வருடம் எனப்பெறும். சுவேதமலைக்கும் நீல்மலைக்கும் நடுவில் இரமியவருடம் எனப்பெறும். மேருமலையைச் சூழ்ந்தவருடம் இளாவிருதம் எனப்பெறும். மாலிய வான் மலைமுதல் கீழ்க்கடல் வரையிலும் பத்திராசு வருடம் எனப்பெறும். கந்தமாதனமலைக்கும் மேல்கடலுக்கும் நடுவில் கேதுமாலவருடம் எனப்பெறும். நிடதமலை முதல் ஏமகூட மலைவரையிலும் அரிவருடம் எனப்பெறும். ஏம கூடம் முதல் இமயம் வரையிலும் கிம்புருடவருடம் எனப் பெறும். தென்கடலுக்கும் இமயத்துக்கும் நடுவில் பாரதவருடம் எனப்பெறும்.

கேதுமால வருடமும் பத்திராசுவ வருடமும் தனித் தனி முப்பத்துநாலாயிரம் யோசனை விரிவுள்ளன. மற்றைய ஏழுவருடங்களும் ஒவ்வொன்றும் ஒன்பதி னாயிரம் யோசனை விரிவுள்ளன. பாரதவருடமொழிந்த மற்றைய எட்டு வருடங்களும் தேவருலகத்தைப் போன் றனவாம்.

குருவருடத்தில் இருப்போர், ஒரு தாய் வயிற்றில் ஒரே பொழுதில் ஆணும்பெண்ணுமாய்ப் பிறந்து தம்முட் சேர்வர். தேவமரங்களின் காய்கனிகளையுண்பர். பச்சை நிறமும் பதின்மூவாயிரம் ஆண்டு அகவையுமுடையராய் வாழ்வர்.

அதன் வடபாகத்தில் வெண்ணிறமுடைய முனிவர் களும் சாரணர்களும் சித்தர்களும் வசிப்பர். அவர்கட்கு அகவை பதின்மூவாயிரம் ஆண்டு. மற்றைய வருடங்களில் வாழ்பவர்களும் இத்தன்மையுடையவர்களே.

## திருக்கைலைமலை

ஏமகூடத்திற்குத் தென்பக்கத்திலும், இமயத்திற்கு வடபக்கத்திலும் ஆகிய கிம்புருட வருடத்தில் திருக்கைலை மலைநிற்கும். அதன்மீது சிவபெருமான் உமாதேவியா ரோடு எழுந்தருளியிருப்பர். அம்மலை ஊழிக்காலத்தில் அண்டத்தின் அடிமுடியளவும் ஓங்கும். எட்டுக் கண்டங்

களிலும் இருப்பவர்கள் துன்பம், நோய் நரைதிரை மூப்புக் களை யடையமாட்டார்கள். அங்கு மழை பெய்யாது.

## பாரதவருடம் : சம்புத்தீவு

பாரதவருடத்தில் இருப்பவர்கள் உழுது பயிர் செய்தல் முதலிய பலவகைத் தொழில்களைச் செய்வார்கள். நல்வினை தீவினைகளை யீட்டுவார்கள். சிவபெருமானுடைய திருவருளினாலே வாழ்வார்கள். பெருமை, ஆற்றல், சீர், அறிவு, நிறை, ஆயுள், வடிவம், உணவு, செயல் முதலிய வைகளைக் காலங்களுக்கேற்றபடி பெறுவர். நெல் முதலிய பயிரின் விளைவுகளையுங் காய்கனி கிழங்கு முதலியவைகளை யும் உண்பர். மற்றைய எட்டுக் கண்டத்தில் வாழ்பவர் களும் தேவர்களும் நரகவாசிகளும் பாரத வருடத்தில் வந்திருந்து நல்வினை தீவினைகளைச் செய்து அவற்றின் பயனை நுகர்வர். பாரத வருடமொன்றே நல்வினை தீவினை களுக்கெல்லாம் ஏற்ற இடம். முனிவர்களுந் தேவர்களும் இங்கே வந்துதான் தமக்கேதேனும் குறையேற்பட்டால் தவங்களையும் பூசைகளையுஞ் செய்து அவைகளைப் போக் கிக்கொள்வார்கள். பாரதன் என்பவனுக்கு இந்திரன், கசேருகன், தாமிரபன்னன், கபத்தி, நாகன், சவுமியன், கந்தருவன், வருணன் என்னும் மக்கள் எண்மரும், குமரி என்னும் ஒரு மகளும் பிறந்தனர். பாரதன் இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ஆயிரம் யோசனையாகப் பாரதகண்டத்தை ஒன்பது கண்டங்களாகப் பிரித்துக் கொடுத்தான். குமரிக்கண்டம் தவிர, மற்றைய எட்டு இடங்களும் மிலேச்சர் இடங்கள். கங்கை, கவுதமி, யமுனை, குமரி, வாணி, காவிரி, நருமதை, பாலி, கம்பை, பம்பை, துங்கபத்திரை, குசை, கோமதி, பாஞ்சாலி, சூரி, சிகி, பாபகரை, தூதபாவை, சங்கவாகினி, சிகை, பாரத்துவாசி, சார்வரி, சந்திரப்பாகை, சரயு, வேணி, பிங்கலை, குண்டலை, பொன்முகரி, பொருநை, வெஃகா, பெண்ணை முதலிய பல ஆறுகளையும், மகேந்திரம், மலையம், சையம், சத்திமான், விருட்சம், பாரியாத்திரம், விந்தம் என்னும் ஏழு மலைகளை யும், காஞ்சி முதலிய முத்தி நகரங்கள் ஏழையும், சிவப்பதி

கள் ஆயிரத்தெட்டையும், பார்ப்பனர் வாழும் நாடுகள் பலவற்றையும் தன்னுட்கொண்டிருப்பது இக்குமரிக் கண்டம் ஒன்றுமேயாகும்.

## சாகத்தீவு

சம்புத்தீவுக்கப்பால் சாகத்தீவு இருக்கின்றது. இது பாற்கடலாற் சூழப்பட்டது. இத்தீவுக்கரசன் பிரியவிர தன் மகனாகிய மேதாதி. இவன் தன் மக்கள் எழுவருக்கும் தீவை ஏழு கண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான். இதில் ஏழு மலைகளும் ஏழு யாறுகளும் உள்ளன.

## குசைத்தீவு

சாகத்தீவுக்கப்பால் குசைத்தீவு இருக்கின்றது. இது தயிர்க்கடலாற் சூழப்பெற்றது. இத்தீவுக்கரசன் பிரிய விரதன் மகனாகிய வபுட்டு. இவன் தன் மக்கள் எழுவருக் குந் தீவை ஏழு பிரிவுகளாக்கிக்கொடுத்தான். இதிலும் ஏழு மலைகளும் ஏழு யாறுகளும் உள்ளன.

## கிரவுஞ்சத்தீவு

குசைத்தீவுக்கப்பால் கிரவுஞ்சத்தீவு இருக்கிறது. இது நெய்க்கடலாற் சூழப்பட்டது. இத்தீவுக்கரசன் பிரியவிரதன் மகனாகிய சோதிட்டு. இவன் தன் மக்கள் எழுவருக்குந் தீவை ஏழு பிரிவுகளாகப் பிரித்துக்கொடுத் தான். இதிலும் ஏழு மலைகளும் ஏழு யாறுகளும் உள்ளன.

## சான்மலித் தீவும் கோமேதகத் தீவும்

கிரவுஞ்சத் தீவைச் சுற்றிக் கருப்பஞ்சாற்றுக் கடலாற் சூழப்பெற்ற சான்மலித்தீவும், சான்மலித்தீவைச் சுற்றித் தேன்கடலாற் சூழப்பெற்ற கோமேதகத்தீவும் இருக்கின் றன. இத்தீவுகளுக்கரசர்கள் பிரியவிரதன் மக்களாகிய துதிமான் அவ்வியன் என்பவர்கள். இவர்களுந் தங்கள் தீவுகளை ஏழு ஏழு கூறுகளாக்கித் தம் மக்கள் எழுவருக் குங் கொடுத்தார்கள். இத்தீவுகளினும் ஏழு ஏழு மலை களும் யாறுகளும் உள்ளன.

## புட்கரத்தீவு

இவைகளுக் கப்பால் நன்னீர்க் கடலாற் சூழப்பெற்ற புட்கரத்தீவு இருக்கிறது. அதற்கரசன் சவனன் என்பவன். அவன் அத்தீவை இருகூறுக்கித் தன் மக்கள் இருவருக்குங் கொடுத்தான். அத்தீவிலும் ஏழு மலைகளும் யாறுகளும் இருக்கின்றன.

## மானசோத்தரம்

புட்கரத்தீவின் முடிவில் மானசோத்தரம் என்னும் மலை இருக்கிறது. அஃது ஐம்பதினுயிரம் யோசனை உயர்ச்சியுடையதாய் வண்டியுருளையைப்போல வளைந்து நிற்கும். அதன் எட்டுத் திக்குகளினும் இந்திரன் முதலிய திக்குப்பாலகர் எண்மருக்கும் நகரங்கள் உள்ளன. ஒவ்வொரு கடல்களின் முடிவிலும் ஒவ்வொருமலை அவற்றைச் சூழ்ந்து நிற்பனவாம். சாகத்தீவு முதலிய ஆறு தீவுகளினுமிருப்பார்க்கு நரை திரை மூப்புத் துன்பங்களில்லை.

## சக்கரவாளகிரி

மானசோத்தரம் என்னும் மலையைச் சூழ்ந்து பொன்னிலமும், அதனைச்சூழ்ந்து மாணிக்க ரத்தின நிறமுடைய சக்கரவாளகிரியுமுள்ளன. அம்மலையின் உட்பக்கம் ஒளியுடையதாக விருக்கும். வெளிப்பக்கம் இருளுடையதாக இருக்கும். அதில் இயக்கரும் இராக்கதர் முதலியோரும் இருப்பர்.

## மகாகைலாச பர்வதம்

சக்கரவாளகிரிக்கப்பால் பெரும்புறக்கடல் இருக்கிறது. அதற்கப்பால் இருள்நிலம் இருக்கிறது. அதற்கப்பால் அண்டச்சுவர் இருக்கின்றது. தற்கொலை செய்து கொண்டவர்களும் அறிவு இல்லாதவர்களும் அவ்விருள் நிலத்திற் கிடந்து வருந்துவார்கள். அண்டச்சுவருக்கப்பால் முழுமுதற்கடவுளாகிய இறைவன் எழுந்தருளியிருக்கின்ற மகாகைலாசமலை இருக்கின்றது. அங்கே சிவ

கணங்கள் வசிப்பார்கள். சம்புத்தீவு முதல் அண்டச்சுவர் வரையிலும் பூவுலகம் என்று சொல்லப்பெறும்.

## கதிரவன் மண்டலம்

நிலவுலகிற்குமேலே ஓரிலக்கம் யோசனையில் கதிரவன் உலகம் இருக்கின்றது. கதிரவனுடன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் சுற்றுவார்கள்.

## திங்கள் உலகம்

கதிரவன் உலகிற்குமேலே ஓரிலக்கம் யோசனையில் திங்கள் உலகம் இருக்கின்றது.

## நட்சத்திர உலகம்

திங்கள் உலகிற்குமேல் ஓர் இலக்கம் யோசனையில், விண்மீன் உலகம் விளங்குகின்றது.

## புதன் முதலியவர்கள் உலகம்

விண்மீன் உலகிற்குமேலே தனித்தனி இரண்டாயிரம் யோசனையில், புதன் சுக்கிரன் செவ்வாய் வியாழன் சனி என்னும் இவர்களுடைய உலகங்கள் இருக்கின்றன.

## துருவன் உலகம்

அதன்மேல் ஏழு முனிவர்களுடைய உலகமும், துருவனுடைய உலகமும் ஒவ்வோரிலக்கம் யோசனை தொலைவில் உள்ளன. இதுவரை புவர் உலகம் என்று புகலப்பெறும். இங்கே எழுவகை மருத்துக்களும் வசிப்பார்கள். புவர் உலகத்தின் உயரம் பதினைந்திலக்கம் யோசனை.

## சுவர் உலகம்

புவர் உலகத்தின் மேலே சுவர் உலகம் எண்பத்தைந்திலக்கம் யோசனையில் உள்ளது. அதில் தேவர்களும் பிறரும் போற்ற இந்திரன் அரசு வீற்றிருப்பான்.

## மக லோகம்

சுவர் உலகத்திற்கப்பால் இரண்டுகோடி யோசனை தொலைவில் மகலோகம் இருக்கின்றது. அங்கு மார்க்கண்டர் முதலிய முனிவர்கள் இருப்பார்கள்.

## சன லோகம்

மகலோகத்திற்கப்பால் எட்டுக்கோடி யோசனையில் சனலோகம் இருக்கிறது. அதில் பிதிர்க்கள் வசிப்பார்கள்.

## தவ லோகம்

சனலோகத்திற்குமேல் பன்னிரண்டுகோடி யோசனையில் தவலோகம் இருக்கின்றது. அதில் சனகர் முதலிய சிறந்த முனிவர்கள் வசிப்பார்கள்.

## சத்திய லோகம்

தவலோகத்திற்குமேல் பன்னிரண்டுகோடி யோசனையில் சத்தியலோகம் இருக்கின்றது. அது நான்முகனிருந்து படைப்புத்தொழில் செய்யும் இடமாகும்.

## சிவ லோகம்

சத்திய லோகத்திற்குமேல் மூன்றுகோடி யோசனை தொலைவில் பிரமலோகம் இருக்கின்றது. அதன்மேல் மூன்றுகோடியோசனை தொலைவில் திருமால்உலகம் இருக்கின்றது. அதன்மேல் நான்குகோடியோசனை தொலைவில் சிவலோகம் இருக்கின்றது.

## முடிவுரை

உனக்குச் சிவபெருமான் கொடுத்தருளிய ஆயிரத்தெட்டு அண்டங்களும், இந்த அண்டத்தைப் போன்றன. மைந்தனே! அவைகளை நீ சென்று பார்ப்பாயாக!' என்று சுக்கிராச்சாரியார் சொன்னார்.

## கஉ. சூரபன்மன் திக்கெங்கும் செல்லுதல்

சுக்கிராச்சாரியாருடைய அடிகளைச் சூரபன்மன் சிங்கமுகனோடு வணங்கினான். அவருடைய உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டான். படைக்கடலுள் நுழைந்தான். படைகளைக் காத்திருந்த தாரகன்வந்து சூரபன்மனையும் சிங்கமுகனையும் வணங்கினான். சுக்கிராச சாரியார் கூறியவைகளை இருவருந் தாரகனுக்குக் கூறினார்கள்.

### மாயை வருதல்

அப்பொழுது மாயையானவள் அங்குவந்து சேர்ந்தாள். சூரபன்மன் அவளைத் தன்னுடன்பிறந்தார்களோடு வணங்கினான். அவள் மிகவும் மகிழ்ந்து வாழ்த்துரை கூறினாள். "வேள்வியில் நிகழ்ந்தவைகளையும் சிவபெருமான் கொடுத்தருளிய மேன்மைகளையும் கேள்விப்பட்டேன். நீங்கள் இந்திரன் முதலியவர்களை வென்று எவ்வுலகங்களையும் ஆண்டு நிலத்தில் வாழ்ந்திருங்கள். மாயைகள் வேண்டினால் என்னை நினையுங்கள். அப்பொழுது நான்வந்து வேண்டியவைகளை உதவுகிறேன். நீங்கள் ஒற்றுமையாக இருங்சள்," என்று கூறிவிட்டு மறைந்தாள்.

### அவுணப்படை அளகாபுரிக்குப் புறப்படுதல்

சூரபன்மன் தன் படைகளை, அளகாபுரிக்குப் பயணப்படுத்துமாறு, படைத்தலைவர்களுக்குக் கட்டளையிட்டான். அளவற்ற அவுணப்படை அளகாபுரியை நோக்கிப் புறப்பட்டது. சூரபன்மன் ஆற்றல் மிக அமைந்ததும், கதிரவன் தேரினுஞ் சிறந்ததும், மிகுந்த ஒளியுடையதும், அகலமானதும், இமைப்பொழுதில் எங்குஞ்சென்று திரும்பக் கூடிய இயல்புடையதும், மிகுந்த அறிவுடையதும், குறிப்பின்படி செல்வதும், ஒரு கோடி குதிரைகள் பூட்டப்பெற்றதும், அழியாத பல தேரோட்டிகளை யுடையதும், ஒப்புயர்வற்ற படைக்கலன்களை மிகுதியாகக் கொண்டதும், முகில்களும் அஞ்சுமாறு பல மணிகள் ஒலிக்கப்பெறுவதும்,

சிவபெருமானால் கொடுத்தருளப்பெற்றதுமான இந்திர ஞாலம் என்னுந் தேரின்மீது ஏறினன்.

ஆயிரக்கணக்கான யாளிகளும், ஆயிரக்கணக்கான குதிரைகளும், ஆயிரக்கணக்கான பூதங்களும் பூட்டப் பெற்ற ஒரு தேரின்மீது சிங்கமுகன் ஏறினன். பதினாயிரங் குதிரைகள் பூட்டப்பெற்ற ஒரு தேரின்மீது தாரகன் ஏறினன். இவர்களும் மற்றைப் படைத்தலைவர்களும் சூரபன்மனைச் சூழ்ந்து சென்றார்கள். நால்வகைப் படைகளின் ஒலியும் ஒலிக்கருவிகளின் ஒலியும் எங்கும் மிகுந்தன. சூரபன்மன் படைகளுடன் சென்று குபேரனுடைய நகரமாகிய அளகாபுரியை வளைந்துகொண்டான்.

## குபேரன் சூரபன்மனுக்கு அடியனாதல்

தூதுவர்கள் விரைந்துசென்று குபேரனுக்குச் செய்தி கூறினார்கள். குபேரன் நடுக்கமடைந்தான். சிவபெருமானிடம் மேன்மையைப் பெற்றுள்ள அவுணர்களை நம்மால் வெல்லுதல் முடியாது. ஆகையால், அவர்களைப் புகழ்ந்து தாழ்ந்துபோதலே உயர்ந்தது என்று முடிவுசெய்தான். விரைந்து எழுந்தான். இயக்கர்களுடன் புட்பக விமானத்தில் ஏறிச் சென்றான். சூரபன்மனை வணங்கி வாழ்த்துரைகளைக் கூறினான். "நான் உமக்கு அடியவன்" என்றான். சூரபன்மன், "நீ இந்நெறி தவறாதிருப்பாயாக!" என்று கூறி அவனை விடுத்தான். அவுணப்படைகள் மகிழ்ந்து ஆரவாரித்தன. அளகாபுரிக்குட் சென்று செல்வங்களைக் கொள்ளையடித்தன. குபேரன் நாணத்தையடைந்து பேசாதிருந்தான்.

## தீக்கடவுளுடன் போர்

சூரபன்மன் அளகையைநீங்கி இந்திரனிருக்குங் கீழ்த் திசையை அடைந்தான். இந்திரன் சூரபன்மன் வருகையையறிந்து துன்பமடைந்தான். மறைந்து சுவர்க்கத்திற்குச் சென்றான். சூரபன்மன் ஊரைக் கொளுத்திவிட்டுப் படைகளோடு தீக்கடவுளுடைய நகரத்தை யடைந்தான்.

தீக்கடவுள் மிகுந்த சினமுடையவனாய்ப் போர் புரிதற்கு வந்து எதிர்த்தான். தீக்கடவுளின் படைக்குஞ் சூரபன்மன் படைக்கும் போர் மூண்டது. தீக்கடவுளுடைய படைகள் தோற்றன. தீக்கடவுள் ஊழித்தீயாய்ப் பேருருவத்தைத் தாங்கினான். அவுணக்கடலை இன்றே வற்றச்செய்கிறேன் என்று நெருங்கி வளைந்து அழிப்பானாயினான். அவுணப்படைகளைச் 'சடசட' என்னும் ஒலியுடன் தீக்கடவுள் அழித்தான். அதனைத் தாரகன் அறிந்து வந்து எதிர்த்தான். "தீக்கடவுளையும் பிற தேவர்களையும் இன்றே ஒழிக்கிறேன்" என்று கூறிச் சிவப்படைக்கலத்தை வழிபாடு செய்து எடுத்தான். தீக்கடவுள் அதனைக் கண்டான். "இதனை விடுவானாயின் உலகங்களையெல்லாம் அழிக்கும். நான்முகன் முதலிய தேவர்களையும் இன்றே கொல்லும். என்னையுந் தொலைக்கும்," என்று எண்ணினான். கவலை கொண்டு தன் வடிவத்தைக் குறுக்கிக்கொண்டான். தாரகனுக்கு முன்வந்து கைகளைக்கூப்பி வணங்கினான். "எல்லாப் படைக்கலங்களுக்கும் உயர்ந்தது சிவப்படைக்கலம். அதனைவிட்டால் உலகமே அழிந்துபோகும். அப்படைக்கலத்திற்குத் தலைவராகிய கடவுளும் பழிக்கப்படுவார். ஆகையால், அதனை விடாதே. என் பிழையைப் பொறுப்பாயாக!" என்றான்.

தாரகன் மனமகிழ்ந்தான். அவுணப்படைஞர்கள், "இவனை அடியுங்கள்; உதையுங்கள்; குத்துங்கள்" என்று கூறிக்கொண்டு தீக்கடவுளைச் சூழ்ந்தார்கள். தாரகன் அவர்களை விலக்கினான். "நீ உன்னுடைய நகரத்துக்குப் போவாயாக" என்று கூறி அவனை அனுப்பினான். அவுணர்கள் தீக்கடவுளுடைய நகரத்துட்புகுந்து கொள்ளையடித்தார்கள்.

## சூரபன்மன் எமபுரஞ் செல்லுதல்

சூரபன்மன் படைகளை எமபுரஞ்செல்லக் கட்டளையிட்டான். அவுணப்படைகள் எமபுரத்தைச் சூழ்ந்து வளைந்தன. தூதுவர்கள் எமனுக்குச் செய்தி கூறினார்கள். எமன் இரங்கி ஏங்கினான். குபேரனையுந் தீக்கடவுளையும்

போலப் பணிந்துபோதலே நன்று என்று முடிவு செய்தான். படைஞர்கள் சூழச் சூரபன்மனிடத்திற்குச் சென்றான். தொழுது வாழ்த்துரைகள் கூறினான். சூரபன்மன் மகிழ்ந்தான். அவுணப்படைகள் எமபுரத்தைக் கொள்ளையடித்தன.

## நிருதி முதலியோர்

சூரபன்மன் தன் படைகளோடு தென்மேற்றிசையிலிருக்கும் நிருதியின்மேல் விரைந்து சென்றான். நிருதி சூரபன்மனைப் பணிந்து உடன் சென்றான். சூரபன்மன், வருணன் வாயு ஆகியவர்களுடைய இருப்பிடத்திற்குச் சென்றான். அவர்கள் மறைந்து ஒளிந்து போனார்கள். சூரபன்மன் அவர்களுடைய நகரங்களைச் சூறையாடிப் பலவிடங்கட்குச் சென்றான். இறுதியில் நாகர் உலகத்தை அடைந்தான்.

## ஆதிசேடன் தோல்வி

ஆதிசேடன் சினத்தோடு எதிர்த்துப் போர் செய்தான். அவனைச் சூரபன்மன் தன் படைகளால் வெற்றி கொண்டான். அவனிருப்பிடத்தில் ஒருநாள் இருந்தான். ஆதிசேடன் வைத்திருந்த அமுதத்தைப் பறித்துத் தின்றான். பிறகு பல திக்குகட்குஞ் சென்று புகழை நாட்டினான். பிறகு பாற்கடலுக்குச் சென்றான்.

## அவுணர்கட்குந் திருமாலுக்கும் போர்

சூரபன்மனுடைய படைகள் பாற்கடலைக் கலக்கின. நிலமகளும் திருமகளும் அஞ்சித் திருமாலைத் தழுவிக் கொண்டார்கள். திருமால் உறக்கம் நீங்கினார். சினந்து சீறினார். கருடன்மீது ஏறிக்கொண்டு போருக்குப் புறப்பட்டார். அவுணப்படைகள்மீது கணைகளைப் பொழிந்தார். அவுணப்படைகள் அடியுண்டு கலங்கிச் சிதறின. மேலுந் திருமால் கடுமையான போர் செய்தார். எங்குங் குருதி வெள்ளம் ஓடியது. தாரகன் திருமாலை வந்து எதிர்த்துப் போர் செய்தான். திருமால் எண்ணற்ற கணைகளை அவன்

மீது சொரிந்தார். இருவரும் மாயப்போர் செய்தனர். மிகக் கடுமையாகப் போர்செய்தும் தாரகனை வெல்ல முடியவில்லை.

## திருமாலின் ஆழிப்படை தாரகன் கழுத்திற் பதக்கமாதல்

இறுதியில் திருமால் தம்முடைய ஆழிப்படையைத் தாரகன்மீது செலுத்தினார். உலகங்களையெல்லாம் ஒரிமைப் பொழுதில் அழிக்கத்தக்க ஆற்றல் அமைந்த அந்த ஆழிப்படை, தாரகனுடைய கழுத்தையடைந்ததும் செம்பொற் பதக்கமாக மாறிவிட்டது. திருமால் அதனைக்கண்டு வியப்படைந்தார். தாரகன் ஆற்றல் மிக்கவன் என்று தேற்றமாக வுணர்ந்தார். அவனைப் புகழ்ந்தார். அவனுக்கு வாழ்த்துரைகள் கூறிச்சென்றார். அவுணர்கள் அதனைக்கண்டு ஆரவாரித்தார்கள். தேவர்கள் அச்சமடைந்து ஓடிப் போனார்கள்.

## சூரபன்மன் சுவர்க்கத்திற்குச் செல்லுதல்

சூரபன்மன் பிறகு தன்னுடைய படைகளோடு சுவர்க்கத்திற்குச் சென்றான். சூரபன்மன் வந்தான் என்னுஞ் செய்தியைக் கேட்டு இந்திரன் நொந்தான். சூரபன்மனோடு போர்செய்வது வீண் என்றுணர்ந்தான். இந்திராணியுடன் குயிலுருக்கொண்டு பறந்து விண்ணிற் சென்றான். அவுணர்கள் இந்திரனைத் தேடிப்பார்த்தார்கள். இந்திரன் அகப்படவில்லை. தேவர்களைப் பிடித்துக் கட்டி அடித்து வருத்தினார்கள். தேவர்கள் தங்களை வருத்தப்படுத்துதல் வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள். எல்லோரும் சூரபன்மனுக்குத் தொண்டுபுரிவதாகக் கூறினார்கள். சூரபன்மன் அத்தேவர்களை விட்டுவிட்டு இந்திரனுடைய செல்வங்களைக் கவருமாறு கூறினான். மகலோகம் சனலோகம் தவலோகம் முதலியவைகளைத் தாண்டிச் சத்தியவுலகத்தை யடைந்தான்.

## சத்தியலோகத்தில் சூரபன்மன்

நான்முகன் சூரபன்மனுடைய வரவையறிந்து நடுக்கமுற்றான். முனிவர்கள் தன்னைச் சூழச் சூரபன்மனை யடைந்

தான். "நீடூழி காலம் வாழ்க!" என்று வாழ்த்துரை கூறினான். "மகாராசனே! நீ இவ்விடம் வருவதற்கு யான் முன்னாளில் என்ன தவத்தைச் செய்தேனோ? நீ சிவ பெருமானுடைய அருளைப் பெற்றிருக்கின்றாய்! தேவர்கள் பலரையும் வென்றிருக்கின்றாய்! உன்னைப்போன்றவர்கள் உலகத்தில் ஒருவரும் இலர். நீ என் மகனாகிய காசிபமுனிவருடைய மகனாதலால் நான் உனக்குப் பாட்டன் ஆகிறேன். உன்னுடைய புகழ் எல்லாம் என்னுடைய புகழ்கள். யான் பிறனல்லன்" என்று கூறிப் பலவாறு போற்றினான்.

### சிவலோகத்தை யடைதல்

பிறகு வைகுண்டஞ் சென்றான். திருமால் தோன்றி வாழ்த்துரைகள் கூறினார். சூரபன்மன் மகிழ்ச்சியடைந்தான். இறுதியிற் சிவலோகத்தை யடைந்தான். படைகளை வெளியே நிறுத்தினான். நந்திதேவருடைய கட்டளையைப் பெற்று உள்ளே சென்றான். சிவபெருமானை அன்போடு வணங்கிப் போற்றி நின்றான். சிவபெருமான் திருவருள் செய்தார். "இனிப் பிற அண்டங்களையுஞ் சென்று பார்த்து விட்டு அரசுசெய்திருப்பாயாக!" என்று கூறியருளினார். சூரபன்மன் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி விடைபெற்றுக்கொண்டு வெளியேவந்தான்.

### பிற அண்டங்கட்குச் செல்லுதல்

வெளியே வந்த சூரபன்மன் அண்ட கோளகையை அடைந்தான். அங்குள்ள உருத்திரர்கள் மறு அண்டத்திற்குச் செல்லும் வழியைக் காட்டினார்கள். அவ்வண்டத்திற்குச் சென்று அங்கும் இவ்வாறே சுற்றி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் பார்த்தான். மீண்டும் இந்த அண்டத்திற்கு வந்துசேர்ந்தான்.

## கந. எதிர்கொள்ளுதல்

முன்பு தேவர்களால் தொல்லைப்பட்ட அவுணர்கள், சூரபன்மன் வெற்றியுடன் திரும்பியதைக் கண்டு மகிழ்ந்தார்கள். மாயையின் தந்தையாகிய அசுரேந்திரன் மிகுந்த களிப்பை யடைந்தான். படைகளுடன் சுக்கிராச்

சாரியாரிடம் சென்றான். "நான் சூரபன்மனை யெதிர் கொள்ளுதல்வேண்டும். நீர் முன்னே போய் என் வருகையையும் உறவு முறையையும் அவனுக்குச் சொல் லும்" என்று கூறினான்.

## சுக்கிராச்சாரியார் சூரபன்மனைக்கண்டு சொல்லுதல்

சுக்கிராச்சாரியார் விமானத்தி லேறிக்கொண்டு சூர பன்மனுக்கு முன்னே சென்றார். அசுரேந்திரன் பின்னே சென்றான். சுக்கிராச்சாரியார் விமானத்தில் வருதலைச் சூரபன்மன் தொலைவிலேயே கண்டான். எதிர்சென்று வணங்கினான். சுக்கிராச்சாரியார் மகிழ்ச்சியோடு வாழ்த் துரை கூறினார். சிங்கமுகன் தாரகன் முதலியோர் வணங்க அவர்கட்கும் வாழ்த்துரை வழங்கினார். அசுரேந் திரன் வரவைச் சூரபன்மனுக்குக் காட்டினார். "அவன் உன்னுடைய பாட்டன்" என்று கூறினார். மற்றும் அசுரேந்திரனைப் பற்றிய செய்திகள் எல்லாவற்றையுங் கூறினார். அசுரேந்திரன் தன் சுற்றத்தார்களோடு, சூர பன்மனுக்கு அண்மையில் வந்து மகிழ்ந்து தொழுது நின்றான். சூரபன்மன் தன் தாய்வழிப் பாட்டனாகிய அசுரேந்திரனைப் பார்த்து, "நீ நலமுடன் இருக்கின்றாயா?" என்று உசாவினான். விரைந்து நிலவுலகத்தையடைந்தான்.

## தேவர்கள் எதிர்கொள்ளுதல்

சூரபன்மன் இவ்வுலகிற்கு வந்து சேர்ந்த செய்தியை நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள் உணர்ந்து துன்ப மடைந்தார்கள். திருமால் துயில்கொண்டுள்ள திருப்பாற் கடலுக்கு விரைந்து சென்றார்கள். அவரைக் கண்டு வணங்கினார்கள். சூரபன்மனால் தாங்கள் அடைந்த சிறு மைகள் எல்லாவற்றையுங் கூறினார்கள். "இனிமேல் என்ன செய்கிறது சொல்லும்?" என்று கேட்டார்கள். "அற்பனாகிய தக்கன் சிவபெருமானை இகழ்ந்து செய்த வேள்விக்குச் சென்றிருந்த தீமையினால், நமக்கு இத் துன்பம் வந்தது. அவனை வெல்லுதல் நம்மால் முடியாத காரியம். சூரபன்மன் சிவபெருமானிடத்திலே மேன்மை

களைப் பெற்றிருக்கிறான். அண்டங்கள் எல்லாவற்றையும் வென்றுவிட்டான். அவனைப் போய்ப் பார்த்துவருவதே நாம் செய்யத்தக்கது; புறப்படுங்கள்" என்றார் திருமால். அனைவரும் புறப்பட்டுச் சூரபன்மனுக்கு எதிரே வந்து அவனுக்கு வாழ்த்துக் கூறினார்கள். அத்தேவர்களுள் பதினொரு கோடி உருத்திரர்கள் ஒன்றாக நின்றார்கள். "சிவபெருமானுடைய வடிவத்தைப்போன்ற வடிவம் அமைந்த அவர்கள் யாவர்?" என்று சூரபன்மன் கேட்டான். அதற்குத் திருமால் பதிலுரை கூறலானார்.

## கச. உருத்திரர்களை உசாவல்

### நான்முகன் ஆணவம்

"ஓ சூரபன்ம அரசனே! முன்னொரு கற்பகாலத்தில் நான்முகன் மூவுலகங்களையும் உயிர்களையும் படைத்தான். தன்னையே முழுமுதல் என்று எண்ணினான். சிவபெருமானை மறந்த பிறகும் படைத்தான். உயிர்த்தொகைகள் சிறிதும் பெருகவில்லை. அதனால் நான்முகன் செருக்கு அடங்கியது. சிவபெருமானை யெண்ணி நெடுங்காலந் தவஞ்செய்தான். சிவபெருமான் எழுந்தருளவில்லை. அதனால் துன்பமுற்று வருந்தியழுதான் கண்களில் நின்றும் நீர்த்துளிகள் சிந்தின. அத்துளிகள் பேய்களாகப் பெருகி நெருங்கின. அப்பேய்களைக் கண்டு நான்முகன் தளர்ந்து சோர்ந்தான். சிவபெருமான் நான்முகனுக்கு அறிவைக்கொடுத்தார். அவன் கனவிலே தோன்றினார். 'மகனே! இனித் துன்ப முறாதே. உன்னைப் பரம்பொருள் என்று எண்ணி எம்மை மறந்தாய். அதனால் உனக்குப் படைப்புத்தொழில் பொருந்தவில்லை. படைப்புத்தொழில் முடிவதற்கு உருத்திரர்களை அனுப்புகிறோம்'' என்று கூறி மறைந்தார்.

நான்முகன் அக்கனவை நினைத்தான். தெளிவடைந்தான். நான்முகனுடைய நெற்றியினின்றும் பதினொரு உருத்திரர்கள் சிவபெருமானுடைய திருவருளினால் தோன்றினார்கள். நான்முகன் அவ்வுருத்திரர்களை பார்த்து 'நீங்கள் விரைவில் உயிர்களைப் படையுங்கள்' என்று

கூறினான். அவர்கள் தம்மைப்போலப் பதினொரு கோடி உருத்திரர்களைப் படைத்தார்கள். நான்முகன் அந்த உருத்திரக் கூட்டத்தைப் பார்த்தான். 'இவ்வாறு நீங்கள் படைத்தல் கூடாது. உயிர்களை இருவினைகட்கு ஈடாகப் படையுங்கள்' என்றான். உருத்திரர்கள் நான்முகனைப் பார்த்து, 'நீ படைப்புத்தொழிலை முன்போல் செய்து கொண்டிருப்பாயாக! எங்கள் உலகத்திற்கு நாங்கள் செல்லுகிறோம்' என்று கூறினார்கள். தாம் படைத்த பதினொரு கோடி உருத்திரர்களையும் தேவர்கள் கூட்டத்தில் இருக்குமாறு சொல்லிவிட்டுச் சென்றார்கள். அவர்களே இந்த உருத்திரர்கள்" திருமாலின் பதிலைக்கேட்ட சூரபன்மன் வியப்படைந்தான்.

## கரு. நகர் செய்தல்

### தெய்வத்தச்சன் சூரபன்மனுக்கு நகர் அமைத்தல்

சூரபன்மன் தெய்வத்தச்சனைப் பார்த்தான். "நாம் தங்கியிருத்தற்காக ஓர் அழகிய நகரத்தை விரைவிற் செய்வாயாக" என்று கட்டளையிட்டான். தெய்வத்தச்சன் சுக்கிராச்சாரியார் மூலமாக நகர் அமைக்கவேண்டிய இடத்தை அறிந்துகொண்டு அமைக்கலானான்.

தென் கடலையடைந்தான். நகரம் எண்பதினாயிரம் யோசனை விரிவுடையதாக அடிப் போட்டான். மலைகளினால் கடலைத் தூர்த்தான். செம்பொன்னால் மதிலையும் மதிலுறுப்புக்களையும் அமைத்தான். நான்கு வாயில்களை ஏற்படுத்தினான். நான்கு கோபுரங்களைச் செய்தான். பல தெருக்களையும் பொன் மாடங்களையும் அமைத்தான். கூத்தாடுமிடங்கள், மாளிகைகள், மண்டபங்கள், செய்குன்றங்கள், சூளிகைகள், அரங்குகள், மன்றங்கள், சோலைகள் குளங்கள் முதலியவைகளை உண்டாக்கினான். நகரின் நடுவே சூரபன்மனுக்கு அரண்மனையை அமைத்தான். அந்தப்புரம் முதலியவைகளையும் அழகாக ஏற்படுத்தினான். அமைச்சர்கள் முதலிய அனைவோருக்குந்

தக்க இடங்களை அமைத்தான். படைக்கலச் சாலைகளும் முறைப்படி அமைக்கப்பட்டன.

### வீரமகேந்திரபுரம்

கடலை அகழியாகக்கொண்டு அதன் நடுவில் அமைக்கப்பட்ட அந்நகரத்திற்கு, வீரமகேந்திரபுரம் என்று தெய்வத்தச்சன் பெயர் சூட்டினான். அதன் எட்டுப் பக்கங்களினும் ஏமபுரம், இமையபுரம், இலங்கைபுரம், நீலபுரம், சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம, பதும புரம் என்னும் எட்டு நகரங்களையுஞ் சீர்பெற அமைத்தான்.

### ஆசுரம்

வட கடலின் நடுவில் எண்பதினாயிரம் யோசனை அகலமுடையதாக ஆசுரம் என்னும் நகரத்தைச் சிங்கமுகாசுரனுக்காக அமைத்தான்.

### மாயாபுரம்

மற்றைக் கடல்கடோறும் தீவுகடோறும், சூரபன்மனுடைய சுற்றங்கள் ஆகிய படைகள் இருத்தற்குப் பல நகரங்களை அமைத்தான். பிறகு மேருமலையின் தென் பக்கத்திலுள்ள நாவலந்தீவில் ஏமகூட மலையின் ஒரு பக்கத்தில் தாரகாசுரனுக்கு மாயாபுரம் என்னும் நகரத்தையமைத்தான். நகரங்கள் அமைக்கப்பெற்ற செய்தியைச் சூரபன்மனுக்குச் சொன்னான். அவன் படைகளுடன் குடி புகுந்தான்.

## கசு. முடி சூடுதல்

தனக்கு அமைக்கப்பெற்ற நகரத்திற்குள் குடிபுகுந்த சூரபன்மன், விச்சுவகன்மனுடைய ஆற்றலை வியந்து புகழ்ந்தான். நான்முகன் முதலிய தேவர்கள் சூரபன்மனுக்கு முடிசூட்டுதற்கு எண்ணினார்கள். அதற்கு வேண்டிய பொருள்களையெல்லாந் தோது செய்தார்கள்.

### நான்முகன் சூரபன்மனுக்கு முடியணிதல்

தேவர்கள் சூரபன்மனை ஓர் இருக்கையில் இருக்க வைத்தார்கள். கடல்நீரைக்கொண்டு முழுக்காட்டினார்கள். பொன்னுடை யணிந்தார்கள். மலர்மாலைகளைப் புனைந்தார்கள். பலவகை அணிகலன்களைப் பூட்டினார்கள். பிறகு சூரபன்மன் அரியணையில்வந்து அமர்ந்தான். நான்முகன் முடியை எடுத்துச் சூரபன்மனுக்கு அணிந்தான். தேவர்களும அவுணர்களும் பலவாறு வாழ்த்துக் கூறினார்கள். திருமால் நான்முகன் ஆகியவர்களை, அமருமாறு சூரபன்மனுடைய இளவல்கள் பணித்த பிறகு அவர்கள் இருவரும் அமர்ந்தார்கள்.

### விண்ணவர்கள் பணிவிடைபுரிதல்

சூரபன்மன் தம்பியர்கள் கட்டளைப்படி இந்திரன் காளாஞ்சியை ஏந்தினான். அடைப்பையைக் குபேரன் தாங்கி நின்றான். காற்றுக்கடவுள் சாமரையை வீசினான். கதிரவனுந் திங்களும் குடைபிடித்தார்கள். வருணனும் அவன் மகனும் ஆலவட்டம் வீசினார்கள். கருடர் கந்தருவர் சித்தர் ஆகியோர் இசைபாடினர். எமனுந் தீக்கடவுளும் பிரம்பையேந்திக் கூட்டத்தை ஒழுங்கு செய்தார்கள். தேவகுருவும் அவுணகுருவும் பல முனிவர்களும் வாழ்த்துரை கூறினார்கள். அரமபை மேனகை முதலிய தேவமாதர்கள் ஆடல்பாடல் நிகழ்த்தினார்கள்.

## கஎ. அரசுபுரிதல்

### திருமால் முதலியோர்கட்குச் சூரபன்மனின் கட்டளைகள்

திருமாலைச் சூரபன்மன் பார்த்தான். "நீ என் தந்தையாகிய காசிப முனிவருக்குப் பாட்டனாகையால் நாம் அழைக்குந்தோறும் விரைந்து வருதல்வேண்டும்" என்றான். நான்முகனைப் பார்த்து, "நீ தினந்தோறும் இங்குவந்து பஞ்சாங்கம் சொல்லிப் போகவேண்டும்" என்றான். கதிரவனைப் பார்த்து, "நம்முடைய நகரத்து மதில்மேலே

உன்னுற் போகமுடியாது. கோபுரவாயில்களில் நுழைந்து போ; என்றைக்கும் இளங்கதிராகவே வீசு'' என்றுன். திங்களைப் பார்த்து, "நீ தேய்தல் வளர்தல் இன்றி என்றும் முழுக்கலையோடு திரிகுவாயாக!" என்றுன். தீக்கடவுளைப் பார்த்து, "நம்மூரில் யார் நினைத்தாலும் அவர்களிடம் வந்து பணிபுரிதல்வேண்டும். யாவர் தீண்டினுங் குளிர்ச்சியாக இருக்கவேண்டும்" என்றுன். நமனைப் பார்த்து, "உலகத்துயிர்களைப்போல நினைத்து, நம் யானை குதிரைகளையும் அவுணர்களையும் கொல்லக்கூடாது" என்றுன். வாயுவை நகர் பெருக்கச் சொன்னுன். வருணனை நீர் தெளிக்கச் சொன்னுன். இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்துத் "தினந்தோறும் வந்து சொல்லியவைகளைச் செய்துபோங்கள்'' என்றுன். அவர்களும் அதற்கு உடன்பட்டு அவ்வாறே செய்யலானுர்கள்.

## சூரபன்மன் திருமணம்

சூரபன்மன் மணஞ்செய்துகொள்ள எண்ணினுன். தெய்வத்தச்சன் மகளாகிய பதுமகோமளை என்பவளை மணம் பேசினுன். முறைப்படி அவளைத் திருமணஞ் செய்துவைத்தார் சுக்கிராச்சாரியார். பிறகு தேவர் கந்தருவர் முதலாகிய பலரிடமுமுள்ள அளவற்ற பெண்களைக் காமக்கிழத்தியர்களாக மணஞ்செய்துகொண்டான்.

## தாரகன் சிங்கமுகன் திருமணம்

நமனுடைய மகளாகிய விபுதை என்பவளைச் சிங்கமுகனுக்கு மணஞ்செய்துவைத்தான். நிருதியின் மகளாகிய சவுரி என்பவளைத் தாரகனுக்கு மணஞ் செய்துவைத்தான்.

## உரிய இடங்கட்கு அனுப்புதல்

திருமணங்கள் முடிவுபெற்றபின், தன் தம்பியர்களைப் பார்த்துச் சூரபன்மன் அவரவர்கட்கு அமைக்கப்பட்ட இடங்களில் படைகளுடன் சென்று இருக்குமாறு கட்டளையிட்டான். படைகளையும் பலவிடங்களிலும் அமைக்கப்

பட்ட நகரங்கட்கு அனுப்பினன். எல்லா அண்டங்களி னுஞ் சென்று தன்னாணையைச் செலுத்துமாறு பல அவுணர்களை ஆறுகோடி வெள்ளம் படையுடன் அனுப்பி னன். வீரமகேந்திரபுரத்திற்கு எட்டுத் திக்குகளிலுமுள்ள எட்டுநகரங்களினும் யானை, குதிரை, யாளி, கரடி, புலி, பன்றி, அரிமா, மரை ஆகிய முகங்களையுடைய அவுணத் தலைவர்களைப் படைகளோடு வைத்தான். துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிரபாலன், மகிடன் முதலியவர்களை அமைச்சர்களாக ஏற்படுத்திக் கொண்டு சூரபன்மன் அரசு செய்யலானன்.

## கஅ. தேவர்களை ஏவல்கொள்ளுதல்

### "கயல்கொண்டுவருக" என்று சூரபன்மன் கட்டளை

தேவர்களும் முனிவர்களுஞ் சூரபன்மனுடைய கட்ட ளைப்படி பலவகைத் தொழில்களைப் புரிந்துகொண்டு திரிந் தார்கள். ஒருநாள் சூரபன்மன் இந்திரன் முதலிய தேவர் களை யழைத்தான். அவர்களைப் பார்த்து, "நீங்கள் அவுணர் களுக்குத் தம்பியர்கள் ஆவீர்கள். அவர்களுடைய வேலை உங்களுடைய வேலையல்லவா? கடலில் உள்ள கயல் (மீன்) களைத் தினந்தோறும் பிடித்துக்கொண்டுவந்து கொடுங்கள்" என்று கூறினன். அவுணர்கோன் கட்டளையைக் கேட்டுத் தேவர்கோன் முதலியோர் மனம் நடுங்கினர்கள். உள்ளஞ் சோர்ந்து நாணமடைந்தார்கள். மறுத்தற்கு அஞ்சி, "அப்படியே செய்கிறோம்" என்று உடன்பட்டார்கள். புறப்பட்டுக் கடலைநோக்கிச் சென்றார்கள். செல்லும் வழியில் அனைவரும் வருந்திப் புலம்பினர்கள்.

இந்திரன் வருணனையழைத்து, "நீ மீன் பிடித்துத் தருவாயாக!" என்று வேண்டிக்கொண்டான். வருணன் கடலிலுள்ள மீன்களைக் கரையிற்குவித்தான். இந்திரன் தேவர்களைப் பார்த்து, "இந்தக் கயல்களைத் தூக்கவேண்டி யது உங்களுடைய வேலை" என்று கூறினன்.

தேவர்கள் மீன்களைப் பாம்புகளால் கட்டினர்கள். இந்திரன் அவைகளைத் தேவர்களின் தலைமீது தூக்கி

விட்டான். அவர்கள் மீன் சுமைகளை வருந்தி இரங்கிச் சுமந்துகொண்டு சென்றார்கள். தேவர்கள் மீன் சுமந்து கொண்டு செல்லுதலைக் கண்டு அவுணர்கள் எள்ளி நகையாடினார்கள். தேவர்கள் கயற்பொதியைச் சூரபன்மனிடஞ் சேர்த்தார்கள். "சூரபன்மன் தினமும் இவ்வாறே பிடித்துக்கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்களும் அவ்வாறே செய்துகொண்டு இருந்தார்கள்.

## கக. சூரபன்மன் மக்கட்பேறு

### பானுகோபன் பிறப்பு

சூரபன்மனுடைய பட்டத்துத் தேவியாகிய பதும கோமளை ஒரு மகனைப் பெற்றாள். சூரபன்மன் மகிழ்ச்சியடைந்தான். சுற்றத்தார்களுக்கெல்லாஞ் சிறப்புச் செய்தான். அம்மகன் ஒருநாள் தொட்டிலில் உறங்கிக்கொண்டிருந்தான். அப்போது கதிரவனுடைய ஒளி சிறிது பானுகோபன்மீது பட்டது.

### பானுகோபன் கதிரவனைச் சிறைசெய்தல்

அவ்வளவில் பானுகோபனுக்குச் சினமுண்டாகியது. தொட்டிலினின்றும் விண்ணிற் பாய்ந்தான். கதிரவனைக் கையாற் பற்றிக்கொண்டு ஒரு நொடிப்பொழுதில் வந்தான். தொட்டிலின் காலிற் கட்டிவிட்டு முன்போலப் படுத்து உறங்கலானான்.

### தேவர்கள் கதிரவனைச் சிறைமீட்டல்

கதிரவன் விண்ணில்இயங்காமற் போகவே உலகநிலை தடுமாறத் தொடங்கியது. நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள் சூரபன்மனிடத்திற்கு வந்தார்கள். "உன் மகனாற் சிறைப்படுத்தப் பெற்றுள்ள கதிரவனை விடுவித்துத் தருதல்வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். தேவர்கள் கூறியதைக்கேட்ட சூரபன்மன், "என்மகன் ஞாயிற்றைச் சிறைவைத்த செய்தி எனக்குத் தெரியாது. சிறை பிடிக்குமாறு அப்படி என்ன குற்றம் செய்தான்

கதிரவன்?'' என்று சூரபன்மன் கேட்டான். நடந்ததை நான்முகன் நவின்றான்.

தேவர்களாற் செய்தியுணர்ந்த சூரபன்மன் தன் மகன். ஆற்றலை எண்ணி மகிழ்ந்தான். "நீங்கள் என் மகனிடத்திற் சென்று இனிய மொழிகள்கூறிக் கதிரவன் சிறையை நீக்கி வாருங்கள்'' என்றான். தேவர்கள் அவ்வாறே சென்று சிறுவனைக் கண்டு புகழ்ந்து ஆசி கூறினார்கள். கதிரவனை விட்டுவிடுதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். கதிரவன் படைக்கலத்தைப் பெற்றுக்கொண்டு அவன் தளையை நீக்கினான். நான்முகன் தனது மோகப்படையைக் கொடுத்தான். சூரபன்மன் நிகழ்ந்ததை யுணர்ந்து மகிழ்ந் தான். தன் மகனுக்குப் 'பானுகோபன்' என்று பெய ரிட்டான்.

### மேலும் பல மக்கள்

பானுகோபனுக்குப் பிறகு அக்கினிமுகன், இரணியன். வச்சிரவாகு முதலியவர்களைப் பதுமகோமளை பெற்றாள். மற்றைய மனைவியர்கள் மூவாயிரம் மக்களைப் பெற்றார்கள். மக்கள் அனைவருடனுஞ் சூரபன்மன் மகிழ்ந்திருந்தான்.

### உடன்பிறந்தார்களின் மக்கட்பேறு

சிங்கமுகனுக்குப் பட்டத்துத் தேவியாகிய விபுதையி னிடத்தில் சூரன் என்னும் ஒரு மகன் பிறந்தான். மற்றைய மனைவியர்களிடத்தில் நூறுமக்கள் பிறந்தார்கள்.

தாரகனுக்குப் பட்டத்துத் தேவியாகிய சௌரியி னிடத்திலே அசுரேந்திரன் என்னும் ஒரு மகன் பிறந்தான். அவன் அவுணர்களைப் போலன்றி நற்செயல்களையுடையவ னாகச் சிறந்து திகழ்ந்தான்.

## உ0. வில்வலனும் வாதாவியும்

### சூரபன்மன் தங்கை அசமுகி

சூரபன்மன் முதலிய மூவருக்குந் தங்கையாகப் பிறந்த அசமுகியானவள் மணமற்றவளாகவும் வரன்முறை கெட்டவளாகவும் திகழ்ந்தாள். ஆட்டுமுகத்தினளாகிய

இவள், தேவர்களுடைய மனைவிமார்களைத் தன் தமையன்மார்கட்கு மனைவியர்களாக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

## துருவாசரைத்தழுவி மக்களைப் பெறுதல்

கெட்டலைந்துதிரிந்து கொண்டிருந்த அசமுகி ஒரு நாள் துருவாசமுனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றாள். துருவாசமுனிவரைச் சேர்ந்து மக்களைப் பெற வேண்டும் என்று எண்ணினாள். துருவாசருக்கு முன்னே சென்றாள். துருவாசமுனிவர் அசமுகியைப்பார்த்து, "நீ தனியே வரவேண்டிய காரணம்யாது?" என்று கேட்டார். "உம்மைச்சேர்ந்து மக்களைப் பெறுவதற்காக வந்தேன்" என்றாள் அசமுகி. அசமுகி சூரபன்மனுடைய தங்கையென்று துருவாசர் உணர்ந்துகொண்டார். அசமுகியின் எண்ணத்திற்கு இணங்க மறுத்தார். அசமுகியோ, "நான் உன்னைச் சேராது போகமாட்டேன். நீ தப்பியோடிப் போய்விடலாம் என்று எண்ணாதே" என்று கூறி வலிந்து தழுவினாள். அப்பொழுது ஆற்றல்மிக்க இரண்டுமக்கள் பிறந்தார்கள். அவர்களைக்கண்டு அசமுகி மகிழ்ந்தாள். அவர்களைப்பார்த்து, "மக்காள்! நீங்கள் அவுணர்குலத்தில் தோன்றியுள்ளீர்கள். தவத்தைச்செய்து ஆற்றலைப் பெறுங்கள்" என்றாள்.

## தந்தையும் மைந்தர்களும்

மக்கள் இருவரும் 'வில்வலன்' என்றும், 'வாதாபி' என்றும் பெயர் பெற்றார்கள். மைந்தர்களிருவரும் தந்தையாகிய துருவாசமுனிவரை வணங்கினார்கள். அவர், "உங்கட்கு வேண்டியது யாது?" என்று கேட்டார். அவர்களிருவரும் தந்தையைப் பார்த்து, "உம்முடைய தவம் முழுவதையும் எமக்குக் கொடும்" என்று கேட்டார்கள். துருவாசர் மறுத்தார். மைந்தர்களிருவருந் தந்தையைக் கொல்ல விரைந்தெழுந்தார்கள். துருவாசமுனிவர் "நீங்கள் தினந்தோறும் முனிவர்களுக்கே துன்பஞ் செய்யுங்கள். அகத்தியமுனிவர்உங்களைக் கொல்வார்" என்று சாபம் இட்டு விரைந்துமாய்யையால் மறைந்து போனார்.

## அசமுகி மக்கள் அருந்தவம் ஆற்றல்

வில்வலனும், வாதாவியும் வேறொரு காட்டை யடைந்தார்கள். முனிவர்களைக் கொலைபுரிதலையே கருத்தாகக்கொண்டு தவம் புரிந்தார்கள். தீயின்கண் நின்று நான்முகனைநோக்கி நெடுங்காலந் தவம்புரிந்தார்கள். நான்முகன் தோன்றவில்லை. வில்வலன் தன் தம்பி வாதாவியை வாளாற் கிழித்துக், குருதியையுந் தசையையுஞ் சொரிந்து ஒரு வேள்வியைச் செய்தான். அதன்பிறகு நான்முகன் தோன்றினன். இறந்த வாதாவி பிழைக்கவும், மேற்கொண்டும் எத்தனைமுறை கொன்றாலும் பிழைத் தெழுமாறும் வரம் பெற்றான்.

## மாமனும் மருகர்களும்

வில்வலனும் வாதாவியுஞ் சூரபன்மனிடஞ் சென்றார்கள். "நாங்கள் உன்னுடைய மருகர்கள். முனிவர்களைக் கொல்வதற்கு வரம் பெற்றிருக்கின்றோம்" என்றார்கள். அவன் தன் மருகர்களை மகிழ்ந்து தழுவிக்கொண்டான். "என்னுடன் இருங்கள்" என்று கூறினன். மாமன் கட்டளைப்படி மருகர்கள் சிலநாள் அங்கு தங்கியிருந்தார்கள்.

## கள்ளவிருந்தும் கயமையும்

பிறகு குடகநாட்டில் வளஞ்செறிந்த ஒரு காட்டை யடைந்தார்கள். நான்குபக்கத்து வழிகளும் கூடும் ஓரிடத்தில் ஓர் இருப்பிடம் அமைத்துக்கொண்டு, பல பொருள்களையும் நிறைத்துக்கொண்டார்கள். அவ்வழியே செல்லும் முனிவர்களை விருந்துக்கழைப்பார்கள். வில்வலன் ஆட்டுமுகமுடைய தன் தம்பி வாதாவியை ஆடாக்கி அடித்துக் கறிசமைத்துப் போடுவான். முனிவர்கள் உண்டபிறகு வில்வலன் தம்பியின் பெயரைச்சொல்லிக் கூப்பிடுவான். வாதாவி முனிவர்களுடைய வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளிவருவான். அதனால் விருந்துண்ட முனிவர்கள் இறந்தொழிந்து போவார்கள். பிறகு உடன்பிறந்தார் இருவரும் இறந்துபோன பெருந்தவர்களை

அருந்தி மகிழ்வார்கள். திருந்திய பண்பில்லாத இவர்களுடைய விருந்து அருந்தவர்களுக்குப் பெருந்தொல்லையாக நெடுநாள் நடந்துகொண்டிருந்தது.

## உக. இந்திரன் மறைந்துறைதல்

### சூரபன்மன் சுற்றிவருதல்

மருகர்கள் மாயவிருந்து நடத்திக்கொண்டிருந்த நாளிலே, மாமன் தனது இந்திரஞாலத்தேரில் அண்டங்கள் தோறுஞ்சென்று அரசாட்சியை இனிது நடத்திக்கொண்டிருந்தான். சூரபன்மன் ஒருநாள் பாதலத்தில் இருப்பான். ஒருநாள் விண்ணுலகத்தில் இருப்பான். ஒருநாள் சத்திய உலகத்தில் இருப்பான். ஒருநாள் வைகுண்டத்தில் இருப்பான். எங்குச்சென்றாலும் மாலையில் வீரமகேந்திரபுரத்திற்குத் திரும்பிவிடுவான்.

### அயிராணியை நாடுதல்

சூரபன்மன் இந்திரனைப் பிடித்துவரும்படி படைத்தலைவர்களில் ஒருவனைப் படையுடன் அனுப்பினான். அயிராணியைக் கவரும்பொருட்டு ஒன்பதுகோடி அவுணப் பெண்களை அனுப்பினான். அனைவரும் விரைந்து விண்ணுலகத்தை நாடிச் சென்றார்கள். இந்தச் செய்தியை இந்திரன் ஒற்றர்களால் உணர்ந்தான். விரைந்து மறைந்து நிலவுலகையடைந்தான். இந்திரனையும் இந்திராணியையும் பிடிக்கவந்தவர்கள் அவர்களைக் காணாமல் கவலையடைந்தார்கள். தேவர்களைப்பிடித்து, "இந்திரனும் இந்திராணியும் எங்கே? கூறுங்கள்" என்று சொல்லி அடித்தார்கள். தேவர்களோ, "நாங்கள் அறியோம்" என்று கூறிப் புலம்பினார்கள். பிறகு திரும்பிச்சென்று, "அவர்கள் மறைந்தோடிப் போனார்கள். அவர்கள் எங்கிருக்கிறார்களென்று தெரியவில்லை" என்று கூறினார்கள். சூரபன்மன் அதனைக் கேட்டுச் சினங்கொண்டான். எல்லா இடங்களினுந் தேடிப் பார்க்குமாறு ஒற்றர்களை அனுப்பினான். அவர்கள் எல்லா இடங்களினுந் தேடிக்கொண்டு திரிந்தார்கள்.

## சயந்தன்

அவுணப்படைகள் விண்ணுலகிற்கு வருதற்கு முன்பு இந்திரனுடைய மகனுகிய சயந்தன் வைகுண்டத்திற்குச் சென்றிருந்தான். அங்கிருந்த அவன் தான் இல்லாத போது விண்ணுலகில் நிகழ்ந்தவைகளையுணர்ந்தான். தேவர்கள் துன்பப்படுதலையும் அறிந்தான். விரைந்து விண்ணுலகத்திற்கு வந்தான். தாய், தந்தையர்களைக் காணுது துன்பமடைந்தான்.

## சயந்தனும் நாரதரும்

சயந்தன் துன்பத்தை நாரதர் அறிந்தார். அவனைத் தெளிவிக்க எண்ணினுர். விரைந்து சயந்தன் முன்பு சென்றுர். சயந்தன் அவருக்கு இருக்கையளித்து வணங்கிப் போற்றினுன். "என்னைப் பெற்ற தாய் தந்தையர்கள் சூரபன்மனுக்கஞ்சி ஓடியொளிந்தனர். அவர்கள் இருக்குமிடந் தெரியவில்லை. எங்கட்கு வரும் இன்னல்கள் எக்காலத்திலே நீங்கும்?" என்று கூறி வருந்தினுன்.

நாரதமுனிவர் சயந்தனைப் பார்த்து, "நன்மைகளும் தீமைகளும் அவரவர் செய்த வினையினுலே வருவனவேயல்லாமல், பிறராலே ஒருவருக்கு உண்டாகமாட்டா. அமுதத்திற்கு இனிமையையும் நஞ்சிற்குக் கசப்பையும் கொடுத்தவர்கள் யார்? அறிவுடையோர் இன்பம் வந்தபொழுது மகிழார். துன்பம் வந்தபொழுது வருந்தார்: இன்பமும் துன்பமும் இவ்வுடலுக்குப் பொருந்தியனவாகும். வறியவர் செல்வராவர்; செல்வர் வறியவராவர். பெரியோர் சிறியோராவர்; சிறியோர் பெரியோராவர். இவை மாறி மாறி வரும். இவைகளைப் பழவினைப்பயன் என்று உணர்வாயாக. இன்பதுன்பங்கள் உயிர்களுக்கு நிலையுடையனவல்ல. திங்களுடைய வளர்வும் தேய்வும் முறை முறையே பொருந்தியுள்ளன. உங்களுடைய துன்பமும் அவுணர்களுடைய இன்பமும் நிலைபெற்று நில்லா. இதனை உண்மை என்று எண்ணுவாயாக!"

### பழவினைப்பயன்

தீங்குவந் தடையு மாறும் நன்மைதான் சேரு மாறும்
தாங்கள்செய் வினையி னாலே தத்தமக் காய வல்லால்
ஆங்கவை பிறரால் வாரா அமுதம்நஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம் உதவினர் சிலரும் உண்டோ.

### அறிவுடையார் செயல்

இன்பம தடைந்த காலை இனிதென மகிழ்ச்சி எய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந் துன்பந் தானும் இவ்வுடற் கியைந்த என்றே
முன்புறு தொடர்பை யோர்வார் முழுவதும் உணர்ந்த நீரார்.
(துளங்கி—நடுங்கி)

### ஊழ்வினையும் உலகத்தியற்கையும்

வறியவர் செல்வ ராவர் செல்வர்பின் வறிய ராவர்
சிறியவர் உயர்ந்தோர் ஆவர் உயர்ந்துளோர் சிறியர் ஆவர்
முறைமுறை நிகழும் ஈது முன்னையூழ் வினையே கண்டாய்
எறிகதிர் வழங்கு ஞாலத் தியற்கையும் இனைய தன்றோ ?

ஆக்கமும் வறுமை தானும் அல்லலும் மகிழ்வும் எல்லாம்
நீக்கம்இல் உயிர்கட்கு என்றும் நிலைஎனக் கொள்ளற் பாற்றோ
மேக்குயிர் கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளும் முறைமுறை பொருந்திற் றன்றே.

"உன் தந்தையுந் தாயும் உருவை மறைத்து நிலவுல கிற் சென்று இருக்கிறார்கள்போல் தெரிகின்றது. உன் தந்தை அவுணர்கள் அழிவதற்கு வழி தேடுவான்; உங்கள் துன்பம் விரைவில் நீங்கும். நீ வருந்தாது இருப்பாயாக!" என்று சயந்தனைத் தேற்றிச் சென்றார்.

சயந்தன், வருந்திய தேவர்கட்கு ஆறுதலுரைகள் கூறினான். வழக்கம்போல் சூரபன்மனுடைய தொண்டாற் றும்படி தேவர்களை ஏவிக்கொண்டிருந்தான்.

## சீகாழியில் தேவேந்திரன்

நிலவுலகையடைந்த இந்திரன் மனைவியோடு சீகா ழியை அடைந்தான். சிவபெருமானை வழிபட எண்ணி னான். ஒரு பூம்பொழில் வைத்தான். அப்பொழிலில் உண் டாகிய மலர்களால் இறைவனை வழிபட்டுக்கொண்டிருந் தான். இந்திரனைத் தேடுமாறு சூரபன்மனால் ஏவப்பெற்ற

ஒற்றர்கள் தேடிக்கொண்டு சீகாழிக்கு வந்தார்கள். அவ் வாறுவந்தமையை இந்திரனுணர்ந்து மனைவியோடு மூங்கில் வடிவாக மாறி மறைந்துகொண்டான். ஒற்றர்கள் தேடிப் பார்த்துவிட்டுச் சென்றுவிட்டனர். அவுணர்களுடைய ஆணையால் முகில்கள் மழை பொழியவில்லை. அதனால் இந்திரனுடைய பூம்பொழில் காய்ந்துபோய்விட்டது. அதனை இந்திரன் கண்டு வருந்தினான். சிவபெருமானை எண்ணிப் போற்றினான். "இந்திரனே வருந்தாதே இப் பொழில் அழியாது விரைவில் ஆறு ஒன்று இப்பதிக்கு வரும்" என்று உருவற்ற வாக்கு ஒலித்தது. இந்திரன் அதனைக்கேட்டு மகிழ்ந்திருந்தான்.

## உஉ. விந்தகிரி

### நாரதர் கலகம்

மெய்அறிவிற்சிறந்த நாரதர் விந்தகிரிக்கு முன்னே சென்றார். பல வாழ்த்துரைகளைப் பகர்ந்தார். அம்மலை நாரதரைத் தொழுதது. இன்னுரைகள் பலவற்றை இயம் பியது. நாரதர் விந்தகிரியைப்பார்த்து, "மேருமலையானது மிகவுந் தருக்குகின்றது. அது சிவபெருமானுடைய வில்லாகிய ஆற்றலாலும், உமாதேவி தன்னிடம் வளரப் பெற்றபடியினாலும், மலைகளுக்கெல்லாம் அரசாயிருத்தலி னாலும், கதிரவனைத் தொடும்படி விண்ணில் வளர்ந் திருத்தலினாலும், ஆயிரங்கொடுமுடிகளையுடைமையினாலும், திருக்கைலைமலை தன்னொரு பக்கத்திலே பொருந்தியிருத் தலினாலும், கதிரவன் திங்கள் முதலியன சூழும்படி நிற்கின்ற தன்மையினாலும், மற்றும்பல சிறப்புக்களாலும் தனக்கு ஒப்பில்லையென்று துள்ளுகிறது. அதனுடைய ஆண வத்தை நீ அறியவில்லை போலும். நான் அதனை உனக்கு நவிலவந்தேன்" என்றுகூறினார்.

நாரதர் நவின்றவைகளைக்கேட்ட விந்தகிரி நகைத்தது. "மேருமலைக்கு உள்ள பெருமைகளில் எதுதான் எனக்கு இல்லை. நான் மேருமலையின் சிறுமைகள் பலவற்றையும் அறியமாட்டேனோ? மேரு ஒரு மலையே அல்லாமல் பெரிய

சிறப்புடைய தேவனா? அல்லது திருமாலா? அல்லது நான்முகனா?'' என்று பலவாறு மேருமலையை இகழ்ந்துரைத்தது. "என் பெருமையைக் காட்டுகிறேன்'' பாரும் என்றது. விண்ணில் உயர்ந்தது. சத்தியவுலகம் வரை நிமிர்ந்தது. விண்வழியையுந் தடைசெய்தது. தேவர்களும் பிறரும் அதனைக்கண்டு அஞ்சி நடுங்கினர். பிறகு விந்தமலை வளர்ந்துயர்ந்த காரணத்தை அனைவருந் தெளிந்துணர்ந்தனர். அகத்தியரால் விந்தகிரியின் இந்த நிலை ஒழியுமென்று அறிந்தனர்.

## உந. அகத்திய முனிவர்

### அகத்தியருஞ் சிவபெருமானும்

கதிரவன் முதலியோர் அகத்திய முனிவரைக் கொண்டு, விந்தமலையின் ஆணவத்தை அடக்கவேண்டும் என்று எண்ணினர். அகத்தியமுனிவரை நினைந்து பலவாறு போற்றினர். அகத்தியமுனிவர் தேவர்களுடைய குறையை நீக்க விரும்பினார். சிவபெருமானை உள்ளத்தில் எண்ணினார். சிவபெருமான் காளையூர்தியின் மீது அகத்திய முனிவருக்கு முன் காட்சி தந்தார். அகத்திய முனிவர் அச்சத்தோடு எழுந்து வணங்கினார். சிவபெருமான் அகத்தியரைப் பார்த்து, 'தவத்திற் சிறந்த முனிவனே! உனக்கு வேண்டியது யாது?' என்று கேட்டார்.

அகத்தியமுனிவர் சிவபெருமானைப் பார்த்து, "விந்தமலை மேருமலையோடு மாறுகொண்டு விண்வழியை அடைத்தது. அதன் ஆற்றலை அடக்கும்படி அடியேனுக்கு ஆண்மை அருள்க'' என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமான் அகத்திய முனிவரைப் பார்த்து, "அப்படியே கொடுத்தோம். விந்தத்தின் ஆற்றலை அடக்கிப் பொதிய மலையிற்சென்று இருப்பாயாக!'' என்றருளினார்.

"தென்றிசைக்கண் தேவரீரை வழிபடுதற்கு ஒரு நன்னீரைக் கொடுத்தருளவேண்டும்'' என்று இறைவனைப் பார்த்து அகத்தியமுனிவர் வேண்டிக்கொண்டார். சிவபெருமான் திருக்கையிலுள்ள எழு நல்லாறுகளுள் காவிரி

என்னும் ஆற்றை அகத்தியமுனிவருக்குக் கொடுத்தார். அகத்தியமுனிவர் அவ்வாற்றைத் தம் கமண்டலத்திற் பெற்றுக்கொண்டார். மேருமலைச் சாரலில் தவஞ்செய்து கொண்டிருந்தவர் பொதியமலையை நோக்கிப் புறப்பட்டார்.

## உச. கிரவுஞ்சமலை

### கிரவுஞ்சன் என்னும் அவுணன்

அகத்தியர் தென்திசையை நோக்கிச் செல்லும் பொழுது தாரகாசுரன் வாழுகின்ற மாயாபுரி நெருங்கியது. அங்கே கிரவுஞ்சன் என்னும் ஓர் அவுணன் இருந்தான். அவன் மாயங்கள் செய்வதில் வல்லவன். அவன் அகத்தியர் வரும் வழியில் ஒரு பெரிய மலையாக அமைந்து நின்றான். அகத்தியர் அம்மலையைக்கண்டு வியந்துநின்றார்.

கிரவுஞ்சன் "அகத்திய முனிவரைத் தன்னுட் படுத்திக் கொல்லுதல் வேண்டும்" என்று எண்ணினான். ஒரு வழியைத் தன்னுள்ளே காட்டி நின்றான். மலையைத் தாண்டிச் செல்வதற்கு வேறு வழியைக் காணாத அகத்திய முனிவர், இதோ ஒரு வழி இருக்கின்றது; இதன் வழியே செல்லுவோம் என்று எண்ணினார். குகைவழியே நுழைந்தார். சிறிது தொலை சென்றபிறகு வழி தடைப்பட்டது. தீ, காற்று, மழை இடி முதலியன உண்டாயின. அகத்திய முனிவர் அஃது அவுணர்களின் மாயை என்று அறிந்தார்.

அகத்திய முனிவருக்குச் சினம் மிகுந்தது. தம் கைத் தடியால் மலையை அடித்தார். தூளாக்கினார். "நல்லறிவில்லாத தீயோனே! நீ உன் பழையவடிவை விட்டுவிட்டு மலைவடிவாக இங்கே நில். அவுணர்களுக்கு இருப்பிடமாக இரு. முனிவர்களுக்குந் தேவர்கட்குங் கொடுமையைப் புரி. பின்னளிலே முருகக்கடவுளுடைய வேற்படையால் இறந்தொழிவாய்" என்று ஆணையிட்டார். கமண்டலத்தின்கண்ணுள்ள நீரை அள்ளித் தெளித்து அவன் மாயத்தைப் போக்கினார். தென்திசையை நோக்கிச் சென்றார். அந்தக் கிரவுஞ்சன் இதுவரை மலையாக நின்று இப்பொழுது தேவரீரால் அழிந்தான்.

## உரு. விந்தம் பாதலத்திற் புகுதல்

### அகத்தியர் விந்தமலையை வழி கேட்டல்

அகத்திய முனிவர் காசிப்பதி முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு, விந்தமலைச்சாரலை யடைந்தார். அந்த மலையைப் பார்த்தார். "ஓ விந்தமலையே! நாம் பொதிய மலைக்குச் செல்லுதல்வேண்டும். அதற்கு நீ சிறிது வழி விடுவாயாக" என்று வேண்டினார்.

அகத்தியர் உரையைக் கேட்ட விந்தமலை ஆணவத்துடன் பதிலுரைக்கத் தொடங்கியது: 'ஞாயிறு திங்கள் கள்கூடச் செல்லாவண்ணம் விண்வழியை எல்லாம் அடைத்து நிற்கும் நான், உன்னைக் கண்டு அஞ்சி வழி விடுவேனோ? நீ வந்த வழியே திரும்பிச் செல்வாயாக!" என்று கூறியது.

### அகத்தியர் மலையை அழுத்துதல்

விந்தமலை விளம்பியதைக் கேட்டுக் குறுமுனிவர் நகைத்தார். இறைவன் திருவடிகளை எண்ணினார். முன் நாளில் முந்நீரில் நீட்டிய கையை இந்நாளில் விண்ணின்கண் சத்தியவுலகம் வரையில் நீட்டினார். விந்தமலையின் முடியின்மீது உள்ளங்கையை வைத்தார். ஆற்றலுடன் அழுத்தினார். அம்மலை நிலத்தில் தாழ்ந்து பாதலத்திற் புகுந்தது. ஆதிசேடனுடைய நிலைமையை அடைந்தது. அதன் பின்னரே அதற்கு அறிவு வந்தது. அஃது அகத்தியமுனிவரைப் பார்த்து, "உம்மைப் போற்றாத மேன்மையை இழந்தேன். என்னுடைய குற்றத்தைப் பொறுத்தருளும். நான் மேலெழுங் காலத்தைத் தெரிவித்தருளும்" என்று வேண்டிக்கொண்டது. "நாம் மீண்டு இவ்வழியே வரும்போது நீ மேலெழுவாய்" என்று அகத்தியமுனிவர் பதிலுரைத்தார்.

### அவ்விடம்விட்டு நீங்குதல்

விந்தம் நிலத்தினுள் மறைந்ததும் அகத்தியமுனிவர் தம்முடைய கையைச் சுருக்கிக்கொண்டார். தேவர்கள்

பூமழை பொழிந்தனர். விண்ணிடம் பண்டுபோலாயிற்று. தேவர்கள் அகத்தியமுனிவரையடைந்து போற்றினர். அகத்தியமுனிவர் தென்திசையை நோக்கிப் புறப் பட்டார்.

## உஅ. வில்வலனும் வாதாவியும் அழிதல்

### பொய்க்கோல முனிவன்

அகத்திய முனிவரின் வருகையை வில்வலனும் வாதாவியும் அறிந்தார்கள். அவரைக் கொன்றுண்ண வேண்டுமென்று முடிவு செய்தார்கள். இளவலாகிய வாதாவி மலைச்சாரலில் ஆட்டுக்கடாவாக மேய்ந்து கொண்டு நின்றான். மூத்தவனாகிய வில்வலன் பொய்க் கோலம் பூணத் தொடங்கினான். தலையிற் சடையுடைய வனானான். நெற்றியில் நீற்றுக்குறி அமைத்துக்கொண் டான். உடம்பின்மீது கண்மணி (உருத்திராக்க) மாலைகள் காட்சியளிக்கலாயின. இடையில் மரவுரியுடை இலங் கிற்று. விரைந்து அகத்தியர்முன் சென்றான். அவரைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தான். தன்னிருப்பிடத்திற்கு எழுந்தருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அகத்திய முனிவரும் அதற்கிசைந்து அவனுடைய இருப் பிடத்திற்கு எழுந்தருளினார்.

### விருந்து சமைத்தல்

வில்வலன் 'இன்று அடியேனுடைய இருப்பிடத்தில் உணவருந்திச் செல்லவேண்டும்' என்று வேண்டிக்கொண் டான். அகத்தியரும் அதற்கு உடன்பட்டார். வில்வலன் மிகத் தூய்மையோடு சமையல் தொழிலைத் தொடங்கினான். பலவகை யுணவுகளை ஆக்கினான். மேய்ந்துகொண்டு நின்ற தம்பியாகிய ஆட்டுக்கடாவை அகத்தியர் காணும் படியாக வில்வலன் வலிந்து இழுத்துக்கொண்டு வந்தான். அரிவாளினால் வெட்டினான். பலவகைக் கறிகளாகப் பக்குவமாகச் சமைத்தான். எல்லா வகை உணவுகளும் இனிது சமைக்கப்பெற்றன.

## உணவு கொள்ளுதல்

சமையல் முடிவுபெற்றபின் வில்வலன் அகத்திய முனிவருடைய அடிகளிற்சென்று விழுந்து வணங்கினன். "உணவு கொள்ளுதற்கு எழுந்தருள்க!" என்று வேண்டினன். அகத்தியர் உடன்பட்டுச் சென்றார். இருக்கையில் இருத்தி நல்லுரைகள் நவின்றான். வஞ்சகமாக வழிபாடுகள் செய்தான். பொற்கலங்களை வைத்து உணவு வகைகளைப் பரிமாறினன். அகத்திய முனிவர் உணவுகொள்ள வேண்டிய மறைமுறைப்படி உணவுவகைகளைத் தூய்மை செய்து உண்டருளினர். பிறகு வாய் கைகளைக் கழுவிக் கொண்டு மற்றோர் இடத்திற் சென்று அமர்ந்தார்.

## வாதாவி முடிவு

வில்வலன் அகத்தியரைக் கொல்ல எண்ணினன். வழக்கப்படி தன் தம்பியை விளித்தான். வாதாவி முழு வடிவங்கொண்டு அகத்தியர் வயிற்றில் எழுந்துட்கார்ந்தான். "அண்ணா ! இதோ வருகிறேன்" என்றான். விந்த மடக்கிய செந்தமிழ் முனிவர் அவுணர்கள் வஞ்சனையை அறிந்தார். "உண்ணப்பட்டவாறே வாதாவி அழிந்தொழிக" என்று சாபமிட்டார். அவ்வளவில் வாதாவி, கடல் குடித்த குறுமுனிவன் சிறுவயிற்றில் செரித்துப் போனான். தம்பி இறந்தான் என்பதை வில்வலன் அறிந்தான்.

## வில்வலன் மடிவு

வாதாவி இறந்தான் என்பதை வில்வலன் அறிந்ததும், உண்மை வடிவத்தைக்கொண்டு வெகுண்டான். ஒரு தடியைக் கையிலெடுத்துக்கொண்டு அகத்தியரை அடித்துக் கொல்லவந்தான். ஒரு தருப்பைப் புல்லைச் சிவப் படைக்கலமாக எண்ணி வில்வலன்மேற் செலுத்தினர். அகத்தியர். அதனல் வில்வலனும் மடிந்து விழுந்து முடிந்து போனன்.

## உஎ. காவிரியாறு

### அகத்தியர் சிவவழிபாடு

அகத்தியமுனிவர் வாதாவியையும் வில்வலனையும் மடித்தபிறகு கொங்குநாட்டிற் சென்றுகொண்டிருந்தார். வாதாவியும் வில்வலனும் துருவாச முனிவரின் மக்களாகையால் அவர்களைக் கொன்ற குற்றம் அகத்தியரைத் தொடர்ந்தது. அகத்தியர் அதனை யுணர்ந்தார். சிவபெருமானை வழிபட எண்ணினார். ஓர் இடத்தில் இலிங்கம் அமைத்து வழிபாடு செய்துகொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்த குற்றம் அகன்றது.

### நாரதர் தொண்டு

அகத்திய முனிவருடைய செயல் முழுவதையும் நாரதர் அறிந்தார். காழியில் வேயாய்க் கரந்திருக்கும் விண்ணவர்கோன்பாற் சென்றார். நல்லிசை பாடும் நாரதரைக்கண்ட இந்திரன் அவரடிகளில் முடிபட விழுந்து வணங்கினான். நாரதர் நலம் உசாவினார். இந்திரன் தான் வைத்த பூம்பொழில்நீரின்றிக் காய்தலைக் கூறினான். அகத்தியமுனிவர் இறைவழிபாடு செய்துகொண்டு கொங்குநாட்டிலிருப்பதையும் அவருடைய தண்ணீர் ஏனத்தில் காவிரியிருத்தலையும் கூறினார். "அக்காவிரியை இங்குவரச் செய்தால் நின் மனக்கவலை தீரும்" என்று கூறினார். "காவிரியைப் பூவிரி புகலிக்கு வரச்செய்வது எப்படி?" என்று கேட்டான் இந்திரன். "யானைமுகப்பெருமானை வேண்டிக்கொண்டால் அவர் சென்று, காவிரியாறு இங்கு வரும்படி தண்ணீர் ஏனத்தைக் கவிழ்த்து விடுவார்' என்று கூறித் தமது இருப்பிடத்தை யடைந்தார் நாரதர்.

### இந்திரனும் யானைமுகக்கடவுளும்

இந்திரன் யானைமுகக்கடவுளை மெய்யன்போடு வணங்கி வழிபட்டான். யானைமுகக்கடவுள் இந்திரனுக்குக் காட்சியளித்தார். இந்திரன் யானைமுகக்கடவுளைப் பலவாறு போற்றி வணங்கினான். "இந்திரனே! உன்

வழிபாட்டை நாம் ஏற்றுக்கொண்டனம். உனக்கு வேண்டிய மேன்மைகள் யாவை? அதனைக் கூறுதி அளித் தருள்வோம்'' என்று மூத்தபிள்ளையார் மொழிந்தருளி ஞர். தான் வைத்த பூம்பொழில் நீரின்றிப் படுதலை இந்திரன் கூறினன். ஆனைமுகப்பெருமான், "உனக்கு எந்நீர் வேண்டும்? உரை; வரவழைத்துத் தருவோம்'' என்றார். அகத்தியமுனிவர் கொங்குநாட்டில் அமர்ந் திருத்தலையும் அவரிடம் காவிரியிருத்தலையும் இந்திரன் கூறினன். அந்தக் காவிரியைச் வரச்செய்தாற் போதும் என்றான். ஆனைமுகக்கடவுள், "அப்படியே வரச்செய்கி றேன்'' என்று கூறித் திருவருள் புரிந்தார். விரைந்து கொங்குநாட்டை யடைந்தார்.

## அகத்தியரும் ஆனைமுகக்கடவுளும்

கொங்குநாட்டையடைந்த விநாயகர் அகத்தியமுனி வர் இருக்கும் இடத்தைச் சேர்ந்தார். அகத்திய முனிவ ருடைய கமண்டலத்தின்மீது காகவடிவத்துடன் சென்று அமர்ந்தார். அகத்தியர் தம் கமண்டலத்தின்மீது பொய்க் காக்கையைக் கண்டார். அதனை மெய்க்காக்கை என்றே எண்ணினர். அதனை விரட்ட நினைத்தார். கையை ஓங்கி வீசினர். காக்கையாகிய கடவுள் கமண்டலத்தைக் கவிழ்த்து விட்டார். காவிரியைப் பார்த்து, "நீ நிலத்திற் செல்லக் கடவாய்'' என்று கட்டளையிட்டருளினர். காவிரி பெரு முழக்கத்துடன் நிலவுலகத்திற் பாய்ந்தது. விநாயகக் கடவுள் காக்கையுருவத்தை மாற்றினர். பார்ப்பனக் கோலங்கொண்டு சென்றார். கமண்டலங் கவிழ்ந்து காவிரி நிலத்திற் செல்லுதலையும், பார்ப்பன இளைஞன் ஒருவன் போதலையும் குறுமுனிவர் கண்டார். அவருக்கு அளவிடப் படாத சினம் மூண்டது. பார்ப்பன இளைஞன்போற் செல்லும் விநாயகக்கடவுளைப் பிடிக்கும்பொருட்டு விரைந்து சென்றார். பார்ப்பன இளைஞராகச் செல்லும் கடவுளோ அஞ்சினவரைப்போன்று விரைந்து சென்றார். அப் பார்ப்பன இளைஞனைப் பிடித்து நெற்றியில் குட்டுதல் வேண்டும் என்று எண்ணிய அகத்தியர் அவ்விளைஞரைப்

பின்தொடர்ந்தார். பொய்க்கோலம்பூண்ட விநாயகர் அகப் படுவார் போன்று கிட்டியும் எட்டியும் திரிந்தார். எப்படி யாவது பிடித்து நெற்றியிற் குட்டுதல் வேண்டுமென்று, மடக்கிப் பிடித்த கையுடன் மிக முயன்றுபார்த்தும் விநாயகக்கடவுளைப் பிடிக்க முடியவில்லை. அகத்தியருக்குத் தளர்ச்சியுண்டாயிற்று. மெலிந்து நின்றார். அகத்தியரின் மெலிவைக்கண்ட ஆனைமுகக்கடவுள் தம்முடைய மெய் வடிவத்தை அகத்தியருக்குக் காட்டியருளினார்.

தாம் அதுவரையில் துரத்தியது விநாயகக்கடவுளே என்றுணர்ந்த அகத்தியர் மிகுந்த அச்சங்கொண்டார். ஏங்கிக் கலங்கி இரங்கினார். குட்டுதற்கு மடக்கிப் பிடித்த கைகளைக்கொண்டு தம்முடைய நெற்றிக்கண் இடிவிழுந் தாற்போல முழுவன்மையுடன் குட்டிக்கொண்டார். ஆனை முகக்கடவுள் அகத்தியரைப்பார்த்து, "ஏன் இவ்வாறு குட்டிக்கொள்ளுகிறாய்?" என்று கேட்டார். அகத்தியர் விநாயகக்கடவுளைப் பார்த்து, "அறிவு அணுவும் அற்ற அடியேன், தேவரீரை ஒரு பார்ப்பனச் சிறுவன் என்று எண்ணி இவ்வாறு குட்ட நினைத்தேன். அத்தீவினைக்குக் கழுவாயாக இப்பொழுது என் தலையிலேயே குட்டிக் கொள்கிறேன்" என்றார்.

ஆனைமுகக்கடவுள் அகத்தியரைப் பார்த்து, "அன் பனே! உன்னுடைய மனத்துன்பத்தை அகற்றுவாயாக!" என்று கூறியருளினார். அகத்தியர் ஆனைமுகக்கடவு ளுடைய அடிமலர்களில் பன்முறை வணங்கிப் போற்றி னார். "தம்மை உள்ளவாறுணராமல் யான் செய்த குற் றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

## அகத்தியருக்கு ஆனைமுகக்கடவுள் அருள்புரிதல்

விநாயகர் அகத்தியரைப்பார்த்து, "தேவேந்திரன் சீர்காழியிலே இருக்கின்றான். அவன் சிவபெருமானைப் போற்றுவதற்காக ஆங்கொரு பூங்காவை அமைத்தான். அது நீரின்மையினால் வாடிப் போய்விட்டது. அதன்

பொருட்டு நீரை நாடினான். நம்மை வழிபட்டு வேண்டிக் கொண்டான். நாம் காக்கை வடிவமாக உன் கமண்டலத்தில் வந்தமர்ந்து காவிரியை நிலவுலகிற் செல்லவிட்டோம். அதன்பொருட்டு நீ முனிந்தமைக்காக நாம் சிறிதுஞ் சினங்கொள்ளமாட்டோம். நீ நம் தந்தையாகிய சிவ பெருமானிடத்திலே உண்மையான பேரன்புடையவன். ஆகவே, நமக்கும் அன்புடையவனாவாய். நீ வேண்டிய மேன்மைகளைக் கேள் தந்தருள்கின்றோம்" என்றார்.

## அகத்தியர் வேண்டுகோள்

அகத்தியமுனிவர் ஆனைமுகக்கடவுளை வணங்கினார். "முதன்மையமைந்த பெருமானே! நான் உம்முடைய திருவருளைப் பெற்றமையால் கடைத்தேறினேன். நான் உம்மிடத்திலும் இறைவனிடத்திலும் என்றுங் குன்றா அன்புடையவனாக இருக்கும் மேன்மையை எனக்கு வழங்கியருளுதல் வேண்டும். நான் இப்பொழுது உம்முடைய முன்னிலையிற் குட்டிக்கொண்டதைப்போலத் தேவரீருடைய திருமுன்பு யார் குட்டிக்கொண்டபோதினும் அவர்கட்குத் தண்ணருள் புரிதல்வேண்டும்." என்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக்கடவுள், "அப்படியே தந்தேன்!" என்று அருள்புரிந்து மேலும் வேண்டியவைகளைக் கேட்குமாறு கூறினார். அகத்தியர், "நல்ல ஆறு வேண்டும்" என்றார். விநாயகக்கடவுள் காவிரியைக் கமண்டலத்திற் பெய்தார். அதனால் கமண்டலம் முன்போல நிறைந்து விளங்கியது. ஆனைமுகக்கடவுள் மறைந்தருளினார். அகத்தியர் மீண்டுந் தென்திசையை நோக்கிப் புறப்பட்டார்.

# உஅ. திருக்குற்றாலம்

## திருமுற்றம்

அகத்தியர் செல்லும் வழியில் வைணவப் பதி ஒன்று இருந்தது. அதில் அளவற்ற வைணவப் பார்ப்பனர்கள் இருந்தனர். அவர்கள் மெய்ந்நூல்களைக் கற்றும் பழவினைப்பயனால் நல்லறிவையடையவில்லை. சிவனடியார்க

ளிடத்திலே அவர்களுக்கு அளவுகடந்த பகை வளர்ந்து கொண்டிருந்தது. பார்ப்பனர்கட்குரிய நல்லொழுக்கம் அவர்களிடத்திற் சிறிதுமில்லை. அவ்வூர் திருமுற்றம் என்னும் பெயரோடு நிலவி நின்றது.

## திருமுற்றத்து வைணவர்கள் அக்த்தியரைக்கண்டு சீறுதல்

திருமுற்றத்து வைணவர்கள் செயலை அகத்தியமுனிவர் தெரிந்தார். அவ்வூரின் தெருவிலே நடந்து திருமால் கோயிலின் முன்னே சென்றார். அக்கோயிலின் வைணவர்கள் சிலர் அகத்தியமுனிவரைக் கண்டனர். அளவிறந்த சினங்கொண்டனர்; பெருமூச்சுவிட்டனர். அகத்திய முனிவரைப் பார்த்து, "நீ கண்டிகையையும் திருநீற்றையும் அணிந்திருக்கின்றாய்! ஐயமேற்றுத் திரியும் கையனுக்கடியவன்! நீ இந்த இடத்திற்கு வருதல் தகாது. இங்கு நில்லாதே! விரைந்து அப்பாற் போய்விடு" என்றார்கள். அகத்திய முனிவர் அவ்வைணவர்களின்மீது சினங்கொள்ளவில்லை. நகைத்தார். அம்மாலடியார்களைப் பார்த்து, "மறைநெறியை நீங்கிய நீங்கள் ஈங்கிருத்தலை நான் உணரவில்லை. இதனை எவரும் எனக்கு இயம்பவும் இல்லை. இதனை நல்வழி என்று எண்ணி நான் இங்கு வந்துவிட்டேன். என்மீது சினங்கொள்ளுதல்வேண்டாம். நான் திரும்பிப்போய்விடுகிறேன்" என்றார்

அகத்தியர் அறைந்த அம்மாற்றங்களை அவ்வைணவர்கள் கேட்டு மீட்டுஞ் சீற்றங்காட்டினர். "நீ இவ்வூரில் வருவதுந் தீவினையாகும்; திரும்பிப்போய்விடக்கடவாய்" என்றார்கள். அகத்தியமுனிவர் திரும்பி வெளியே வந்தார்.

## போதியமலைப் புங்கவனின் போய்க்கோலம்

சிவபெருமானை யிகழுந் தீவினையாளர்களாகிய, திருமாலடியார்களின் ஆணவத்தை அகற்றுதல் வேண்டுமென்று அகத்தியமுனிவர் எண்ணினார். திருமால் அடியவரைப் போலப் பொய்க்கோலங்கொண்டார். திரும்பி வைணவர்

கள் இருக்கின்ற இடத்திற்குச் சென்றார். கோலம் பூண்ட மாலடியாரை வைணவர்கள் நெடுந்தொலைவிலேயே கண்டார்கள். விரைந்து எதிர்சென்று போற்றினார்கள். அகத்தியர் அவ்வைணவர்களைப்பார்த்துப் புகழ்ந்து பேசினார். "அழகர் மலையிலிருந்து அத்திகிரிக்குச் செல்லுகிறோம். ஈண்டெழுந்தருளியுள்ள எம்பெருமானைப் போற்றிச் செல்லவான் வந்தனம்" என்று கூறினார். வைணவர்கள், கோலம் பூண்ட குறுமுனிவரைக் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு சென்றார்கள். "இப்பெருமானை வழிபட என் மனம் விரும்புகிறது" என்றார் அகத்தியர்.

## செந்தமிழ் முனிவர் திருமாலைச் சிவனாக்குதல்

வைணவர்கள், திருமால் வழிபாட்டிற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் விரைந்து கொணர்ந்து, பொய்க்கோலப் புங்கவனிடம் கொடுத்தனர். அகத்தியர் ஆணவம் மிக்க வைணவர்களைப்பார்த்து "இவரை யாம் வழிபடும் முறையை நீங்கள் அனைவரும் நன்கு பார்த்துக்கொள்ளுங்கள்" என்றார். சிவபெருமானை யெண்ணிக்கொண்டு திருமாலின் திருமுடியின்மேலே திருக்கையை வைத்தார். "குறுகு குறுகு" என்று கூறி இருத்தினார். தீயிற்பட்ட மெழுகுப்பாவையைப்போலத்திருமால்வடிவத்தைக் குறையப்பண்ணினார். ஒரு சிவலிங்கமாகச் செய்து முடித்தார். வழிபாட்டுப் பொருள்களைத் தூய்மைசெய்து சிவபெருமானை வழிபட்டார். முன்னைய அகத்திய வடிவத்தைத் தாங்கினார்.

வைணவப் பார்ப்பனர்கள் அகத்திய முனிவரின் செய்கையைக்கண்டு சினங்கொண்டார்கள். "இவன் முன்னே சிவக்கோலத்தோடு வந்தவன். நாம் இகழ்ந்தபடியால் இவ்வாறு மாறுகோலம் பூண்டுவந்து நமது சமயத்தை அழித்துவிட்டான். "இவனைப் பிடியுங்கள்!" என்று சொல்லிக்கொண்டு அகத்தியரைப் பிடிப்பதற்காகச் சூழ்ந்தார்கள். அகத்தியமுனிவர் அப்பார்ப்பனர்களை எரி எழப்பார்த்தார். சினத் தீயைவிட்டார். அஃது அவர்களைச் சூழ்ந்து சுடத் தொடங்கியது. அவர்கள் மூலைக்கொருவராகச்

சிதறி ஓடிப்போனார்கள். அன்றுமுதல் அப்பதி சிவப் பதியாயிற்று. அகத்தியர் சிவவடிவத்தை வணங்கிப் பொதியமலையுற்றுத் தவம் புரிந்துகொண்டிருந்தார்.

## உகூ. இந்திரன் வழிபாடு

### பூங்கா தழைத்தலும் சிவவழிபாடும்

அகத்திய முனிவருடைய கமண்டலத்தினின்றும் ஆனைமுகக்கடவுள் அருளாற் புறப்பட்ட காவிரி, இந்திரனிருக்குஞ் சீர்காழிப்பதியை அடைந்தது. அதனாற் சிவபெருமானுடைய திருவடிகளைப் போற்றினான். பூம்பொழில் தழைத்து வளர்ந்து செழித்து மலர்ந்தது. இந்திரன் மகிழ்ச்சி மிகுந்து இன்பக்கூத்தாடினான். பூஞ்சோலையில் உண்டான புன்னை, சண்பகம், பாதிரி, கொங்கு முதலிய மலர்களைக்கொண்டு சிவபூசனையை மறை முறைப்படி செய்து மகிழ்வு மிகுந்திருந்தான்.

## ௩௦. தேவர்கள் புலம்புதல்

### தேவர்கள் இந்திரனைக் காணுதல்

மேற்கூறியவாறு தேவேந்திரன் சீர்காழியில் தங்கியிருக்கும்போது, தேவர்களில் சிலர் இந்திரனைத் தேடிக் கொண்டுவந்து சீர்காழியிலே கண்டார்கள். அவர்கள் சூரபன்மனுடைய ஏவலைச்செய்து திரிந்தமையின் மெலிந்து தளர்ந்திருந்தார்கள். அவர்கள் இந்திரனைக் கண்டதும் அவன் அடிகளில் விழுந்து வணங்கினார்கள்; பலவாறு புலம்பலானார்கள். "நாங்கள் சூரபன்மனுக்குக் குற்றேவல் செய்து பெருமையிழந்தோம். கற்ற மறைகளையும் முற்ற மறந்துவிட்டோம். இனி எங்களால் சூரபன்மன் கொடுமையைத் தாங்கமுடியாது. எங்களைப் பாதுகாவாமல், நீர் மட்டும் இங்கே மறைந்திருக்கிறீர்! உமக்கு இது தகுமா?" என்றார்கள்.

இந்திரன் தேவர்களைப் பார்த்துச், "சூரபன்மன் செய்தற்கரும் வேள்வியைச் செய்யத்தொடங்கிய அன்றே

நமது மேன்மைகளெல்லாம் தொலைந்தன' என்று நான் சொல்லவில்லையா? சூரபன்மன் என்னைப் பிடித்துச் சிறை செய்துவிட்டு இந்திராணியைக் கைப்பற்ற எண்ணினான். நான் அதனை உணர்ந்தே இந்திராணியோடு இந்தவிடத்திற்கு மறைந்தோடி வந்துவிட்டேன். மனைவியையும் அவனிடம் பறிகொடுத்துச் சிறைப்படுதல் நன்மையாகுமா? நம் துன்பங்களெல்லாம் ஒழிதற்பொருட்டுத் தேவதேவனாகிய சிவபெருமானை வழிபாடு செய்துகொண்டு இங்கிருந்தேன். வாருங்கள்; நாம் திருக்கைலாயமலைக்குச் சென்று சிவபெருமானைக் கண்டு முறையிட்டுக்கொள்வோம்" என்றான்.

### தேவர்கள் பதில்

இந்திரன் இயம்பியவைகளைக் கேட்டுத் தேவர்கள் மகிழ்ந்தார்கள். "எங்கள் பொருட்டே நீர் இங்கும் முயன்றுகொண்டிருக்கிறீர்! எங்கட்குத் தாயுந்தந்தையும் தெய்வமும் தவமும் செல்வமும் அறிவும் பிறவும் நீரே யாவீர். எங்கட்கு ஒரு குறைவும் உண்டாகுமோ? எங்களைச் சிவபெருமானிடத்திற்கு அழைத்துக்கொண்டு செல்லும்" என்றார்கள். இந்திரன் 'அவ்வாறே செல்லுவோம்' என்று சொல்லிவிட்டு இந்திராணியிருந்த இடத்திற்குச் சென்றான்.

## ௩க. இந்திராணியின் தளர்ச்சி

### இந்திரனும் இந்திராணியும்

இந்திரனுடைய வருகையைக்கண்ட இந்திராணி எதிரே சென்று வணங்கினாள். இந்திரன் திருக்கைலைக்குச் சென்று திரும்பவேண்டுமென்னுஞ் செய்தியைக் கூறினான். தேவர்கள் வந்துள்ளமையையும் அவர்கள் படும் அல்லல்களையும் தெரிவித்தான்.

இந்திரனது மொழிகளைக் கேட்ட இந்திராணி தளர்ந்து வருந்தினாள். நான் நம்முடைய பொன்னுலகத்தையும் செல்வச் சிறப்புக்களையும் பிரிந்து இவ்விடம் வந்

திருந்தாலும் உம்முடன் இருத்தலினாலே மகிழ்ந்திருக்கிறேன். நீர் என்னைப் பிரிந்து சென்றால் எனக்கு யார் துணையாவர்? நான் உயிர் வாழும் வழியும் உண்டோ? நான் தனியேயிருந்தால் அவுணர்கள் வந்து தொல்லை செய்வார்கள். அவர்களோ நல்வினை தீவினைகட்கஞ்சாத பொல்லாதவர்கள். நம்முடைய மகனாகிய சயந்தனும் இங்கிலன். ஆகையால், திருக்கைலைமலைக்கு நானும் வருகிறேன்; புறப்படும்" என்று கூறி எழுந்தாள்.

இந்திரன் சிறிது எண்ணினான். "உன்னை இவ்விடத்திற் பாதுகாப்போர் இல்லையென்று நினைத்து வருந்தாதே! சிவபெருமானுந் திருமாலுஞ் சேர்ந்துபெற்ற ஐயனார் நமக்கு ஒப்பற்ற துணையாகவிருக்கிறார். அவர் உன்னைக் காப்பாற்றுவார். நீ அவரை, 'இங்கே வருக!' என்று அன்போடு எண்ணினால் அவர் வருவார்," என்று கூறித் தேற்றினான். ஐயனாருடைய வரலாற்றை அயிராணி அறிய விரும்பினாள். இந்திரன் இயம்பலானான்.

## ௩௨. ஐயனார் வரலாறு

### தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைதல்

முன்னொருகாலத்தில் திருமால் முதலிய தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். அவர்கள் சிவபெருமானைச் சிறிதும் எண்ணாமல் கடைந்தபடியால் நஞ்சு எழுந்தது. தேவர்கள் அஞ்சிவிழுந்தோடினார்கள். கயிலையை அடைந்து கண்ணுதற் பரமன் கான்மலர்களைப் போற்றினார்கள். அந்த நஞ்சையுண்டு இறைவன் தேவர்களைப் பாதுகாத்தார். "இன்னும் பாற்கடலைக் கடையுங்கள் அமுதம் உண்டாகும்" என்று ஆணையிட்டார். தேவர்கள் மீண்டுங் கடைந்தார்கள்.

### ஆனைமுகக்கடவுள் வழிபாடு

கடையத் தொடங்கியபோது விநாயகக்கடவுளை வழிபாடு செய்யவில்லை. அதனால் மந்தரமலையாகிய மத்துப் பாதலத்தில்போய் அழுந்தியது. ஆனைமுகக்கடவுளை வழி

பாடு செய்யாமையால் இவ்வாறு நிகழ்ந்ததென்றுணர்ந்த தேவர்கள், விநாயகரை வழிபட்டுக் கடைந்தார்கள். மத்து முன்போல் நிலைபெற்று நின்றது.

## அமுதமும் மோகினியும்

தேவர்கள் பாற்கடலை நன்கு கடைந்தார்கள். பொற்குடத்துடன் அமுதம் மேலெழுந்தது. தேவர்களும் அவுணர்களும் அமுதம் தத்தம் முயற்சினால்தான் தோன்றிற்றென்றும், அதனால் தத்தமக்கே உரியதென்றும் தம்முள் மாறுபட்டுப் போர் செய்யலானார்கள். திருமால் அப்போரை ஒரு சூழ்ச்சியினாலே போக்க எண்ணினார். அனைவரும் விரும்பத்தக்க மோகினி வடிவத்தை யெடுத்துக்கொண்டு நின்றார். அவுணர்கள் அமுதத்தை விட்டுவிட்டு அம் மோகினியை விரும்பினார்கள். தேவர்கட்கும் மோகினியினிடத்திலே காதலுண்டாயிற்று.

## துளபமால் சூழ்ச்சி

திருமாலாகிய மோகினியானவள் அவுணர்களையுந் தேவர்களையும் பார்த்து, "நீங்கள் போரை விடுங்கள்!" இங்கே நான் இருக்கிறேன். அமுதமும் இருக்கிறது. நீங்கள் இருபக்கத்தினரும் அவரவர்கட்கு வேண்டியதைப் பற்றுங்கள்" என்றாள். அவுணர்கள் மோகினியைப் பார்த்து, "எங்கட்கு நீதான் வேண்டும்!" என்றனர். தேவர்கள், "எங்கட்கு அமுதமே வேண்டும்!" என்றார்கள். தேவர்கள் அமுதத்தைத் தூக்கிக்கொண்டு ஒருபக்கஞ் சென்றார்கள். அவுணர்கள் மோகினியை அழைத்துக் கொண்டு ஒருபக்கஞ் சென்றார்கள்.

## அவுணர்கள் போர்செய்து இறத்தல்

மோகினியை அழைத்துக்கொண்டு சென்ற அவுணர்கள், அவளைத் தழுவ முயன்று, தங்களுக்குள் போர் செய்யத்தொடங்கினார்கள். போர்செய்து மாளலானார்கள்.

## கரும்பாம்புஞ் செம்பாம்பும் (இராகு கேதுக்கள்)

அவுணர்களுக்குள் இருவர், துளபமால் செய்த சூழ்ச்சியை உணர்ந்துகொண்டார்கள். நாமும் மற்றவர்

களைப்போல ஒழியலாகாது என்று உறுதிசெய்துகொண்டார்கள். தேவர்களுடைய வடிவத்தைக்கொண்டு தேவர்களுக்குள் கலந்துநின்றார்கள். அவுணர்கள் அழிந்தொழிந்ததும் திருமால் பழைய வடிவத்தைக்கொண்டு தேவர்களிடஞ் சென்றார். அமுதத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கலானார். கள்ளத்தேவர்களாக மெள்ளக் கலந்துநின்ற அவுணர்களிருவருந் தங்கட்குக் கொடுக்கப்பட்ட அமுதத்தை விரைந்து சாப்பிட்டார்கள். அவர்களது செயலைக்கண்டு கதிரவனுந் திங்களும் அவர்கள் கள்ளத்தேவர்கள் என்பதை மெள்ளத் திருமாலுக்குக் காட்டினார்கள். கள்ளத்தேவர்களைக் கண்டதும் திருமாலுக்குச் சினமுண்டாயிற்று. அகப்பையினால் அவ்வவுணர்களின் தலைமீது அடித்துத் தலையைத் துண்டாக்கினார். உண்ட அமுதம் கண்டத்தை அண்டுமுன், மண்டையைத் துண்டங்கண்டமையின் மண்டைகள் அழியவில்லை. உடல்கள் மட்டும் அழிந்தன. அவர்களிருவருஞ் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து கிரகங்களாயினர். கோளுரைத்த கதிரவனையுந் திங்களையும் ஒவ்வொரு காலங்களில் மறைக்கலாயினர்.

## சிவபெருமானுந் திருமாலும்

திருமாலானவர் தாம் முன்புகொண்ட மோகினி வடிவத்துடன் திருப்பாற்கடலின் கரையில் அமர்ந்திருந்தார். சிவபெருமான் ஓரழகிய திருக்கோலத்துடன் ஆங்கு சென்றார். "உன் கோலம் நன்றாக இருக்கின்றது!" என்றார். அவரது கையைப் பிடித்தார். திருமால் நாணிக் கோணி ஓடினார். நாவலந்தீவில் உள்ள ஒரு சாலமரத்தின் கீழே மோகினியைக் கூடினார்.

## சாலக்கிராமம்

திருமாலும் சிவபெருமானும் கூடியகாலத்துக் கான்றுமிழ்ந்த நீரானது கண்டகி என்னும் ஆறாகப்பெருகியது. அந்நீரில் வச்சிரதந்தி என்னும் புழுக்கள் உள்ளிலேயும் வெளியிலேயும் ஆழிக்குறியோடு பொன்வண்ணமாகத்

தோன்றும். அப்புழுக்கள் அவ்வாற்றிலுள்ள மண்ணினாற் கூடுகளையுண்டாக்கும். அக்கூட்டினுள் சிலநாள் தங்கியிருந்து இறக்கும். அவை இறந்தபின் அக்கூடுகள் ஆழிக் குறியுடையனவாகக் காணப்பெறும். அவைகள் ஆற்றின் கரையில் ஒதுங்கும். அக்கூடுகளை மக்கள் எடுத்துப் பார்த்து அவற்றின் குறிகளைக்கொண்டு சிவபிரான் திரு மால் என்று பிரித்தறிந்து வழிபாடு செய்வார்கள்.

## ஐயனார் தோற்றம்

"சிவபிரானுந் திருமாலுஞ் சேர்ந்தபொழுது, கரிய உடலுஞ் சிவந்த சடையுஞ் செண்டு தாங்கிய கையு முடைய ஓர் ஐயன் தோன்றினார். சிவபிரான் அவ்வைய னுக்குப் பலவகை மேன்மைகளைக் கொடுத்தார். உருத் திரர்களுள் ஒருவராக்கினார். ஓர் உலகத்தைக் கொடுத்தார். தேவர்களும் முனிவர்களும் வணங்குஞ் சிறப்பையளித்தார். மாலுக்கும் ஐயனுக்கும் விடைகொடுத்து மறைந்தருளி னார். அத்தகைய பெருமையையுடைய ஐயனார் எல்லோ ராலும் வணங்கத்தக்க மேன்மையுடையவர். அவர் உனக்கு யாதோர் ஊறுபாடும் உண்டாகாமற் பாதுகாத்துக் கொள்வார்" என்று கூறினான். அதன்மேல் அயிராணி அங்கிருத்தற்கு உடன்பட்டாள்.

## இந்திரனுக்கு ஐயனார் காட்சி

இந்திரன் ஐயனாரை எண்ணினான். அவர் வெள்ளை யானையின்மேல் தேவியர்களோடு தோன்றியருளினார். இந்திரன் அவருடைய அடிகளில் விழுந்து வணங்கிப் போற்றினான். தான் திருக்கைலை சென்று மீளுமளவும் இந்திராணியைப் பாதுகாத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். ஐயனார் அவ்வாறே செய்வோ மென்று உறுதிகூறி, இந்திரனைக் கைலைக்குச் செல்லக் கூறினார். மகாகாளர் என்பவரை இந்திராணிக்குக் காவ லாக அமைத்துச் சென்றார்.

## ௫௩. இந்திரன் கைலைக்குச் செல்லுதல்

இந்திரன் இந்திராணியைப் பார்த்து, "ஐயனார் உன்னைப் பாதுகாப்பார்" என்று தெளிவித்தான். தான் தேவர்களையழைத்துக்கொண்டு திருக்கைலாயமலையை அடைந்தான். முதல்வாயிலைச் சேர்ந்து நந்திதேவரைப் போற்றி நின்றான். நந்திதேவர் இந்திரனைப் பார்த்து, "வந்த செய்தி என்ன?" என்று கேட்டார். இந்திரன் தான் வந்த செய்தியைக் கூறினான். "சிவபெருமான் சனகர் முதலிய நால்வருக்கும் மெய்யறிவையுணர்த்திக் கொண்டிருக்கின்றார். இப்பொழுது அங்கே எவருஞ் செல்லுதல் கூடாது" என்றார் நந்திதேவர். நந்திதேவர் மொழிந்ததைக்கேட்ட இந்திரன் துன்பக்கடலில் ஆழ்ந்தான். தேவர்களுந் தானும் சூரபன்மனுக்கு மீன் சுமத்தல் முதலிய இழிதொழில்களைப் புரியுமாறு நேரிட்ட தன்மையைச் சொன்னான். இவைகளெல்லாம் நாங்கள் செய்த தீவினைப் பயனாக நிகழ்ந்தனவென்றான். "சிவபெருமானைக் காணுங் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு இங்கு ஓர் இடத்திலே இருக்கின்றேன்" என்றான். நந்திதேவரும் அவ்வாறே இருக்குமாறு திருவருள் புரிந்தார். இந்திரனுந் தேவர்கள் பலரும் அங்கு தங்கியிருந்தனர்.

## ௫௪. அசமுகி

### இந்திராணியை அசமுகி காண்டல்

இந்திரன் கைலைக்குச் சென்றபிறகு தனியாக இந்திராணியானவள் தவஞ்செய்துகொண்டிருந்தாள். தன் தலைவன் விரைந்து வராமையை எண்ணி அவள் வருந்திக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் மிகக் கொடியவளும் ஆட்டுத் தலையையுடையவளும் சூரபன்மாவின் தங்கையுமாகிய அசமுகி அங்கே வந்தாள். அவள் இந்திராணியைக் கண்டாள்; மகிழ்ச்சி கொண்டாள். "இவளை எண்ணி நம் அண்ணன் மெலிகின்றான் அல்லனோ? இவளைக்கொண்டு போய் அவனிடஞ் சேர்ப்போம்" என்று எண்ணினாள். இந்திராணியை நெருங்கினாள்.

அசமுகியைக்கண்ட அயிராணி அஞ்சியெழுந்தாள். அசமுகி அயிராணியைப் பார்த்து, "மாதே! உன்னுடைய பேரழகும் இளமையும் வீணாகப்போகின்றன. நீ தவஞ் செய்தல் தக்கதன்று. திருமகளும் நினக்கு ஒப்பாகமாட்டாள். உன்னை நாடி என் அண்ணன் சூரபன்மன் தவஞ் செய்துகொண்டிருக்கிறான். இந்திரன் உனக்குத் தகுந்த கணவன் அல்லன். என் தமையன் உன் கணவனைவிடப் பன்மடங்கு சிறந்தவன். உன் கணவன் விண்ணுலகம் ஒன்றைமட்டும் ஆள்பவன். என் அண்ணனோ ஆயிரத் தெட்டு அண்டங்களை ஆள்பவன். அழிவில்லாதவன். இந்திரனோ அழியக்கூடியவன். ஆகையால், நீ சூரபன்மனோடு இருந்து வாழ்! உன்னுடைய பேரழகு பன்னெடுங் காலமாக வீணாகப் போய்விட்டது. இனிமேலாயினும் நீ நன்றாக எண்ணிப்பார்; மும்மூர்த்திகளாலும் புகழப் பெறும் சூரபன்மனுக்கு உன்னை நான் மனைவியாகச் செய்கிறேன். இஃது உண்மை. விரைந்து என்னோடு கூட வருவாயாக!" என்றாள்.

## ௩௫. இந்திராணி மறுத்துரைத்தல்

### அசமுகிக்குப் பதிலுரைத்தல்

அசமுகி கூறிய கொடுமொழிகள் அனைத்தையும் இந்திராணி கேட்டாள். தன் காதுகளைக் கைகளினால் மூடிக்கொண்டாள். அசமுகியைப் பார்த்து, "நீ இங்கே சொன்னமொழிகளைக் கேட்டவர்களும் அளற்றினை (நரகம்) அடைவார்கள். இவைகளைச் சொன்ன உனக்கு வருந் தீமையை யார் இவ்வளவென்று கூறக்கூடும்? காசிப முனிவரின் மகளாகிய நீ இவ்வாறு அறிவற்றமொழிகளைப் பேசலாமா? செல்வமும் வாணாளும் கீர்த்தியும் அற்றவர்களுக்கே இத்தகைய தீய எண்ணம் வரும். நீ இவைகளை நினைக்காமல் வாழ்வாயாக! நான் என் கணவனையன்றி வேறொருவரையும் நாடேன்! நீ கூறுகிற மொழிகள் உன் சுற்றத்தினர்கட்கு நன்மை பயப்பனவல்ல. என் கணவன் துன்பப்படுகிறான் என்கிறாய்! இத்துன்பம் உங்கட்கு வாராதா? நீ நன்னெறியற்றவளாகையால் அறிவுமயங்கிப்

பேசினாய்! நீ உய்யவேண்டுமானால் இதனை மறந்துவிடு. எனக்கு யாண்டுங் காவலுண்டு. ஆகையால், நீ விரைந்து சென்று விடுவாயாக!" என்று கூறினாள்.

## அசமுகி இந்திராணியைப் பற்றுதல்

இந்திராணி இயம்பியவைகளைக் கேட்ட அசமுகி உதட்டைக் கடித்தாள். கையோடு கையைப் புடைத்தாள். சினநகை நகைத்துச் சீறினாள். அறிவற்ற அசமுகிக்கு இந்திராணி இயம்பிய மொழிகளால் யாதும் பயனில்லை. அசமுகி இந்திராணியைப் பார்த்து, "நான் உனக்கு நன்மொழிகளைக் கூறினேன். நீ அதனைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. எனக்கு மாறுபாடாகப் பேசுகிறாய்! நான் உன்னை உண்டுவிடுவேன்! என் அண்ணனாகிய சூரபன்மனுக்காக அவ்வாறு செய்யாது விட்டேன். நான் உன்னை வலிந்து பிடித்து இழுத்துக்கொண்டு செல்வேன். மும்மூர்த்திகளும் வந்து தடுத்துப் போர்செய்தாலும் விடமாட்டேன்" என்று கூறினாள். அயிராணியின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு விரைந்துசென்றாள். அசமுகியின் அழுத்தமான பிடியில் அகப்பட்டு அயிராணி, "ஐயகோ!" என்று அலறினாள். அறிவழிந்து கண்ணீர் வடியத்தேம்பினாள். "ஐயனாரே! ஓலம். எங்கள் கடவுளே ஓலம்! செண்டையேந்திய கையரே ஓலம்! தேவர்கட்கு முதல்வரே ஓலம், எங்கள் கடவுளே ஓலம்! மெய்யர்க்கு மெய்யரே ஓலம்!" என்று பலவாறு கதறினாள்.

# ௩௬. மகாகாளர் வருதல்

## அசமுகியைத் தடுத்து நிறுத்தல்

அண்மையில் மறைந்து நடப்பவைகளைப் பார்த்துக் கொண்டு நின்ற மகாகாளர் அசமுகி அயிராணியைப் பற்றி யிழுத்தலைக் கண்டார். விரைந்து புகுந்தார். அசமுகியைப் பார்த்துக், "களவுசெய்துகொண்டு எங்கே செல்கின்றாய்? நில்" என்று அதட்டிக்கொண்டு வந்தார். இந்திராணியைப் பார்த்து, "நீ சிறிதும் அஞ்சாதே! உன்னைத் தொட்ட

இவளுடைய கையை இதோ வெட்டிவிடுகிறேன்" என்றார். இந்திராணி அச்சம் நீங்கினாள். அசமுகி வீரமகாகாளரை விழித்துப்பார்த்தாள். 'மும்மூர்த்திகளுங்கூட என்முன் நில்லார்! இவ்வாறு என்னை எதிர்க்கத்துணிந்தவன் யாவன்' என்று எண்ணமிட்டாள். மகாகாளர் அசமுகியைப் பார்த்து, "இவளை இப்பொழுதே விட்டுவிடு; அவ்வாறு விட்டுவிடுவாயாகின் உன் குற்றத்தைப் பொறுப்பேன்! கொல்லாமலும் விட்டுவிடுவேன்" என்றார்.

அசமுகி மகாகாளரைப்பார்த்து, "அஞ்சாது என்முன் இம்மொழிகளைப் பேசினாய்! உனக்கு இந்த வேலையைத் தந்தவர் யாவர்?" என்று கேட்டாள். மகாகாளர் அசமுகியைப் பார்த்து, "மூவுலகங்களையும் காப்பவன்; முகில் போலக் கரியவன்; வெள்ளையானையையுடைய ஐயன் எனக்கு இந்த வேலையைக் கொடுத்தான். என் பெயர் வீரமகாகாளன்" என்று விளம்பினார்.

மகாகாளரின் மாற்றம் ஐயனாருக்கும் இந்திரனுக்கும் பொதுவாக அமைந்திருந்தபடியால், இவன் இந்திரனுடைய ஏவலாள் என்று வருடைமுகத்தினள் மாறுபட எண்ணிக்கொண்டாள். இவனைக் கொல்வேன் என்று எண்ணிச் சூலத்தை வீசினாள். மகாகாளர் முத்தலைச் சூலத்தை இரு துண்டாகும் வண்ணம் வாளால் ஒரே வீச்சாக வீசினார். இந்திராணியைத் துன்முகி கையில்கொடுத்துவிட்டு அவள் கையிலிருந்த சூலத்தை வாங்கி வீரமகாகாளர் மார்பில் குத்தும்படி ஆட்டுமுகத்தினள் நீட்டினள். மகாகாளர் அதனையும் இரு துண்டுகளாகும்படி வெட்டினார். ஆட்டு முகத்தினள் ஒரு மலையைப் பிடுங்கி எறிந்தாள். அவர் வாளினால் தூளியாக்கினார். மலையும், வாளுந் தூளாகியது.

## மாதர் இருவரின் ஒவ்வொரு கையையும் மகாகாளர் வெட்டுதல்

ஆட்டுமுகத்தினள் மகாகாளரைப் பார்த்து, "நான் எல்லாவுலகங்களையும் இனிதாளும் சூரபன்மாவாகிய என் தமையனுடைய தோள்களிலே இவளைச் சேர்க்கும்படி

கொண்டுபோகின்றேன். நீ அறிவின்மையினால் இதனையுணராது தடுக்கின்றாய்! தாரகாசுரனுடைய படைவீரர்கள் வந்தால் உன்னைக் கொன்றுவிடுவர். அல்லாமலும் நானே உன்னைத் தின்றுவிடுவேன்! அவ்வாறு தின்பதனால் என்னுடைய பெரும் பசி அடங்காது என்று எண்ணி அவ்வாறு செய்யவில்லை நீ வீணாக இறவாமல் பிழைத்தோடிப்போ" என்றாள்.

மகாகாளர் மறிமுகத்தினள் மாற்றத்தைக் கேட்டார். "வாட்படையால் உன்னுடைய சூலப்படையை வெட்டினேன். பெண் என்று எண்ணி உன்னைக் கொல்லாமல் விட்டேன். வீணாகக் கையைப் போக்கிக்கொள்ளாமல் இவளை விட்டு விட்டு விரைந்தோடிப்போ" என்றார்.

அசமுகி, "இவன் கையில் படையில்லை; இவனை வேறலும் அரிது" என்று எண்ணி துன்முகி கையிலிருந்த இந்திராணியைப் பற்றியிழுத்துக்கொண்டு விரைந்து சென்றாள்.

வீரமகாகாளர் மின்னெனப் பாய்ந்தார். அசமுகி கூந்தலைக் கையாற் பிடித்தார். இடையிலிருந்த உடைவாட்படையை எடுத்தார். இந்திராணியைப் பிடித்திருந்த கையை வெட்டி வீழ்த்தினார். இந்திராணியை விடுவித்தார். அசமுகியை அடிகளால் உதைத்துப் புரட்டினார். பக்கத்தில் நின்ற துன்முகியின் கையில் ஒன்றையும் வெட்டினார். அவளையும் உதைத்துப் புரட்டினார்.

## ௧௭. அசமுகி தளர்ச்சி

### ஆட்டுமுகத்தினள் வாட்டமடைந்து புலம்புதல்

அசமுகியின் வெட்டுண்ட கையினின்றும் குருதி ஆறாய்ப் பெருகியது. புரண்டு புரண்டு வருந்திப் புலம்பினாள். கையை நிலத்தில் அறைந்தாள். கடகடவென்று புரண்டாள். மார்பும் முதுகுந் தேய உருண்டாள். நிலத்தைக் காலால் உதைத்தாள். வாயினால் தீயைக் கக்கினாள். மகாகாளரின் ஆற்றலைப் புகழ்ந்தாள். "அந்தோ!

நான் இவ்வாறு இழிவுக்குள்ளாக நேர்ந்ததே!'' யென்று கலுழ்ந்தாள். உலகங்கள் எல்லாவற்றையும் அழிப்பேன் என்று சினந்தாள். அவளுக்குண்டாகிய துன்பத்தால் பலவாறு புலம்பி ஏங்கி நைந்தாள்.

### அசமுகியைத் துன்முகி தேற்றுதல்

அசமுகி பலவாறு அலறித் துன்புறுதலை, அவளைப் போன்றே கையிழந்த துன்முகி கண்டு வருந்தினள். "நாம் உன் அண்ணனாகிய சூரபன்மனிடத்திலே சென்று சொல்லுவோம் வா!" என்று கூப்பிட்டாள். அசமுகி அப்படியே செய்வோமென்று எழுந்தாள். துன்பஞ் சிறிதும் இல்லாமல் நின்ற இந்திராணியைப் பார்த்து, "உலகங்கள் எல்லாவற்றினுஞ் சூரனுடைய ஆணை செல்லும். நீவிர் எங்கு சென்று ஒளித்தாலும் இனி உமக்கு உய்தலில்லை. விரைவில் தேவர்களையும் உன்னையுஞ் சிறைப் படுத்தச் செய்வேன்; இஃது உண்மை. உங்களைச் சிறை செய்யாமல் விடுவேனாயின் நான் சூரபன்மனுடைய தங்கை யல்லள்!'' என்று சூளுரை சொல்லி அவ்விடத்தைவிட்டு நீங்கினாள்.

## ௩அ. இந்திரன் திரும்புதல்

### நாரதர் தொண்டு

நிகழ்ந்தவைகளை நாரதமுனிவர் உணர்ந்தார். விரைந்து திருக்கைலைமலையை அடைந்தார். அங்கு இறைவனைக் காண்டற்குக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு தேவர்களுடன் அமர்ந்திருந்த இந்திரனைக் கண்டார். இந்திராணியைப்பற்றிய செய்திகளை இயம்பினார். இந்திரன் கேட்டு வருந்தினன். தேவர்களுடன் புறப்பட்டுச்சென்று நந்தி தேவரைக் கண்டான். இறைவன் எங்கட்கு அருள்புரிதற்குத தக்க காலம் இன்னும் வரவில்லை. நான் தேவர்களோடு நிலவுலகிற்குச் சென்று இன்னுந் தவத்தைச் செய்கிறேன் விடை தந்தருளும்'' என்று வேண்டிக்கொண்டான். நந்திதேவரும், "அவ்வாறே செய்க!" என்று

விடை தந்தருளினார். தேவேந்திரன் தேவர்களோடு சீர்காழியை அடைந்தான். வீரமகாகாளரைக் கண்டு போற்றி அவருக்கு விடைகொடுத்தனுப்பினான். அயிராணியைக் கண்டு அவளுடைய அல்லலை அகற்றினான். அசமுகி கூறிய சூளுரையை இந்திராணி கூறினாள். இந்திரன், இந்திராணியோடும் உடனிருந்த தேவர்களோடும் மேருமலையை அடைந்தான். ஆங்கோரிடத்திலே மறைந்திருந்தான்.

## ௩௪. சூரபன்மன் அரசிருக்கை

### சூரபன்மன் அரசாட்சி செய்திருக்குஞ் சிறப்பு

அசமுகியும் துன்முகியும் மகேந்திரபுரியை அடைந்தார்கள். அப்பொழுது சூரபன்மன் அரசிருக்கையில் அமர்ந்திருந்தான். வெண்கொற்றக் குடைகள் அவனுக்கு நிழலைச்செய்துகொண்டிருந்தன. சிங்கமுகனும் தாரகாசுரனும் இருபக்கங்களினும் அமர்ந்திருந்தார்கள். அமைச்சர்களும் புதல்வர்களுஞ் சூழ்ந்திருந்தார்கள். சாமரங்கள் இரட்டின. தெய்வபெண்கள் கூத்தியற்றினார்கள். நான்முகன் காலையிலே பஞ்சாங்கஞ் சொல்லுதற்கு இடங் கிடைக்காமல் ஒரு பக்கத்தில் ஒதுங்கியிருந்தான். முனிவர்கள் அடிக்கடி வாழ்த்துரை கூறிக்கொண்டிருந்தார்கள். பல பெண்கள் ஆலத்தி சுற்றிக்கொண்டிருந்தார்கள். கின்னரர் சித்தர் முதலானோர் மங்கலம் பாடினார்கள். மற்றும் பலவகைச் சிறப்புக்கள் நிகழ்ந்தன.

சூரபன்மன் அமர்ந்திருந்த அத்தாணி மண்டபம் ஆயிரங்கோடிப் பொன் தூண்கள் அமைக்கப்பட்டிருந்தது. பலவகை வண்ணம் பொருந்திய ஓவியங்களையும் கண்ணாடிகளையும் மேற்கட்டியையுமுடையதாகவிருந்தது. சாமரங்களும் குஞ்சங்களும் இடையிடையே தொங்கின. அந்த அத்தாணிமண்டபம் ஆயிரம் யோசனை பரப்புடையதாக இருந்தது. அவன் அமர்ந்திருந்த அரியணையோ பொன்னாற்செய்து இரத்தினங்கள் பதிக்கப்பெற்றிருந்தது.

## ௪௦. அசமுகி நகர் காண்டல்

### அசமுகியை அவுணர்கள் காண்டல்

துன்முகியாகிய தோழியுடன் அசமுகி மகேந்திரபுரிக்குள் நுழைந்தாள். அந்நகரத்திலுள்ள அவுணர்கள் அவர்களைக் கண்டார்கள். இழிந்த இச்செயலை இவர்களிடத்திலே செய்தவர்கள் யாவரென்று சினந்தார்கள். பலவகைச் செயல்களினும் ஈடுபட்டிருந்தவர்கள் அச்செயல்களை விட்டுவிட்டு எழுந்து வந்தார்கள்.

அவர்கள் பலவகையாகப் பேசலானார்கள். சிலர், "இது சிவபெருமானுடைய செயலோ!" என்றார்கள். சிலர், "இது துர்க்கையினுடைய செயலோ!" என்றார்கள். சிலர், "இஃது ஐயனாருடைய செயலோ!" என்றார்கள். சிலர், "இஃது ஆனைமுகக்கடவுளுடைய செயலோ!" என்றார்கள். சிலர், "இது திருமாலின் செயலோ!" என்றார்கள். சிலர், "முனிவர்களுடைய சாபத்தால் இவர்களுடைய கைகள் வீழ்ந்தன போலும்" என்றார்கள். சிலர், "இவர்கள் தங்களுக்குள்ளே போர்செய்து ஒருவர் கையை மற்றொருவர் வெட்டிக்கொண்டார்கள் போலும்!" என்றனர். சிலர், இந்த அசமுகியின் கையை வெட்ட வல்லவர்கள் யாவர்?" என்றனர். மற்றும் பலர் பலவாறு பேசவும், மகேந்திரபுரத்து ஆடவர்களும் பெண்களும் தன்னைத் தொடர்ந்துவரவும் அசமுகியானவள் துன்முகியோடு அத்தாணிமண்டபத்தை அணுகினாள்.

## ௪௧. அசமுகி புலம்புதல்

### அசமுகி உறவினர்களை நோக்கி அரற்றுதல்

அத்தாணிமண்டபத்தை அடைந்த அசமுகி பலவாறு கதறலானாள். "என் தாயே! சிவபெருமான் வரங்கொடுத்த அந்நாளில், 'எந்நாளும் உங்களைக் காத்துத் திரிவேன்' என்றாய். அம்மொழியை மறந்துவிட்டாயோ? என் கை போனதுணராயோ? தந்தையர்கள் ஆண்மக்களிடத்திலும், தாயர்கள் பெண்மக்களிடத்தும் அன்புவைப்பர். அம்

முறைபற்றி என் துன்பத்தைப் போக்க வந்தாயில்லை. உடன்பிறந்தார்களே! நீங்கள் எங்கும் வந்து பாதுகாப்பீர்களென்று எண்ணினேன். அஞ்சாது அயிராணியைப் பற்றி யிழுத்தேன். விரைந்துவந்து வீரமகாசாளன் என் கையை வெட்டினான். அவளையும் மீட்டான். எல்லா ஆண்மைகளையும் உடையவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் நீங்கள், ஒருவன் என் கையை வெட்டியதை யறியவில்லையா? 'இந்திரன் நமக்கு மீன்சுமந்து திரிகிறான்' என்று சொல்வீர்கள். அவனுடைய ஏவலாள் என் கையை வெட்டியதைப் பார்க்கவில்லையா?

"குழந்தைக் காலத்திலே கதிரவனைப்பற்றிக்கொண்டு வந்து சிறைசெய்த மருகனே! என் கையை ஒருவன் வெட்டியதை நீ பார்க்கவில்லையா? ஓ தாரகனே! நீ திருமாலுடைய ஆழிப்படையை அணிகலமாக அணிந்தாய்! அவ்வாறாகவும், ஒருவன் என் கையை வெட்டியதைப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்! உன்னுடைய ஆற்றல் தேய்ந்துபோயிற்று? முன்பு ஒரு முனிவன் என்மக்களைக் கொன்றுவிட்டுத் தான் உயிரோடிருக்கிறான்! தங்கையாகிய நான் இவ்வாறு பலதுன்பங்களை யடையத் தமையன்மார்களாகிய நீங்கள் நன்றாக அரசுபுரிகிறீர்கள்! உங்களுடைய அரசாட்சி மிகவும் நன்றாக விருக்கிறது! கையை இழந்த யான் உயிரோடிருப்பது நல்லதோ? நான் உயிரை விடுகிறேன்! என் மானமே என்னைக் கொல்லுகின்றது! அந்தோ தீவினையாட்டியாகிய நான் பிறந்த பலன் இதுவோ?" என்று பலவற்றைக் கூறிக்கொண்டு, தன் பின்னே வருகின்ற துன்முகியோடும் போய் அத்தாணி மண்டபத்தில் இருக்கின்ற சூரபன்மனுடைய கால்களில் வீழ்ந்து புரண்டாள்.

## சஉ. சூரபன்மன் தண்டஞ் செய்தல்

### அவுணர்கோன் சினம் அடைதல்

அசமுகியின் கோலத்தைக்கண்டு அவைக்களத்திலிருந்தவர்கள் அஞ்சினர். அவுணர்கோன் தன்னிரு கண்களினின்றும் தீப்பொறி எழும்பும்படியாகப் பார்த்தான்.

"ஓ அசமுகியே! உன்னைத் தெரிந்துகொள்ளாமல் உன் கையையும் இவள் கையையும் இவ்வாறு வாளினால் வெட்டியவர் யாவர்? அவர்கள் இன்னும் உயிரோடிருக்கிறார்களா?" என்று கேட்டான்.

அசமுகி சூரபன்மனைப் பார்த்து, "இந்திரனுடைய இல்லாளாகிய இந்திராணி நிலவுலகிலே ஓரிடத்தில் தவஞ் செய்துகொண்டிருந்தாள். அவளை உன்னிடத்திற்குக் கொண்டுவரும்படி தூக்கினோம். ஒரு தேவன் விரைந்து வந்தான். எங்களிருவருடைய கைகளையும் வாட்படையால் வெட்டி வீழ்த்தினான். இந்திரன் மனைவியை மீட்டுக் கொண்டு சென்றான்," என்று சொன்னாள்.

சூரபன்மனுடைய கண்கள் தீயைக் கக்கின. வாய் புகையை வெளிப்படுத்திற்று. மூக்குக் கொதிக்கும் உயிர்ப்பை வெளிப்படுத்திற்று. பற்கள் உதட்டை மறைத்தன. வாய் இடியொலியை வெளிப்படுத்திற்று. புருவங்கள் துள்ளி நிமிர்ந்தன பற்களைக் கறகறவென்று கடித்தான். மனத்தினின்றுஞ் சினத்தீ மிகுந்தது.

சூரபன்மனுடைய சீற்றத்தைக்கண்டு நாற்றிசையிலுள்ளவர்களும் அஞ்சலானார்கள். எண்மலைகளும் மேரு மலையுங் குலைந்தன. தேவர்கள் ஏங்கி நடுங்கினர். மண்ணும் விண்ணும் நடுங்கின. கடனீர் நடுங்கியது. தேவர்களுடைய இருப்பிடங்களும நடுங்கின.

## சூரபன்மன் மற்றவர்களைப் பார்த்துச் சொல்லுதல்

அவுணர்கோன் தேவர்கள் அனைவரையும் அழிக்குமாறு எண்ணினான். அங்கே யிருக்கின்ற தம்பியர்களைப் பார்த்து, "நம்முடைய ஏவலினால் மீன் சுமந்து திரிந்த இந்திரன் காட்டில் மறைந்திருக்கிறானும். ஒருவனைக் கொண்டு இவர்களுடைய கையையும் வெட்டச்செய்தானும். இனி மக்கட்பிறப்பினரும் நம்மைக் கொல்வார்கள். சிவபிரான் அல்லன்; திருமால் அல்லன்; நான்முகன் அல்லன்; நம்முடைய ஏவலைச்செய்து திரிந்த இந்திரனுடைய ஏவ

லாள் இவர்களுடைய கையை வெட்டிவிட்டுப் பிழைத் திருப்பானே? இந்திரனையும் இந்திராணியையும் முன்னரே சிறையில் அடைக்காமற் போனேன். முன்னரோ பகைவர்களைத் தக்கவாறு ஒறுக்காமல் விட்டுவிட்டேன். இந்திரனை யும் இந்திராணியையும் தேடிச்சென்ற தூதுவர்கள், அவர்கள் இத்தகைய தீமைகளைச் செய்துகொண்டிருத் தலைக் கண்டுபிடிக்கவில்லைபோலும்! நீங்கள் இருக்கிறீர் கள்! மக்களும் இருக்கிறார்கள்! இணையிலாத இந்திர ஞாலத் தேர் இருக்கிறது! நானும் இருக்கிறேன்! எல்லா ரும் இருந்தும் என்னபயன்? இவ்வாறு தீமை நடைபெற் றிருக்கிறது. நம் தங்கைக்கு இத்தகைய தீமை வந்ததைப் பார்த்துக்கொண்டிருப்பதுதானே நம்முடைய ஆண்மைக் கழகு?'' என்று கூறி நகைத்தான்.

## பானுகோபன் தேவர்களைப் பிடிக்கப் புறப்படுதல்

தந்தை கூறியவைகளைக்கேட்ட பானுகோபன் சினத் துடன் எழுந்தான். தந்தைக்கு முன்சென்று வணங்கினான், "இந்திரன் நம் ஏவலைச்செய்து இளைத்து மறைந்தான். தேவர்களும் எளியவர்கள்; அவர்கள் இத்தகைய தொழிலை உள்ளத்தால் உள்ளுதலுஞ் செய்யார். என் அத்தை கையை இழந்தது என்ன மாயமோ தெரியவில்லை. தேவர் களில் ஒருவனே இவளுடைய கையை வெட்டிவிட்டு உயிரோடிருக்கிறான் என்று நீ சொல்வது எனக்கு வியப் பாக இருக்கிறது! அப்படி அவர்கள் செய்திருந்தாலும் உன்னுடைய சினத்துக்கு ஆளாகத்தக்க தகுதியையுடைய வர்களல்லர். கடல்மீனைச் சுமந்து திரிந்த தேவர்கள் ஆண்மையுடையவர்களாவார்களா? நான்முகன், திருமால், உருத்திரன் முதலியவர்களைச் சினந்தாலும் உனக்குத் தகும். உன் உள்ளத்திற்கொண்ட சினத்தை நீக்கு. இவர்க ளுடைய கை வெட்டப்பட்ட இடத்திற்கு நான் விரைந்து செல்லுகிறேன். கையை வெட்டியவனையும் உனக்கு மையல் மூட்டிய தையலாகிய அயிராணியையும் கள்ள னாகிய இந்திரனையும் கடிதிற் கொண்டுவருகிறேன். அவர் கள் அங்கில்லாமல் மறைந்துவிட்டால் விண்ணுலகத்தை

தீமூட்டி எரிக்கிறேன். உலகம் முழுவதும் தேடிப் பார்த்துத் தேவர்களை பிடித்துக்கொண்டு வருகிறேன். எனக்கு விடைதருவாயாக!'' என்று வேண்டிக்கொண்டான். "மகனே! அப்படியே செய்வாயாக!'' என்று சூரபன்மன் கட்டளையிட்டான். பானுகோபன் தன் மாளிகைக்குச் சென்றான்.

## வெட்டப்பட்ட கைவளர்தல்

சூரபன்மன் ஏவலாளரை நோக்கி, "நான்முகனை உடனே இங்கு அழையுங்கள்!'' என்று கட்டளையிட்டான். ஏவலாளர் அவ்வாறே அழைத்தனர். நான்முகன் சூரபன்மன்முன் விரைந்து சென்று பஞ்சாங்கத்தைக் கூறத் தொடங்கினன். சூரபன்மன் அவைகளொன்றையும் பொருட்படுத்தாமல் நான்முகனைப்பார்த்து, "ஓ நான்முகனே! இவர்களுடைய வெட்டுண்ட கையை விரைந்து படைப்பாயாக'' என்றான். நான்முகன் அதற்கு இசைந்தான். "இவர்களுடைய கைவளர்க!'' என்று கூறினன். அவ்வளவில் வெட்டப்பட்ட கைகளிரண்டும் விரைந்து வளர்ந்தன. சூரபன்மன் நான்முகனைப்பார்த்து, "உன் ஆற்றல் நன்று என்று!'' வியந்துகொண்டான்.

## சூரபன்மன் தேவர்களைச் சிறையிடுதல்

அசமுகியை மகேந்திரபுரியில் இருக்கச்சொன்னன். துன்முகியைப் பானுகோபனுடன் சென்று இந்திராணி இருந்த இடத்தைக் காட்டிவரச்சொன்னன். ஏவலாளர் பலரை யனுப்பிக் கதிரவனையும் திங்களையும் உடுக்களையும் உடனே அழையுங்கள்!'' என்றான்.

ஏவலாளர் உடனே விண்ணுலகத்திற்குச் சென்று, கதிரவனையும் பிறரையும் அழைத்துக்கொண்டுவந்து சூரபன்மனுக்குமுன் நிறுத்தினர். சூரபன்மன் அவர்களைப் பார்த்து, "விண்ணுலகில் திரியும் நீவிர் என் தங்கையைப் பிடித்துக் கையை வெட்டியவனுடைய செய்கையைப் பார்த்திருப்பீர்கள். பார்த்துக்கொண்டு பேசாமலிருந்த காரணமென்ன?'' என்று கேட்டான். அதற்கு அவர்கள்,

"நாங்கள் எங்களுடைய தொழிலிற் கண்ணாக விருந்தமை யின் நிகழ்ந்ததையறியோம்," என்றார்கள். அவர்கள் கூறி யதை நம்பாமல் அவர்களனைவரையுஞ் சூரபன்மன் சிறையி லடைக்கச்செய்தான்.

பிறகு சில ஏவலாளர்களைப்பார்த்து, "வாயுக்களை அழைத்துக்கொண்டுவாருங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்களும் வந்தார்கள். "எங்குந்திரியும் நீங்கள் என் தங்கை கைவெட்டப்பட்டதைப் பார்த்துக்கொண்டு ஏன் பேசாமலிருந்தீர்கள்?" என்று கேட்டான். அவர்கள் யாதும் பதில் பேசாமலிருந்தார்கள். அவர்களையுஞ் சிறையி லடைக்குமாறு கட்டளையிட்டான்.

அதன்பிறகு, ஆண்டு, இருது, திங்கள் முதலிய கால தேவதைகளை யழைக்குமாறு கட்டளையிட்டான். அத் தேவதைகளும் வந்தன. அவைகளையுஞ் சினந்து சிறையி லடைக்கச்செய்தான்.

பின் மண்ணக மன்னர்களை அழைக்கச் செய்தான். அவர்களும் வந்து மிகுந்த அச்சத்துடன் நின்றார்கள். அவர்களைப் பார்த்து, "இந்திரன் மண்ணுலகில் மறைந்திருக் கிறான். அவனுடைய ஏவலாள் என் தங்கையின் கையை வெட்டிவிட்டான். நீங்கள் இவைகளை யுணரவில்லை. கள்ளுண்டு மயங்கினீர்களோ? அல்லது காமத்தில் தியங்கி னீர்களோ? மற்று உறங்கினீர்களோ? நீங்கள் என்ன செய்துகொண்டு இருந்தீர்கள்?" என்று கேட்டான். அவ்வரசர்கள் அஞ்சினார்கள். எங்கள் தாயைப்போன்ற அசமுகி மண்லணுகில் வந்ததையும் உணரோம். இந்திரன் அங்கு மறைந்திருத்தலையும் அறியோம். நாங்கள் வழக்கம் போல எங்கள் செயலைச் செய்துகொண்டிருக்கின்றோம். அசமுகியின் கை வெட்டப்பட்டதை நாங்கள் அறியோம். நாங்கள் கூறுவதுண்மையாகும்" என்றார்கள். சூரபன்மன் எதனையுங் காதில் போட்டுக்கொள்ளாமல், அனைவரையுந் தண்டிக்கத் தொடங்கினான். சிலருடைய நாவையறுக்கச் செய்தான். சிலருடைய கையை வெட்டச்செய்தான்.

சிலருடைய மூக்கையுங் காதுகளையும் அறுக்கச்செய்தான். சிலருடைய தாளையுந் தோளையுந் தலையையும் வெட்டினான்.

### தேவர்களைச் சிறை நீக்கல்

சூரபன்மன் இவ்வாறு பலருக்கும் பலவகைத் தண்டனைகளை விதித்தான். எல்லோருக்கும் விடை கொடுத்து விட்டுத் தானும் அரியணையினின்றும் இறங்கிப் புறப்பட்டான். அப்போது நான்முகன் அவுணர்கோனைப் பார்த்துக், "கதிரவனும் பிற காலக்கடவுள்களும் உன் ஏவலின்படி நிற்பவர்கள். அவர்களில்லாவிட்டால் உலகம் நடைபெறமாட்டாது. அவர்களைச் சிறைநீக்கி விடுவாயாக!" என்று வேண்டிக்கொண்டான். சூரபன்மன் நான்முகன் வேண்டுகோளுக்கு இணங்கினான். சிறைப்பட்டிருந்தவர்களைத் தன் முன் கொண்டுவரச்செய்தான். அவர்களைப்பார்த்து, "என்றும் நம்முடைய கட்டளைப்படி நிற்கக்கடவீர்கள். இந்திரனோடு சேருதல் கூடாது. உங்களுக்குரிய தொழில்களை ஒழுங்காகச் செய்யுங்கள்" என்றான். அவர்கள் அப்படியே செய்வோமென்று கூறிச் சென்றார்கள். சூரபன்மனுந் தன்னுறையுளையடைந்தான்.

## சங. தேவர்கள் சிறை புகுதல்

### பானுகோபன் விண்ணுலகை யடைதல்

சூரபன்மனிடத்தில் உடன்பாடு பெற்றுக்கொண்டு தன் மாளிகை சென்ற பானுகோபன், போருக்குப் போக வேண்டியதற்கான ஏற்பாடுகளை யெல்லாஞ்செய்தான். தும்பைமாலை சூடினான். இரண்டாயிரம் பாய்மாக்கள் பூட்டப்பெற்ற தேரின்மீது ஏறினான். அப்போது ஆயிரம் வெள்ளம் அவுணப்படையும், ஆயிரம் வெள்ளம் குதிரைப் படையும், ஐந்நூறு வெள்ளந் தேர்களும், ஐந்நூறு வெள்ளம் யானைகளும் அவனைச் சூழ்ந்தன. படைகளின் தூளிகள் மகேந்திரபுரியை மறைத்தன. அவுணர்களின் தோள்கள் வளர்ந்தன. தேவர்களுடைய உள்ளங்கள் தளர்ந்தன. பானுகோபன் மகேந்திரபுரியை நீங்கி நில

வுலகத்தை யடைந்தான். சீர்காழியைச் சேர்ந்த போது துன்முகி ஒரு பொழிலைக் காட்டினாள். "இந்த இடந்தான் எங்கள் கை அறுக்கப்பட்ட இடம். இதில் இந்திராணியும் இருந்தாள்; ஒரு வீரனும் இருந்தான்" என்று கூறினாள். பானுகோபன் அந்தச் சோலையுட் புகுந்தான். அவனுடைய படைகள் பொழிலை மிதித்துத் துவைத்து வெறுவெளியாக்கின. பானுகோபன் இந்திராணி யையும் அசமுகியின் கையை வெட்டிய ஆண்மையாளனை யுந் தேடிப் பார்த்தான். எவரும் அகப்படவில்லை. நில வுலகெங்கும் படைகளுடன் தேடிப் பார்த்தான். பிறகு விண்ணுலகிற்குச் சென்றான். பானுகோபன் படைக ளுடன் வருதலைக் கண்ட விண்ணவர் எண்ணுதன எண்ணி உள்ளம் புண்ணானார்கள். ஓடிச்சென்று சயந்தனிடஞ் செய்தியை உரைத்தனர்.

## சயந்தனும் தேவர்களும்

தேவர்கள் கூறியதைக் கேட்ட சயந்தன் துன்ப மடைந்தான். தேவர்களைப் பார்த்து, "எம்முடைய குருவாகிய வியாழபகவான் இங்கில்லை. தேவர்களிற் பலரில்லை. என் தாயுந்தந்தையும் இருக்கின்ற இடந் தெரிய வில்லை. பானுகோபன் இங்கு வந்தமை நம்மைத் துன்பப் படுத்துவதற்காக விருக்கலாம். முன்னையூழ்வினையை நான் உணரேன். இன்றைக்கு யாது நிகழுமோ தெரியவில்லை. பல துன்பங்களையும் பொறுத்துக்கொண்டு இந்நாள்வரையி னும் இந்நகரத்தில் இருந்தேன். இன்று இதற்குங் கேடு ஏற்பட்டிருக்கிறது. என் தாய்தந்தையரைத் தேடிக் கொண்டு திரிகின்றார்கள். அவ்வாறாக நாமும் எங்கே செல்வது? நம்மைப் பாதுகாப்பதற்கு ஒரு புகலிடமும் இல்லை. ஆகலான், இனிமேல் யாண்டுஞ் செல்வதில்லை. வருந்துவதும் இல்லை. வருந்துவதால் வரப்போகிற பலனு மில்லை. வருவன வருமேயன்றி வராதொழியுமோ? அவு ணர்களுக்குப் புறங்கொடுத்தோடுவதில்லை. வணங்கிப் புகழ்வதில்லை. அவுணர்களை யெதிர்த்துப் போர்புரிந்து இறப்பது அல்லது பிழைப்பது; இதனையே யான் உறுதி

யாகக் கொள்ளுகிறேன். இனிமேல் நான் அவுணர்களுக் கஞ்சேன். நான் பானுகோபன் படைகளை எதிர்த்துப் போராடுவேன். நீங்களும் என்னைப் பாதுகாத்துக் கொண்டு வாருங்கள். வருதற்கு ஆற்றலில்லாதவர்கள் ஓடிப்போங்கள். எல்லோருமே என்னைத் தனியாக விட்டு விட்டு ஓடிப்போவீர்களாயினும் போங்கள். எல்லா வற்றிற்குஞ் சிறிதும் அஞ்சாமல் நான் துணிந்து விட்டேன்," என்று கூறினான்.

## தேவர்களும் போருக்குச் செல்லுதல்

சயந்தன் சாற்றிய மாற்றங்களைக்கேட்டுத் தேவர்கள் துன்பப்பட்டார்கள். சயந்தனைப் பார்த்து, "உன் உள்ளம் இதுவாயின், நமக்கு வேறோர் எண்ணமும் இல்லை. அவுணர்களுடைய ஏவலைச்செய்து துன்பப்படுவதைப் பார்க்கிலும் அழிந்துபோதல் நல்லது. விரைந்து போருக் குப் புறப்படுவோம்" என்றார்கள். சயந்தன் அரியணையி னின்றும் இறங்கினான். ஐராவதத்தை எண்ணினான். அஃது உடனே அவனெதிரே வந்தது. அவன் அதன்மீது ஏறிக்கொண்டு போருக்குப் புறப்பட்டான். தேவர்கள் ஓடிப்போதற்கு இடம் அகப்படாமல் சயந்தனோடு சென் றார்கள். பானுகோபனுடைய படைக்கு எதிரே சயந்தன் சென்றான்.

## அவுணர்களுக்குந் தேவர்களுக்கும் போர்

தேவர்கள் போருக்கு வந்ததை அவுணர்கள் கண் டார்கள். "நேற்றுவரை இவர்கள் நம்முடைய ஏவல்களைச் செய்துகொண்டிருந்தார்கள்! இன்றைக்கோ போருக்கு வந்து நேருக்கு நேரே நிற்கிறார்கள்! இது பெரும் வியப்பு," என்று சொல்லிக்கொண்டார்கள். தேவர்கட்கும் அவுணர் கட்கும் போர் மூண்டது. இருபக்கத்தினரும் படைக்கலங் களைச் செலுத்திக்கொண்டார்கள். தேவர்கள் மிக விரைவில் ஆற்றலழிந்து ஓடினார்கள். அவுணர்கள் தேவர்களைப் பிடித்துக் கட்டிக்கொண்டுபோய்ப் பானுகோபனுக்கு

முன்னே நிறுத்தினர்கள். அவன், "தேவர்கள் தப்பி ஓடிப்போகாமல் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கட்டளையிட்டான்.

சயந்தன் வில்லைக் கையிலே யெடுத்து வளைத்து நாணொலி செய்தான். அவுணர்கட்கு நேரே போய்க் கணைமழைகளை ஆரவாரத்தோடு பொழிந்தான். அவுணப்படைத் தலைவர்கள் பலர் சயந்தனை யெதிர்த்துப் போர்புரிந்தார்கள். சயந்தன் மேலும் மேலும் கணைமழைகளைப் பொழிந்தான். அவுணப்படைகளில் நூறு வெள்ளத்தை அழித்தான். அவனேறிய ஐராவதயானை பலவாறு போர்செய்து அவுணப்படைகளை அழித்தது. கணப்பொழுதினுள் நூறு வெள்ளம் படைகள் அழியக் குருதி ஆறுகப் பெருகியது. நீலகேசன் என்னும் அவுணன் சயந்தனை யெதிர்த்துப் போர்புரிந்தான். சயந்தன் அந்த நீலகேசன்மேல் நூறு கணைகளைச் செலுத்தி அவன் கவசத்தை யறுத்தான். நீலகேசன் வியர்த்துப் பெருமூச்செறிந்தான். ஒரு பிறைமுகக் கணையைச் செலுத்திச் சயந்தனுடைய வில்நாணை யறுத்தான். உடனே சயந்தன் மாயப் போர் செய்தான். நீலகேசனல் அந்த மாயத்தை நீக்கமுடியவில்லை. பானுகோபனுடைய படைகள் அஞ்சிக் கலங்கி ஓடலாயின.

அப்பொழுது அவுணப்படைத் தலைவர்களில், சோமாசுரன், மாயாபலி, சுரகேசரி, பதுமன், மாருதபலி, தண்டகன், வாமன், வருணன் மாகதன் முதலாகிய அவுணப் படைத்தலைவர்கள் சயந்தனுடைய மாயை நீக்குவதற்கு நினைத்து வந்து போர்செய்தார்கள். ஆனல், மாயையை நீக்கமுடியவில்லை. அதனல் அவர்களுங் கலங்கி நின்றார்கள்.

## பானுகோபனுக்கும் சயந்தனுக்கும் போர்

பானுகோபன் தன் படையின் தோல்வியையும் சயந்தனுடைய வெற்றியையுங் கண்டான். சயந்தன் மாயப்போர் செய்கிறான் போலும் என்று எண்ணினன். சுக்கிராச்சாரியார் தனக்கறிவுறுத்திய அறிவு மறையை (ஞான மந்திரம்) முறையாக நினைத்துக்கொண்டு சயந்தன்முன் சென்றான்.

அவ்வளவில் சயந்தனுடைய மாயங்கள் யாவும் அழிந்தன. சயந்தன் தனித்தவனாக வெள்ளையானையின்மீது நின்றான்.

சயந்தனையணுகிய பானுகோபன், அவனைப் பார்த்து, "நான் வருமுன் உன்னுடைய மாயங்கள் எல்லாந் தொலைந்தன பார்த்தாயா?" கதிரவனைச் சிறைப்படுத்தியதுபோல் உன்னையுஞ் சிறைப்படுத்துகிறேன்; விரைந்து போர்செய்" என்றான்.

இருவருக்கும் விற்போர் தொடங்கியது. பானுகோபன் பல கணைகளைச் செலுத்தினான். அவைகள் அனைத்தையும் சயந்தன் விலக்கினான். ஆயிரங்கணைகளினால் பானுகோபனுடைய வில் நாணையறுத்தான். பானுகோபன் தீப்போலச் சினந்தான். வேறொரு வில்லை வளைத்தான். கணைமழைகளைப் பொழிந்தான் சயந்தன்மீது ஆயிரங் கணைகளைச் செலுத்தினான். சயந்தன் ஆயிரங் கணைகளைச் செலுத்திப் பானுகோபனுடைய தேரிற்கட்டிய குதிரைகளையழித்தான். பானுகோபனுடைய படைகள் மீது கணக்கற்ற கணைகளைச் செலுத்தினான். தன் தேர்க் குதிரைகள் எல்லாம் அழிந்தவுடன் பானுகோபன் வேறொரு தேர்மீது ஏறினான். சினந்துபற்களைக்கடித்தான். இடிபோல் உரப்பினான். வில்லை வளைத்தான். நூறாயிர கோடி கணைகளை விடாமழைபோலப் பொழிந்தான். சயந்தனுடைய உடலிலும் வெள்ளையானையின் உடலிலும் பல கணைகளை யழுத்தினான். சயந்தன் மயங்கி அறிவழிந்து யானையின்மேல் விழுந்தான். அமுதமுண்டமையால் அவன் இறக்கவில்லை. அவனுடலெங்குங் குருதி வடிந்தது.

## வெள்ளையானை போர்

சயந்தன் மயங்கி அறிவிழந்ததைக் கண்டு வெள்ளையானை கலங்கித் துன்பமடைந்தது. சினத்துடன் பானுகோபனுக்கெதிரேசென்றது. அவனுடைய தேரிற் பாய்ந்தது. அதிற் கட்டிய குதிரைகள் அழிந்தன. தேரோட்டியும் ஒழிந்தான். யானை பேரொலிசெய்து பிளிறியது. தேரழிந்தபடியால் பானுகோபன் நிலத்திற் குதித்தான்.

யானையைச் சினந்தான். அஃது அவனுடைய மார்பில் முட்டியது. அதனுடைய நான்கு தந்தங்களும் சட சட என்று ஒடிந்து விழுந்தன. பானுகோபன் அதன் தும்பிக் கையைப் பிடித்துக்கொண்டு கன்னத்தில் அடித்தான். அது தளர்ந்து விழுந்தது.

## சயந்தன் அவுணர்கைப்படுதல்

வெள்ளையானை தளர்ந்து விழுந்தமையையும் சயந்தன் தனித்தமையையும் அவுணர்கள் கண்டார்கள். ஆரவாரஞ் செய்து சயந்தனைச் சூழ்ந்து பிடித்தார்கள். அவனை வருத்தத் தொடங்கினார்கள். பானுகோபன் வேறொரு தேரில் ஏறிக்கொண்டு அங்கு விரைந்து வந்தான். சயந்தனைச் சூழ்ந்துள்ள அவுணர்களைப் பார்த்து, "அவன் பகைவன் என்று வருத்தாதீர்கள்! முன்னரே தளர்ந்துபோயிருக்கிறான்! தேவர் கூட்டத்தோடு இவனையுஞ் சிறைப்படுத்துங்கள்," என்று கட்டளையிட்டான். அவுணர்கள் அவ்வாறே செய்தார்கள்.

## விண்ணுலகை எரித்தல்

பானுகோபன் படைத்தலைவர்களைப் பார்த்து, "விண்ணுலகில் எஞ்சியுள்ள தேவர்களையும் பிடித்துக்கட்டிச் சிறைப்படுத்தி வாருங்கள்," என்றான். பிறகு விண்ணகம் முழுமையும் தீயிட்டுக் கொளுத்தச்செய்தான். பொன்னுலகம் முற்றும் பொன்போல எரிந்து சாம்பராயிற்று. இந்திரன் ஒளிந்தோடிப் போனான். தேவர்கள் சிறைப்பட்டார்கள். பொன்னுலகம் எரிந்துபோய்விட்டது. விண்ணகவாழ்வே இவ்வாறாயின், செல்வம் எவ்வாறு நிலையுடையதாகும்? செல்வம் தன் பெயருக்கேற்பச் செல்லுந் தன்மை யுடையதன்றோ?

### செல்வ நிலையாமை

ஊழியின் அன்றி என்றும் ஒழிவுறத் துறக்க மூதூர்
பூழிய தான தன்றே புரந்தரன் வறியன் போனான்
வீழுறு சிறையின் உற்றார் மிக்கவர் என்றால் யாரும்
வாழிய செல்வந் தன்னை நிலையென மதிக்க லாமோ ?

(பூழி - பொடி. மிக்கவர் - தேவர்.)

## பானுகோபன் தந்தையைக் காண்டல்

விண்ணகம் எரிந்தொழிந்தது கண்டு பானுகோபன் மகிழ்ந்தான். அவுணர்களைப் பார்த்துச் "சிறையாக்கப் பெற்றுள்ளவர்களைப் பிடித்துக்கொண்டு முன்னே செல்லுங்கள்," என்றான். அவர்கள் அவ்வாறே சென்றார்கள். பானுகோபன் மகேந்திரபுரியை அடைந்தான். சூரபன்மனுடைய கோயிலுக்கு முன்னே சென்று தேரினின்றும் இறங்கினான். சிறையாக்கப்பெற்ற தேவர்களைக் கொண்டு போய்த் தந்தையின் முன்பு நிறுத்தினான். தந்தையினுடைய கால்களைப் பணிந்தான். "இந்திரனையும் இந்திராணியையும் யாண்டுங் கண்டிலேன். விண்ணகத்தைக் கொளுத்திச் சாம்பராக்கிவிட்டேன். சயந்தனையுந் தேவர்களையும் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறேன்" என்று கூறினான்.

## சூரபன்மன் தேவர்களைத் தண்டித்தல்

சூரபன்மன் தன்முன் நிறுத்தப்பெற்ற சயந்தன் முதலானவர்களைப் பார்த்துச் சினந்தான். வாட்படையையேந்திய காவலர்களை யழைத்தான். "இவர்களுடைய உறுப்புக்களை யெல்லாந் துண்டஞ் செய்யுங்கள்" என்றான். சூரபன்மன் கட்டளைப்படி அவுணர்கள், தேவர்களுடைய கைகளையுங் கால்களையும் தோள்களையும் காதுகளையும் மற்ற உறுப்புக்களையும் அசமுகி பார்க்கும்படி அறுத்தார்கள். தேவர்கள் தவத்திற் சிறந்தவர்களாகையால் அறுக்கப்பெற்ற அவர்களுடைய உறுப்புக்கள் உடனுக்குடனே பொருந்தலாயின. சூரபன்மன் அதனைக் கண்டான். "தேவர்களைக் கொல்வது முடியாது. அவர்கள் உறுப்புக்களைக் குறைத்தலும் இயலாது. தேவர்களுடைய ஆற்றல் மிகவுஞ் சிறந்தது. தேவர்கள் நமக்குத் தோற்றது நம்முடைய தவத்தின் சிறப்பினால்தான்" என்று எண்ணினான். "இவர்கள் தப்பியோடிப் போகாதபடி சிறையில் அடையுங்கள்" என்று கட்டளையிட்டான். காவலாளர்களும் அவ்வாறே தேவர்களை விலங்குபூட்டிச் சிறையிலடைத்தார்கள்.

## தேவமாதர்கள் சிறை

தேவமாதர்கள் மகேந்திரபுரியிலே சிறையிலகப்பட்டுப் பலவாறு வருந்தலானார்கள். இழிந்தவர்களாகிய அவுணர் களுக்கு ஏவல்புரிந்து நொந்தார்கள். அவர்களுடைய துன்பம் அளவிடற்பாலதன்று.

## வெள்ளையானையின் கொம்பு வளர்தல்

விண்ணுலகில் பானுகோபனுக்கும் சயந்தனுக்கும் போர் நிகழ்ந்தபோது கோடுகள் ஒடியப்பெற்ற வெள்ளை யானை தளர்வு நீங்கியெழுந்தது. நிலவுலகில் திருவெண் காட்டிற்கு வந்தது. ஆகமமுறைப்படி சிவவழிபாடு செய்தது. சிவபெருமானுடைய திருவருளால் அதன் கோடுகள் முன்போல வளர்ந்தன. அஃது அவ்விடத்தி லேயே இருந்தது.

## இந்திரன் தவம்

இந்திரன் இந்திராணியோடு விண்ணுலகிற்குச் சென் றான். தனது நகரம் எரிக்கப்பட்டிருத்தலையும் தன் மகனுந் தேவர்களுஞ் சிறையாக்கப்பட்டிருத்தலையும் உணர்ந்தான். மிகவுந்தளர்ந்தான். மேருமலையை அடைந்து நெடுங்காலந் தவஞ்செய்தான். இந்திரனுடைய தவத்திற்கு மகிழ்ந்து சிவபெருமான் காட்சி கொடுத்தருளினார். "உனக்கு வேண்டுவது யாது?" என்று கேட்டருளினார். இந்திரன் இறைவனைப்பார்த்து, "நேர்மையற்ற சூரபன்மனைக் கிளை யோடும் அழித்து எங்களுடைய துன்பங்களை நீக்கியருள வேண்டு"மென்று வேண்டிக்கொண்டான். "நாம் உமையை மணந்து ஒரு மகனைத் தருவோம்! அவன் அவுணர்களை யழித்து உங்களுடைய இன்னல்களை ஒழிப்பான்!" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## வியாழபகவான் முடிவுரை

"இறைவன் மொழிகளை இந்திரன் கேட்டுத் திருமால் நான்முகன் முதலிய தேவர்களைக் கலந்து எண்ணினான்.

கண்ணுதற் பரமனிடத்திலே காமனையனுப்பினான். அவன் சென்று எரிந்தொழிந்தான். தேவர்கள் தங்கள் குறைகளை நீக்குமாறு சிவபெருமானை வேண்டிக்கொண்டார்கள். இறைவன் இமயமலைக்கு எழுந்தருளி உமையம்மையைத் திருமணஞ் செய்தருளினார். எங்களுடைய துன்பங்கள் ஒழியுமாறு தேவரீரைத் திருநுதற் கண்ணில் பிறப்பித் தருளினார்.

"தாங்கள் தோன்றியபிறகு, திருமாலுக்கும் நான் முகனுக்கும் மற்றைத் தேவர்கட்கும் பிறருக்கும் ஒருவாறு மகிழ்ச்சியுந் துணிவுமுண்டாயிற்று. ஆயினும், சூரபன்ம னுக்கு அஞ்சி ஒளிந்தே திரிகின்றார்கள். தங்களையுஞ் சிவபெருமானையும் வழிபடுதற்கு வரும்போதுமட்டும் தங்களுடைய இயற்கை வடிவங்களுடன் வருவார்கள். மற்றைக் காலங்களில் உண்மை வடிவங்களை மறைத்துக் கொண்டே திரிகிறார்கள்.

"செல்வத்தினாலும் ஆற்றலினாலும் மேன்மையினாலும் தேவர்களுக்குத் துன்பஞ்செய்யுங் கொடுமையினாலுஞ் சூரபன்மனுக்கு நிகராவார் ஒருவரும் இலர். சூரபன்ம னுடைய ஓரண்டத்துச் செய்திகள் இவை. மற்றைய ஆயிரத்தேழு அண்டங்களினுஞ் செய்பவைகளை முழுமுதற் பொருளாகிய தாங்கள் தாம் அறிவீர்கள்.

"நான்முகன் சூரபன்மனுக்கு நாள்தோறும் பஞ்சாங் கஞ் சொல்லித் திரிகிறான். திருமால் தாரகனோடு போர் செய்து முன்பே தோற்றுப்போனார். சிவபெருமான் எல்லா மேன்மைகளையுஞ் சூரபன்மனுக்குத் கொடுத்தவ ராதலின் அவர் அழிக்கமாட்டார். ஆதலால், தேவரீர் தாம் சூரபன்மனையும் அவனுடைய கூட்டத்தார்களையும் அழித்தருளுதல் வேண்டும். தேவர்களையுஞ் சயந்தனையுஞ் சிறையினின்று நீக்கியருளுதல் வேண்டும். திருமால் நான்முகன் முதலியவர்களுக்கு அவரவர்களுடைய பழைய பதவியைக் கொடுத்தருளுதல் வேண்டும்," என்று வியாழபகவான் முருகனிடம் கூறினார்.

## முருகக்கடவுள் பதிலுரை

அவுணர்கள் வரலாறு முழுமையும் இவ்வாறு வியாழ குரு கூற, முருகக்கடவுள் ஒன்றும் உணரார்போலக் கேட்டருளினார். தேவகுருவைப் புகழ்ந்து திருவருள் செய்தருளினார். இந்திரனைப்பார்த்து, "உன்னுடைய துன்பங்கள் விரைவில் ஒழியுமாறு செய்வோம்! சூரபன்மனைச் சுற்றத்தார்களோடு ஒழிப்போம்!" என்று திருவாய் மலர்ந்தருளினார். இந்திரன் தேவர்களோடு முருகக் கடவுளை வணங்கி மகிழ்ந்திருந்தான்.

இரண்டாவது

அசுரகாண்டம் முற்றிற்று.

---

# 3. மகேந்திரகாண்டம்

## முருகவேள் வணக்கம்

விரிஞ்சன்மால் தேவ ராலும் வெலற்கரும் விறலோன் ஆகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத ஒழுக்கமும் பிறவும் மாற்றி
அருஞ்சிறை அவர்க்குச் செய்த அவுணர்கோன் ஆவி கொள்வான்
பரஞ்சுடர் உருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம்.

## க. வீரவாகுதேவர் கந்தமாதனஞ் செல்லுதல்

### திருமுருகக்கடவுள் தூதுவிட எண்ணுதல்

திருச்செந்தின்மாநகரின்கண்ணே முருகக்கடவுள் தேவர்கள் தம்மைச்சூழ அரியணைமீது எழுந்தருளியிருந் தார். சூரபன்மனோடு போருக்குச் செல்லுமுன் தூது விடுதல்வேண்டும் என்று எண்ணினார். தம்முடன் உள்ள திருமால் நான்முகன் முதலிய தேவர்களைப் பார்த் தார். "அவுணர்களை அழிக்குமாறு நாளைக்குப் புறப்படு வோம்; அதற்குமுன் ஒரு தூதுவனையனுப்பிச் சூரபன்ம னுடைய எண்ணத்தை யறிந்துகொள்ளுதல்வேண்டும்" என்றார். திருமால் நான்முகன் முதலானவர்கள் "அவ் வாறு செய்தலே அறநெறி" என்றார்கள். "நம்முடைய கூட்டத்துள் தூதுபோய்வரத் தக்கவர் யார்?" என்றார். நான்முகன் அறுமுகக்கடவுளைப் பார்த்துத் "தேவர்க ளாகிய நாங்கள் சூரபன்மனுக்குப் பணிவிடை புரிவதற்கே யன்றி, வேறெதன்பொருட்டும் வீரமகேந்திரஞ் சென்று மீளுதல் அரிது; வீரமகேந்திரத்திற்குத் தூது சென்று வெற்றியுடன் மீளத்தக்கவர் வீரவாகுதேவரே யாவர்" என்றுரைத்தான். முருகக்கடவுள் "நல்லது" என்றார். வீரவாகுதேவரைப் பார்த்து, "வீரவாகுவே! நீ விரைந்து மகேந்திரத்திற்குச் செல். சூரபன்மனைக் கண்டு, "சயந்தனை யும் தேவர்களையும் அறநெறியை நினைத்துச் சிறையி னின்று விட்டுவிடுமாறு சொல். அவ்வாறு விட்டுவிட்டால்

அவனுக்கும் அவனுடைய கூட்டத்தார்க்கும் அழிவு ஏற்படாதென்றும், மறுத்துரைத்தால் அழித்தொழிக்குமாறு விரைந்து வருவேம்; இஃது உண்மை" என்றுரைத்து மீண்டு வருவாயாக" என்று கூறியருளினர்.

## வீரவாகு தேவர் புறப்படுதல்

வீரவாகு தேவர் அப்பணியைத் தலைமேற்கொண்டார். "அப்படியே சென்று சொல்லி மீண்டு வருகின்றேன்" என்றார். முருகக்கடவுளை வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்றார். இந்திரன் வீரவாகுதேவருக்குப் பின்னே சென்று "சிறையிலிருக்குஞ் சயந்தனையும் பார்த்துத் தேற்றிவரவேண்டு"மென்று வேண்டிக்கொண்டான். "அவ்வாறே செய்வோம்" என்று அருள்புரிந்தார் வீரவாகுதேவர். தம்மைத் தொடர்ந்துவந்த நூறாயிரத்தெட்டு வீரர்களையும் நிற்குமாறு கட்டளையிட்டார். விரைந்து கடற்கரையை அடைந்தார்.

## பேருருவங் கோள்ளுதல்

கடற்கரையில் கந்தமாதனம் என்னும் மலை உயர்ந்தோங்கி நின்றது. அம்மலையின்மீது ஏறி நின்றார். வீரவாகுதேவரைத் தாங்கமுடியாமல் அம்மலை பிளந்து தாழ்ந்தது. அம்மலையிலிருந்த பறவைகளும் விலங்குகளும் இரிந்து ஓடின. வீரவாகு தேவர் மகேந்திரபுரிக்குச் செல்வதற்காகப் பேருருவங்கொண்டார். அவ்வுருவம் எல்லாவுலகங்களையுங் காணத்தக்கவாறு மிகப்பெரிதாகவிருந்தது. சூரபன்மனுடைய மகேந்திரபுரியையும் நின்றபடியே பார்த்து வியந்தார். வீரவாகுதேவருடைய பேருருவத்தைப்பார்த்து, நான்முகன் இந்திரன் முதலியவர்கள் மகிழ்ச்சியோடு ஆரவாரஞ் செய்தார்கள்.

## புறப்பட்டுச் செல்லுதல்

வீரவாகுதேவர் முருகக்கடவுளைத் தொழுது வாழ்த்தினார். மிகவும் பெரிய இந்த வடிவத்தோடு நாம் சென்றால்

உலகத்துயிர்கள் ஒழியும். சிறிய உருவத்தோடு செல்லு தலே தக்கது என்று எண்ணிச் செல்லுதற்குத் தக்க உருவத்தைக் கொண்டார். முடி அண்டகோளகையை முட்ட விண்ணிற்படர்ந்து எழுந்தார்.

## உ. கடல் பாய்தல்

### வீரவாகுதேவர் விண்ணிற் பறந்து செல்லுதல்

வீரவாகுதேவர் அவ்வாறு எழுந்த அளவில் அவ ருடைய விரைவின் இழுப்பால் நிலவுலகில் இருந்த மலைக ளெல்லாம் அவருடன் சென்றன. விரைவுக் காற்றால் அண்டங்கள் திரிந்தன. உயிர்கள் சுழன்றன. கருப்பங் கொண்ட முகில்கள் கலங்கின. விரைவுக்காற்றுக் கதிர வனையுந் தீயையுங் குளிரச்செய்தது. வட்வைத்தீயையும் அவித்தது. மகேந்திரபுரியிலுள்ள மதில்களையும் செய் குன்றுகளையும் பொழில்களையும் நிலத்தில் அலைத்துத் தள்ளியது. அவருடைய மூச்சுக்காற்றி லுண்டாகுந்தீ முன்னூற் சென்று மகேந்திரபுரியைக் கொளுத்தியது. விரைவுச்காற்றால் தள்ளுண்ட கடல்நீர் சென்று அதனை அணைத்தது. விரைவுக்காற்றால் விண் மீன்கள் கடலில் உதிர்ந்தன. மறிந்து செல்லும் அக்கடலிலுள்ள மீன்கள் விண்ணிற் சென்றன. வீரவாகுதேவர் திருக் கையில் அணிந்துள்ள இரத்தின வளையலின் ஒளி சென்று சக்கரவாளகிரியைச் சூழ்ந்த இருட்டை ஓட்டியது.

மேலும், வீரவாகுதேவரின் போக்குச் சிவபெருமான் முப்புரத்தின்மீது விட்ட நகைப்பாகிய தீயைப்போன்றும், அவர் விடுத்த திருமாலாகிய அம்பைப்போலவும், முருகக் கடவுள் சூரபன்மனை யழித்தற்குவிட்ட வேற்படையைப் போன்றும இருந்தது. வீரவாகுதேவர் கடலைக்கடந்து மகேந்திரபுரிக்கு வடபாலிருந்த இலங்கையை அடைந்தார். அவ்விலங்கையை யாளிமுகன் என்னும் அவுணன் காவல் செய்துகொண்டிருந்தான்.

## ௬. வீரசிங்கன் அழிவு

### வீரசிங்கனும் வீரவாகுதேவரும்

வீரவாகுதேவர் இலங்கையை அடைந்தபொழுது யாளிமுகன் அங்கு இல்லை. அவன் தன் படைகளோடு சூரபன்மனைக் காண்பதற்காகச் சென்றிருந்தான். அவன் மகனாகிய அதிவீரன் என்பவன் ஆயிரம் வெள்ளம்படைக ளோடு இலங்கையைக் காத்துக்கொண்டிருந்தான். அவன் நகருக்குள்ளே இருந்தான். அவனுடைய படைத்தலைவ னாகிய வீரசிங்கன் என்பவன் வடக்கு வாயிலைக்காத்துக் கொண்டிருந்தான். அவன், வீரவாகுதேவர் விரைந்து செல்லுதலைக் கண்டான். "இவன் யாவன்? நம்முடைய காவலைச் சிறிதும் மதிக்காது தனித்தவனாக வருகின்றான்," என்று எண்ணமிட்டான்; ஊழித்தீபோலச் சினந்தான். இவனுயிரை விரைந்து போக்குவேன் என்று எண்ணினான். ஐந்நூறு வெள்ளம் படைகளுடன் அவருக்கு முன்னே சென்றான்.

வீரவாகுதேவரைப்பார்த்து, "நீயாவன்? உன்னுடைய உயிரினிடத்திலே சிறிதும் அன்பற்றவனாக விருக்கிறாய். உன்னைக் கொல்வதற்குமுன் நீ வந்த செய்தியை விரை வாகச்சொல்" என்றான்.

வீரசிங்கன் விளம்பிய மாற்றத்தைக் கேட்ட வீரவாகு தேவர், "நான் இலங்கையைத் தாண்டிச் சூரபன்மன்வாழும் மகேந்திரபுரிக்குப் போய்விட்டுவர நினைத்துவந்தேன். இஃது என் செயல்; நீ வல்லவனாயின் உன்னால் இயன்ற தைச் செய்," என்றார். வீரவாகுதேவர் கூறியதைக் கேட்ட வீரசிங்கன், "இவன் நம் ஆணையைச் சிறிதும் மதிக்காதவனாக விருக்கின்றான். ஆற்றலிற் சிறந்தவன் போலும்; அதனையும் அறிவோம்" என்று எண்ணினான். தன் படைவீரர்களைப் பார்த்து "இவனைக் கொல்லுங்கள்" என்று பணித்தான். படைவீரர்கள் பல படைக்கலங்களை வீரவாகுதேவர்மீது செலுத்தினார்கள். வீரவாகுதேவர் தம் வாட்படையை உறையினின்றும் எடுத்துத் தம்மோடு போர்செய்த அவுணர்களைக் கொன்றார். குருதிபெருகியது.

நால்வகைப்படைகளும் அழிந்தன. நூறு வெள்ளம்படை அழியும்படியாக வீரவாகுதேவர் கொன்றார். மற்றைய அவுணர்கள் தம்முயிரைப் பாதுகாத்துக்கொண்டு ஓடிப் போனார்கள்.

### வீரசிங்கன் போர்செய்து இறத்தல்

அவுணர்கள் புறங்கொடுத்தோடுதலை வீரசிங்கன் கண்டான். சினங்கொண்டான். வீரவாகுதேவர்மீது ஒரு சூலப்படையை விட்டான். அதனை வீரவாகுதேவர் தம் வாட்படையினால் இருதுண்டாகச் செய்து ஆரவாரித்தார். பிறகு வீரசிங்கன் ஒரு சிறந்த குலிசத்தை வீசினான். அவர் அதனையும் வாளால் வெட்டினார். வேறு படைக்கலத்தை வீரசிங்கன் எடுப்பதற்குமுன், தம்முடைய வாட்படையை வீசிக் கைகளை வெட்டினார். தலையையும் அறுத்துக் கடலில் வீழ்த்தினார். இலங்கையிற் பாய்ந்தார்.

## ச. இலங்கை வீழ்தல்

### இலங்கை கடலில் அமிழப் பலரும் வருந்தல்

வீரவாகுதேவர் இலங்கையிற் பாய்ந்தவுடன் அதனைக் காவல் செய்துகொண்டிருந்த அதிவீரனும் பிற அவுணர்களுங் கலங்கினார்கள். வீரவாகுதேவரின் ஆற்றலைப் பொறுக்கமுடியாமல் இலங்கை அவுணர்களோடு கடலில் ஆழ்ந்தது. அவுணர்கள் கலங்கித் துன்பமடைந்தார்கள். கடல்மீன்கள் அவ்வவுணர்களை வருத்தின. அவுணர்கள் கயல்களோடு போர்செய்து கலங்கினார்கள். வீரவாகுதேவருடைய செயலைக்கண்டு அஞ்சி மறைந்தோடினார்கள்.

## ரு. அதிவீரன் அழிவு

### அதிவீரன் எண்ணுதல்

இலங்கை கடலில் ஆழ்தலை, அதனைக் காவல்செய்து கொண்டு அரண்மனையில் இருந்த அதிவீரன் அறிந்து துன்பமும் நாணமும் அடைந்தான். மிகுந்த சினங்கொண்டான். இலங்கை ஆழ்தலுக்குக் காரணம் அவனுக்குத் தெரியவில்லை. இவ்வாறு ஆழவேண்டிய காரணம் யாது

என்று எண்ணமிட்டான். "அவுணர்கள் யாரும் இவ்வாறு செய்யமாட்டார்கள்! மாயையும் இவ்வாறு செய்ய மாட்டாள்! மும்மூர்த்திகளும் இப்படிச் செய்யார்கள் இந்திரனோ தன்னுடைய உயிரைக் காத்துக்கொண்டு ஒளிந்து திரிகிறான்! மற்றைத் தேவர்களோ சூரபன்மனுடைய ஏவலின்படி ஒழுகுகிறார்கள்! என் தந்தை என்னைக் காவல் வைத்துச் சென்றபோது நான் இலங்கையைப் பாதுகாப்பது நன்றாக இருக்கின்றது!" என்று எண்ணமிட்டான்.

## அதிவீரன் வீரவாகுதேவரோடு போர்செய்து இறத்தல்

தன் படைகளுடன் நாற்புறமுஞ் சுற்றிப் பார்த்தான். வீரவாகுதேவரைக் கண்டான். உதட்டைக் கடித்து நகைத்தான். "இவனைக் கொல்வேன்," என்று கூறிக் கொண்டு வீரவாகுதேவருக்கு முன்னே சென்றான். அதிவீரனோடு வந்த அவுணப்படையினர் வீரவாகுதேவரைச் சூழ்ந்து கொண்டு போர் செய்யலானார்கள். வீரவாகுதேவர் வாட்படையைக் கையில் உருவிக்கொண்டு அவுணர்களைக் கொன்றார். அவர்களுடைய தலைகள் குருதிப் பெருக்கில் மிதந்தன. தன் படை அழிதலைக் கண்டு அதிவீரன் சினந்தான். வீரவாகுதேவரை எதிர்த்தான். ஒரு வேற்படையை வீரவாகுதேவர்மீது வீசினான். வீரவாகுதேவர் அந்த வேற்படையைத் தம்முடைய வாட்படையினாலே இரண்டு துண்டாகுமாறு வெட்டினார். அதிவீரன் ஒரு தண்டாயுதத்தை எடுத்து வீரவாகுதேவருடைய மார்பின் மீது வீசினான். அத் தண்டம் அவருடைய மார்பில் வீழ்ந்து தூளாகியது. அதிவீரன் அதனைக்கண்டு மிகுந்த வியப்படைந்தான். வேறொரு முத்தலைச் சூலத்தையெடுத்து வீரவாகுதேவருடைய மார்பிற் செலுத்தினான். அதனைக் கையாற் பிடித்து ஒடித்தெறிந்தார். பின்னர் அதிவீரன் நான்முகன் அளித்த வாட்படையையெடுத்துக்கொண்டு வாட்போர் தொடங்கினான். வீரவாகுதேவர் தம்முடைய வாட்படையினால் அவனை வெட்டி வீழ்த்தினார். கூற்றுவன் அதிவீரனுயிரைக் கவர்ந்துகொண்டு சென்றான்.

## ௬௯. மகேந்திரஞ் செல்லுதல்

### வீரவாகுதேவர் வாயில்களைச் சுற்றிப் பார்த்தல்

அதிவீரன் அழிந்ததும் போர் ஒழிந்தது. வீரவாகுதேவர் வாட்படையை உறையிற் செலுத்தினர். மகேந்திரஞ் செல்ல எண்ணினர். மேலெழுந்தார். கடலில் ஆழ்ந்த இலங்கை மீண்டெழுந்தது. வீரவாகுதேவர் ஆயிரம் யோசனை சென்று மகேந்திரத்தை யடைந்தார். மகேந்திரத்தின் மதிலையுங் கோபுரங்களையும் பார்த்தார். மகேந்திரத்தின் வடபக்கத்து வாயிலில் திண்ணை ஒன்றிருந்தது. அத்திண்ணையில், கோரன் அதிகோரன் என்னுங் கொடிய அவுணர்களிருவர் அமர்ந்திருந்தனர். அவர்களுடன் ஆயிரம் வெள்ளையானைகளும், ஆயிரம்வெள்ளந் தேர்களும், இரண்டாயிரம்வெள்ளம் குதிரைகளும் இருந்ததுடன் இரண்டாயிரம்வெள்ளம் காலாட்களும் இருந்தனர். மகேந்திரபுரிக்குட் செல்ல விரும்பிய வீரவாகுதேவர் காவலாக அமைந்திருந்த படைப்பெருக்கைக் கண்டு வியப்படைந்தார்.

வடக்குவாயிற்படைகளுடன் போர் தொடங்கினல் போர் எளிதில் முடியாது என்று எண்ணிய வீரவாகுதேவர் போர்செய்ய விரும்பவில்லை. போரைத் தொடங்காமலே மகேந்திரபுரிக்குட் சென்று சூரபன்மனைக் காண விரும்பினர். வடக்குவாயிலை நீங்கிக் கீழ்ப்பக்கத்து வாயிலுக்குச் சென்றார். அக்கீழ்ப்பக்கத்து வாயிலின்கண் மகிடாட்சன் வீரபானு என்னும் பெயருடைய இரண்டு அவுணத் தலைவர்கள் வாட்படை யேந்திய கையினராக அவ்வாயிலைக் காத்து நின்றார்கள். வடக்குப் பக்கத்து வாயிலில் இருந்தாற்போன்ற படை இங்கும் இருந்தது. ஆகவே அவ்வாயிலாலும் உள்ளே செல்ல இயலாதென்பதை யுணர்ந்த வீரவாகுதேவர் தெற்குப் பக்கத்து வாயிலை யடைந்தார்.

## எ. கயமுகன் அழிவு

### கயமுகன் வீரவாகுதேவரைக் காண்டல்

தெற்குப்பக்கத்து வாயிலைக் கயமுகன் என்பவன் காவல் புரிந்துகொண்டிருந்தான். அவன் ஆயிரம் யானை முகங்களையுடையவன்; ஆயிரந் துதிக்கைகளை யுடையவன். இரண்டாயிரங் கைகளையுடையவன். இரண்டாயிரந் தோள்களையுடையவன். மிகுந்த சினமுடையவன். போர் புரிதலையே மிகுந்த விருப்பத்துடன் எதிர்பார்ப்பவன். மிகுந்த தீவினைகளைச் செய்யும் இயல்பு பொருந்தியவன். யானை, கரடி, புலி, சிங்கம், யாளி என்னும் இவைகளில் ஐயாயிரத்தைத் தின்று குருதி சிந்தும் வாயையுடையவன். இத்தன்மைகளையுடைய அவன் வீரவாகுதேவரைக் கண்டு சினங்கொண்டான். வீரவாகுதேவரைப் பார்த்து, "நீ எம்மவர் பலருடைய காவலைக்கடந்து இங்கு வந்திருக்கிறாய். மாயங்களைக் கற்றவன்போல் தெரிகிறது. எளியதேவர்கள் இருக்கின்ற ஊர் என்று எண்ணிக்கொண்டு வந்து விட்டாயோ? நீ இறப்பதற்காக ஏற்படுத்தி இருக்கிற இடம் இதுதான். இனிமேல் நீ திரும்பிப் போகப்போகிறது இல்லை. கொடிய சிங்கம் இருக்கும் முழைஞ்சில் ஒரு பெண், மான் துணிந்து நுழைந்ததைப் போல நீ இங்கு வந்திருக்கின்றாய். கடலைத்தாண்டி இம் மகேந்திரத்துக்குள் நுழைந்த நீ யாவன்? தேவர் கூட்டத்தில் ஒருவனா? சிறப்பற்ற தேவர்களுள் நீ ஒரு புதியவன்போல் தெரிகிறது. ஆகையால்தான் ஒரு வாட்படையோடு தனியனாகத் துணிந்து வந்திருக்கிறாய். நீ இவ்விடத்திற்கு வந்ததன் காரணம்யாது? உன்னை இங்கு அனுப்பியவர் சிவ பெருமானா? திருமாலா? நான்முகனா? இந்திரனா? இவர்களில் யார்? இந்நகரைச்சுற்றிக்கொண்டு திரிகிற நீ ஒற்றுவனாக வந்தாய்போலும். உன் வாணாள் முடிந்து விட்டபடியினால்தான் நீ இங்கு வந்திருக்கின்றாய். நீ தேவர் கூட்டத்தைச் சேர்ந்தவனாகத் தெரியவில்லை. என்னைக்கண்டும் நீ அஞ்சுகின்றாயில்லை," என்று பலவாறு சொல்லிக் கொண்டு வீரவாகுதேவருக்கு முன்னேவந்தான்.

## கயமுகனுக்கும் வீரவாகுதேவருக்கும் போர்

வீரவாகுதேவர் கயமுகன் சொன்ன மொழிகளைக் கேட்டார். "இறப்பதற்காக என்னிடத்திற்கு வந்தாய் போலும், வா" என்றார். வீரவாகுதேவர்மீது கயமுகன் ஒரு மலையைப் பிடுங்கி வீசினான். அம்மலை வீரவாகு தேவருடைய தோளிற்பட்டுத் தூளாகியது. கயமுகன் வீரவாகுதேவருடைய ஆற்றலைக்கண்டு சீற்றங்கொண்டான். மற்றும் ஆயிரங் குன்றுகளைப் பிடுங்கி வீசினான். அக் குன்றுகள் வீரவாகுதேவர் மேற்பட்டுத் தூணிலடிபட்ட மட்பாண்டங்களைப்போல உடைந்துபோயின. பிறகு கயமுகன் தண்டாயுதத்தை வீரவாகுதேவர்மீது செலுத்தினான். வீரவாகுதேவர் வாட்படையினால் தண்டத்தைத் துண்டாக்கினார். கயமுகன் வீரவாகுதேவருடைய ஆற்றலைக்கண்டு வியப்படைந்தான். துதிக்கைகளை நீட்டி ஆயிரம் மரங்களைப் பிடுங்கினான். வீரவாகுதேவர் மீது வீசினான். வீரவாகுதேவர் அவைகளைத் துண்டாக்கி ஆரவாரித்தார். கயமுகன் மேலும் பலமலைகளைப் பிடுங்க முயன்றான். வீரவாகுதேவர் தமது வாட்படையினால் கயமுகனது ஆயிரந் துதிக்கைகளையும் அறுத்துத்தள்ளினார். வீரவாகுதேவரைப் பிடித்து உண்பேன் என்று கயமுகன் இரண்டாயிரங் கைகளை நீட்டினான். வீரவாகு தேவர் நீட்டிய கைகளையும் அறுத்துத் தள்ளினார். பிறகு வீரவாகுதேவர் கயமுகனோடு மற்போர்செய்து அவனைக் கொன்றார்.

## வீரவாகுதேவர் அணுவுருக்கொள்ளுதல்

கயமுகன் இறந்தமையைக் கண்டு பல அவுணர்கள் போருக்கு வந்தார்கள். வீரவாகுதேவர் அவர்களோடு போர் தொடங்கினால் வெல்வதற்கு நாளாகும். மறைந்து செல்லுதலே சிறந்த செயலாகுமென்று முடிவு செய்தார். எவருங் காணுதற்கரிய ஓர் அணுவுருவங்கொண்டார். உள்ளே நுழையச் சமயம் பார்த்துக்கொண்டு கோபுரத்தின்மீது அமர்ந்திருந்தார்.

## அ. நகர் புகுதல்

### வீரவாகுதேவர் நகர்வளம் காண்டல்

அணுவுருக்கொண்டு கோபுரத்தின்மீது அமர்ந்திருக்கும் வீரவாகுதேவர் மகேந்திரபுரியின் சிறப்புக்களைப் பார்த்தார். நால்வகைப் படைகளும் அளவற்றனவாகக் காணப்பட்டன. இன்பம் நுகர்தற்குரிய பொருள்கள் எங்குஞ் செறிந்து பொன்னுலகத்தையும் பின்னடையச் செய்துநின்றன. மாளிகைகளெல்லாம் ஒன்பதுவகை மணிகளாற்செய்யப்பெற்று விளங்கின. அம்மாளிகைகளில் அவுணர்களும் அவுணமாதர்களும் பலவகை இன்பபோகங்களை இனிது நுகர்ந்து மகிழ்ந்திருந்தார்கள். ஐந்தருக்களும் சிந்தாமணியும் காமதேனுவும் பதுமநிதியும் பிறவும் அந்நகரத்து ஆடவர்களும் பெண்களும் இருக்குமிடந்தோறுஞ் சென்று அவர்கள் விரும்பியவற்றை விரும்பியவாறு கொடுத்துத்திரிந்தன. பலவகை ஒலிகளும் கடலின் ஒலிபோல மிகுந்து விளங்கின. மகேந்திரபுரியின் பலவகைச் செல்வங்கள் எத்தகையோருடைய உள்ளங்களையும் கொள்ளைகொள்வனவாக விளங்கின. அந்நகரிலே முதியவர்களும் நோயாளர்களும் வறியவர்களும் இலர். கருப்பஞ்சாற்றுக்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், மதுக்கடல், பாற்கடல் ஆகியன சூரபன்மனுடைய ஆணையினால் வீடுகள்தோறுந் தனித்தனிக் குளங்களாக வந்து அமைந்து விளங்கின. அவுணர்கள் அணிந்து நீக்கிய பலவகைப் பொன்னணிகள் தெருக்களைக் குப்பையாகச் செய்தன. அந்நகரத்தின் பலவகைச் சிறப்புக்களையும் வீரவாகுதேவர் நீண்டபொழுது பார்த்து மகிழ்ந்தார். பிறகு முருகப்பெருமான் ஏவிய தொழிலைப் புரியாது இவ்வாறு வீண்பொழுது போக்கிக் கொண்டிருத்தல் தக்கதன்று என்று நகருக்குள்ளே செல்லத்தொடங்கினர்.

### நகருக்குள்ளே நுழைதல்

பின்னர் வீரவாகுதேவர் விண்வழியாக உள்ளே நுழைந்தார். பானுகோபன், அக்கினிமுகன், இரணியன்,

வச்சிரவாகு, மூவாயிரர், தருமகோபன் ஆகியவர்களுடைய அரண்மனைகளைப் பார்த்து வியப்படைந்தார். தருமகோபன் என்பவன் சூரபன்மனுடைய முதலமைச்சனாவான். வீரவாகுதேவர் அவனுடைய மாளிகையின் முடியிலிருந்து தேவர்கள் துன்புற்று வாடுஞ் சிறைக்களத்தைப் பார்த்தார்.

## கூ. சயந்தன் புலம்புதல்

### சயந்தன் பலவாறுகூறி வருந்தல்

பானுகோபனால் பிடித்துக்கொண்டு வரப்பெற்ற சயந்தனும் தேவர்களும் சிறைகளில் அடைக்கப்பட்டிருந்தனர். அவர்களுடைய கால்களினுங் கைகளினும் விலங்குகள் மாட்டப்பெற்றிருந்தன. அவர்கள் பல ஊழிக்காலங்களாகச் சிறையில் வைக்கப்பட்டிருந்தமையின் மிகுந்த தளர்ச்சியை அடைந்திருந்தார்கள். சயந்தன் பலவாறு புலம்பிக் கொண்டிருந்தான். அவன் தேவலோகத்து இன்பவாழ்வை எண்ணி நைந்தான். தாய் தந்தையர்கள் எங்கு எவ்வாறு அல்லலுறுகின்றார்களோ என்று ஏங்கினான். தான் இவ்வாறு சிறைப்பட்டு வருந்துதலைத் தந்தை யறிந்து மீட்பானோ என்று கலங்கினான். மற்றைத் தேவர்களும் தன்போல் பலவாறு துன்பமடைந்து தளர்தலைப் பார்த்து வருந்தினான்.

### காவலாளர்கள் மிரட்டுதல்

தேவர்களுஞ் சயந்தனும் வருந்திக்கொண்டிருக்கும் போது சிறைக்காவலாளர்கள் அங்கு வந்தார்கள். சயந்தனையுந் தேவர்களையும் பார்த்துச் சினந்தார்கள் "இந்திரனும் இந்திராணியும் எங்கே யிருக்கிறார்கள்? விரைந்து சொல்லுங்கள். இன்றேல் உங்களைக் கொலை புரிவோம்," என்று அதட்டினார்கள்.

சயந்தன் சிறைக்காவலர்களைப் பார்த்து, "என்னுடைய தந்தையுந் தாயும் விண்ணுலகத்தை நீங்கி ஓடினார்கள். பின்பு அவர்கள் எங்கு சென்றார்களென்பதை நானறியேன்" என்றான்.

தேவர்கள், "எங்கள் அரசனாகிய இந்திரனும் இந்திராணியும் போன இடம் இன்னதென்று நாங்கள் உணரோம். சிறையிற் கிடந்து துன்புறும் யாங்கள் அதனை எவ்வாறு உணர்வோம்?" என்றார்கள்.

சயந்தனுந் தேவர்களும் அவ்வாறு கூறியதைக்கேட்ட சிறைக்காவலர்கள் தேவர்களையும் சயந்தனையும் பலவாறு வருத்தத் தொடங்கினார்கள். பல இழிவுரைகளைக் கூறி வைதார்கள். காதிலே தோமரத்தைச் சொருகிக் கடைந்தார்கள். உடலைப் பலவாறு சேதித்தார்கள். மார்பில் அடித்தார்கள்; தலையில் மோதினார்கள்.

## சயந்தன் இறைவனைநோக்கிப் புலம்புதல்

சிறைக்காவலர்கள் தேவர்கட்குப் பலவகையான தண்டனைகளைச் செய்தமையால் ஆற்றல் குறைந்து தளர்ந்து போனார்கள். தவத்திலே சிறந்த தேவர்கள் அமுதத்தை உண்டவர்களாதலின் இறக்கமாட்டார்கள். இவர்களை வீணாக ஒறுப்பதாற் பயனில்லை யென்று அவர்களைக் காவல்காக்குந் தொழிலில் ஈடுபட்டு இருந்தார்கள்.

சயந்தன் இறைவனை நோக்கிப் பலவாறு புலம்பலானான். "தொண்டர்களின் தீவினைகளை மாற்றுபவரே! கங்கையை அணிந்தவரே! திருநுதற்கண்ணை யுடையவரே! திங்களைத் தாங்கியவரே! இங்கே நாங்கள் அழுது புலம்புதலைத் தேவரீர் கேட்கவில்லையோ? உயிர்கட்கு உம்மைத் தவிர வேறு யார் துணையாவர்? அடியேனுடைய உயிரைத் தேவரீர் பாதுகாக்குமாறு இப்பொழுது எழுந்தருளுதல் வேண்டும். அஞ்சினோர் அனைவருடைய துன்பங்களையும் போக்கியருளிய நீர் என்னிடத்தில் மட்டுந் தண்ணளிபுரியா திருப்பதற்குக் காரணம் யாது? என்னுடைய இத்துன்பம் நீங்கினால் போதும். பிறகு யான் விண்ணுலக இன்பத்தையும் விரும்பமாட்டேன். தவத்தைச் செய்து தேவரீருடைய திருவடிகளை யடைவேன். விண்ணுலக வாழ்வை விரும்பிப் பெருந் துன்பங்களைத் தேடிக்கொண்டேன். எல்லோருடைய உயர்ந்த நிலைமை

களின் அழிவையும் நான் கண்டுகொண்டேன். அடியேனுக்கு நேர்ந்துள்ள இத்துன்பங்களை நீக்கி உம்முடைய திருவடிகளைத் தந்தருளும்" என்று பலவாறு புலம்பி இறைவனை வேண்டினன்.

வந்திப் பவர்பவங்கள் மாற்றுவோய் எத்தேவர்
சிந்தைக்கும் எட்டாச் சிவனே ! செழுஞ்சுடரே!
இந்தப் பிறவி இடருழப்பச் செய்தனையோ
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரே!

(பவம் - பிறவி. உழப்ப - நுகர. புணர்ப்பு - செய்கை.)

கைந்நாகத் துக்குங் கயவாய்க்கும் நாரைக்கும்
பைந்நாகத் துக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னு கியவுயிர்க்கும் பேரருள்முன் செய்தனையால்
என்னு யகனே எமக்கேன் அருளாயே!

(கைந்நாகம் - யானை. கயவாய் - கரிக்குருவி. பைந்நாகம் - பாம்பு.)

கங்கை முடித்தாய் கறைமிடற்றாய் கண்ணுதலாய்
திங்கள் புனைந்தாய் சிவனே சிவனேஎன்(று)
இங்கு நினதடியேம் எல்லேமுக ளும்அரற்ற
நங்கள் உயிர்க்குயிராம் நாயகநீ கேட்டிலையோ!

(மிடறு - கண்டம். அரற்ற - பலம்ப.)

பாசங்கொண் டாவி பலவும் பிணிப்போனும்
நேசங்கொண் டாங்கதனை நீக்கியருள் செய்வோனும்
ஈசன் சிவனென் றியம்புமறை நீஇழைத்த
ஆசொன்றும் இத்தீமை ஆர்தவிர்க்க வல்லாரே!

(ஆவி - உயிர். ஆசுஒன்றும் - குற்றம பொருந்திய.)

நாராயண னும்அந்த நான்முகனும் நாடரிய
பேராதி யான பெருமான் உயிர்க்கெல்லாம்
ஆராயின் நீயன்றி ஆரே துணையாவார்
வாராய் தமியேன் உயிர்அளிக்க வாராயே!

(பேர் ஆதியான பெருமான் - முதல்வன் என்னும் பெயரையுடையவன்)

சீற்றம் விளைத்துமுனம் தேவர் தொகையலைப்பான்
கூற்றம் எனவே குறுகுற்ற அந்தகனும்
ஆற்றல் இழப்ப அகல்மார்பில் முத்தலைவேல்
ஏற்றியவன் நீயன்றோ எமக்கேன் இரங்கலையே!

(தேவர் தொகை - தேவர் கூட்டம். அலைப்பான் - வருத்துவான். குறுகுற்ற - நெருங்கிய. அந்தகன் - நமன்.)

## ௬0. சயந்தன் கனவு காணுதல்

### முருகக்கடவுள் திருவருள் புரிதல்

சிறையிற் பெருந் தொல்லைப்படுஞ் சயந்தனுக்குந் தேவர்களுக்கும் முருகக்கடவுள் திருவருள்புரிய எண்ணினார். சயந்தனுக்கு உறக்கம்போன்ற மயக்கத்தை உண்டு செய்தார். அம் மயக்கவேளையிலே ஆறு திருமுகங்களுடனுஞ் சயந்தனுக்குக் காட்சி கொடுத்தருளினார். சயந்தன் அறிவுக்கண்களால் அவரைக்கண்டு வணங்கினான். 'அடியேனுடைய துன்பங்களைப் போக்கியருளுமாறு எழுந்தருளிய தாங்கள் யாவர்? திருமால் நான்முகன் சிவபெருமான் ஆகிய கடவுளர்களாகத் தெரியவில்லையே!'' என்று கேட்டான்.

முருகக்கடவுள் சயந்தனைப் பார்த்து, ''நாம் கொன்றைமாலையை அணிந்த சிவபெருமானுடைய புதல்வராவேம். உன்னுடைய துன்பங்களை நீக்கும்படியாக எழுந்தருளினேம். நாம் உன் தந்தை முதலியவர்களோடும் அளவிறந்த படைகளோடும் நிலவுலகில் வந்து கிரவுஞ்சமலையையும் தாரகனையும் அழித்தோம். இப்போது திருச்செந்தின்மாநகர் என்னுமிடத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றோம். திருமாலும் நான்முகனும் உன் தந்தையும் மற்றைத் தேவர்களும் நம்முடன் இருக்கின்றார்கள். உன் தாய் மேருமலையில் இருக்கின்றாள். வீரவாகு என்பவனைத் தூதாகச் சூரபன்மனிடம் அனுப்பியிருக்கிறோம். அவன் இப்பொழுது இங்கு வருவான். நாம் நாளைக்கே படைகளுடன் எழுந்தருளிவந்து பத்து நாட்களில் அவுணர்களையும், சூரபன்மனையும் அழிப்போம். உன்னைத் தேவர்களுடன் சிறை நீக்குவோம். உங்களனைவருக்கும் விண்ணுலக வாழ்வைத் தருவோம்!'' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

கனவிற் காட்சிகொடுத்து நிற்கும் முருகக்கடவுளைச் சயந்தன் பலவாறு போற்றினான். அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சி யுண்டாகியது. கண்கள் இன்பநீரைச் சொரிந்

தன. "எம்பெருமானே! தேவரீர் வலியவந்து அடியேங்களுடைய துன்பங்களை மாற்றியருளினீர். உம்முடைய இடத்திலே அடைக்கலம் புகுந்தோம். எங்களைக் காத்தருளும்," என்று போற்றினன். முருகக்கடவுள் சயந்தனுக்கு மேலுந் திருவருள்புரிந்து மறைந்தருளினர். தேவர்கள அனைவருடைய கனவிலுந் தோன்றிச் சயந்தனுக்கு அருள் செய்தவாறே அருள்செய்து மறைந்தருளினர் தேவர்கள் உணர்ச்சியடைந்தபொழுது கனவினை எண்ணி மகிழ்ச்சியடைந்தார்கள்.

## கக. வீரவாகுதேவர் சயந்தனைத் தேற்றுதல்

### சயந்தனுக்குந் தேவர்கட்குங் காட்சிகொடுத்தல்

வீரவாகுதேவர் சயந்தனையுந் தேவர்களையுங்கண்டு ஆறுதல் உரைகளைக் கூற எண்ணினர். முருகக்கடவுளைப் போற்றினர். காவலர்கட்கு மயக்கத்தை யுண்டுபண்ணக் கூடிய ஒரு மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு சிறைக்கூடத்துக்குச் சென்றார். காவலர்கள் மயங்கி ஓவியம்போன்றிருந்தார்கள்.

சயந்தனும் தேவர்களும் நாம் மயங்கிக் கிடந்தபோது அறுமுகக்கடவுள் தோன்றி அருள் செய்தபோது உரைத்தருளிய தூதுவர் இவர் தாம் போலும் என்று எண்ணினர். வீரவாகுதேவர் சயந்தனுக்கு முன்னே சென்றார். "நான் அறுமுகக்கடவுளுக்குத் தம்பியாகவும் தூதனாகவும் உள்ளேன். என்னுடைய பெயர் வீரவாகு. உங்களுடைய சிறையை விடும்படி சூரபன்மனுக்குக் கூறுமாறு முருகக்கடவுள் எனக்குக் கட்டளையிட்டுள்ளார்" என்று கூறினர். சயந்தனுந் தேவர்களும் மகிழ்ச்சியடைந்தார்கள். "எங்கள் தலைவரே! எங்கள் குறையை நீக்கும்பொருட்டு வந்தருளினீர். எங்களுடைய துன்பங்கள் இனி விரைவில் ஒழியும்," என்றார்கள்.

"என்னைச் சூரபன்மனிடந் தூதனுப்பிய முருகக்கடவுள் உங்கள் துன்பங்களை விரைவில் ஒழித்துப் பழையபடி

விண்ணுலக வாழ்வை விரைவிற் கொடுத்தருள்வார். உங்களைப் பழைய நிலைமையில் அமர்த்துதல் அக்கடவுளுக்கு ஒரு பெருஞ் செயலன்று. நான்முகனைச் சிறைசெய்து உயிர்களையெல்லாம் படைத்தருளிய முருகக்கடவுளுக்கு உங்களுடைய தொல்லையை நீக்குதல் எளிதே. அக்கடவுள் உங்கள் துன்பங்களைப் போக்க இங்கு எழுந்தருளினாரெனில், உங்களைப்போல் தவஞ்செய்தவர்கள் யார் இருக்கிறார்கள்? இந்நகரத்திற்குள் வருதல் மிகவுங்கடினம். நான் முருகக்கடவுளினுடைய அருளினால் ஒருவாறு மறைந்து வந்தேன்,'' என்றார். சயந்தன் வீரவாகுதேவரைப் பார்த்து, "என்னுடைய தாயுந்தந்தையும் யாண்டுள்ளார்கள்?'' என்று உசாவினான். இந்திரனும் இந்திராணியும் விண்ணுலகினின்றும் மறைந்தது முதல் அன்றுவரை நிகழ்ந்த செய்திகளையெல்லாம் வீரவாகுதேவர் கூறியருளினார். பிறகு "சிவபெருமானே ஒரு சிறுவர்போன்று ஆறு திருமுகங்களுடன் எழுந்தருளினார். அவர் அவ்வாறு எழுந்தருளியதற்குக் காரணம் உங்களுடைய துன்பங்களையெல்லாம் நீக்குதலேயாம். தக்கனுடைய வேள்வியிலே புகுந்து தீய அவிப்பாகத்தையுண்ட உங்களுடைய தீவினை வீரபத்திரக்கடவுள் தண்டித்தும் இன்னும் முழுவதுந் தீரவில்லை. அத்தீவினை இன்னுஞ் சிறிது உள்ளது. அதனாலேயே நீங்கள் இவ்வாறு வருந்துகின்றீர்கள். இப்போதுதான் அத்தீவினை அடியோடு ஒழிகின்றது. அறுமுகக்கடவுள் அவுணர்களையுஞ் சூரபன்மனையும் அழித்தல் ஒரு திருவிளையாடலேயாம். நான் கூறுபவைகளைச் சூரபன்மன் கேட்கமாட்டேன் என்பான். நான் திரும்பிச்சென்று முருகப்பெருமானுக்கு மொழிவேன். அவர் நாளைக்கே படைகளுடன் புறப்பட்டு வருவார். சூரபன்மன் முதலானவர்களை அழிப்பார். உங்கள் சிறை உடனே நீங்கும்,'' என்று கூறியருளினார் வீரவாகுதேவர். தேவர்கள் மகிழ்ந்து ஒருவாறு துன்பம் நீங்கியிருந்தார்கள். வீரவாகுதேவர் காவலர்களின் மயக்கத்தை நீக்கி அவ்விடம் விட்டு நீங்கினார்.

# கஉ. வீரவாகுதேவரும் சூரபன்மனும்

## வீரவாகுதேவர் சூரபன்மனைக் காண்டல்

சிறைக்கூடத்தை விட்டு நீங்கிய தேவதூதராகிய வீரவாகுதேவர், பலமதில்களையுங் கோபுரங்களையுங் கடந்து விண்வழியாகச் சென்றார். சூரபன்மன் அரசிருக்கும் மண்டபத்தை யடைந்தார். சூரபன்மனைக் கண்டார். அவுணர்கோனுடைய அத்தாணி மண்டபம் ஆயிரம் யோசனை அகலமுடையதாக அமைந்திருந்தது. அம்மண்டபத்திலே அழகு மிகுந்த அரியணையில் அமர்ந்திருந்தான் சூரபன்மன். மேனகை திலோத்தமை முதலாகிய தெய்வ மாதர்கள் சாமரங்களை வீசினார்கள். பானுகோபன் முதலாகிய புதல்வர்கள் முறைப்படி அமர்ந்திருந்தார்கள். அரம்பையர்கள் நடித்தார்கள். வித்தியாதரர் கின்னரர் இயக்கர் முதலாயினோர் வீணை வாசித்தார்கள்.

சூரபன்மனுடைய தலையிலே மணிமுடி அணிபெறத் திகழ்ந்தது. காதிலே குண்டலங்கள் தொங்கின. நெற்றி திருநீறு பூசப்பெற்று விளங்கியது. மார்பிலே முத்துமாலை முதலிய பலவகை அணிகலன்கள் நிறைந்திருந்தன. தோள்களிலே வாகுவலயங்களும் கைகளிலே காப்புக் களும் இலங்கின. கால்களிலே வீரக்கழல்கள் மிளிர்ந்தன. சூரபன்மனுடைய பொதுவான தோற்றம் சூல்கொண்ட முகிலொன்று அழகுபெற அணிகலன்கள் அமைந்து விளங்குவதைப்போன்றிருந்தது.

மேற்கூறியவாறு சூரபன்மன் அரசு வீற்றிருத்தலை வீரவாகுதேவர் கண்டார். சூரபன்மனைப்போல இவ்வாறு சிறந்த செல்வத்தைப் பெற்றவர்கள் எவருமிலர். தவஞ் செய்தவர்களில் உயிரைவிட்டுத் தவஞ்செய்தவர்களுமிலர். சிவபெருமான் இவனுக்குக் கொடுத்த மேன்மைகளைப் போல் வேறு எவருக்குங் கொடுத்ததுமில்லை. கொடுந் தவஞ்செய்து இம்மேன்மைகளை யெல்லாம் எய்திய சூர பன்மன் நெடுங்காலமிருந்து இவைகளை நுகர எண்ணு கின்றானில்லை. ‘தூக்கணங்குருவி சிறிய கொள்ளிக்

கட்டையை மின்மினிப்பூச்சி என்று எண்ணித் தன்னுடைய கூட்டில் வைத்து அழிந்ததைப்போல' இவன் தேவர்களைச் சிறைவைத்துத் தனக்கு அழிவைத் தேடிக் கொண்டான். மிகுந்த ஆற்றல் செல்வம் முதலியவைகளைப் பெற்றுள்ளவர்களும் யாரிடத்தேனும் சிறிதாயினும் பகையுடையாராக வாழ்தல் குற்றமாகுமேயல்லாமல் நன்மையாகமாட்டாது. இவன் இந்திரனையும் இந்திராணியையும் நகரத்தைவிட்டுத் துரத்தி அவர்களுடைய மகனைச் சிறையிலே வைத்த தீவினையால் அரசினை யிழப்பான்.

"மிகையான வீரம் வளமாற்றல் சால மேவுற்று ளோரும் இறையும்
பகையார்க ணேனும் உளராகி வாழ்தல் பழுதன்றி நன்றி படுமோ
மகவானை மங்கை யுடனே துரந்தும் அவர்மைந்த னோடு சுரரை
அகலாமல் ஈண்டு சிறைவைத்த பாவம் அதனால் இழப்பன் அரசே"

"இவன் தன்னுடைய மக்களோடும் ஒக்கலோடும் சிலநாளில் அழிந்துபடுவானாயின், இவனுடைய உயிருக்கு நிலை முருகப்பெருமான் தந்தருளும் வீடுபேற்றைத் தவிர வேறு யாதுளது!'' என்று பலவாறு எண்ணமிட்டார். சூரபன்மனுக்கு முன்புசெல்லத் துணிந்தார். முருகக் கடவுளுடைய திருவடிகளை எண்ணினார். விண்வழியாகச் சூரபன்மன் அரசிருக்கும் மண்டபத்தை யடைந்தார். எல்லோருக்குந் தம்முடைய வடிவத்தைக் காட்டினார். தம்முடைய பெருமை தோன்றுமாறு அமர்வதற்கு எண்ணினார். முருகக்கடவுளை உள்ளத்திலே நினைந்து போற்றினார். பேரொளி அமைந்த அரியணையொன்று அறுமுகப்பெருமான் திருவருளால் அவைக்களத்திற்கு வந்தது. அஃது ஆயிரங்கோடிக் கதிரவனொளியோடு இலங்கியது. அவ்வரியணையின் ஒளி அவையின் சிறப்பைத் தொலைத்தது. சூரபன்மன் அணிந்துள்ள அணிகலன்களின் ஒளியைக் கலைத்தது. அது சூரபன்மனுக்கு எதிரே இறங்கிப் படிந்தது. அதனைக்கண்ட வீரவாகு தேவர் இஃது எம்பெருமானுடைய திருவருளால் வந்திற்றுப்போலும் என்று எண்ணினார். முருகக்கடவுளைப் போற்றினார். அவ்வணையின்மீது அமர்ந்தார்.

## வீரவாகுதேவரைக் கண்டோர் வியப்பு!

வீரவாகுதேவருடைய நிலைமையை அவைக்களத்தி லுள்ளோர் கண்டனர். அவர்களுக்கு நடுக்கமும் வியப் பும் உண்டாயின. "இவன் யார்? இவன் இங்கு வரவேண் டிய காரணம் யாது?" என்று சிலர் எண்ணினார்கள். சிலர், "இவன் பேராற்றலையுடைய நம்மரசனுக்கு முன்பு வந்திருக்கிறான். இவன் காவல்களை எவ்வாறு கடந்து வந்தான்?" என்றார்கள். சிலர், "இவன் இங்கே வந்தது வியப்பிற்குரிய செயலாயிருத்தலுடன், இவன் அமர்ந்திருக் கும் அரியணை இங்கே எவ்வாறு வந்தது என்பது மேலும் வியப்பை யுண்டாக்குகின்றது. இவன் நம்மினும் மாயங் களில் தேர்ந்தவன்" என்றார்கள். சில காவலர், "இவனை ஏன் இங்கே விட்டீர்களென்று அரசன் நம்மைச் சினந் தால் யாது செய்வது" என்று அஞ்சினார்கள். சிலர், "இவன் சூரபன்மனுடைய உறவை நினைத்து இங்கு வந்திருக்கின்றானோ? அல்லது பகைவர்களிடமிருந்து வந்த வனோ என்னுஞ் செய்திகளை விரைவில் அறிவோம்" என்றார்கள். சிலர், "இவன் சிவபெருமானாக இருக்கலாம்!" என்றார்கள். சிலர், "திருமாலாக இருக்கலாம்" என்றார் கள். சிலர், "நான்முகனே இவ்வாறு சூழ்ச்சியாக வந்திருக்கலாம்!" என்றார்கள். சிலர், "நேற்று இறந்து போன தாரகன் தன்னுடைய பழைய உருவம் ஒழிய, இன்றைக்கு இந்த அழகிய உருவத்தைக்கொண்டு தமைய னிடத்திற்கு வந்திருக்கிறான்போலும்!" என்றார்கள். பலரும் இவ்வாறும், இன்னும் பலவாறும் பேச வீரவாகு தேவர் அரியணைமீது அமர்ந்திருந்தார்.

## சூரபன்மன் சீற்றமும் மாற்றமும்

வீரவாகுதேவர் தன்முன்வந்து சிறிதும் அஞ்சாது வீற்றிருக்குங் கோலத்தைக் கண்டு சூரபன்மன் மிகுந்த சீற்றங் கொண்டான். பற்களைக் கடித்தான்! சினந்தான்! நகைத்தான்! கனைத்தான்! அவனுடைய உடல் வியர்த் தது. கண்கள் தீப்பொறியைச் சிந்தின. அவன் வீரவாகு தேவரைப் பார்த்து, "விலங்குகளைப்போலக் காட்டி

லிருந்து தம்முடலை வருத்துகின்ற சிற்றுணர்வோர்களுடைய சித்துவித்தை இதுவாகும். சிறியவனாகிய நீயும் அதனைக் கற்றிருக்கின்றாய்போலும்! நம்முன் எல்லோருங் காண அவ்வித்தையை நீ காட்டினாய்! நமக்குத் தோற்றோடித் திரிகின்ற தேவர்கள் இத்தொழிலில் மிக்க ஆற்றலை யுடையவர்கள். ஆனால், அவர்கள் உன்னைப் போல நம்மிடத்திலே சிறிதுங் காட்டமாட்டார்கள். நீ நம் முன்பு காட்டுங் கூத்து மிக நன்றாக விருக்கின்றது! சித்தர்கள் முதலானோர் இவ் வித்தையைத் தத்தம் இடங்களில் செய்வதல்லது நம்முன் செய்தற்கு அஞ்சுவர். நீயோ நமக்கிதனைச் செய்து காட்டினாய்! நீ செய்யும் இந்த ஆடலை இந்நகரத்திற் பெண்களுஞ் செய்வர்! சூலில் இருக்குங் குழவியுஞ் செய்யும்! என்னை மதியாமல் எனக்கெதிரே இருந்தாய். வாட்படையினால் உன்னுடைய தலையை வெட்டுவேன். உன் செயல் எல்லாவற்றையுந் தெரிந்துகொண்டு பின்னர் அதனைச் செய்கிறேன். தேவர்களனைவரும் எனக்கு அஞ்சியோடித் திரிகின்றார்கள். நீ யாவன்? விரைவிற் கூறுவாயாக," என்றான்.

## வீரவாகுதேவர் கூறுதல்

சூரபன்மன் சொல்லியவைகளைக் கேட்ட வீரவாகு தேவர் சினமடைந்தார். அவர் சூரபன்மனைப் பார்த்து, "நீ என்னை மாயக்கூத்தாடுவாராக மதித்தாய். உன்னுடைய அந்த எண்ணத்தை விடு. நான் முழுமுதற் பரம்பொருளாகிய முருகப்பெருமானுடைய தூதுவன். வீரவாகு என்னும் பெயரினையுடையேன். உன் தம்பியாகிய தாரகனையும் கிரவுஞ்சமலையையும் ஒரு நொடிப்பொழுதினுட் கொன்ற ஒப்பற்ற வேற்படையுடைய கடவுள், உன்னிடத்தில் வைத்த அருளால் தூதாக அனுப்பியருளினார்" என்று கூறினார். சூரபன்மன் அவரைப்பார்த்து "அறுமுகக்கடவுள் உன்னை நம்மிடத்தில் தூதாக விடுத்த காரணம் யாது? கூறு" என்றான்.

வீரவாகுதேவர் சூரபன்மனைப் பார்த்து, "நீ இந்திரனை இந்திராணியோடு துரத்தினாய்; பொன்னுலகத்தினைக்

கொளுத்தினாய்; அவன் மகனாகிய சயந்தனையும் பலதேவர்களையும் சிறையில் வைத்தாய். இவைகளையெல்லாம் முருகக்கடவுள் அறிந்தார். திருமால் முதலிய தேவர்களின் முறைப்பாட்டைக் கேட்டு அவர்களுடைய குறையை நீக்க எண்ணினார். அளவிறந்த பூதப்படைகளோடு நிலவுலகத்திற்கு வந்தார். உன் தம்பியாகிய தாரகனையும் கிரவுஞ்ச மலையையும் அழித்தார். நெருநல்போதே திருச்செந்தூரில் வந்து எழுந்தருளினார். விரைந்து வந்து உன்னையழிக்குமாறு எண்ணியிருக்கின்றார். உன்னிடத்திலே கொண்ட அருளினால் என்னைத் தூதனுப்பினார். அவர் கூறியருளிய செய்தி யாதென்றால், கூறுகிறேன் கேள்: 'நீ காசிபமுனிவருடைய மகனாகவிருந்தும் தேவர்களைச் சிறையில் வைத்தாய். இழிதொழில்கள் பலவற்றைச் செய்தாய். தேவர்கள் வருந்துதல் உனக்குத் தக்கதன்று. மேலோர்கட்குப் பலவகைத் துன்பங்களைச் செய்யும் கீழோர் விரைந்து அழிவர். எழுமையுந் தொல்லையடைந்து இழிவர். பிறர்க்குத் துன்பஞ் செய்வோர் இம்மையிற் பலவகைத் தொல்லைகளடைந்து இறப்பர். நீ அறிவில்லாதவன். நீ அழிவை அடையாது சிவபெருமான் அருளிய செல்வத்தோடு இனிது வாழவேண்டுமாயின் சயந்தனையும் தேவர்களையுஞ் சிறையினின்று விட்டுவிடுவாயாக' என்று கூறுமாறு என்னையனுப்பினார்" என்று சொன்னார்.

## சூரபன்மன் சினம்

வீரவாகுதேவர் விளம்பியவைகளைச் சூரபன்மன் கேட்டான். அவனுடைய கண்கள் தீப்பொறியைக் கக்கின. சினம் மிகுந்தது. கையோடு கையைப் புடைத்தான். வீரவாகுதேவரைப் பார்த்து, "ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் அரசனாக இருக்கின்றேன் நான். இன்னும் பல் முளைக்கப்பெறாத ஒரு சிறுவனா எனக்கு அறிவு கூறுவது? தேவர்கள் அவுணர்களை வருத்தித் துன்பஞ்செய்தார்கள். ஆகையால், நான் தேவர்களைத் தண்டித்துச் சிறையிலிட்டேன். நான் எக்காரணத்தை

முன்னிட்டுந் தேவர்களைச் சிறையினின்றும் விடமாட்டேன். என்னுடைய அண்டத்தின் முடியில் ஓரிடத்திற் கொண்டுபோய் வைப்பேன். இந்திரன் முதலிய தேவர்களையும் இந்நகரிற் கொண்டுவந்து சிறைசெய்ய எண்ணியிருந்தேன். சூரன் என்று பேர்படைத்த யான் அகப்பட்ட சிறையை விடுவேனோ? எனக்குச் சிவபெருமான் கொடுத்தருளியுள்ள மேன்மைகளை யார் நீக்குவதற்கு வல்லார்? தாரகனையும் கிரவுஞ்சத்தையும் அழித்தமையை நேற்றே அறிந்தேன். நாளைக்கே என் படைகளை அச்சிறுவன்மேல் அனுப்பிப் பழிவாங்குகிறேன். சிவபெருமானுடைய கண்ணில் நேற்றுத்தோன்றிய சிறுவனா என்னை வெல்வான்? நீ சிறிதும் அறிவில்லாமல் ஒரு குழந்தையின் பேச்சைக் கேட்டுக்கொண்டு தூதுவனாக வந்தாய். நான் உன்னுடைய உயிரைக் கொடுத்தேன். பிழைத்தோடிப்போவாயாக,'' என்றான்.

## வீரவாகுதேவர் சினந்து கூறுதல்

சூரபன்மன் சொல்லியவைகளைக் கேட்ட வீரவாகு தேவருக்குச் சினத்தீ மிகுந்தது. மயிர்கள் பொடித்தன. கண்கள் சிவந்தன. நகைப்பு உண்டாயிற்று. அவர் சூரபன்மனைப் பார்த்து, "உய்யுந்திறத்தை உணராத கீழ்மகனே! உரைப்பதைக் கேட்பாயாக! திங்களையணிந்த சிவபெருமானுடைய திருநுதற்கண்ணில் தோன்றியருளிய திருமுருகக்கடவுளது பெருமையை நீ சிறிதுந் தெரிந்துகொள்ளவில்லை. சிறுவன் என்று இகழ்வாகச் செப்பினாய். சிவபெருமானே வேறொரு திருவுருவத்தைத் தாங்கிக் குழந்தையாக எழுந்தருளியிருக்கின்றார். சிவபெருமானுடைய திருவிளையாடலை நீ சிறிதும் தெரியாய். சிவபெருமானும் திருமுருகக்கடவுளும் வேறல்லர். மேன்மைகளையெல்லாம் உனக்குக் கொடுத்த கடவுள் அவைகளை மாற்றுவது அரியதன்று. எங்கும் நிறைந்துநின்று அருள் செய்கின்ற திருமுருகக்கடவுளுக்கு எங்குந் திருமுகங்கள்! எங்குந் திருக்கண்கள்! எங்குந் திருக்காதுகள்! எங்குந் திருக்கைகள்! எங்குந் திருவடிகள்! எங்குந்திருவுடல்!

மறைகட்கெல்லாம் முதன்மை பெற்றிருக்கும் பிரணவமே முருகக்கடவுளுடைய திருமுகங்களுள் ஒன்றாம். எல்லாத் தெய்வங்களும் திருமுருகக்கடவுளேயாவர். உயிர்த் தொகைகட்கு எல்லாப் பேறுகளையும் அளிப்பவரும் அவரே. மெய்யறிவாளர்களாலும் உணர்தற்கரிய, அறிதற்கரிய முருகக்கடவுளினுடைய திருவிளையாடல்களை யாவர் அறிவர்? அவருடைய ஆணையின்றி ஓர் அணுவும் அசைய மாட்டாது. நீ அக்கடவுளுடைய மாயையில் அகப்பட்டு மயங்கினாய். எம்பெருமானை இகழ்ந்தாய்! நாம் உன்னுடைய நாவை அறுத்து உயிரையும் வாங்குவோம்! நம்மைத் தூதனுப்பிய கடவுள் கட்டளை அவ்வாறன்றாகையால், அவ்வாறு செய்யாது விட்டோம்" என்றார்.

## சூரபன்மன் கட்டளையும் ஆயிரவர் அழிவும்

வீரவாகுதேவர் மொழிகளைக் கேட்ட சூரபன்மனுக்கு மேலுஞ் சினமூண்டது. "பல்லு முளைக்காத சிறுவனுடைய தூதுவன் என்று எண்ணி உன்னைக் கொல்லுதல் செய்யாது விட்டேன். நீயோ இங்குநின்றுஞ் செல்லாமல் அவனுடைய பெருமையையே மேலுஞ் சொல்லுகின்றாய். என்னுடைய சினத்தை நீ சிறிதும் பொருட்படுத்துகின்றாயில்லை. எத்தகைய கடவுளாக இருந்தாலும் இருக்கட்டும்; தேவர்கள் அனைவரையும் வென்ற நான் அவனுக்கஞ்சுவேனோ? தேவர்களுடைய சிறையை நான் கனவிற்கூட விடமாட்டேன். நீ எனக்கு எதிரிலிருந்து இறுமாப்பான மொழிகளைப் பேசினாய்; அவைகளையெல்லாம் ஒரு நொடிப் பொழுதிற் காண்கிறேன்," என்றான். தன் எதிரில் நின்ற மறவர்களுள் ஆயிரம்பேர்களைப் பார்த்துத், "தூதுவனைக் கொல்வது பழி. இவனை விரைவிலே பிடித்துச் சிறையிலே போடுங்கள்," என்றான். அவர்கள் வீரவாகுதேவரைப் பிடிப்பதற்கு வந்தார்கள். வீரவாகுதேவர் விரைவிலெழுந்தார். ஆயிரம் பேர்களுடைய குடுமிகளையும் ஒரு கையாற்பிடித்தார். ஓங்கியடித்துக் கொன்றார். சூரபன்மனுக்கு முன்னே போட்டார். சூரபன்மனைப் பார்த்து, "முருகப்பெருமானுடைய வேற்

படை இனி உன்னை அழித்தல் உறுதி,'' என்று கூறி அவையை நீங்கிப் புறப்பட்டார். அவர் எழுந்தருளியிருந்த அரியணையும் விண்வழியாக மறைந்து போயது.

## கரு. சதமுகன் அழிவு

### சூரபன்மன் சதமுகனை ஏவுதல்

வீரவாகுதேவருடைய செயலைக் கண்டான் சூரபன்மன். தன் பக்கத்திலிருந்த சதமுகன் என்பவனைப் பார்த்தான். "இவன் முருகனுடைய ஆள். இங்கு என்னை இகழ்ந்ததுமன்றி ஆயிரம்பேர்களைக் கொன்றுவிட்டுஞ் செல்லுகிறான். அவனைப் பிடித்து விரைவிற் கட்டிக் கொண்டு வருவாயாக,'' என்றான். சூரபன்மன் ஆணையைக்கேட்ட சதமுகன் சூரபன்மனை வணங்கிப் புறப்பட்டான். நூறாயிரம் வீரர்களையும் உடன் அழைத்துக்கொண்டான். கணக்கற்ற படைக்கலங்களை யெடுத்துக்கொண்டு புறப்பட்டான். வீரவாகு தேவரை யடைந்து மறித்தான். "நீ எங்கே தப்பி ஓடுகிறாய்? நீ எங்கு ஓடினாலும் நான் உன்னை விட்டுவிடுவேனோ?'' என்று கூறிக்கொண்டு வீரவாகுதேவரைக் கிட்டினான். வீரவாகுதேவர் சதமுகனை யெதிர்த்தார்.

சதமுகனைச் சேர்ந்த நூறாயிரம் வீரர்களும் வீரவாகு தேவர்மீது படைக்கலங்களைச் செலுத்தினார்கள். அவைகள் பலவாறு அழிந்து போயின. வீரவாகுதேவர் இருபதினாயிரம் முடிகளையுடைய ஒரு மலையைப் பிடுங்கி அவுண மறவர்கள்மேல் எறிந்தார். அம்மலை அவுணர்கள்மீது விழுந்து அவர்களுடைய உடல்களைத் தூளாக்கியது. சதமுகன் கலக்கமடைந்தான். தன் படைஞர்களைக் காணாது வருந்தினான். பின் ஒருவாறு தெளிந்தான். இருப்புலக்கை, சூலம், வேல் முதலிய படைக்கலங்களை வீரவாகுதேவர் மீது செலுத்தினான். வீரவாகுதேவர் ஒரு மலைமுடியைப் பிடுங்கி யெறிந்தார். சதமுகன் கணைகளைச் செலுத்தி அம்முடியை அழித்ததுடன் வீரவாகுதேவர்

மீதும் ஆயிரங்கணைகளைச் செலுத்தினன். வீரவாகுதேவர் சதமுகன் வில்லைப் பறித்து முறித்தெறிந்தார். வீரவாகு தேவரைப் பிடிப்பதற்கு இதுவே ஏற்ற சமயமென்று எண்ணி நூறு கைகளைநீட்டி அவரைப் பிடித்தான். அவர் அவனுடைய மார்பிலே தாக்கி நிலத்தில் வீழ்த்தி உதைத் துத் தேய்த்துக் கொன்றார்.

## கச. காவலாளர்கள் அழிவு

### வீரவாகுதேவர் பேருருவங் கோள்ளுதல்

வீரவாகுதேவர் சூரபன்மனுடைய அவைக்களத்தை யும் நகரத்தையும் அழிக்கவேண்டும் என்று எண்ணினர். முருகக்கடவுளைப் போற்றினர். தோள்கள் திக்கை யளக்க வும், முடி வானுலகத்தை முட்டவும், அடிகள் நிலவுல கத்தை யளக்கவும் பேருருவம் எடுத்து நின்றார். அவ ருடைய சுமையைத் தாங்க முடியாமல் நிலந்தாங்கும் பாம்புகளும் ஆதிகூர்மமும் அஞ்சின. வீரமகேந்திரபுரம் நடுங்கியது. கடல்நீர் நான்கு பக்கங்களினும் ஏறியது. வீர வாகுதேவருடைய பேருருவத்தைக் கண்டவர்கள் அச்ச மடைந்து ஓடினர்கள்.

சூரபன்மனுடைய அரண்மனையைக் காவல் புரிகின்ற ஐம்பதுவெள்ளம் அவுணர்கள் வீரவாகுதேவரோடு போர் செய்யத் தொடங்கினர்கள். எழு, தோமரம், பிண்டி, பாலம், தடி முதலிய படைக்கலங்களை யெறிந்து ஆரவாரஞ் செய்தார்கள். வீரவாகுதேவர் ஆயிரங்கோடி இடியைப் போலக் கொக்கரித்தார். அவ்வொலியைக் கேட்டுக் கலங்கி அவுணப்படைகள் அறிவழிந்தன. வீரவாகுதேவர் அவு ணர்களை உதைத்தும், துவைத்தும், உருட்டியும், புரட்டி யும் பலவாறு கொன்றொழித்தார். ஐம்பதுவெள்ளம் படைகளும் மிகு விரைவில் அழிந்து தொலைந்தன. பறவை கள் அவுணர்களுடைய ஊனை யுண்டுகளித்தற்குத் தோதாக த் தங்கியிருந்தன.

## கரு. நகரழிதல்

### செய்குன்றால் அத்தாணிமண்டபத்தை அழித்தல்

வீரவாகுதேவர் சூரபன்மனுடைய அரசிருக்கை மண்டபத்தை அழிக்க எண்ணினார். அரண்மனைக்கு முன்னே ஒரு பெரிய செய்குன்று இருந்தது. அதனைப் பிடுங்கி மண்டபத்தின்மீது வீசினார். அத்தாணிமண்டபத்தின் பெரும்பகுதி அழிந்தொழிந்தது. அங்கிருந்தவர்களிற் சிலர் இறந்தனர்; சிலர் கால் கை ஒடியப்பெற்றனர்; சிலர் ஓடினர். சூரபன்மன் வீரவாகுதேவருடைய ஆற்றலைக்கண்டு சீற்றமடைந்தான். தன்னயலில் நின்ற ஆயிரம் அவுணர்களைப்பார்த்து, "அறுமுகனுடைய தூதுவன் ஒரு செய்குன்றால் நமது அத்தாணிமண்டபத்தை அழித்துவிட்டான். அவன் தூதனுகையால் கொல்லாமற் பிடித்துக் கொண்டுவாருங்கள்; தேவர்களோடு சிறையில் அடைக்க வேண்டும்," என்றான். சூரபன்மனுடைய கட்டளையைப் பெற்ற ஆயிரம் அவுணர்களும் ஒவ்வொருவரும் ஐந்நூறு முகங்களையும் ஆயிரந்தோள்களையு முடையவர்கள்.

### பிறவற்றை அழித்தல்

வீரவாகுதேவர் நகரிலுள்ள வளங்களை அழிக்க எண்ணினார். சோலை, செய்குன்று, மண்டபம், திண்ணை, கோபுரம் முதலியவைகளைத் தரைமட்டமாக்கினார். பந்திகளிலும் சாலைகளிலும் நின்ற கணக்கற்ற யானை குதிரை தேர் ஆகியவைகளையள்ளித் திக்குகள்தோறும் வீசினார். மதில்களை உடைத்து வீழ்த்தினார். அதனைச் சூழ்ந்த அகழியைத் தூர்த்தார். வீரவாகுதேவரால் அள்ளி வீசப்பெற்ற செய்குன்றுகள் சோலைகள் முதலியன விண்ணிடமெங்குஞ் செறிந்தன. தேவகங்கையையுந் தூர்த்தன. அவைகள் விசும்பில் வரக்கண்ட தேவர்கள் அஞ்சிக் குலைந்து ஓடினார்கள். உலகமெங்கும் சென்று வீழ்ந்தவைகள் அங்கங்குள்ள உயிர்களை வருத்தின. வீரமகேந்திரபுரத்து அவுணர்கள் பலவாறு அழிந்தொழிந்தார்கள். இறந்தவர்களுடைய குருதிப்பெருக்கால் நகரமெங்குஞ் சேறாகியது. இவ்வாறு வீரமகேந்திரபுரம் சிறப்பிழந்தது.

## கசு. சகத்திரவாகுகள் அழிவு

### ஆயிரந் தோளுடையவர் அழிந்தொழிதல்

மகேந்திரபுரம் இவ்வாறு அழிந்துகொண்டிருக்கும் போது, சூரபன்மனால் அனுப்பப்பெற்ற அவுணமறவர்கள் வீரவாகுதேவரிடத்திற்கு வந்து சூழ்ந்தார்கள். பலவாறு ஆரவாரஞ்செய்தார்கள். வீரவாகுதேவர் ஒரு மராமரத்தைப் பிடுங்கிப் பலமுறை சுற்றினார். ஆயிரந் தோளர்கள் அவரைச் சூழ்ந்து, தோமரம் குலிசம் முதலிய படைகளைச் செலுத்தினார்கள். வீரவாகுதேவர் அவைகளை மராமரத்தால் தூளாக்கினார். ஆயிரந்தோளர்கள் ஆண்மைத்தோளரை அண்மிப் போர்புரிய எண்ணினார்கள். அவர்களனைவரையும் மராமரத்தினால் அடித்துக்கொன்றார் வீரவாகுதேவர். ஆயிரந்தோளர்களுடைய ஆக்கையினின்று புறப்பட்ட குருதிப்பெருக்கு அந்நகரத்து வளங்களை வாரிக்கொண்டு கடலுக்குச் சென்றது.

## கஎ. வச்சிரவாகு அழிவு

### வச்சிரவாகு போருக்கு வருதல்

சூரபன்மனுடைய தூதுவர்கள் போரைப்பார்த்துக் கொண்டு விண்ணில் நின்றார்கள். ஆயிரந்தோளர்கள் அழிந்ததை அவர்கள் கண்டார்கள். உடனே விரைந்து சூரபன்மனிடம் ஓடினார்கள். ஆயிரந்தோளர்கள் அழிந்தொழிந்தார்கள் என்பதைச் சூரபன்மனுக்கு அறிவித்தார்கள். சூரபன்மன் மிகுந்த சினத்தையடைந்தான்.

வச்சிரவாகு என்பவன் சூரபன்மனுடைய இளைய மகன். பத்துத் தலைகளையுடையவன். தன் தந்தையினுடைய சினத்தை அவன் கண்டான். தான் சென்று தூதுவனைப் பிடித்துவருவதாகத் தந்தையிடம் கூறினான். சூரபன்மனும், "அவ்வாறே செய்" என்று கட்டளையிட்டான். வச்சிரவாகு போர்க்கோலங் கொண்டான். படைகள் புடைசூழ வீரவாகுதேவர் இருந்த இடத்திற்கு வந்தான்.

## வச்சிரவாகுவுக்கும் வீரவாகுதேவருக்கும் போர்

வச்சிரவாகுவை வீரவாகுதேவர் கண்டார். தோள்களைத்தட்டி ஆரவாரித்தார். அவ்வொலியைக் கேட்டு அவுணர்களும் வச்சிரவாகுவும் அஞ்சி நடுங்கினர். பிறகு வீரவாகுதேவரைச் சூழ்ந்து போர்செய்ய எண்ணினர். பலவகைப் படைக்கலங்களை வீரவாகுதேவர்மீது வீசினர். வீரவாகுதேவர் சில அவுணர்களுடைய குடுமியைப்பிடித்து நிலத்திலும் மலைகளிலும் அடித்தார். சிலருடைய படைக்கலங்களைப் பிடுங்கி முறித்தெறிந்தார். சிலரைக் கால்களால் தேய்த்தார். சிலரை மராமரத்தால் அடித்தார். சிலருடைய தலைகளின்மீது குதித்தார். நால்வகைப் படைகளையும் இவ்வாறே அழித்தார். வச்சிரவாகுவின் துணைவர்கள் நால்வகைப் படைகளோடும் வளைத்துக்கொண்டு போர் செய்தார்கள். வீரவாகுதேவர் தம்முடைய கையிலிருந்த மராமரத்தால் அந்தப் படைகளழியும்படியாகப் போர் புரிந்தார். வச்சிரவாகுவின் படை பலவாறு அழிந்து தொலைந்தது.

## வச்சிரவாகு முடிவு

வச்சிரவாகு வீரவாகுதேவருக்குமுன் வந்து எதிர்த்தான். வீரவாகுதேவர் ஒரு பெரிய வடிவத்தை யெடுத்துக்கொண்டு தீயெழ நகைத்தார். ஆரவாரஞ் செய்தார். அவருடைய நகைப்பையும் கனைப்பையும் வச்சிரவாகு கண்டு அஞ்சினன். தலைகளை யசைத்தான். வில்லை வளைத்து நாணொலி செய்தான். ஆயிரங்கணைகளை வீரவாகுதேவர்மீது செலுத்தினன். வீரவாகுதேவர் ஒரு கையை நீட்டி அக்கணைகளையெல்லாம் அழித்தார். தன் கணைகள் வீணான தன்மையை வச்சிரவாகு கண்டான். சினங்கொண்டான். பதினாயிரங் கணைகளை வீரவாகுதேவருடைய மார்பிற் செலுத்தினன். வீரவாகுதேவர் போர்க்களத்திலே கிடந்த ஓர் எழுப்படையை யெடுத்து அக்கணைகளைப் பொடிப்படுத்தினர். வச்சிரவாகு பதினாயிரங்கணைகளைத் தூண்டி அந்த எழுப்படையைத்

தூளாக்கினான். வீரவாகுதேவர் வச்சிரவாகுவினுடைய தேரையுதைத்தார். குதிரைகள் பதைத்து வீழ்ந்து மாண்டன. பாகனும் இறந்தான். தேரும் அழிந்தது. வச்சிரவாகு மற்றொரு தேரிலேறினான். வீரவாகுதேவர் அத்தேரையெடுத்து விண்ணிலெறிந்தார். அவனுடைய மற்றைத் தேர்களையும் அழித்தார். விண்ணிலே வீசப்பெற்ற வச்சிரவாகு நூறாயிரம் யோசனை தொலை சென்று மண்ணிலே வந்து வீழ்ந்தான். மீண்டும் போர்செய்ய எண்ணினான். வீரவாகுதேவர் அவனுடைய வில்லைப் பிடுங்கி முறித்தெறிந்தார். வச்சிரவாகு வாட்படையை எடுத்துக்கொண்டு வாட்போர் தொடங்கினான். வீரவாகுதேவர் தம்முடைய வாட்படையையெடுத்துக்கொண்டு வச்சிரவாகுவைக் கொன்று வீழ்த்தினார். பக்கத்திலிருந்த அவுணர்கள் புறங்கொடுத்தோடினார்கள்.

## கஅ. யாளிமுகன் அழிவு

### வீரவாகுதேவர் இலங்கையை அடைதல்

வச்சிரவாகு இறந்தபொழுது பொழுதுபோயிற்று. மேலே எவரும் போருக்கு வரவில்லை. வீரவாகுதேவர் மீள்வதற்கு எண்ணினார். போர்செய்துகொண்டிருந்த இடத்தை விட்டுத் தெருவிலே சென்றார். வீரவாகுதேவர் செல்லுதலை அவுணர்கள் கண்டார்கள். "இவன் நமக்கு இயமன்; இவனை அணுகாதீர்கள்; அணுகினால் கொன்று தொலைத்து விடுவான்," என்று கதறிக்கொண்டு ஓடினார்கள். வீரவாகுதேவர் மகேந்திரபுரியை நீங்கி இலங்கையை அடைந்தார்.

### யாளிமுகன் சினமடைதல்

அப்பொழுது யாளிமுகன் என்பவன் இலங்கையைக் காவல் செய்துகொண்டிருந்தான். அவன் முப்புரத்தவுணர்களைப்போன்ற ஆற்றலுடையவன். ஆயிரம் முகங்களையுடையவன். இரண்டாயிரங் கைகளையுடையவன். அவைகளிலே படைக்கலங்களையுடையவன். மேருமலையைப்போன்ற உடலையுடையவன். ஊழித்தீயை

வெளிப்படுத்துங் கண்களையுடையவன். சிறிதுந் தண்ணளியற்ற உள்ளத்தையுடையவன். அன்று காலையில் வீரவாகு தேவராற் கொல்லப்பட்ட அதிவீரன் என்பவனுடைய தந்தை. அவன் வீரவாகுதேவர் விரைந்து செல்லுதலைக் கண்டான். "இவன் யாவன்? நம் காவலைக் கடந்து வருகின்றான்?" என்றனன். அப்பொழுது அவனுடன் இருந்த ஏவலாளன் ஒருவன் யாளிமுகனைப் பார்த்து, "நீ இன்று காலையில் உன் மகனை இங்கே காவல் வைத்துவிட்டு மகேந்திரபுரிக்குச் சென்றிருந்தபோது, இவன் இங்கு வந்தான். வீரசிங்கனையும் உன் மகன் அதிவீரனையுங் கொன்றான். மகேந்திரபுரிக்குச் சென்று அதனையும் அழித்துவிட்டு இப்போது இங்கு வந்திருக்கின்றான்," என்று கூறினான்.

ஏவலாளன் இயம்பியவைகளைக் கேட்டு யாளிமுகன் சினமடைந்தான். "இவனைக் கொலைபுரிகிறேன்" என்று கூறி ஒரு வாட்படையுடன் சென்று வீரவாகுதேவரை யெதிர்த்தான். அவனுடைய படைகளும் வீரவாகு தேவரைச் சூழ்ந்துகொண்டு போர்தொடங்கின. வீரவாகு தேவர் தம்முடைய வாட்படையை யெடுத்துக்கொண்டு போரைத் தொடங்கினார். அவுணர்களுடைய கை கால் தலை முதலியவைகளை அறுத்துத் தள்ளினார். படைகள் முழுமையையுங் கொன்றார். வீரவாகுதேவரின் செயலைக் கண்டு யாளிமுகன் சினங்கொண்டான். ஆயிரங் கைகளினாலே வீரவாகுதேவரை அடித்தான். அந்த ஆயிரங் கைகளையும் வீரவாகுதேவர் ஒரு கையினாலே பிடித்துக் கொண்டு வாட்படையினால் வெட்டினார். யாளிமுகன் மற்றைய ஆயிரங்கைகளினாலும் ஆயிரம் மலைகளைப் பிடுங்கி வீரவாகுதேவர்மேலே வீசினான். வீரவாகுதேவர் அக் கைகளையும் வெட்டி வீழ்த்தினார். அவன் வீரவாகு தேவரைப் பிடிக்க ஆயிரம் துதிக்கைகளையும் நீட்டினான். வீரவாகுதேவர் யாளிமுகனுடைய ஆயிரந் தலைகளையும் ஒருங்கே அறுத்துத் தள்ளினார்.

## கசு. வீரவாகுதேவர் மீளுதல்

### திருச்செந்திலைச் சேர்தல்

வீரவாகுதேவர் யாளிமுகனைக் கொன்றபின்பு வாட்படையை உறையிலே செலுத்தினர். கடலைக்கடந்து திருச்செந்தின்மாநகரை யடைந்தார். பூதர்கள் வீரவாகுதேவருடைய வரவைக்கண்டு ஆரவாரித்தார்கள். பூதப்படைத் தலைவர்கள் வீரவாகுதேவரைக் கண்டு வணக்கஞ்செய்து உவகை மொழிகளைக் கூறினர்கள். வீரவாகுதேவர் எல்லோருக்கும் நன்மொழிகள் இயம்பினர். திருமுருகக் கடவுளை யடைந்து வணங்கிப் போற்றினர்.

முருகக்கடவுள் வீரவாகுதேவரைப் பார்த்து நிகழ்ந்தவைகளைக் கேட்டார். வீரவாகுதேவர் தாம் சூரபன்மனிடம் உரைத்த மொழிகளையும், அவன் கூறிய பதிலுரைகளையும் முருகக்கடவுளுக்குத் தெரியப்படுத்தினர்.

முருகப்பெருமான் திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்தார். "நாம் சூரபன்மனுக்குச் சொல்லியனுப்பிய மொழிகளை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. 'தேவர்களுடைய சிறையை நீக்க முடியாது' என்று கூறியிருக்கிறான். நாம் அவனோடு போர் செய்தற்கு நாளைக்குப் புறப்படுவோம்'' என்று கூறியருளினர். முருகக்கடவுள் மொழிந்தவைகளைக் கேட்ட தேவர்கள் மகிழ்ந்தார்கள். "நம்முடைய துன்பந்தொலைந்தது'' என்று களித்தார்கள். வீரவாகுதேவர் தாம் சிறையிலிருக்கும் சயந்தனைக் கண்டு அவனைத் தேற்றிவந்ததை இந்திரனுக்குச் சொன்னர்.

## உ0. சூரன் நகர் அமைத்தல்

### மகேந்திரபுரியைத் திருத்தியமைத்தல்

படைகளோடு வச்சிரவாகு இறந்தொழிந்ததையும், வீரவாகுதேவர் திரும்பிச் சென்றதையும் சூரபன்மனுக்

குத் தூதுவர்கள் சொன்னார்கள். சூரபன்மன் அதனைக் கேட்டதும் நடுங்கித் துன்பக்கடலுள் வீழ்ந்தான். அவனுடைய மனைவி பதுமகோமளையும் மற்றைய சுற்றத்தார்களும் கதறியழுதார்கள். மகேந்திரபுரியில் அழுகையொலி மிகுந்தது. தருமகோபன் சூரபன்மனைப் பலவாறு தேற்றினான்.

சூரபன்மன் தருமகோபனாகிய தலைமை யமைச்சன் உரைகளைக் கேட்டு ஒருவாறு உள்ளந்தெளிந்தான். பிறகு தன் பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்து, "உடனே நான்முகனை இங்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். சூரபன்மன் சொல்லியவைகளைக் கேட்ட ஏவலர்கள் "இந்த அண்டத்து நான்முகன் திருச்செந்திற்பதியில் வந்திருக்கும் முருகக்கடவுளோடு இருப்பதாகப் பார்த்தவர்கள் சொன்னார்கள்" என்றார்கள்.

ஏவலர்கள் இயம்பியதைக் கேட்ட சூரபன்மன் பெருமூச்சுவிட்டான். 'நன்று நன்று!' என்று கூறி நகைத்தான். பிறகு வேறோர் அண்டத்திலுள்ள மற்றொரு நான்முகனை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அவ்வாறே ஏவலர்கள் வேறோர் அண்டத்து நான்முகனை அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

சூரபன்மன் அந்த நான்முகனைப் பார்த்து, "அழிந்துள்ள இந்நகரை முன்புபோலச் செய்வாயாக!" என்று கட்டளையிட்டான். அந்த நான்முகனும் "அவ்வாறே செய்கிறேன்" என்று கூறி உடன்பட்டான். மதில்கள், கோபுரங்கள், மாடங்கள், சோலைகள், மண்டபங்கள் முதலிய எல்லாவற்றையும் முன்னிருந்தவாறே செய்து முடித்தான். சூரபன்மன் அவைகளைப் பார்த்து மகிழ்ந்தான். "நீ உன்னுடைய அண்டத்திற்குச் சென்று உன்னுடைய தொழிலை வழக்கம்போலச் செய்துகொண்டிருப்பாயாக" என்று கட்டளையிட்டான். அந்த நான்முகனும் தன்னுடைய அண்டத்திற்குச் சென்றான்.

## உக. சூரன் அமைச்சியல்

### சூரபன்மன் அமைச்சர்களைக் கலந்தெண்ணுதல்

சூரபன்மன் அழிந்த நகரை ஒழுங்கு செய்துவிட்டு, அரியணைமீது அமர்ந்திருந்தான். அப்பொழுது முன்னே சூரபன்மனால் அனுப்பப்பெற்ற ஒற்றர்கள் திரும்பிவந்தார்கள். அவர்கள் சூரபன்மனை வணங்கிச், "சிவனாரின் மகனாராகிய செவ்வேட்கடவுள் செந்தின்மாநகரின் கண் வந்து எழுந்தருளியிருக்கின்றார். அவருடன் இரண்டாயிரம் வெள்ளம் பூதப்படையினர் இருக்கின்றனர். நூற்றெட்டுப் படைத்தலைவர்களும் இருக்கிறார்கள். உன் தம்பியாகிய தாரகனையும் கிரவுஞ்சமலையையும் தொலைத்தது உண்மைதான். அவர் இவ்விடத்திற்கு ஒரு தூதவனையும் அனுப்பினார். அவன் இங்கு வந்துவிட்டுப் போம்பொழுது இலங்கையைக் காத்துக்கொண்டிருந்த யாளிமுகனைக் கொன்றுவிட்டுச் சென்றான். அக்கடவுள் இங்கு வந்து போர்செய்தற்கு எண்ணியிருக்கிறார். நீ அதற்கேற்ற செயல்களைப் புரிவாயாக," என்று கூறினார்கள்.

சூரபன்மன் உடனே தன்னுடைய அவையைக் கூட்டலானான். தன் தம்பி சிங்கமுகனையும் படைத்தலைவர்களிற் சிறந்தவர்களையும் அமைச்சர்களையும் விரைவில் அழைப்பித்தான். அவர்கள் அனைவரும் வந்து சூரபன்மனை வணங்கிப் பக்கத்திலிருந்தார்கள். சூரபன்மன் எல்லோரையும் பார்த்துச் சொல்லலானான். "நான் நம் பகைவர்களாகிய தேவர்களைச் சிறையில் வைத்ததை இந்திரன் சிவபெருமானுக்குச் சொன்னான். சிவபெருமான் ஒரு மகனைப் பெற்றுத், "தேவர்களுடைய சிறையை நீக்கிவா" என்று அனுப்பிவைத்தார். அம்மகன் தேவர்களுடன் புறப்பட்டான். வழியில் தாரகனைக் கொன்றான். கடற்கரையில் வந்திருந்துகொண்டு என்னிடத்திற்கு ஒரு தூதுவனை யனுப்பினான். அவன் இலங்கையைக் கடந்து இங்கு வந்தான். என்னுடைய அவைக்களத்தில் அஞ்சாமற் பல மொழிகளைப் பேசினான். என் கண்ணுக்கு முன்னே சில

அவுணர்களைக் கொன்று சென்றான். இந்நகரையும் அழித்தான். பிடிக்கச்சென்ற வீரர்களையும் வென்றான். என் மகன் வச்சிரவாகுவையுங் கொன்றான். தூதுவனாகவந்து அவனைப் பிடித்துச் சிறையில் வைக்க முடியவில்லை. அவன் திரும்பி அறுமுகனிடத்திற்குச் சென்றுவிட்டான். சிவன் மகன் இங்கே வந்து நம்முடன் போர்செய்ய எண்ணுவான் போல் இருக்கின்றது. நான் கூறியவைகள் எல்லாம் உண்மையே! மேற்கொண்டு செய்யவேண்டியவைகளைச் சொல்லுங்கள்,'' என்று கூறினான்.

## மகிடன் மொழிதல்

சூரபன்மன் சொல்லியவைகளைக் கேட்டுக்கொண்டு அங்கிருந்தவர்களுள் மகிடன் என்பவன் உரைக்கலானான். "தாரகனைக் கொன்ற வீரனைச் சிறுவன் என்று எண்ணுதல் தக்கதன்று. கடலைக்கடந்து வந்து நம்முடைய நகரத்தை யழித்து வச்சிரவாகுவையுங் கொன்றவனைத் தூதுவன் என்பது சூழ்ச்சியேயாகும். தாரகன் அழிந்தவுடனேயே சிவனுடைய மகனுடன் நீ போருக்குப் போகவில்லை. உன் படைகளையாவது அனுப்பவும் இல்லை. காலத்தைக்கடத்தி இங்கு வாளாவிருக்கின்றாய். தீ சிறியதாயினும் இது சிறிதென்று இகழலாமோ? முன்னரே நீ போருக்குச் சென்றிருப்பாயாயின் உன் நகரத்திற்குத் தூதுவனும் வருவானா? மகன் அழியவும் நகர் ஒழியவும் நேர்ந்தது நீ செய்யவேண்டிய செயல்களைத் தக்க காலத்தில் செய்யாதபடியினாலேயாகும். நீ விரைந்து படைகளுடன் சென்று சிவன் மகனோடு போர் செய்? என்று கூறினான்.

## துர்க்குணன் சொல்லுதல்

துர்க்குணன் என்பவன் சூரபன்மனைப் பார்த்துத், "திருமால்மேலும் மற்றைத் தேவர்கள்மேலும் நீ போர் செய்ய இதுவரையிற் சென்றாயல்லை. தம்பியர்களைக் கொண்டே வெற்றிகொண்டு வந்தாய். இன்றைக்கு ஒரு சிறுவனோடு போர்செய்யச் செல்லுதல் தகுதியாகுமோ? அழியாத வாணாளையும் வளங்களையும் மேன்மைகளையும்

பெற்றுள்ள நீ ஒரு சிறுவனுடன் போருக்குச் செல்லுதல் சிறுமையாகும். உன்னுடைய படைத்தலைவர்களை இன்றைக்குப் போருக்கு அனுப்புவாயானால் அவர்கள் சிறிது பொழுதிற்குள் சிவன் மகனையும் பூதக்கூட்டங்களையும் வென்று வருவார்கள்,'' என்று கூறினான்.

## தருமகோபன் சாற்றுதல்

தருமகோபன் என்னும் அமைச்சன் சூரபன்மனைப் பார்த்து, "ஓ அரசனே! நீ சிறுவனோடு போர் செய்யச் செல்லுதல், ஒன்பதுவகை மணிகள்பதித்துச் செய்யப் பெற்ற பொற்கலப்பையைக்கொண்டு நிலத்தை உழுவதைப்போலும்! அச்சிறுவன், சிவபெருமானும் அல்லன்; திருமாலும் அல்லன்; நான்முகனும் அல்லன்; நமனும் அல்லன். எல்லா வுலகங்களையுங் காக்கின்ற நீ ஒரு சிறுவனோடு போர் புரிவதால் யாது பயன் ஏற்படும்? நீ அச் சிறுவனோடு போருக்குச் செல்லுவையாயின், உன்னைக் கண்டதும் அச்சிறுவன் ஓடிப்போவானே யல்லாமல் எதிர்த்து நின்றும் போர்செய்வானோ? சிவன் மகனும் அவனுடைய படைகளும், உன்னுடைய மக்களாகிய அக்கினிமுகன் இரணியன் ஆகியவர்களில் ஒருவனுக்குக் கூட இணையாகமாட்டார்கள். நீ ஒரு சிறுவனோடு போருக்குச் செல்லுகிறாய் என்னுஞ் செய்தியைக் கேட்டால் நம்மவர் நாணுவர். தேவர்கள் நகைப்பர். தாரகனை அச்சிறுவன் கொன்றுவிட்டதை நீ பெரிதாக எண்ணுகிறாய். சிறுவன் செலுத்திய வேற்படைக்கு ஏற்ற படையைச் செலுத்தி மாற்றாதபடியால்தான் உன் தம்பி தாரகன் இறந்தான். அகத்தியமுனிவர் சாபத்தினால் கிரவுஞ்சமலை அழிந்தது. இவைகளையெல்லாம் நீ பெரிதாக எண்ண வேண்டியதில்லை. வச்சிரவாகு தூதுவனோடு மோதுவதற்குப் போனபோது, தக்குந்த படைக்கலங்களை வைத்திருக்கவில்லை. அதனால்தான் அவன் தூதுவனால் இறந்தான். நீ படைத்தலைவர்களில் ஒருவனைப் போருக்கு அனுப்பு. அவன் முருகனை வெற்றிகொண்டு வருவான்,'' என்று கூறினான்.

## காலசித்து கழறுதல்

தருமகோபன் சாற்றி முடிந்தபின் காலசித்து என்பவன் எழுந்து கழறலானான். "செந்தின்மாநகரில் வந்திருக்குங் கந்தநாதன், இந்த மாநகர்க்குத் தன் அந்தமார் படையோடு வருவானாயின், அவனோடும் போர் செய்யச் சில படைகளை அனுப்பினால் போதும். இதற்குக்கூடவா அமைச்சர்களையும் பிறரையுங் கலந்தெண்ணுவது? திருமால் முதலிய தேவர்களை வெற்றிகொண்ட காலத்திற்கூட எம்மைக் கலந்தெண்ணினாய் இல்லை. அவ்வாறாக இன்றைக்கு ஒரு சிறுவன்பொருட்டோ அஞ்சுதல் வேண்டும்? நீ என்னையனுப்பு. நான் பூதப்படைகளையும் அச்சிறுவனையும் எனது காலபாசத்தாற் கட்டிக்கொண்டு வருகின்றேன்," என்று பேசினான்.

## சண்டன் உரைத்தல்

"பசியால் வருந்தும் பூதர்களும் சிறுவனும் எண்ணப்படுதலுக் குரியவர்களாவரோ? பூதர்களைக் கொல்வேன்; சிறுவர்களை வெல்வேன்; மற்றவர்களையும் ஒழிப்பேன். உன்னுடைய கட்டளையில்லையென்று பேசாதிருந்தேன். உடனே என்னையனுப்புவாயாக," என்றான் சண்டன் என்பவன்.

## அனலி அறைதல்

"எவர் வந்தெதிர்ப்பினும் அவர்களோடு உடனே போருக்குப் புறப்படாமல், அமைச்சர்களை அவைகூட்டிக் கலந்தெண்ணுதல் ஆண்மை ஆளர்கட்கு அழகு அன்று," என்று அனலி கூறினான்.

## சிங்கன் செப்புதல்

"அண்டத்தில் இருப்போர் அனைவரும் என்மீது மண்டிப் பொருதற்கு வந்தாலும் அவர்களை நான் ஒருவனே நொடியில் வெற்றி கொள்வேன். நீ என்னுடைய ஆற்றலை அறிகிலைபோலும்! உடனே என்னைப் போருக்கு அனுப்புவாயாக," என்றான் சிங்கன்.

## பானுகோபன் பகர்தல்

பானுகோபன் தன் தந்தையைப் பார்த்துப் பகரத் தொடங்கினான். "தாரகனும் கிரவுஞ்சமலையும் அழிந்த அன்றே என்னைப் போருக்கனுப்பினாயில்லை. ஒரு தூதுவன் இங்கேவந்து போர்செய்தால், தகுந்த ஆண்மையாளர்களை அல்லவோ போருக்கனுப்பவேண்டும். நீ இதனை எண்ணிப்பாராமல், இன்னும் பல்முளைக்கப் பெறாத ஒரு சிறுவனைப் போருக்கனுப்பினாய். உன்னுடைய அறிவின்மையினால் அச்சிறுவனைக் கொன்றாய். போனவை போகட்டும்; இனிமேலாயினும் என்னையனுப்பு. நான்சென்று பகைவர்களைக் கட்டிக்கொண்டு வருகின்றேன்," என்றான்.

## இரணியன் இயம்புதல்

சூரபன்மனுடைய மக்களில் ஒருவனாகிய இரணியன் சொல்லத் தொடங்கினான். "பூதர்கள்மேலும் மற்றையோர்கள்மேலும் என்னுடைய அண்ணன் போருக்கு நண்ணுதலும், நண்ணுதற்கு எண்ணுதலும் திண்ணமாகப் பழியேயாகும். நான் போர்செய்யப் போவேன். போர் செய்து தேவர்களை வெற்றிகொண்டு வருவேன் உடனே என்னை யனுப்புவாயாக," என்றான்.

## அக்கினிமுகன் உரைத்தல்

இரணியன் தம்பியாகிய அக்கினிமுகன் பின்பு பேசலானான். "ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் நீ அரசன். உனக்குத் துணையாகச் சிங்கமுகன் இருக்கிறான். எண்ணற்றமக்கள் இருக்கின்றோம். அளவற்ற படைகளும் உள்ளன. எண்ணற்ற போர்மறவர்களும் இருக்கிறார்கள். ஆயிரத்தெட்டு அண்டங்கட்கும் விரைந்து சென்று திரும்பக்கூடிய இந்திரஞாலத் தேரும் இருக்கின்றது. அளவற்ற மாயச் செயல்களும் உள்ளன. என் இளவலாகிய வச்சிரவாகுவைக் கொன்ற பகைவர்களைக் கொன்றல்லாமல் நான் மனநிறைவு கொள்ளமாட்டேன். உடனே என்னைப் போருக்கனுப்புவாயாக," என்றான்.

## அரிமாமுகன் அறவுரை

பிறகு, சிங்கமுகன் பேசலானான். "உன் அமைச்சர்களும் மக்களும் உனக்குத் தக்க அறிவுரைகளைக் கூறினார்களல்லர். அவர்கள் கூறியன முற்றும் உனக்கு அழிவையே உண்டாக்கக்கூடியன. நான் நவில்கின்ற மொழிகளைக் கருத்துடன் கேள். அரசனுக்கு அறநெறியை உரைப்பவர்களே சிறந்தவர்களாவர். அரசன் விரும்பியவாறு மறநெறியைப் புகல்பவர்கள் அவனுக்குப் பகைவர்களாவர். நீ தேவர்களுக்குப் பல தீமைகளைச் செய்தாய். கடலிலிருந்து மீன்பிடித்து வருமாறு ஏவினாய். இந்திரனுக்குத் துன்பத்தைச் செய்து அவனுடைய அரசியலை அழித்தாய். அவன் மகனையும் பல தேவர்களையுஞ் சிறையில் அடைப்பித்தாய். ஆயினும், பித்தனைப்போன்று மயங்கியிருக்கிறாய். அறிவு சிறிதும் நின்னிடம் இல்லை. இரக்கம் என்பதை அடியோடு நீக்கிவிட்டாய். நீ பலருக்குந் துன்பஞ் செய்தலைக் கண்டல்லவா அறுமுகக்கடவுள் உன்னோடு போருக்கு வந்துள்ளார்.

"நமக்கு மேன்மைகளையளித்த சிவபெருமான், பெரிய செல்வங்களுடன் நூற்றெட்டு ஊழிக் காலம்வரை இருக்குமாறு திருவருள் புரிந்தார். அவர் குறிப்பிட்ட காலம் முடிந்துவிட்டது. நீ அதனை அறிந்துகொள்ளவில்லை. 'எமது சத்தியே உம்மை வெல்லும்' என்று சிவபெருமான் சொல்லியருளினார். அதனால்தான் அறுமுகக்கடவுள் செலுத்திய வேற்படை தாரகனை அழித்தது.

"பயனற்ற செயல்களைச்செய்து அதனால் துன்பத்தையடைவது அறிவுடையோரின் செய்கையன்று. ஆசிரியர்களையும், சிறுவர்களையும், பெண்களையும், தவத்தினரையும், பார்ப்பனரையும், பெரியோர்களையுந் தண்டித்தவர்கள் அளறுகள்தோறுஞ் சென்று அல்லலையடைவர். நீ தேவர்களின் சிறையை நீக்குவையாயின் முருகக்கடவுள் இங்கு வந்து போர்செய்ய எண்ணமாட்டார். நம்முடைய குற்றத்தையும் பொறுப்பார். நாளைக்கே மீண்டு திருக்

கைலைக்குச் சென்றுவிடுவார். நீ தேவர்களைச் சிறையினின்றும் நீக்காமலிருந்தாயானால், முருகக்கடவுள் நம்மைக் குலத்துடன் தொலைத்துவிடுவார்,'' என்று கூறினான்.

## சூரபன்மன் சீற்றம்

அரிமாமுகன் கூறிய அறவுரைகளைக் கேட்டுச் சூரபன்மன் கைகளைத்தட்டி நகைத்தான். அவனுக்குச் சினம் அளவுகடந்து உண்டாகியது. அவன் தன்னுடைய தம்பியைப் பலவாறு இகழ்ந்துரைக்கலானான். "நீ இந்திரனுக்குந் தேவர்கட்கும் அஞ்சி மனமழிந்தாய். 'நம்முடைய சக்தி நம்மை வெல்லும்' என்று சிவபெருமான் சொல்லியருளியதை நான் கேட்டிலேன். நீ இதனைப் பொய்யாகப் புகலுகின்றாய்! மேன்மைகளையெல்லாங் கொடுத்தஅவர் அவைகளை அழிப்பார் என்பது தவறு. தாரகன் நம்மைப்போல் வேள்வியைச் செய்து அழியா மேன்மைகளைப் பெற்றிலன்; ஆகையால் அவன் அழிந்து போனான். வச்சிரவாகுவுங் குழந்தையாகையால் அழிந்து போயினான். இது நமக்கு ஒரு குறைவாகுமோ? தேவர்களைக் குலத்தோடு தொண்டுகொண்டிருக்கிறேன். ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசாட்சி செய்திருக்கிறேன். நான் என்றும் அழிவற்றவன். திருமால் நான்முகன் முதலியவர்கள்கூட எனக்கு அஞ்சியிருக்கிறார்கள். தேவர்களைச் சிறையினின்றும் விடச் சொல்லவும் இல்லை. அவ்வாறாக ஒரு சிறுவனோ என்னைக் கொலைசெய்வான்? நீ அறிவில்லாமல் இவ்வாறு கூறினாய்,'' என்று சொன்னான்.

## மேலும் அரிமாமுகன் விளம்புதல்

"நீ, சிவபெருமானை நினைத்து அளவற்றகாலம் பெரிய தவத்தினைச் செய்தாய். அதன்பொருட்டுச் சிவபெருமான் வெளிப்பட்டு மேன்மைகளையளித்து, அதற்கு முடிவுஞ் சொல்லிவைத்தார். நீ அதனை உணராமற் பேசுகின்றாய். அறநெறியை ஒருபொருளாக மதிக்கவில்லை. ஆண்மையினாலே சினந்து தேவர்களைச் சிறையில் வைத்தாய்.

'வரத்தைக் கொடுத்த யாம் அழிப்பது முறைமையன்று' என்று சிவபெருமான் ஒரு திருமகனைப் பிறப்பித்திருக்கிறார். அக்கடவுளை நீ மற்றைய உயிர்த்தொகைகளைப் போல நினையாதே. அவர் சிவபெருமானுடைய திருநுதற் கண்ணிலே தோன்றியவர். மறைகளாலும் அறியப்பெறாதவர். எல்லாமுணர்ந்தவர். உலகப்பொருள்களெல்லாம் அவரிடத்திலேதான் தோன்றின. அக்கடவுளுடைய திருவிளையாடலை யாராலுங் கூறமுடியாது. அறிவே வடிவமாகவுள்ள அக்கடவுளின் இயல்பை நான் கூற அளவுபடாது. முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து அப்பாற்பட்டு நிற்கின்ற தனிமுதல்வர் அக்கடவுளன்றி வேறு எவருமிலர். கூறற் கரும்பெருந்தன்மையினராகிய அம் முழுமுதற்கடவுளை, நீ சிறுவன் என்று இகழ்ந்து பேசுகின்றாய். அவர் அவுணர்குழு அவ்வளவையும் அழித்து உன்னையும் ஒரு கணப்பொழுதிற் கொல்வார். கணக்கற்ற கோடி உலகங்களை ஓரிமைப்பொழுதில் ஆக்கவும் அழிக்கவும் வல்ல முழுமுதற்கடவுளே உன்னோடு போர்செய்ய வேண்டுமென்று திருச்செந்தின்மாநகரிலே வந்து எழுந்தருளியிருக்கின்றார். 'அழியாவுடலைப் பெற்றுள்ளோம்,' என்னும் உன்னுடைய ஆணவத்தை விடு. 'பிறக்கும் உயிர்களெல்லாம் இறக்கும்,' என்று அறிஞர்கள் உறுதி செய்துள்ளார்கள். அவ்வாறாக நீயா அழியாதிருக்கப் போகிறாய்? மண்ணுலகத்தினும் விண்ணுலகத்தினும் தோன்றிய எத்தகையோருடைய உடலும் அழியும். உன்னுடைய தீச்செயல்களை இறைவன்பார்த்துத், தாம் கொடுத்த மேன்மைகளை அவர் மாற்றுவாராயின் அவரைத் தடுப்பார் எவர்? உன்னுடைய நன்மையை நாடியே நான் இவைகளைச் சொன்னேன். தேவர்களை உடனே சிறையினின்றும் நீக்குவாயாக,'' என்று மேலும் கூறினன்.

வச்சி ரத்தனி யாக்கைபெற் றனம்என மதித்தாய்
இச்சி ரத்தையை விடுமதி இருவினைக் கீடா
அச்செ டுத்திடும் உயிர்கண்மாய்ந் திடும்என அறிஞர்
நிச்ச யித்தனர் முடிவுறா திருத்திகொல் நீயே.

(அச்சு - உடல்)

பெருமை பெற்றிடு வானத்தில் நிலத்திடைப் பிறந்தோர்
இருமை பெற்றிடு காயமும் இறந்திடும் திண்ணம்
பருமி தத்துநின் வச்சிர யாக்கையும் பாரின்
உரிமை பெற்றுள தாதலான் அழிவின்றி உறுமோ?

(பருமிதத்த - பெருத்துள்ள)

வான்செய் தேவரை நீஅலைக் கின்றதை மதியா
ஊன்செய் கின்றபல் லுயிருக்கும் உயிரதாம் ஒருவன்
தான்செய் கின்றதொல் வரத்தினைத் தான்தவிர்த் திடுமேல்
என்செய் தாய்என வினவியே நிறுவுவார் எவரே.

(அலைக்கின்றதை - துன்புறுத்துகின்றதை)

## சூரபன்மன் பதில்

மேலும், சிங்கமுகாசுரன் கூறிய அறிவுரைகள் சூரபன்மனுக்குப் பெருஞ்சினத்தை உண்டாக்கின. அவன் மேலும் அறுமுகக்கடவுளையும் அரிமாமுகனையும் இழித்துக் கூறலானான். "நேற்றைக்குப்பிறந்த சிறுவனை நீ பரம்பொருள் என்று கூறுகின்றாய். கதிரவன் ஒருவனே எண்ணற்ற குடங்களிலுள்ள நீர்கடோறும் உருவங் காட்டினாற் போலப், பிரமம் ஒன்றே உயிர் என்னும் பெயரைப் பெற்றுக் கணக்கற்ற வடிவங்களைக்கொண்டு தன்னுடைய மாயையினாலே பற்பல தொழில்களைச் செய்யும். குடம் உடைந்தவிடத்திலே குடவிண் பெருவிண்ணோடு ஒன்றுபட்டாற்போலப் பலவகை உருவங்கள் அழிந்தபொழுது பிரமப்பொருள் ஒன்றே எஞ்சும்.

பிரம மாகிய ஒருபொருள் உயிரெனப் பேர்பெற்று
உருவம் எண்ணில கொண்டுதன் மாயையால் உலப்பில்
கரும பேதங்கள் ஆற்றிடும் பல்புனற் கடத்துள்
இரவி தன்னுருத் தனித்தனி காட்டிய இயல்பின்.

(உலப்பில் - கெடுதலில்லாத)

கடந்த கர்ந்துழி யவற்றிடை வெளிகக னத்தோடு
அடைந்த வாறுபோல் யாக்கையின் பேதகம் அனைத்தும்
முடிந்த காலையில் தொன்மைபோல் அபேதமா மொழிக்கும்
தொடர்ந்த சிந்தைக்கு நாடொணு தமர்பெருஞ் சோதி.

(கடம் - குடம், தகர்ந்துழி - உடைந்தவிடத்து, ககனம்- விண்.)

பலவகை அணிகலன்களும் பொன் என்னும் ஒரு தாதுவினால் அமைதல்போல, உயிர்களெல்லாம் பிரமம் ஒன்றில் அடங்கும். உயிர்களெல்லாம் ஒன்றுதான். யான் அழிவற்ற பெரியோன். முருகக்கடவுள் எனப்பெறுவோன் சிறியோன். ஆகவே, அவனை யான் வெல்வேன். இஃது உறுதி. நங்குலத்தவர்கள் பலரைத் தேவர்கள் அழித்தபடியால் நான் அவர்களைச் சிறைசெய்தேன். குற்றஞ்செய்வோர்களை அரசன் தேடிப்பிடித்துத் தண்டித்தல் அறநெறியேயாகும். தேவர்களுடைய சிறையை நான் விடமாட்டேன். இந்திரனையுஞ் சிறைசெய்வேன். சிவபெருமான் வந்தாலும் எதிர்த்துப் போர்செய்ய அஞ்சமாட்டேன். நீ என்னுடன் பிறந்தவனாகவிருந்தும், தேவர்கட்கு நன்மையைத் தேடுபவனாகவிருக்கிறாய். உன்னுடைய மேன்மைகளும் திண்மைகளும் அழிந்தவிட்டன. நீ இப்பொழுது தேவர்களைப்போலவே ஆகிவிட்டாய். நீ தவஞ்செய்யப்போதலே சிறந்தது. அவுணர்களுடைய சீர்த்திகளையெல்லாம் கெடுப்பதற்காகவே நீ பிறந்திருக்கிறாய். உனக்குப் பலதலைகள் வளர்ந்திருந்தும் அவைகளால் எத்தகைய பயனும் இல்லை. குழந்தைப் பருவத்தில் இருந்த ஆண்மையையும் இப்போது இழந்துவிட்டாய். நீ உன்னுடைய நகரத்திற்குச் செல். நான் சென்று பகைவர்களை வெற்றிகொண்டு மீள்வேன்,” என்றான்.

## அரிமாமுகன் உடன்பட்டுப் பேசுதல்

சூரபன்மன் சொல்லியவைகளைக் கேட்ட சிங்கமுகன் வருத்தமடைந்தான். “உறுதியைச் சொன்னேன்; அறிவற்றவன் என்னை இகழ்ந்தான். மேலே நடக்கப்போகுஞ் செயல்களை உணரான். அறிவை அறிவில்லாதவர்களுக்குச் சொல்லுபவர்களும் அறிவில்லாதவர்களாவார்கள். சூரபன்மனுடைய உள்ளம் ஆணவத்தால் கெட்டுப்போய்விட்டது. இவனுக்கு நல்லுரைகள் எவ்வளவு கூறினுஞ் சிறிதும் பயன் ஏற்படமாட்டாது. ஊழை விலக்கக்கூடியவர் யாவர்? இங்குள்ளார் அனைவரும் இறந்தொழிய வேண்டியவர்கள்தாம். சிவபெருமான்

கூறிய காலவெல்லை கடந்துவிட்டது. அறுமுகக்கடவுளுடைய வேற்படையால் சூரபன்மன் இறந்தொழிவான். அதன் பின்னும் நான் உயிரோடிருப்பது கூடாது. முன்னரே இறந்தொழிதல் தான் நல்லது,'' என்று முடிவு செய்தான். தன் முன்னோனைப் பார்த்துச், "சிறியவனாகிய என்னுடைய குற்றத்தை நீ பொறுத்தருளுதல் வேண்டும். என்குற்றத்தை நீயே பொறுக்காவிடின் வேறு யாவர் பொறுப்பர். யான் போருக்குச் சென்று பகைவர்களைக் கொன்று வென்று வருகிறேன் எனக்கு விடைகொடுப்பாயாக,'' என்று கூறினான்.

## சூரபன்மன் மகிழ்ச்சி

"போருக்குப்போவேன் விடை கொடுப்பாயாக,'' என்று சிங்கமுகாசுரன் சொல்லியதைக் கேட்டுச் சூரபன்மன் மகிழ்ச்சியடைந்தான். அரிமாமுகனை உரத்தோடணைத்துத் தழுவிக் கொண்டான். "அறிவுமிக்க என் தம்பியே! நீ முன்பு சொல்லியவைகளெல்லாம் என் மனதை ஆராய்ந்து பார்ப்பதற்காக என்று தெரிகிறது. உன்னுடைய ஆண்மையை நான் உணரமாட்டேனோ? பகைவர்களை வென்றாலல்லாமல் உன்னுடைய சினந்தீருமோ? நீ உன்னுடைய நகரத்திற்குச் சென்று படைகளையெல்லாந் திரட்டிக்கொண்டு போருக்குத் தோதாக இரு. அறுமுகன் போருக்கு இங்கு வந்தால் உன்னை அழைக்கிறேன் வந்து சேருவாயாக,'' என்றான். அரிமாமுகன் சூரபன்மனை வணங்கித் தன்னுடைய நகரத்திற்குச் சென்றான். சூரபன்மன் அவையைக் கலைத்து, அனைவருக்கும் விடை கொடுத்தான். தானுந் தன்னுடைய அரண்மனையை அடைந்து மகிழ்ந்திருந்தான்.

## மூன்றாவது
## மகேந்திரகாண்டம் முற்றிற்று.

# 4. போர்புரி காண்டம்

## கடவுள் வணக்கம்

*நாரணன் என்னுந் தேவும் நான்முகத் தவனு முக்கண்*
*பூரணன் தானும் ஆகிப் புவிபடைத் தளித்து மாற்றி*
*ஆரண முடிவுந் தேறா அநாதியாய் உயிர்கட் கெல்லாம்*
*காரணன் ஆய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.*

## க. ஏமகூடம்

திருச்செந்தின் மாநகரின்கண் எழுந்தருளியிருந்த முருகக்கடவுள், மறுநாள் சூரபன்மனுடைய ஊரை நோக்கிப் போருக்குப் புறப்படத் திருவுளத்தில் எண்ணினார். வீரவாகுதேவரைப் பார்த்தார். "சூரபன்மனையும் மற்றைய அவுணர்களையும் தொலைத்துத் தேவர்களுடைய துன்பத்தை நீக்குதல் வேண்டும். அதன்பொருட்டு இப்பொழுதே வீரமகேந்திரபுரியை நோக்கிப் புறப்படுதல் வேண்டும். நம்முடைய தேரை விரைவிற் கொண்டு வருவாயாக," என்று கட்டளையிட்டார். முருகக்கடவுள் மொழிந்ததைக் கேட்டுத் திருமால் முதலிய தேவர்கள் இன்பக்கடலில் மூழ்கினார்கள். நம்முடைய துன்பந் தொலைந்தது என்று சொல்லி ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள். அறுமுகப்பெருமானுடைய திருவடிகளைப் போற்றி வணங்கினார்கள்.

வீரவாகுதேவர் மனவேகம் என்னுந் தேரோடு தேரோட்டியை அழைத்துக்கொண்டு வந்து முருகக்கடவுளுக்கு முன்னே நிறுத்தினார். முருகக்கடவுள் அரியணையினின்றும் இறங்கி அத்தேர்மீது ஏறியருளினார். தம்மைச் சூழ்ந்துள்ள திருமால் முதலிய தேவர்களைப் பார்த்து, "நாம் சூரபன்மனைத் தொலைக்கும்பொருட்டு வீரமகேந்திரபுரிக்குச் செல்லுகின்றோம். நீங்கள் உங்களுக்குரிய ஊர்திகளிலேறிக்கொண்டு நம்மோடு வாருங்கள்," என்று கட்டளையிட்டருளினார். நான்முகன் அன்னப்பறவைமீது

ஏறிக்கொண்டான். திருமால் கருடன்மீது ஏறிக்கொண்டார். இந்திரன் விமானத்தில் ஏறிக்கொண்டான். மற்றைத் தேவர்கள் தத்தமக்குரிய ஊர்திகளில் ஏறிக்கொண்டார்கள். இலக்கத் தெண்மரும் வீரவாகுதேவரும் தேர்களில் ஏறிக்கொண்டார்கள். இவர்களனைவரும் முருகப்பெருமானைச் சூழ்ந்தார்கள்.

கடுஞ்சினத்தையுடையவர்களும், எல்லா வுலகங்களையும் அழிக்க நினைத்தாலும் ஒருநொடிப்பொழுதிலே அழிக்கக்கூடிய ஆற்றல் படைத்தவர்களும், போர்வலி மிகுந்தவர்களும் ஆகிய படைத்தலைவர்கள் நூற்றெட்டுப் பெயர்களும் ஒருங்கு வந்து சுற்றினார்கள். இரண்டாயிரம் வெள்ளம் பூதப்படைகளும் பேராரவாரஞ் செய்து எங்கும் நெருங்கின. தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். பூதர்களுடைய பேரொலி எல்லாத் திக்குகளினும் பரவியது. பேரிகை, காடிகை, துடி, காளம் முதலிய பல ஒலிக் கருவிகள் எங்கும் ஒலித்தன. பூதப்படைகளுடைய நடையால் எழுந்த தூகள், ஞாயிறு திங்கள்களுடைய ஒளிகளைக் குறைத்தது. கடலை மேடாக்கியது. பூதப்படைகள் கடல் வழியாக நடந்து சென்றன. கடனீர் பூதங்களின் கணைக்காலளவுக்கே இருந்தது. கடலிலுள்ள சுறு திமிங்கிலம் முதலிய மீன்கள் புழுக்களைப்போல உலவின. கடலில் உள்ள மலைகள் கால்களில் உறுத்துகின்ற பருக்கைக் கற்களாயின. பூதப்படைகளால் கலங்கிச் சேறுனகடல் நொடியிற் காய்ந்து புழுதியாகி எங்கும் பரந்தது. பூதப் படைகள் இவ்வாறு கடல் வழியாகச் சென்றன. முருகக் கடவுளும் வீரவாகுதேவர் திருமால் முதலிய தேவர்களும் கடலைக்கடந்து விண் வழியாக மகேந்திரபுரியை நெருங்கினார்கள்.

## பாசறை யமைத்துத் தங்குதல்

திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்கள் முருகப்பெருமானை நோக்கி, "மகேந்திரபுரி இழிஞர்களாகிய அவுணர்கள் வாழுகின்ற இடமாகும். ஆதலால், நாம் அங்கு போதல் தக்கதன்று. ஈண்டே பாசறை யமைத்

து தங்குதல் வேண்டும்,'' என்று கூறி வேண்டிக்கொண்டார்கள்.

முருகப்பெருமான் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். தெய்வதச்சனை யழைத்தார். அவ்விடத்தில் ஒரு பாசறை அமைக்குமாறு கட்டளையிட்டருளினர். அவன் உடனே, மாடகூடங்கள் மண்டபங்கள் பொழில்கள் குளங்கள் முதலியவைகளுடன் ஒரு பாசறையை நொடியில் செய்து முடித்தான். அதற்கு ஏமகூடம் என்று பெயரிட்டான். முருகக்கடவுள் தெய்வதச்சனுக்குத் திருவருள் புரிந்தார். துணைவர்களோடும் திருமால் முதலிய தேவர்களோடும் திருக்கோவிலினுள்ளே புகுந்தார். அரியணைமீது எழுந்தருளினர்.

## உ. வரவு கேள்வி

### நாரதர் திருப்பணி

முருகக்கடவுள் ஏமகூடப் பாசறையில் எழுந்தருளியதை நாரதமுனிவர் உணர்ந்தார். விரைந்து மகேந்திர புரியை அடைந்தார். சூரபன்மனுடைய கோவிலையடைந்து அவனைக் கண்டார். "இவன் தன் சுற்றத்தோடு விரைவில் அழிந்தொழிக,'' என்று உள்ளத்திலே எண்ணிக் கொண்டார். ஆனால், வெளிக்கு என்ன செய்தார் தெரியுமா? கைகளிரண்டையும் உயர்த்தி, "நீ சிறந்து வாழ்க!'' என்று வாழ்த்துரை கூறினர். சூரபன்மன் நாரதமுனிவரைப் பார்த்தான். "நீ யாவன்? எங்கே இருப்பவன்? இங்கே வந்த வேலை யாது?'' என்று கேட்டான்.

நாரதர் சூரபன்மனைப் பார்த்து, "நான் வடகைலையில் இருப்பவன். உன்னுடைய குலஞ் சிறப்படையும்படி நாள்தோறுந் தவஞ் செய்வேன்; காமம் முதலியவைகளை நீக்கியவன்; சுக்கிராச்சாரியோடு நட்புடையவன்; நாரதன் என்னும் பெயருடையவன்; பொய் பேசமாட்டேன். இப்பொழுது உன்னிடத்திலே ஒரு செய்தியைத் தெரியப் படுத்துமாறு வந்தேன். உன்னை யழிக்குமாறு சிவபெருமான் ஒரு மகனை நெற்றிக்கண்ணில் உண்டாக்கியருளினர்.

இந்திரன் முதலிய தேவர்கள் அந்தச் சிறுவனிடஞ் சென்று உன்னால் அவர்கட்கு நிகழ்ந்த துன்பங்களைச் சொன்னார்கள். அச்சிறுவன் அவர்களைப் பாதுகாப்ப தாக உறுதிமொழி கூறினான். பூதப்படைகளோடு நில வுலகிற்கு வந்தான். உன் இளவலாகிய தாரகனைக் கிரவுஞ்சமலையோடு வேற்படையினால் அழித்தான். பிறகு திருச்செந்தின்மாநகரில் வந்திருந்துகொண்டு உன்னிடத் திற்குத் தூதனுப்பினான். பிறகு படைகளோடு கடலைத் தாண்டி இந்நகருக்கு வடக்குப்பக்கம் வந்து சேர்ந்தான். அங்கு ஒரு பாடிவீட்டை அமைத்துக்கொண்டு அமர்ந் திருக்கிறான். இவைகளெல்லாவற்றையும் நான் கண்ணுற் கண்டேன். நீ உடனே ஆகவேண்டியவைகளை விரைந்து செய்வாயாக!'' என்று இயம்பினார். நாரதர் நவின்றவை களைக் கேட்டுச் சூரபன்மன் நகைத்தான். "அந்தச் சிறுவன் இந்த ஊரைத் தேவர்களுடைய ஊரைப்போல எளிமையாக எண்ணினனோ? ஆயிரங்கோடி உலகங்களை யும் அரசாட்சி செய்கின்ற என்னுடைய ஊருக்கு ஒரு சிறுவனா போர்செய்ய வந்தான்? மடங்கற் கூட்டங்கள் நெருங்கியிருக்கும் ஒரு காட்டில் ஒரு யானைக்கன்றானது மான் முதலிய விலங்குகளோடு வந்து எதிர்த்தால் மடங்கற்கூட்டங்களை வெற்றிகொள்ள முடியுமா? முருகன் நம்மோடு போர் செய்தற்கு வந்தது அதுபோ லன்றோ இருக்கின்றது! நான் அந்த முருகனுடைய ஆண்மையை விரைவில் அழிக்கிறேன். அவன் அறி வில்லாத சிறுவனென்று விடமாட்டேன். இதனால் எனக்கு ஏற்படுகிற வசையையும் ஒரு பொருட்படுத்தமாட்டேன். என் தம்பியை அழித்துவிட்டபடியால், என்னையும் அழித்துவிடலாம் என்று நினைத்தான்போலும். திருமால் நான்முகன் முதலியவர்கள் என் பெயரைக் கேட்டாலும் அஞ்சி மறைவார்கள். அவ்வாறாக ஒரு சிறுவனோ என்னோ டெதிர்த்துப் போர் செய்வான்? என்மகனை யனுப்பி முருகனை வெற்றி கொள்ளுகிறேன். முனிவனே! இதனைப் பார்ப்பாயாக!'' என்று கூறினான். சூரபன்மன் சொல் லியவைகளை நாரதமுனிவர் கேட்டார். "நீ கூறியபடியே

செய்! காலந் தாழ்க்காதே! உன்னுடைய படைகளை உடனே யனுப்பு. நான் உங்களுக்கு வெற்றி யுண்டாகுமாறு தவஞ்செய்யும்பொருட்டுச் செல்லுகிறேன்,'' என்று கூறி மறைந்தார்.

## சூரபன்மன் வருணனைச் சினத்தல்

சூரபன்மன் தன் மருங்கில்நின்ற கோரன், உற்கோரன் என்னும் ஒற்றர்களைப் பார்த்து, "விரைவில் வருணனைக் கொண்டு வாருங்கள்,'' என்று கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே பிடித்துக்கொண்டுவந்து சூரபன்மனுக்கு முன்னே விட்டார்கள். அவன் சூரபன்மனை வணங்கிப் பணிந்து நின்றான். சூரபன்மன் வருணனைப் பார்த்தான். "சிவனுடைய மகனையும் பூதப்படைகளையும் ஏன் இங்கே விட்டாய்?'' என்று கேட்டான்.

வருணன் சூரபன்மனைப் பார்த்து, "சிவனுடைய மகனார் திருமால் நான்முகன் முதலிய தேவர்களோடு விண்வழியாகச் சென்றார். பூதர்கள் என்மீது நடந்து சென்றார்கள். யான் அவர்களுடைய பரடுவரையினுங் கூட அமைந்திலேன். அவ்வாறாக அந்தப் பூதப்படைகளை நான் எவ்வாறு தடைசெய்தல் இயலும்? அந்தப் பூதர்கள் என்மேற் செல்லுதலால் நான் மிகவும் நொந்து குந்திக்கொண்டிருக்கிறேன். ஆழத்தையுடையவன் என்னும் என்னுடைய பெயரும் என்னைவிட்டு அகன்றொழிந்தது. எளியேனாகிய யான் யாது செய்ய முடியும்? ஆற்றல் மிக்கார்களை யெதிர்ப்பவரு முளரோ? அகத்தியர் கையிலள்ளி உறிஞ்சியதைப்போல இந்தப் பூதர்களும் என்னை உறிஞ்சிவிடுவார்கள். அவ்வாறாக அவர்களை நான் எவ்வாறு விலக்குதல் முடியும்? இடியேற்றைப் பாம்பால் விலக்க முடியுமா? ஆண்மடங்கலை ஆனையால் அடக்க முடியுமா? ஊழை அறிவு வெல்லுமா? எளியேனாகிய என்னாற் பூதங்களைத் தடுக்க முடியுமா?'' என்று கூறி நின்றான்.

## ஒற்றர்கள் செய்தி உரைத்தல்

வருணன் பேசிக்கொண்டிருக்கும்போது சில ஒற்றர்கள் விரைந்து ஓடிவந்தார்கள். சூரபன்மனைக் கண்டு வணங்கினார்கள். "திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் சூழவும், நூறாயிரத்தொன்பது மறவர்கள் போற்றவும் இரண்டாயிரம் வெள்ளப் பூதப்படைகளோடு சிவகுமாரர் மகேந்திரபுரியின் வடதிசைக்கண் வந்து தங்கியுள்ளார். நாங்கள் இதனைக் கண்ணுற் கண்டோம். நீ செய்யவேண்டியவைகளை விரைவிற் செய்வாயாக," என்று கூறினார்கள். சூரபன்மன் தீயெனச் சினந்தான். "சிவனுடைய மகன் ஆற்றலையும், பூதப்படைகளுடைய ஆற்றலையும் விரைவில் அழிக்கிறேன். நீங்கள் உடனே பானுகோபனை அழைத்துக்கொண்டு வாருங்கள்," என்று கட்டளையிட்டான்.

# ௯. முதல்நாள் பானுகோபன் போர்

## தந்தையும் மைந்தனும்

தூதுவர்கள் பானுகோபனுடைய அரண்மனையை அடைந்தார்கள். பானுகோபனுடைய அடியைப் போற்றினார்கள். சூரபன்மனுடைய கட்டளையைச் சொன்னார்கள். அவன் அரியணையை விட்டு விரைந்தெழுந்தான். அமைச்சர்களும் படைத்தலைவர்களும் அவனைச் சூழ்ந்தார்கள். பலவகை ஒலிக்கருவிகள் ஒலித்தன. பானுகோபன் ஒரு தேரில் ஏறினான். ஆயிரங்கோடி தெருக்களைக் கடந்து தந்தையினுடைய இருப்பிடத்தை யடைந்தான். தந்தையைக் கண்டு போற்றினான். "என்னை ஏன் அழைத்தாய்?" என்று விளம்பினான். சூரபன்மன் தன் மகனைப் பார்த்து, "முன்பு கிரவுஞ்ச மலையோடு என் தம்பி தாரகனைக் கொன்ற முருகன் பூதப்படைகளோடு இந்நகருக்கு வடபக்கத்தில் வந்து தங்கி யிருக்கின்றான். கள்ளர்களாகிய திருமால் நான்முகன் இந்திரன் முதலிய தேவர்களும் அவனுடன் வந்திருக்கிறார்களாம். அப்பகைவர்கள் மிகச் சிறியவர்கள். அரசர்க்கரசனாகிய நான் அவர்களைச் சென்று எதிர்ப்பது தகுதியன்று. நீ உன்னுடைய படைக

ளுடன் போருக்குச் சென்று, சிவனுடைய மகனையும் பூதப்படைகளையும் போர்செய்து வென்று திரும்புவாயாக!" என்று கூறினன்.

தந்தை சொல்லியவைகளைக் கேட்ட பானுகோபன் மகிழ்ச்சியடைந்தான். அவனுடைய தோள்கள் மலைபோல் வளர்ந்தன. அவன் தன்னுடைய தந்தையைப் பார்த்துச் "சிவனுடைய மகனையும், பூதப்படைகளையும் போர்செய் தழிப்பது ஒரு பெருஞ் செயலன்று. நான் நெருநலே போர்க்குச் செல்லுவதாக நின்னிடம் நவின்றேன். நீ அதனைக் கேட்கவில்லை. நான் படைகளோடு சென்று போர்செய்து வெற்றியடைந்து இங்கே வருகின்றேன். நீ இதனைக் காண்பாயாக. முருகனை வெற்றிகொண்ட பின் அவனுடனிருக்கிற தேவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து நின்னிடம் தருகிறேன். அவர்கட்கு ஏற்ற தண்டனைகளைச் செய்வாயாக," என்று கூறி வணங்கினன். சூரபன்மன், 'நன்று' என்று கூறி மகிழ்ந்தான்.

## பானுகோபன் போருக்குப் புறப்படுதல்

பானுகோபன் தன்னுடைய மாளிகையை அடைந்தான். தூதுவர்களைப் பார்த்து, "நம்முடைய படைகளையெல்லாம் விரைவில் திரட்டுங்கள்" என்று கட்டளையிட்டான். தான் வெற்றித்திருமகளை வணங்கிப் போர்க்கோலங்கொள்ளத் தொடங்கினன். வாட்படையை மருங்கிற் செருகினன். வெற்றிக்கழலைக் காலிற் கட்டினன். உடல்மூடியை அணிந்தான். விரலிற் புட்டில் மாட்டினன். அம்புக்கூட்டை முதுகில் தாங்கினன். நெற்றியிற் பட்டஞ் சேர்த்தினன். பல அணிகலன்களைப் பூண்டான். தும்பை மாலையை முடியிற் புனைந்தான். பலவகைப் படைக்கலங்களையும் எடுத்துக்கொண்டு போருக்குப் புறப்பட்டான். விசயன், நேமியன், மாயன், முசலி, கண்டகன், முரன், கரன், மூர்க்கன், தசமுகன், கனலி, சண்டன், விசண்டன், அசமுகன், மகிடன், அக்கிரவாகு, விசயசேனன், விடசேனன், விமோகன், சோமன், மது, சசிசித்து, சுசிமுகன்,

அசனி, சூனியகேது, அசுரசேனன் முதலிய அவுணப் படைத்தலைவர்கள் பானுகோபனுடன் புறப்பட்டார்கள். பதினாயிரம் வெள்ளம் அவுணப்படைகளும், பதினாயிரம் வெள்ளம் யானை தேர் குதிரைகளும் அவர்களுக்குப் பக்கத்தில் சூழ்ந்தன. முப்பதினாயிரம் குதிரைகள் பூட்டப் பெற்ற ஒரு தேரின்மீது பானுகோபன் ஏறினான். படைகள் பேரொலி செய்தன. பலர் அளவிறந்த சாமரங்களை வீசினார்கள். பலர் வெண்கொற்றக் குடைகளைப் பிடித்தார்கள். பாதுகாப்புத்தேர்கள் ஒருகோடி பானுகோபனைச் சூழ்ந்து சென்றன. பானுகோபன் முருகக்கடவுள் எழுந்தருளியுள்ள இடத்தை நோக்கிப் புறப்பட்டான்.

## மீண்டும் நாரதர் திருப்பணி

பானுகோபன் போருக்குப் புறப்பட்டதை நாரத முனிவர் கண்டார். முருகக்கடவுள் எழுந்தருளியுள்ள இடத்தையடைந்தார். அப் பெருமானை வணங்கிப் போற்றினார். "எம்பெருமானே! தேவரீர் ஈண்டெழுந்தருளிய மையை சூரபன்மன் தூதுவர்களால் அறிந்தான். தன் மகன் பானுகோபனைத் தங்களோடு போருக்கு அனுப்பியிருக்கிறான். அவன் அவுணப்படைகள் புடைசூழ வருகின்றான். அவன் நான்முகனையுந் திருமாலையும் வென்றவன். சிவபெருமானையுந் தங்களையுந் தவிர வேறு எவரும் அவனையெதிர்த்து வெற்றியடைய முடியாது. அவன் மாயங்களிற் சிறந்தவன். அவனைப் பிறரைக்கொண்டு வெற்றிகொள்ளுதல் இயலாது. தாங்களே படைகளோடு சென்று வென்றருளல் வேண்டும்," என்று கூறி வேண்டிக்கொண்டார்.

## முருகக்கடவுள் வீரவாகுதேவரைப் போருக்கனுப்புதல்

நாரதமுனிவர் நவின்றவைகளைக் கேட்டு முருகக் கடவுள் புன்முறுவல் கொண்டார். வீரவாகுதேவரை யழைத்தார். அவரைப்பார்த்துச், "சூரபன்மன் தன்னுடைய மகன் பானுகோபனை நம்முடன் போருக்கனுப்பியிருக்கிறான். நீ நூறாயிரத்தெட்டு மள்ளர்களோடும் ஆயிரம் வெள்ளம் பூதப்படைகளோடும் பானுகோபனை யெதிர்த்

துச் சென்று போர்புரிந்து மீள்வாயாக," என்று கட்டளை யிட்டருளினர்.

## வீரவாகுதேவர் போருக்குப் புறப்படுதல்.

வீரவாகுதேவர் முருகக்கடவுளை வணங்கி விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார். மேருமலைபோலப் பெரிய ஒரு வில்லைக் கைக்கொண்டார். உடல்மூடியை அணிந்தார். அம்புக்கூட்டை முதுகிற் கட்டினர். ஒரு பெரிய தேரில் ஏறினர். அளவிறந்த பாதுகாப்புத்தேர்கள் அவருக்குப் பக்கத்திற் சென்றன. நூறுயிரத்தெண்மர்களும் பூதப் படைத் தலைவர்களும் போர்க்கோலங்கொண்டு பக்கத்திற் சூழ்ந்தார்கள். கணக்கற்ற பூதமள்ளர்கள் அவுணமள்ளர்க ளோடு போர்செய்யப் புறப்பட்டார்கள். அப்பூதமள்ளர் கள் மிகுந்த ஆற்றல் படைத்தவர்கள். நிலவுலகம் முழு வதையும் ஒரு தோளில் தூக்கக்கூடியவர்கள். கூற்றுவனை யுங் கொல்லக்கூடிய தறுகண்மை வாய்ந்தவர்கள். சிவந்த சடையை உடையவர்கள். படைக்கலங்களை ஏந்திய கைகளை யுடையவர்கள். வீரக்கழல் ஒலிக்குங் கால்களை யுடைய வர்கள். மேன்மையிற் சிறந்தவர்கள். மாயங்களை வென்ற வர்கள். இத்தகைய பூதப்படைஞர்களுடன் வீரவாகு தேவர் புறப்பட்டார். துமிலை, பேரி, காகளம், சங்கு முதலிய ஒலிக்கருவிகள் முழங்கின. வீரவாகுதேவர் மகேந்திரபுரியின் மதிலின்புறத்து வந்தார்.

## இருபக்கத்துப்படைகளும் எதிர்த்தல்

வீரவாகுதேவரைப் படையுடன் கண்ட அவுணர்கள் சிலர் விரைவாகப் பானுகோபன் இருக்குமிடத்திற்கு ஓடி ஞர்கள். "முன்பு இங்கே தூதுவந்த வீரவாகு என்பவன் இப்போது உன்னுடன் போர்செய்தற்கு வந்துள்ளான்," என்று கூறினர்கள். பானுகோபன் விரைந்து வீரவாகு தேவருடைய படையை நெருங்கினன். அவுணமள்ளர்கள் பூதமள்ளர்களின் ஆற்றலைப்பார்த்தார்கள். "நம்முடைய போரைக் கண்டால் அஞ்சியோடும் தேவர்களல்லர் இவர் கள். இவர்கள் நம்முடன் போர் செய்யக்கூடிய ஆற்ற

னுடையவர்களாகவே காணப்பெறுகின்றார்கள்," என்று எண்ணிக்கொண்டு பூதப்படைகளுக்கு எதிரே சென்று கனைத்தார்கள்.

பூதர்கள் அவுணர்களைப்பார்த்து, "உலகத்திலுள்ள உயிர்த்தொகைகளை வருத்தியவர்கள் இவர்கள்தாமோ?" என்று கூறி அதட்டினார்கள். இவ்வாறு இருபக்கத்துப் படைகளுக்கும் போர் மூண்டது. அவுணமள்ளர்கள் யானைகளினுடைய துதிக்கைகளிலே தடிப்படைகளைக் கொடுத்துப் பூதப்படையினரை அடித்துக் கொல்லுமாறு குறிப்புக்காட்டினர். யானை குதிரை முதலியவைகளின் மேல் ஏறிப் படைக்கலங்களைச் செலுத்தித் தாமும் போர் செய்தார்கள். காலாட்படையினர் முத்தலைச் சூலம் தோமரம் முதலிய படைக்கலங்களை வீசிப் போர் செய்தார்கள். பூதர்கள் மலைகளினாலும் மரங்களினாலும் பூதப் படையினரையும் அவர்களுடைய படைக்கலங்களையும் அழித்தார்கள். இருபக்கங்களினும் பலர் மாண்டொழிந்தனர். இறந்தவுடல்கள் கரையாகக் குருதிப்பெருக்குக் கடலாக அமைந்துநின்றது. பூதர்கள் மிகுந்த சினமடைந்தார்கள். அவுணர்களுடைய தேர்களினால் தேரையழித்தார்கள். யானைகளினால் யானைகளையழித்தார்கள். குதிரைகளினால் குதிரைகளையழித்தார்கள். பூதர்கள் செய்த கடும்போருக்கு ஆற்றாமல் அவுணர்கள் உடைந்தார்கள்.

## அனலியும் சிங்கரும்

அவுணர்கள் உடைந்தோடுதலை அனலி என்னும் அவுணப் படைத்தலைவன் கண்டான். தன் கையிலுள்ள வில்லைவளைத்து நாணொலி செய்தான். தேவர்கள் அவ்வொலியைக் கேட்டுத் துன்பமடைந்தார்கள். அனலி அவ்வில்லில் தீக்கணைகளைப் பூட்டிப் பூதர்களுடைய உடம்பில் அழுத்தினான். அனலியின் செய்கையைச் சிங்கர் என்னும் பூதப்படைத் தலைவர் கண்டார். மிகுந்த சினமடைந்து அனலியை நெருங்கினார். அனலியின் தேரிற்கட்டியுள்ள குதிரைகளைத் தமது கைத்தடியால் அடித்துக் கொன்றார். அதனால் மிகுந்த சினமடைந்த அனலி கணக்கற்ற கணை

கலைத் தூண்டிச் சிங்கருடைய உடலை மறைத்தான். சிங்கர் அனலியின் கணைகளைப் பொருட்படுத்தவில்லை. அனலியினுடைய தேரிலேறி அவனுடைய வில்லைப் பறித்து நிலத்தில் எறிந்தார். அனலி ஒரு தடியினால் சிங்கருடைய தலையில் அடித்தான். அதனைக் கண்ட அவுணர்கள் ஆரவாரஞ் செய்தார்கள். தேவர்கள் வருந்தினார்கள். சிங்கர் தம்மை யடித்த அனலியின் கையைப் பிடித்துக்கொண்டு, அவனுடைய மார்பொடியும்படி அடித்தார். அவன் மிகுந்த துன்பமடைந்தான். சிங்கர் அவனை நிலத்திலடித்தார். உடனே அனலி இறந்தான்.

## சண்டனும் சிங்கரும்

சண்டன் என்னும் அவுணப் படைத்தலைவன் அனலி இறந்தமையைக் கண்டான். உள்ளம் வருந்தினான். "இப்பொழுதே இவனுடைய உயிரைக் குடிப்பேன்," என்று சொல்லிக்கொண்டு சிங்கர்மேல் வந்தான். சண்டன் கூறிய மொழிகளைக் கேட்டுச் சிங்கர் நெருப்பெழ நகைத்தார். இறந்துபோன அனலியினுடைய கையிலிருந்த தடியைப் பற்றிக்கொண்டு சண்டனுடைய தேரிற் பாய்ந்தார். அவனுடைய தோளில் அடித்தார். அவன் வருந்தித் தேர்மீது விழுந்தான். விழும்பொழுதே தன்னுடைய கைத்தடியினாற் சிங்கருடைய மார்பில் அடித்தான். இருவருஞ் சோர்ந்து விழுந்தார்கள்.

## மாயனும் நீலரும்

இருவருஞ் சோர்ந்து விழுந்தமையை மாயன் என்னும் அவுணப் படைத்தலைவன் கண்டான். போர் செய்தற்கு முன் வந்தான். நீலர் என்னும் பூதப்படைத் தலைவர் மாயனை எதிர்த்தார். மாயன்மேல் ஒரு தடியை எறிந்தார். மாயன் இறந்தவன்போல மிக வருந்தினான். நீலர்மீது ஒரு முத்தலைச் சூலத்தை எறிந்தான். அது நீலருடைய மார்பில்பட்டது. அதனால் குருதிவடிந்தது. நீலரும் சோர்ந்தார். சிறிதுபொழுதில் தெளிந்தார். மாயனுடைய மார்பில் கையினால் அடித்தார். கழுத்திற் கடித்

துக் குருதியைக் குடித்தார். சினந்தணிந்து நின்றார். மாயன் மடிந்தான்.

## மீண்டும் சண்டனும் சிங்கரும்

முன்பு போர்செய்து மயங்கி வீழ்ந்த சண்டன் சிங்கர் என்னும் இருவருந் தெளிந்தெழுந்தார்கள். தடியைக் கொண்டு போர்செய்தார்கள். சிங்கர் சண்டனுடைய தடி பொடிஆக அடித்தார். அதனைக் கண்டு அவுணர்கள் அஞ்சினார்கள். சண்டன் இடியேறுபோலச் சினந்தான். "எனது தடி ஒடிந்தது என்று செருக்கடையாதே! நான் முன்னாளில் மேலுலகங்களும் அஞ்சும்படி போர் செய்தவன். இவ்விடத்தில் உனக்கு அஞ்சேன்!" என்று கூறிக் கையையே படையாகக்கொண்டு எதிர்த்தான். சிங்கர் சினந்தார். "இந்தத் தடியைக் காத்துக்கொள்," என்று கூறித் தடியினால் அடித்தார். சண்டன் அத்தடி தன்னுடைய மேலே படாதவாறு கையினால் தடுத்தான். தோளைக் கொட்டி ஆரவாரஞ் செய்தான். சிங்கர் அதனைப் பொறாது சினந்தார். அவனுடைய தோள் ஒடியும்படி தடியினால் அடித்தார். சண்டனுடைய தோள் முறிந்தது. சிங்கருடைய தடியும் ஒடிந்தது. சண்டன் தன்னுடைய தோள் ஒடிந்ததற்கு வருந்தவில்லை. ஒடிந்த அத்தோளையே மற்றைக் கையினால் பிய்த்தெடுத்துக்கொண்டு போர் செய்தான். தேவர்கள் அவனுடைய ஆண்மையைக் கண்டு வியந்தார்கள். சண்டன் ஒடிந்த கையாகிய தடியினால் சிங்கருடைய மார்பில் அடித்தான். சிங்கர் தம்முடைய காலினால் அவனுடைய மார்பில் உதைத்துத் தள்ளினார். தேவர்கள் சண்டனை விரைவிற் கொல்லவேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். சிங்கர் சண்டனுடைய கன்னம் உடையும்படி கையினால் அடித்தார். இடியொலியோடு கூடிய முகில்போல அவன் படிமீது வீழ்ந்து இறந்தான். எமதூதர்கள் சண்டனிடம் நெருங்குதற்கு அஞ்சி நின்றார்கள். சிங்கர் எமதூதர்களைப் பார்த்து, "இந்தக் கீழ்மகனுடைய உயிரைக் கவர்ந்துகொண்டு செல்லுங்கள்," என்று கூறினார். எமதூதர்கள் நெருங்கிவந்து உயிரைக்

கவர்ந்து சென்றார்கள். சண்டன் வீழ்ந்து இறந்தவிடம் குருதிப் பெருக்கினாலும் கோரப்பற்களாலும் மற்றைப் பற்களாலும் செவ்வானம் போன்று திகழ்ந்தது.

போழுறு பகுவாயிற் பொலிதரும் எயிற்றோடும்
வீழுறு நகையாலும் விரிகுரு தியினாலும்
தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ
ஊழுற அமர்செவ்வான் ஒத்ததவ் வுழியன்றே.

(போழ்-பிளந்த, பகுவாய்-பெரிய வாய், எயிறு-பல், உழி-இடம்)

## முகனும் மதுவும்

சண்டன் மாண்டமையை அசமுகன் என்னும் அவுணப் படைத்தலைவன் கண்டான். தேர்மேல் விரைந்து வந்து சிங்கரை யெதிர்த்தான். மது என்னும் பூதப் படைத்தலைவர் இடையிற் புகுந்து அசமுகனை எதிர்த்தார். அசமுகன் வில்லை வளைத்து நாணொலி செய்தான். மதுவின்மீது கணைகளைப் பொழிந்தான். மது அசமுகனுடைய கணைகளைப் பொருட்படுத்தவில்லை. அண்மையினின்ற ஒரு மராமரத்தைப் பிடுங்கிக்கொண்டு அசமுகன் கணைகளைத் தடுத்தார். அவனுடைய தேரிற் பாய்ந்து இடிபோல ஆரவாரித்தார். அசமுகன் அவ்வொலியைக் கேட்டுத் தளர்ந்தான். வில்லையுங் கணைகளையும் நழுவ விட்டுத் தேரின்மீது நின்றான். மது அவனுடைய நிலைமையைக் கண்டு, "நீ போர் செய்தற்குத் தகுதி வாய்ந்தவன் அல்லன். ஆண்மையாளனு மல்லன்," என்று கூறி, அவனுடைய தேரினின்றும் இறங்கிச்சென்றார். அசமுகன் பெருமிதமிழந்து நாணினான். பிறகு தன்னுடைய நிலைமைக்கு இரங்கினான். போர் செய்யும்பொருட்டு மதுவைத் தொடர்ந்தான். பல கணைகளை அவர்மீது செலுத்தினான். மது அவைகளையெல்லாம் கையினால் விலக்கினார். மது தன்னுடைய கணைகளை ஒரு பொருட்படுத்தாமையை அசமுகன் கண்டான். தன் கையிலிருந்த வேற்படை முத்தலைச்சூலம் முதலிய படைக்கலங்களை அவர்மேல் விடுத்தான். மது தளர்ச்சி யடைந்தார். அசமுகனுடைய தேரைக் கையினால் எடுத்துக் கடலில் எறிந்தார். அசமுகன்

தேரினின்று குதித்து நிலத்திற் பாய்ந்தான். மதுவோடு மற்போர் செய்யத் தொடங்கினன். மது தம்முடைய காலினல் அசமுகனை விண்ணில் உந்தினர். அவன் வானிற்போய் மீண்டு நிலத்திற்கு வந்தான். மதுவினுடைய மார்பிலே அடித்து வைதான். வஞ்சனையை எண்ணி விண்ணில் மறைந்தான். திருமாலினுடைய உருளைப்படையை எடுத்து உள்ளத்தால் வழிபாடுசெய்து மதுவின்மேலே வீசினன். மது எத்தகைய படைக்கலங்களும் அற்றவராக நின்றிருந்தார். அப்படை படைக்கலமற்ற கையினரை யாதுஞ் செய்யாது. ஆகவே, அது திரும்பிவந்து அசமுகனுடைய தலையையே அறுத்துத் தள்ளியது. "எல்லா வினைகளும் தன்னைமேலதான் உண்டாகின்றன," என்பது பெரியோர் வாக்கு. அசமுகன் இறந்து நிலத்தில் விழுந்தான். அவுணர்கள் வருந்தினர்கள். தேவர்கள் மகிழ்ந்தார்கள். உருளைப்படை திருமாலிடத்திற்குச் சென்றது. எஞ்சிய அவுணப் படைத்தலைவர்கள் பூதர்களை யெதிர்த்துப் போர் செய்தார்கள். தண்டகர் என்பவர் வில்லை வளைத்துக் கணைமழைகளைப் பொழிந்தார். அவுணர்களுடைய நால்வகைப் படைகளும் அழிந்தொழிந்தன. குருதிப் பெருக்கு ஆறுபோலப் பாய்ந்தது. இறவாது பிழைத்த அவுணர்கள் எல்லாத் திக்குகளையும் நோக்கி ஓடினர்கள்.

## பானுகோபன் பூதப்படைகளோடு எதிர்த்தல்

அவுணப்படைகள் மிகுதியாக அழிந்தமையையும், படைத்தலைவர்கள் பலர் ஒழிந்தமையையும் பானுகோபன் பார்த்தான். விரைந்து வந்து பூதப்படைகளை யெதிர்த்தான். வில்லை வளைத்துக் கணைகளை மழைபோலச் சொரிந்தான். பூதர்கள் பல மலைகளைப் பிடுங்கிப் பானுகோபன் மீது எறிந்தார்கள். பானுகோபன் அம்மலைகளைக் கணைகளால் தூளாக்கினன். ஆயிரங்கோடி கணைகளைப் பூதர்கள் மீது செலுத்தினன். அதனல் எண்ணற்ற பூதர்கள் அழிந்தார்கள். எஞ்சியோர் விரைந்தோடி வீரவாகு தேவரை யடைந்தார்கள்.

## உக்கிரரும் பானுகோபனும்

பூதப்படைகள் புறங்காட்டி யோடுதலை உக்கிரர் என்னும் பூதப்படைத்தலைவர் பார்த்தார். மிகுந்த சினங் கொண்டார். ஒரு தடியை யெடுத்துக்கொண்டு ஆரவாரத்துடன் சென்று பானுகோபனை யெதிர்த்தார். அவரைப் பானுகோபன் கண்டான். வில்லை வளைத்து ஆயிரங்கோடி கணைகளைச் செலுத்தினன். உக்கிரருடைய உடல் முழுவதையும் மறைத்தான். அவன் செலுத்திய கணைகள் யாதும் பயனின்றி அழிந்தொழிந்தன. பானுகோபன் அதனைக் கண்டு திகைத்தான். ஓர் எழுப்படையைச் சுழற்றி எறிந்தான். உக்கிரர் அவ்வெழுவை ஓர் இருப்புலக்கையால் அழித்தார். பானுகோபனுடைய தேர்க் குதிரைகளை யடித்து வீழ்த்தினர். தேவர்கள் பானுகோபனை இகழ்ந்து ஆரவாரஞ் செய்தார்கள். ஏறிய தேர்க் குதிரைகள் இறந்தொழிந்தமையின் பானுகோபன் வேறொரு தேரில் ஏறினன். வில்லை வளைத்து நூறு மொட்டம்புகளை விட்டான். உக்கிரருடைய தடி ஒடிந்தது. உக்கிரர் பானுகோபனுடைய தேரைக் கையால் எடுத்து எறிந்தார். அது ஞாயிற்றுமண்டலம்வரை சென்றது. பானுகோபன் தன்னை நோக்கி வருதலைக் கண்ட கதிரோன் அஞ்சி யோடிப்போனன். பானுகோபன் தேரோடு நிலத்தில் விழுந்தான். உக்கிரரைக் கையால் எற்றினன். அவருடைய மார்பில் முத்தலைச் சூலத்தை யெடுத்துச் செலுத்தினன். அவர் தளர்ந்து விழ்ந்தார்.

## பானுகோபனும் தண்டியும்

உக்கிரர் தளர்ந்து வீழ்ந்ததைத் தண்டி யென்பவர் கண்டார். ஒரு மலையை யெடுத்துப் பானுகோபன்மீது எறிந்தார். ஆயிரம் கணைகளினல் அவன் அதைப் பொடிப் பொடியாக்கினன். தண்டி மாமரம் ஒன்றைப்பிடுங்கிப் பானுகோபனுடைய தேர்க்குதிரைகளை யடித்தார். குதிரைகள் முற்றும் ஒழிந்தன. பானுகோபன் முத்தலைக் கணைகள் பதினயிரத்தைத் தண்டியினுடைய நெற்றியிற் செலுத்தினன். அதனல் தண்டி தளர்ந்தார்.

## பிஞகியும் பானுகோபனும்

தண்டி தளர்ந்தமையைப் பிஞகி என்பவர் கண்டார். ஒரு மலையைப் பிடுங்கி வீச முயன்ருர். பானுகோபன் ஆயிரங்கணைகளை அவருடைய மார்பில் எய்தான். அவரும் தளர்ந்து நின்ருர். மற்றைப் பூதமள்ளர்களும் தனித்தனி போர்செய்து தோற்ருர்கள்.

## நூருயிரத்தெண்மரும் பானுகோபனும்

பூதப்படைத் தலைவர்கள் பலர் தளர்ந்து வீழ்ந் தமையைக் கபாலி, அண்டலோசனர், நிரஞ்சனர், உருத்தி ரர், தண்டகர் முதலிய நூருயிரத்தெட்டு மறவர்களுங் கண்டார்கள். சினங்கொண்டு பானுகோபனுக்கெதிரே சென்ருர்கள். விற்களை வளைத்து நாணெலி செய்தார்கள். அவ்வொலி பேரொலியாக எங்கும் எழுந்தது. பானு கோபன் அவ்வொலியைக் கேட்டுப் புன்முறுவல் செய் தான். ஒரு பெரிய வில்லை யெடுத்து வளைத்துத் தானும் நாணெலி செய்தான். நூருயிரத்தெண்மரும் பானுகோபன் மீது கணைகளை மழைபோலச் சொரிந்தார்கள். பானு கோபன் ஆயிரங்கோடி கணைகளைச்செலுத்தி அவைகளெல்லா வற்றையும் அறுத்தான். பின்னும் ஆயிரங்கோடிகணைகளை நூருயிரத்தெண்மர்மீதுஞ் செலுத்திஞன். அவர்கள் அக் கணை முறிந்து பானுகோபன்மீது செல்லும்படி, அவற்றிற் கேழுமடங்கு கணைகளைச் செலுத்திஞர்கள். பானுகோபன் மிகுந்த சினமடைந்தான். அளவில்லாத கணைகளை மேன் மேலுஞ் செலுத்தி நூருயிரத்தெண்மர் கணைகள் அனைத்தை யும் விலக்கிஞன். நூருயிரத்தெண்மர்களுடைய விற்களை யும் அறுத்தான். நூருயிரத்தெண்மர்களும் பாதுகாப்பு விற்களை யெடுத்துக்கொண்டு கணைகளைச் செலுத்திஞர்கள். பானுகோபன் செலுத்தும் கணைகளையழித்ததுடன், அவனு டைய தேர் குதிரை கொடி முதலியவற்றை யழித்தார்கள். தேரழிந்தவுடன் பானுகோபன் வேருெரு தேரிலேறிக் கொண்டு போர் செய்தான். சிறிதுபோதிற்குள் நூருயிரத் தெண்மரும் பானுகோபனுக்குத் தோற்ருர்கள்.

## பானுகோபனும் வீரகேசரியும்

நூறுயிரத்தெண்மரும் தோற்றதை வீரகேசரி கண்டார். பானுகோபனுக்குமுன் சென்று விடாமழை போலப் பிறைமுகக்கணைகளைப் பொழிந்தார். வீரகேசரியின் ஆற்றலைக்கண்டு பானுகோபன் வியந்தான். "இவனுடைய ஆற்றலும் வெற்றியும் நன்று நன்று!" என்று சொல்லித் தலையை அசைத்தான்; வில்லை வளைத்தான். நூறுயிரங்கோடி கணைகளைத் தொடுத்து வீரகேசரி விடுகிற கணைகளையெல்லாம் அழித்தான். அவருடைய தோள்கள் மீது ஆயிரங்கணைகளை அழுத்தினன். வீரகேசரி அவன் செலுத்திய கணைகளையெல்லாம் விலக்கினார். பானுகோபனுடைய மார்பில் ஆயிரங்கணைகளைச் செலுத்தினார். அக்கணைகள் மார்பில்பட்ட அளவில் பானுகோபன் இரங்கித் துன்புற்றான். பானுகோபன் திருமால் படைக்கலத்தையெடுத்துச்செலுத்தினன். அது வீரகேசரிவிட்ட கணைகளையெல்லாம் விழுங்கிக்கொண்டு ஆரவாரத்தோடு வந்தது. வீரகேசரி அதனைக்கண்டு தாமும் திருமால் படைக்கலத்தையெடுத்து விடத் தொடங்கினார். அதற்குள் பானுகோபன் விட்ட படைக்கலம் வீரகேசரியினுடைய மார்பிற் புகுந்து குருதியைப் பருகியது. அறுமுகக்கடவுளுடைய ஆணையால் உயிர் போகவில்லை. அவர் மயங்கி விழுந்தார். படைக்கலம் பானுகோபனிடத்திற்குச் சென்றது.

## பானுகோபனும் வீரமார்த்தாண்டரும்

வீரகேசரி இறந்தவர்போல மயங்கி வீழ்ந்தமையை வீரமார்த்தாண்டர் கண்டார். வில்லை வளைத்துக்கொண்டு பானுகோபனை நெருங்கினார். அவன் ஆயிரங்கணைகளினால் அவருடைய வில்லையொடித்தான். ஆயிரங்கணைகளை அவருடைய நுதலில் அழுத்தினன். தேவர்கள் அதனைக் கண்டு திகைத்தனர். வீரமார்த்தாண்டர் வேறொரு வில்லையெடுத்து வளைத்தார். அந்த வில்லையும் பானுகோபன் நூறுகணைகளால் முறித்தான். ஆயிரங்கணைகளால் அவருடைய தேரையுங் குதிரைகளையும் அழித்தான்.

தோள்களில் எழுநூறுகணைகளைத் தொடுத்தான். தேர், வில் முதலியன அழிந்துநின்ற வீரமார்த்தாண்டர் முகிலும் அஞ்ச ஆரவாரித்தார். பானுகோபனுடைய தேரின்மீது பாய்ந்தார். அவனுடைய வில்லைப் பிடுங்கி இருதுண்டாக முறித்தெறிந்தார். பானுகோபன் வெகுண்டு இடையிற் கட்டிய உடைவாளை உருவினான். வீரமார்த்தாண்டருடைய மார்பில் குத்தினான். வீரமார்த்தாண்டருங் கொதித்துத் தம்முடைய வாட்படையையெடுத்துப் பானுகோபனுடைய மார்பிலுள்ள வச்சிர கவசம் அழியும்படி குத்தினார். பானுகோபன் திரும்பவும் தன்னுடைய உடைவாளினால் வீரமார்த்தாண்டருடைய நுதலிற் குத்தினான். அக்குத்தினால் வீரமார்த்தாண்டர் தேரிற் சாய்ந்தார். வீரமார்த்தாண்டர் இறந்தார் என்று பானுகோபன் எண்ணிக்கொண்டான். பக்கத்திலுள்ள படைகளோடு எதிர்த்தான்.

## பானுகோபனும் வீரராக்கதரும்

வீரமார்த்தாண்டர் சாய்ந்ததையும், பானுகோபன் படைகளை யெதிர்த்ததையும் வீரராக்கதர் கண்டார். விரைந்து வந்து பானுகோபனை யெதிர்த்தார். ஆயிரங் கணைகளைப் பானுகோபன்மீது செலுத்தினார். ஆயிரங் கணைகளால் அவன் அவைகளை அழித்தான். நூறுகணைகளைச் செலுத்தி வீரராக்கதரின் தேரோட்டித் தலையை அறுத்தான். வீரராக்கதர் வேறொரு தேரோட்டியைத் தேரில் நிறுத்தினார். ஆயிரம்கணைகளில் பானுகோபனுடைய முடியை அறுத்தார். முடி வெட்டுண்டதைக் கண்டு பானுகோபன் நாணினான். எல்லையற்ற பெருஞ் சினங்கொண்டான். வெட்டுண்ட முடியை நீக்கி வேறொரு முடியை அணிந்துகொண்டான். வீரராக்கதர் விடுகின்ற கணைகளையெல்லாம் விலக்கினான். ஆயிரங்கணைகளினால் அவருடைய வில்லையறுத்தான். அவர் வேறொரு வில்லை யெடுப்பதற்குள் அவருடைய தேர்க்குதிரைகளை யழித்தான். வீரராக்கதர் வேறொரு தேரிற் பாய்ந்தார். ஒரு வேற்படையைப் பானுகோபன்மீது வீசினார். அவன் அந்த

அயிற்படையை நூறுகணைகளால் அழித்தான். வீரராக்கதர் தேரினின்று இறங்கினர். பானுகோபனுடைய தேரை எடுத்தெறிந்தார். விண்ணிற்சென்ற அவன், நான்முகன் கொடுத்த ஒரு வேற்படையை எடுத்து வீரராக்கதர்மீது வீசிவிட்டு நிலத்தில் விழுந்தான். அவ்வேற்படை மிகுந்த ஆற்றல் அமைந்தது. அது வீரராக்கதருடைய உடம்பிற் பட்டபடியால் அவர் மிகத்தளர்ந்தார்.

## வீரராந்தகர் முதலிய ஐவர் பானுகோபனோடு போர்செய்து தோற்றல்

நிலத்தில் வீழ்ந்த பானுகோபன் வேறொரு தேரில் ஏறிக்கொண்டு பூதப்படைகளை யெதிர்த்தான். வீரராந்தகர், வீரமாமகேச்சுரர், வீரதீரர், வீரமாமகேந்திரர், வீரபுரந்தரர் என்னும் ஐவரும் பானுகோபனை யெதிர்த்துக் கணைகளை மழைபோலச் சொரிந்தார்கள். பானுகோபனுங் கணைகளை மழைபோலச் சொரிந்து போர்செய்தான். ஐவரில் இருவர் வருந்தி நின்றார்கள். ஒருவர் வீழ்ந்தார். இருவர் புறங்கொடுத்துச் சென்றார்கள். முன்பு புறங்கொடுத்தோடிய அவுணப்படைகள் பானுகோபனுடைய வெற்றியைக் கண்டு அவனைச் சேர்ந்தன.

## பானுகோபனும் வீரவாகுதேவரும் போர்செய்தல்

பூதப்படையின் தோல்வியையும் அவுணப்படையின் வெற்றியையும் வீரவாகுதேவர் கண்டார். பானுகோபனை யெதிர்த்துப் போர்செய்யத் தொடங்கினர். இருவரும் தத்தம் விற்களை வளைத்து நாணொலி செய்தனர். இருவருடைய நாணொலியும் மிகப் பெரிதாகவிருந்தது. முன்னே வீரவாகுதேவருடைய நாணொலியைக் கேட்டு அளவில்லாத மகிழ்ச்சியடைந்த தேவர்கள், பின்பு பானுகோபனுடைய நாணொலியைக் கேட்டு அளவில்லாத துன்பமடைந்தார்கள். திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் இவர்களுடைய போர்த்தொழிலைக் காண்பதற்காகவந்து நெருங்கினார்கள்.

பானுகோபன் வீரவாகுதேவரைப் பார்த்து, "நீ வேற் படையினால் தாரகனைக்கொன்ற முருகக்கடவுள் அல்லன்; பன்றி வடிவங்கொண்டு நிலத்தையிடந்த திருமால் அல்லன்; தேவர்கோனாகிய இந்திரனுமல்லன்; நீ ஒரு தூதுவன். நீதானா என்னுடன் போர்செய்தற்கு வல்லவன்? நீ கற்றுள்ள மாயையினால் நேற்று எம்மரசனுக்கு முன்வந்து சில மொழிகளைச் சொன்னதுமன்றி, என் தம்பியையுங் கொன்றாய். நகரத்தை யழித்தாய். நான் உன்னைக் காணவில்லை. அதனால் நீ பிழைத்து வந்துவிட்டாய். உன்னோடு நான் போர்செய்வதனால் இகழ்ச்சியை அடைவதன்றிப் புகழ்ச்சியை அடைவேனோ? உன் துணைவர்களை வென்றேன். தனியே வந்து எதிர்த்த உன்னையுங் கொல்வேன். உன்னை என்னிடத்திற்குப் போருக்கனுப்பிய சிறுவனையுந் தோற்கடித்து என் சினத்தை முடிப்பேன். இந்திரனையுஞ் சிறைசெய்வேன்," என்று இவ்வாறு பல மொழிகளை இயம்பினான்.

வீரவாகுதேவர் பானுகோபனைப் பார்த்து, "வீண் மொழிகளைப் பேசாமல் விரைந்து போரைத்தொடங்குவாயாக!" என்றார். இருவரும் ஒருவர்மீது ஒருவர் கணக்கற்ற கணைகளை மழைபோலச் சொரிந்து கொண்டார்கள். இவர்களுடைய கணைமழைகள் நெருங்குதலால் எல்லா இடங்களும் மறைந்தன. அவர்களுடைய தேர்கள் இடப்பக்கம் வலப்பக்கமாக எங்குஞ் சுற்றின. இருவரும் உலகமெங்குஞ் சூறைபோலச் சுற்றிப் போர் செய்தனர். இவர்களுடைய போரைக்கண்டு தேவர்களும் அஞ்சியோடினார்கள்.

பானுகோபன் வீரவாகுதேவருடைய வில்லை நூறு கணைகளால் அழித்தான். வேறொரு வில்லை வீரவாகுதேவர் எடுத்து ஆயிரங்கணைகளைத் தூண்டிப் பானுகோபனுடைய வில்லை முறித்தார். பானுகோபன் வேறொரு வில்லை யெடுத்து ஆயிரங்கணைகளைத் தொடுத்து வீரவாகுதேவருடைய மார்பிற் செலுத்தினான். வீரவாகுதேவர் ஏழு கணைகளினால் பானுகோபனுடைய முடியைச் சாய்த்

தார். அவன் வேறொரு முடியை யெடுத்து அணிந்து கொண்டான். வீரவாகுதேவர் ஆயிரங் கணைகளைச் செலுத்திப் பானுகோபனுடைய உடல்முடியை அழித்தார். அப்பொழுது கதிரவனும் மகிழ்ந்தான். பானுகோபன் ஆயிரங்கணைகளை வீரவாகுதேவருடைய நெற்றியில் அழுத்தினன். வீரவாகுதேவர் அவைகளைப் பறித்து வீசினர். பானுகோபனுடைய முகத்திலும் மார்பிலும் தோள்களிலும் கைகளிலும் தனித்தனி ஆயிரங்கணைகளைச் செலுத்தினர். பானுகோபன் சிறிது தளர்ந்துநின்றான்.

## வீரவாகுதேவரும் அவுணப்படைத்தலைவர்களும்

பானுகோபன் ஆற்றல் அழிந்து நிற்றலை அவுணப் படைத் தலைவர்கள் கண்டார்கள். நால்வகைப் படைகளோடும் முன்சென்று வீரவாகுதேவரை யெதிர்த்தார்கள். சூலம், தடி, எழு, உருளை முதலிய படைகளைச் செலுத்தினர்கள். வீரவாகுதேவர் விரைந்து வில்லை வளைத்து ஆயிரங்கோடி கணைகளை ஒருங்கே தூண்டினர். அவுணர் செலுத்திய படைகளையெல்லாம் அழித்தார். பின்னும் பலகோடி கணைகளைச் செலுத்தி அவுணப்படைகளைப் பலவாறு அழித்தார். வீரவாகுதேவருடைய கணைகளால் அவுண மள்ளர்களுடைய உடல்கள் புரண்டன. குருதி அளவு கடந்து பெருகியது. தேரின் உருளைகள் உருண்டன. குதிரைகளும் யானைகளும் மடிந்தன. பிணங்கள் எங்குங் குவிந்தன. இறவாத அவுணப்படைகள் ஓடின. குருதிப் பெருக்குக் கடலிற்பாய அதனைக் கயல்கள் உண்டு களித்தன. எமதூதர்கள் உயிர்களைப் பிடிப்பதிற் றளர்ச்சி யடைந்தார்கள். இறவாதொழிந்த அவுணப்படைகள் புறங்காட்டி யோடின. முன் பானுகோபனுக் கஞ்சி யோடிய பூதப்படைகள் வீரவாகுதேவருடைய வெற்றியைக் கண்டு அவரை வந்து சூழ்ந்தன.

## மீண்டும் போர்செய்தல்

பானுகோபன் தளர்ச்சி நீங்கிப் பார்த்தான். தன்னுடைய படைகளைக் காணவில்லை. எங்கும் பிணக்குவியல்

களைக் கண்டான். ஒப்பற்ற பேராண்மையாளராகிய வீரவாகுதேவர் நிற்றலையுங் கண்டான். "நம்முடைய படைகளையெல்லாம் இவனே அழித்தான். இவன் ஒப்பற்ற பேராண்மை படைத்தவன்போலும். இவனை வெற்றிகொள்ளாவிட்டால் நம்முடைய ஆண்மை பயனற்றதாக முடியும். இவனை விரைவில் வெல்லுதல் வேண்டும்,'' என்று எண்ணினன். வீரவாகுதேவருக்கு முன்னே சென்றான். வில்லை வளைத்தான். முத்தலைகளையுடைய ஆயிரங்கணைகளைச் செலுத்தினன். வீரவாகுதேவர் ஆயிரம் முத்தலைக்கணைகளைச் செலுத்திப் பானுகோபனுடைய கணைகளைத் துண்டித்தார். பின்னும் ஆயிரங்கணைகளைப் பானுகோபன்மீது செலுத்தினர். பானுகோபன் ஆயிரங் கணைகளை விடுத்து அவைகளை விலக்கினன். பதினாயிரங் கணைகளைத் தொடுத்தான். வீரவாகுதேவருடைய தேரையழித்தான், குதிரைகளை மாய்த்தான். பாகனைக் கொன்றான். தேவர்கள் அதனைக் கண்டு வருந்தினர்கள். வீரவாகுதேவர் வில்லொடு வேறொரு தேர்மேல் பாய்ந்தார். பதினாயிரங் கணைகளைச் செலுத்தினர். பானுகோபனுடைய தேரையுங் குதிரைகளையும் அழித்தார். பாகனை ஒழித்தார். பானுகோபன் வேறொரு தேரில் ஏறினன். வில்லை வளைத்து எழுநூறு கணைகளைப் பூட்டினன். வீரவாகுதேவருடைய மார்பிற் செலுத்தினன். அக்கணைகள் அவருடைய மார்பில் தைத்தன. வீரவாகுதேவர் துன்பத்தின் சுவையைக் கண்டார். கூற்றுவன்போற் சீற்றங்கொண்டார். பதினான்கு கணைகளைச் செலுத்திப் பானுகோபனுடைய வில்லை அழித்தார். ஆயிரங்கணைகளினால் தேர் குதிரை முதலியவைகளை ஒழித்தார். நூறு கணைகளினால் அவனுடைய மார்பைத் துளைத்தார். பானுகோபன் பக்கத்தில் நின்ற ஒரு தேரின்மீது ஏறினன். அதற்குள் வீரவாகுதேவர் முன்பு மார்பைத் துளைத்தவழியால் ஆயிரங் கணைகளைச் செலுத்தி அவனுடைய முதுகில் தொங்கிய அம்புக் கூட்டை அறுத்தார். அம்புக்கூடு அறுந்ததைக் கண்டு பானுகோபன் வியப்படைந்தான். வீரவாகுதேவரை விற்

போரால் வெல்ல முடியாது என்று முடிவு செய்தான். ஒரு சூழ்ச்சியைக் கருதினன்.

## பானுகோபன் மோகக்கணை செலுத்துதல்

நான்முகன் கொடுத்த மோகக்கணையைக் கையிலெடுத்தான். மனத்தினல் வழிபாடு செய்தான். நீ சென்று படைகளுடைய அறிவையும், பகைவனுடைய அறிவையும் கெடுத்து வருவாயாக என்று கூறி விடுத்தான். அப்படை மிகுந்த சினத்துடன் கதிரவனுடைய ஒளியைக் கெடுத்து இருட்படலத்தை வெளிப்படுத்தி, உயிர்களெல்லாம் அஞ்சி மயங்குமாறு சென்றது. அதனுடைய வரவைக்கண்டு பூதர்கள் அஞ்சி நடுங்கினர்கள். பூதப்படைத்தலைவர்கள் திகைத்தார்கள். அதற்கெதிரான படைகளைச் செலுத்தாது வெறுங்கணைகளை ஏவினர்கள். வீரவாகுதேவர் 'அப்படையை எப்படையால் ஒழிக்கலாம்,' என்று எண்ணிக் கொண்டு நின்றார். அந்த மோகப்படை எல்லோருடைய உணர்வையுங் கெடுத்தது. இலக்கத்தெண்மரும் பிறருந் தளர்ந்து விழுந்தார்கள். வீரவாகுதேவர் கருத்தழிந்து தூணைப்போல நின்றார். பானுகோபன் தன்னுடைய செய்கையை எண்ணித் தானே வியந்துகொண்டான். எல்லோரையுங் கொல்லவேண்டுமென்று எண்ணினன். வில்லை வளைத்தான். மயங்கியுள்ள அனைவர்மீதும் கணைகளைச் செலுத்தி உடலைத்துளைத்தான்.

## முருகக்கடவுள் அனைவரையும் மீட்டல்

பானுகோபனுடைய செய்கையை உடம்பிடி கைக்கொளும் கடம்பணி பரமன் உணர்ந்தார். விரைவாக அமோகப்படையை உண்டாக்கினர். "நீ நம்மவர்களாகிய வீரவாகுதேவர் முதலாயினேரைப் பற்றியுள்ள மோகப் படையைக் கெடுத்து மீண்டு வருவாயாக!" என்று கட்டளையிட்டார். அப்படைக்கலம் விண்வழியாகச் சென்று போர்க்களத்தை யடைந்தது. அவ்வளவில் பானுகோபனுடைய மோகப்படையின் ஆற்றல் அழிந்தது. வீரவாகுதேவர் முதலாயினேர் மயக்கந் தீர்ந்தார்கள். அறுமுகப்

பெருமானின் அமோகப்படையைக் கண்டு மகிழ்ந்தார்கள். அதன் ஆற்றலை வியந்து புகழ்ந்தார்கள். அப்படையை அறுமுகப்பெருமான் அனுப்பியுள்ளார் என்றுணர்ந்து அப்பெருமானைப் போற்றினார்கள். அப்படைக்கலம் திரும்பி முருகக்கடவுளை யடைந்தது. பூதர்கள் பானுகோபனுடன் போர்செய்ய எண்ணினார்கள். வீரவாகுதேவர் பானுகோபன்மீது சினங்கொண்டார். அவனை உடனே கொன்று தொலைக்க எண்ணிச் சிவப்படைக்கலத்தைக் கையிலெடுத்தார்.

## பானுகோபன் மறைந்தோடிப் போதல்

அறுமுகக்கடவுளின் அமோகப்படை வந்ததையும், தன்னுடைய மோகப்படை மீண்டதையும் வீரவாகுதேவர் சிவப்படைக்கலத்தை எடுத்ததையும், பானுகோபன் பார்த்தான். தன்னுடைய ஆணவம் நீங்கினான். அளவற்ற துன்பமடைந்தான். இனி இங்கு நின்றிருப்பின் சிவப்படைக்கலம் வந்து உயிரை உண்ணும் என்று அஞ்சினான். அவனிடஞ் சிவப்படைக்கலம் இல்லை. நகரத்திற்குச் சென்று சிவப்படை முதலிய தெய்வப்படைக்கலங்களை மிகுதியாகக்கொண்டு வந்து மறுநாள் போர் செய்யலாமென்று முடிவு செய்தான். கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விண்ணில் எழுந்தான். தன்னகரத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

## பூதப்படைகள் மகிழ்ந்து திரும்புதல்

பானுகோபன் மறைந்தோடிய அளவில் அவனைச் சூழ்ந்துநின்ற அவுணப்படைகள் பறந்தோடிப்போயின. பூதப்படைகள் இன்றைய வெற்றி நம்முடையதே என்று பெருமுழக்கஞ் செய்தன. அனைவரும் வீரவாகுதேவர் மீது மலர்மழை சொரிந்தார்கள். பானுகோபன் மறைந்தோடுதலை வீரவாகுதேவர் பார்த்துக்கொண்டு சினத்துடன் நின்றார். பூதப்படைஞர்கள் அவனைத் தொடர்ந்து பிடித்துவர எண்ணினார்கள். அஞ்சியோடுபவர்களைத் தொடர்ந்து பிடிக்கலாகாதென்று வீரவாகுதேவர் தடுத்து

விட்டார். கதிரவனும் மறைந்தான். வீரவாகுதேவர் படைகளுடன் திரும்பிப் பாசறையை அடைந்தார். அனைவரும் அறுமுகக்கடவுளைப் போற்றி வணங்கினர். முருகக்கடவுள் நிகழ்ந்தவைகளைக் கேட்டருளினார். அனைவருந் தத்தம் இருப்பிடத்தை யடைந்து மகிழ்ந் திருந்தனர்.

## மகேந்திரபுரியில் நிகழ்ந்தவை

புறங்கொடுத்தோடிய பானுகோபன் தன்னுடைய பெருமிதத்தை விட்டான். அவன் சூரபன்மனுடைய இருப்பிடத்திற்குஞ் செல்லவில்லை. ஆடல் பாடல் முதலிய இன்பக்களியாடல்களிலே நாட்டஞ் செலுத்தவுமில்லை. தனியே ஓரிடத்தில் அமர்ந்து முருகக்கடவுளையும் வீரவாகு தேவரையும் எவ்வாறு வெற்றிகொள்வதென்று எண்ண மிட்டுக்கொண்டிருந்தான்.

தூதுவர்கள் நிகழ்ந்தவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பானுகோபன் புறங்காட்டி யோடியபிறகு சூரபன்மனுடைய இருப்பிடத்திற்குச் சென்றார்கள். சூரபன்மனைக்கண்டு வணங்கினார்கள். அவனைப்பார்த்து, "உன் மகனாகிய பானுகோபன் வீரவாகு வோடு போர்செய்தான். பல பூதர்களை யழித்தான். மீண்டு இங்கே வந்தான். தனியே அமர்ந்து எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறான். வீரவாகுவும் தன்னுடைய படைக ளுடன் பாசறைக்குப் போய்ச்சேர்ந்தான். இதுதான் இன்று நிகழ்ந்தது," என்று கூறினார்கள்.

பகைவர்களை வெல்லாமல் பானுகோபன் திரும்பி வந்துவிட்டானென்னுஞ் செய்தி சூரபன்மனுக்கு மிகுந்த சினத்தை யுண்டாக்கியது. அவனுடைய கண்கள் தீப் பொறியைச் சிந்தின. அவன் பெருமூச்சுவிட்டு நகைத் தான். "என்னுடைய மக்களும் துணைவர்களும் சுற்றத் தார்களும் போருக்குப் போகமாட்டார்கள். நான் நாளைக் குப் படைகளோடு சென்று முருகனை வெற்றிகொண்டு மீள்கிறேன்; நீங்கள் செல்லுங்கள்," என்றான் தூதுவர் களைப்பார்த்து.

# இரண்டாம்நாள் சூரபன்மன் போர்

## சூரபன்மன் போருக்குப் புறப்படுதல்

மறுநாள் கதிரவன் எழுவதற்குமுன் சூரபன்மன் உறக்கம் விட்டெழுந்தான். நாட்கடன்களை முடித்தான், அரசிருக்கை மண்டபத்தை யடைந்து அரியணையில் அமர்ந்தான். முதல்நாள் பானுகோபன் புறங்காட்டி வந்ததை யெண்ணினன். அவனுடைய உள்ளத்திற் பெருஞ் சினமுண்டாயிற்று. "இனிமேல் வேறு யாரையும் போருக்கு அனுப்புவதில்லை. நானே படைகளோடு சென்று பகைவரை யழித்து வெற்றிகொள்ளுகிறேன்," என்று எண்ணினன். பல ஒற்றர்களையழைத்தான். "நிலவுலகத்தைச் சூழ்ந்துள்ள கடல்கடோறும் இருக்கின்ற நம்முடைய படைகளைக் கொண்டுவாருங்கள்," என்று கட்டளையிட்டான். ஆயிரங்கோடி ஒற்றர்கள் பலவிடங்கட்குஞ் சென்றார்கள். சூரபன்மனுடைய கட்டளையைச் சொன்னார்கள். முன்னுளிற் பல போர்களை வென்ற கணக்கற்ற படைகள் மகேந்திரபுரியைச் சூழ்ந்து பெருமுழக்கஞ் செய்தன. சூரபன்மன் மேருமலையைப் போன்ற ஓர் உயர்ந்த கட்டிடத்தின்மேலே யேறி அப்படைகளெல்லாவற்றையும் பார்த்தான். தன் உள்ளத்தில் முன்பு கொண்ட துன்பம் நீங்கினன். பகைவர்களை வென்றவன்போல மகிழ்ந்தான். போருக்குப் புறப்படக் கருதினன். போர்க்கோலங் கொண்டான். ஒரு பெரிய தேரின்மீது ஏறினன். யானைகளுங் குதிரைகளுந் தேர்களுங் காவலாகப் பின்சென்றன. அவுணப்படையினரும் அமைச்சர்களும் பக்கத்திற் சென்றார்கள். அரண்மனையைச் சூழ்ந்துள்ள தெருக்களைக் கடந்து கோபுரவாயிலையடைந்தான். அங்குக் குழுமியிருந்த படைகள் சூரபன்மனைச் சுற்றின. சிங்கமுகன் மகனாகிய அதிசூரனும், தாரகன் மகனாகிய அசுரேந்திரனும் சூரபன்மனிடத்திற்கு வந்தார்கள். சூரபன்மன் அவர்களைப் பார்த்துப், "படையைப் பாதுகாத்துக்கொண்டு செல்லுங்கள்," என்று கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே படைத்தலைவர்களாகச் சென்றார்கள். சூரபன்மன் நால்

வகைப் படைகளும் படைத்தலைவர்களும் தன்னைச் சூழ்ந்து சுற்றத் தான் தேரின்மேலேறிச் சென்றான்.

தொண்டகம், துடி, பம்பை, தூரியம், முருடு, கொம்பு, படகம் முதலாகிய ஒலிக்கருவிகள் முழங்கின. தேர்களின் ஒலியும், யானைகளின் ஒலியும், குதிரைகளின் ஒலியும், கொடிகளின் ஒலியும், போர்மறவர்கள் காலில் அணிந்துள்ள வீரக்கழல்களின் ஒலியும், வாத்தியங்களின் ஒலியும் எல்லா உலகங்களையும் விழுங்கியெழுந்தன. படைகளின் செலவால் எழுந்த துகள் கதிரவனை மறைத்தது. துகள் சென்று மிகுதலால் விண்ணுலகமும் மண்ணுலக மாகியது. தேர்களின்மீதும் யானைகளின்மீதும் உள்ள கொடிகள் வானுலகிற் சென்று கங்கையில் தோய்ந்து, நில வுலகிலே நீர்த்திவலைகளைச் சிதறி ஆடிச் சுற்றுதல் சூரபன் மன் இன்றைக்கு இறப்பான் என்று அழுவதைப் போன் றிருந்தது.

## முருகக்கடவுள் போருக்குப் புறப்படுதல்

சூரபன்மன் போருக்கு வருதலை இந்திரன் அறிந் தான். முருகக்கடவுளிடம் ஓடிச்சென்று அவருடைய திரு வடிகளை வணங்கினான். "சூரபன்மன் தன்னுடைய படை களுடன் போருக்கு வருகின்றான். அவனை யெதிர்த்து வெற்றிகொண்டு எங்களைக் காத்தருளும். எங்களுடைய செல்வங்களையெல்லாம் எங்கட்குக் கொடுத்தருளும்," என்று வேண்டிக்கொண்டான்.

அறுமுகப்பெருமான் விண்ணவர் கோனுக்கு அருள் புரிந்தார். காற்றினை நோக்கி, "நம்முடைய தேரை விரை விற் கொண்டுவருவாயாக" என்று கட்டளையிட்டார். அவ னும் அவ்வாறே கொண்டுவந்து திருமுன்பு நிறுத்தினன்: நான்முகன் திருமால் முதலிய தேவர்கள் போற்றத் தேரின்மீது ஏறியருளினார். பூதப்படைகள் கடலும் அஞ்சு மாறு பெருமுழக்கஞ் செய்துகொண்டு புறப்பட்டன. நிலத்திலிருந்து தூள் எழுந்தது. தக்கை, உடுக்கை, சல் லரி, தடாரி முதலிய ஒலிக்கருவிகள் முழங்கின. நாரதரும்

கருடரும், கின்னரர்களும் இசை பாடினர். வீரவாகுதேவரும் எண்மரும் நூறாயிரம் போர்மறவர்களும் படைத்தலைவர்களும் போர்க் கோலத்தோடு பூதப்படைகளுக்கிடையே சென்றார்கள். படைகள் போர்க்களத்தை யடைந்தன.

## இரு பக்கத்துப் படைகளும் கை கலத்தல்

அவுணப்படைகள் பூதப்படையை வந்து சூழ்ந்தன. பூதப்படைகள் உரப்பி அவுணப்படையைத் தாக்கின. இருபக்கத்துப் படைகளுக்கும் போர் மூண்டது. பூதர்கள் அவுணர்களின்மீது மரங்களையும், மலைகளையும், தடி, கழுமுள், உருளை, வேல் முதலிய படைகளையும் எறிந்தார்கள். அவுணர்கள் பூதர்களின் மேலே கணை, கணிச்சி, தடி, உருளை, முத்தலைச்சூலம் முதலிய படைகளைச் சிதறினார்கள். பூதர்கள் யானைகளையுங் குதிரைகளையும் வாரி நிலத்தில் அடித்தும் திக்குகளில் எற்றியும் விண்ணிற் சுற்றியும், உடலைக்கிழித்தும் பலவாறு அழித்தார்கள். அவுணர்கள் யானை குதிரைகளில் ஏறிச்சென்றும், கால்நடையாகச் சென்றும் பூதர்களை வளைத்துப் போர்செய்தார்கள். பூதப் படைத்தலைவர்களால் அவுணப்படைகள் மிகுதியாக அழிந்தொழிந்தன. அவுணப்பிணங்கள் குருதிப் பெருக்கில் மலைபோலச் சென்று கடலை மேடாக்கின. கணக்கற்ற முண்டங்கள் கூத்தாடின. அவுணப்படைகள் அழிதலையும், பூதப் படைகளின் ஆற்றலையும் படைத்தலைவனாக நின்ற சிங்கமுகாசூரன் மகனாகிய அதிசூரன் கண்டான். இரண்டாயிரங் குதிரைகள் பூட்டப்பெற்ற ஒரு தேரின்மேல் ஏறினான். அவனுக்குப் பக்கத்தில் ஆயிரக்கணக்கான பாதுகாப்புத்தேர்கள் சென்றன. அவன் மிகுந்த ஆற்றலோடு வந்து வில்லை வளைத்துக் கணைகளைச் செலுத்தினான். எதிர்த்தவர்களைக் கொன்றொழித்தான். பூதர்கள் அந்த அவுணனுடைய ஆற்றலைக்கண்டு வியந்து புகழ்ந்தார்கள்.

## அதிசூரனும் உக்கிரரும்

திருமாலினுடைய உருளைப்படையை உண்டுமிழ்ந்தவரும், ஆற்றல்மிகுந்தவருமாகிய உக்கிரர் என்னும் பூதப்

படைத்தலைவர் அதிசூரனுடைய போரைக் கண்டார். கண்கள் தீயையும் புகையையும் வெளிப்படுத்துமாறு சினந்தார். ஒரு தடிப்படையை எடுத்து அதிசூரனுடைய மார்பிலே யெறிந்தார். அவுணர்கள் அதிசூரன் அழிந்தொழிந்தான் என்று அஞ்சினார்கள். அத்தடி அதிசூரனுடைய மார்பிலுள்ள சட்டையை அழித்தது. அதிசூரன் சினங்கொண்டான். நூறாயிரங்கணைகளை ஒன்றாக உக்கிரர் மீது எய்தான். அவைகள் உக்கிரர்மேற் பட்டுக் குருதி பெருகியது. உக்கிரர் துன்பமுஞ் சினமும் அடைந்தார். ஒரு மலையைப் பிடுங்கி அதிசூரனுடைய தேரின்மீது எறிந்தார். தேர் பொடியாயிற்று. அதிசூரன் வேறொரு தேரில் ஏறினான். அத்தேரிற் கட்டிய குதிரைகள் அழிந்தொழியும்படி உக்கிரர் உதைத்தார். அதிசூரன் துன்பமுற்றான். நூறு கணைகளை உக்கிரர்மீது செலுத்தினான். உக்கிரர் அவைகளைத் தண்டாயுதத்தினால் (தடிப்படை) அழித்துவிட்டார். அதிசூரன் உக்கிரர்மீது தெய்வப்படைக்கலங்களைச் செலுத்தி அழிக்கவேண்டுமென்று முடிவு செய்தான். தீப்படைக்கலத்தையெடுத்து மனத்தால் வழிபாடு செய்து அவர்மேல் வீசினான். தீயைச் சிந்திவருகின்ற அப்படைக்கலத்தின் கொடுமையை உக்கிரர் கண்டார். அறுமுகக்கடவுளை அன்போடு போற்றினார். அக்கடவுள் உக்கிரருக்குத் திருவருள் புரிந்தார். உக்கிரர் மிக்க கொடுமையுடன் வந்த அப்படைக்கலத்தைப் பிடித்து விழுங்கிவிட்டார். அதன்பிறகு அதிசூரன் வருணப்படை, யமப்படை, காற்றுப்படை, நான்முகக்கணை, நாராயணக் கணை ஆகியவைகளை முறைப்படி செலுத்தினான். உக்கிரர் அவைகளையும் விழுங்கிவிட்டார். உக்கிரரின் செயலைக்கண்டு அதிசூரனும் அவுணர்களும் திகைத்தார்கள். இனி என் செய்வோம் என்று ஏங்கினார்கள். அதிசூரன் இறுதியிற் சிவப்படைக்கலத்தைச் செலுத்தினான். அது நஞ்சையும், பாம்பையும், யமனையும், பூதங்களையும், பேய்களையும், படைக்கலங்களையும், தீயையும் உண்டாக்கி எவ்வுலகமும் அஞ்சுமாறு வந்தது. உக்கிரர் தமது கையிலிருந்த உருளைப் படையையும் ஒழித்துவிட்டுச் சிவபெருமானுடைய ஐந்

தெழுத்துக்களையும் முறைப்படி சொல்லிக்கொண்டு நின்றார். சிவப்படைக்கலம் உக்கிரர் வெறுங்கையினராகவும் வணக்கஞ்செய்பவராகவும் திருவைந்தெழுத்தை எண்ணுபவராகவும் நிற்றலைக் கண்டது. சிவபெருமான் அப்படைக்கலத்தை வெறுங்கையினர்மீது விடலாகாதென்றும், அவ்வாறு விட்டால் அது திரும்பவுந் தம்மிடமே வந்துவிடுமென்றுங் கூறியிருந்தார். ஆகவே, அப்படைக்கலம் திரும்பிச் சிவபெருமானிடஞ் சென்றுவிட்டது. அதிசூரன் இவன் சிவபெருமானே என்று ஐயுற்று நடுங்கி நின்றான். பூதர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள். அவுணர்கள் அச்சங்கொண்டு ஓடத்தொடங்கினார்கள். அதிசூரன் தேரினின்றும் இறங்கினான். ஒரு தடிப்படையை எடுத்து உக்கிரருடைய தோளில் அடித்தான். உக்கிரர் வெகுண்டார். அத்தடிப்படையைப் பறித்தார். அதிசூரனுடைய மார்பிலே அவன் பதைக்குமாறு அடித்தார். அவன் நிலத்தில் விழுந்தான். நமன் அவனுடைய உயிரைக் கொண்டுசென்றான்.

## அசுரேந்திரனும் கனகரும்

அதிசூரன் மாண்டு முடிந்ததைத் தாரகன் மகனாகிய அசுரேந்திரன் கண்டான். நஞ்சுபோலக் கொதித்தான். தீயெழ நகைத்தான். பூதர்கட்குமுன் சென்று எதிர்த்தான். ஒரு பெரிய வில்லை வளைத்து நாணொலி செய்தான். அவ்வொலியைக் கேட்டு உயிர்களெல்லாம் நடுங்கின. பூதர்கள் தடிகளையும் மலைகளையும் மரங்களையும் அவன்மீது வீசினார்கள். அவன் கணைமழைகளைச் சொரிந்தான். அவைகள் பூதர்களுடைய உறுப்புக்களிற்சென்று அழுந்தின. உறுப்புக்கள் வெட்டுண்டு பல பூதர்கள் இறந்தார்கள். பூதப்படைத்தலைவர்களிற் கனகர் என்பவர் அசுரேந்திரனை யெதிர்த்தார். அவர்மீது அசுரேந்திரன் ஒரு கூரிய கணையைச் செலுத்தினான். அதனால் கனகருடைய உடலிலிருந்து குருதி சொரிந்தது. அவர் அசுரேந்திரனுடைய தேரிற் பாய்ந்து தேரோட்டி இறக்குமாறு உதைத்து வீழ்த்தினார். அவனுடைய வில்லின் நாணைப்

பல்லினுல் அறுத்தார். ஒரு மலையைப் பிடுங்கி அசுரேந் திரன்மீது எறிந்தார். அசுரேந்திரன் வேருெரு வில்லை யெடுத்து வளைத்தான். எட்டுக்கணைகளைத் தொடுத்து அம்மலையைத் தூளாக்கினுன். ஆயிரங்கணைகளைக் கனக ருடைய தோளில் அழுத்தினுன். அதனுல் கனகர் அல்லலுற்று நின்ருர்.

## உன்மத்தரும் அசுரேந்திரனும்

கனகர் சோர்ந்துநின்ற அளவில், உன்மத்தர் என்னும் பூதப்படைத்தலைவர் அசுரேந்திரனை யெதிர்த்தார். ஒரு மலையைப் பிடுங்கியெறிந்து ஆரவாரஞ் செய்தார். அம்மலை தேரிற்சென்று தாக்கியபடியால் தேரிற்கட்டியிருந்த குதிரைகள் அழிந்தன. அசுரேந்திரன் வேருெரு தேரின் மேற்பாய்ந்தான்: அளவில்லாத கணைகளைச் செலுத்தினுன். அக்கணைகள் உன்மத்தர்மீது பட்டன. உடலிற் குருதி வடிந்தது. அவர் மயங்கியிருந்தார்.

## மந்தரும் அசுரேந்திரனும்

அப்பொழுது மந்தர் என்னும் பூதப்படைத்தலைவர் அசுரேந்திரனுக் கெதிரேவந்து எதிர்த்தார். அவர்மீது அசுரேந்திரன் பத்துக்கணைகளைச் செலுத்தினுன். அவர் சினந்து ஒரு மலையைப் பறித்தெறிந்தார். அதை அசுரேந் திரன் மார்பின்மீது ஏற்ருன். அம்மலை வந்தவழியே திரும்பிச் சென்றது. அசுரேந்திரன் மந்தர்மீது ஆயிரங் கணைகளைச் செலுத்தினுன். அவற்றினுல் மந்தர் தளர்ந்து நின்ருர்.

## அசுரேந்திரனும் சிங்கரும்

மந்தர் தளர்ந்ததைக் கண்டதும் சிங்கர் என்பவர் அசுரேந்திரனை யெதிர்த்தார். ஒரு மலையைப்பிடுங்கி மார்பி லெறிந்தார். அவன் அம்மலையை ஒரு கணையினுல் அழித்தான். சிங்கர் போர்க்களத்திற்கிடந்த ஒரு தடியை யெடுத்து அசுரேந்திரன்மேலே யெறிந்தார். அசுரேந் திரன் அதனை விலக்கி நூறுகணைகளைச் சிங்கர்மீது

அழுத்தினான். சிங்கருந் தளர்ந்துநின்றார். மற்றைய பூதப் படைத்தலைவர்கள் அனைவரும் அசுரேந்திரனோடு போர் செய்து தோற்றனர். அசுரேந்திரன் கணைகளைப் பொழிந்து மற்றைய பூதர்களை யழித்தான்.

## அசுரேந்திரனும் தண்டகரும்

தண்டகர் என்பவர் அசுரேந்திரனை யெதிர்த்தார். வில்லை வளைத்து ஆயிரங்கணைகளை அசுரேந்திரனுடைய முகத்திற் புகும்படி விட்டார். அவன் துன்பமுற்றுக் கலங்கினான். வெகுண்டு வில்லை வளைத்தான். எட்டுக் கணைகளைத் தண்டகருடைய நெற்றியிற் செலுத்தினான். அவர் குருதி சிந்தத் தேரின்மீது நின்றார்.

## அசுரேந்திரனும் சோமுகரும்

தண்டகருடைய இளவலாகிய சோமுகர் அசுரேந்திரனை யெதிர்த்தார். அவருடைய மார்பில் அசுரேந்திரன் நூறு கணைகளை யழுத்தினான். சோமுகர் சினந்து வில்லை வளைத்தார். ஆயிரங்கணைகளைத் தூண்டி அசுரேந்திரனுடைய தேரை யழித்தார்; பாகனைக் கொன்றார். அவன் வேறொரு தேரிற்பாய்ந்தான். ஒரு வேற்படையை எடுத்துச் சோமுகர்மீது வீசினான். அஃது அவருடைய மார்பில் பட்டது. அவர் வாடி இளைத்து மயங்கித் தேரின்மீதிருந்தார்.

## அசுரேந்திரனும் விசயரும்

அப்பொழுது அவருடைய இளவலும் ஆற்றல் மிகுந்தவருமாகிய விசயரென்பவர் விரைந்துவந்து வில்லை வளைத்தார். ஆயிரங்கணைகளைச் செலுத்தினார். அசுரேந்திரனுடைய தேரோட்டியைக் கொன்றார். அவன் கைவில்லையும் நாணையுந் துணித்தார். அசுரேந்திரன் ஒரு தடியை யெடுத்து விசயர்மீது வீசினான். அதனைக்கண்ட விசயர் பல கணைகளைத் தூண்டினார். அத்தடி அக்கணைகளை யெல்லாம் பொடிசெய்து விசயருடைய மார்பில்வந்து பட்டது. அவர் குருதிசொரிய வீழ்ந்தார். மற்றவர்கள் அசுரேந்திரனோடு போர்செய்து தோற்றோடிப் போயினர்.

## அசுரேந்திரனும் வீரவாகுதேவரும்

எல்லாவற்றையும் வீரவாகுதேவர் கண்டார். விரைந்துவந்து அசுரேந்திரனை யெதிர்த்தார். கணைகளைச் சொரிந்து அவனை மறைத்தார். அசுரேந்திரனுடைய உடலெங்குங் குருதி வெளிப்பட்டது. அசுரேந்திரன் வில்லை வளைத்து ஆயிரம் பிறைமுகக்கணைகளை வீரவாகுதேவர்மீது அழுத்தினன். அவருடைய உடலிலும் குருதிப்பெருக்கு உண்டாயிற்று. அசுரேந்திரன் ஏழுகணைகளைச் செலுத்தி வீரவாகுதேவருடைய வில்லை முறித்தான். அவர் மற்றொரு வில்லை வளைத்தார். நஞ்சு பாய்ச்சிய ஆயிரங்கணைகளை அசுரேந்திரன்மீது செலுத்தினர். அவைகள் சென்று அசுரேந்திரனுடைய வில்லை யறுத்தன. தேரோட்டியின் உயிரை யுண்டன. தேரையுங் குதிரைகளையும் அழித்தன. அவன் வேறொரு தேரில் ஏறினன். மற்றொரு வில்லை வளைத்து நூறுகணைகளைச் செலுத்தி வீரவாகுதேவருடைய தேரை யழித்தான். அவர் சினந்து விண்ணில் எழுந்தார். அறுமுகக்கடவுளை எண்ணி வணங்கினர். வாட்படையை உறையினின்றுங் கழித்தெடுத்தார். அசுரேந்திரனுடைய தேரிற் குதித்தார். அவனுடைய கைகளில் ஒன்றை வெட்டினர். ஒருகை வெட்டுண்ட அசுரேந்திரன் சினந்து ஒரு தடிப்படையை யெடுத்து வீரவாகுதேவர்மீது மோதினன். வீரவாகுதேவர் ஒருகாலினல் அசுரேந்திரனுடைய தலையில் உதைத்துவிட்டு விண்ணில் எழுந்தார். அசுரேந்திரன் கையில் வாட்படையை உருவிக்கொண்டு அவரைத் தொடர்ந்தான். வீரவாகுதேவர் சினந்து தம்முடைய வாட்படையினல் அசுரேந்திரனுடைய தலையை அறுத்தார். தலையும் உடலும் நிலத்தில் விழுந்து உருண்டன. அவனுடைய உயிர் விண்ணிற் பறந்தது. தேவர்கள் இன்பக்கூத்தாடி மகிழ்ச்சிக்கூச்சல் இட்டார்கள். அவுணப்படைகள் சிதறி ஓடின.

## சூரபன்மன் போர்புரிதல்

அதிசூரன், அசுரேந்திரன் இருவரும் இறந்தொழிந்தமையையும், அவுணப்படைகள் பறந்தோடுதலையும் சூரபன்

மன் கண்டான். அவனுக்கு மிகுந்த சினம் உண்டாகியது. போர் செய்கின்ற பகைவர்களை விரைந்து அழிப்பேன் என்று எண்ணினான். தேரின்மீது வந்து பூதப்படைகளை யெதிர்த்தான். வில்லை வளைத்து நாணொலி செய்தான். பூதப்படைகள் அவ்வொலியைக்கேட்டு அஞ்சி நடுங்கின. கையிலிருந்த மலைகளையும் மரங்களையும் எறிந்துவிட்டுச் சிதறி ஓடினார்கள் பலர். பலர் பதைபதைத்துக் கீழே விழுந்தார்கள். பலர் இறந்தார்கள். பலர் மயங்கினார்கள். அந்த நாணொலி பன்னிரண்டு யாண்டுகள்வரை ஒழிந்திலது. அவ்வொலியைக் கேட்டுத் திருமால் தலையை ஆட்டினார். நான்முகனும் தேவர்கோனும் நமனும் அஞ்சினார்கள். அறக்கடவுள் அஞ்சியது. ஐம்பூதங்களும் அஞ்சின. உலகத்துயிர்கள் அஞ்சின. பூதப்படைத் தலைவர்கள் நூற்றெண்பதின்மரும் சூரபன்மன்மீது மலைகளையும் மரங்களையும் மழைபோலச் சொரிந்தார்கள். சூரபன்மன் கணக்கற்ற கணைகளைச் செலுத்தித் தன்மீது வருகின்ற மலைகளையும் மரங்களையும் அழித்தான். பூதப் படைத்தலைவர்களுடைய உறுப்புக்களையெல்லாந் தொளைத்தான். அவர்கள் தளர்ந்தார்கள். நூறாயிரம் வீரர்களும் விரைந்துவந்து விற்களை வளைத்துச் சூரபன்மன்மீது கணை மழை பொழிந்தார்கள். சூரபன்மன் சினந்து கணைகளை விடுத்து நூறாயிரவர் கணைகளை விலக்கினான். ஆயிரங்கோடி கணைகளைச் செலுத்தி நூறாயிரம் வீரர்களையும் சிறிது நேரத்தில் தளரச்செய்தான்.

## வீரமார்த்தாண்டர் முதலிய எண்மரும் சூரபன்மனும் போர் புரிதல்

வீரமார்த்தாண்டர் விரைந்துவந்து சூரபன்மனை யெதிர்த்தார். வில்லை வளைத்து நாணொலி செய்தார். கடல்களும் ஏகுமாறு பெருமுழக்கஞ் செய்தார். கணை மழைகளைச் சொரிந்தார். சூரபன்மன் தன் கணைகளால் அவற்றை யழித்தான். கொடிய ஆயிரங்கணைகளை வீரமார்த்தாண்டருடைய நுதலிற் செலுத்தினான். அவர் பின்னும் ஆயிரங்கணைகளை விட்டார். சூரபன்மன் ஆயிரங்

சணைகளைச் செலுத்தி அவர் விட்ட கணைகளை யழித்தான். அவருடைய வில்லை முறித்தான். மார்பைப் பிளந்தான். அம்புக்கூட்டை அழித்தான். வீரமார்த்தாண்டர் மனம் வருந்தி இறந்தவர்போல வீழ்ந்தார்.

வீரமார்த்தாண்டர் தோற்றத்தைக் கண்டவுடன் வீரராக்கதர் தம்முடைய தேரைச் செலுத்திக்கொண்டு வந்து சூரபன்மனை யெதிர்த்தார். வில்லை வளைத்து ஆயிரங் கணைகளைச் செலுத்தினர். சூரபன்மன் தானும் ஆயிரங் சணைகளைச் செலுத்தி ஆரவாரித்தான். அவைகள் வீர ராக்கதர் விடுத்த சணைகளை விலக்கின; அவருடைய வில்லைத் துணித்தன. வீரராக்கதர் வாட்படையை யேந்தி விண்ணில் எழுந்தார். சூரபன்மனுடைய தேரிற்பாய்ந்தார். அவனுடைய வில்லை வாட்படையினலே துணித்தார். வில் துணிபடவில்லை; வாள்தான் ஒடிந்தது. வீரராக்கதர் சூரபன்மனுடைய மார்பில் அடிக்க முயன்றார். சூரபன் மன் படைக்கலம் இழந்தவனைக் கொல்வது பழியென்று எண்ணினன். காலின்மேற் போட்டு விண்ணில் ஏற்றினன். அவர் வருந்தி நிலத்தில் விழுந்தார்.

வீரராக்கதர் தோற்றதை வீரமகேந்திரர் கண்டார். சூரபன்மனை யெதிர்த்துக் கணைமழை சொரிந்தார். சூர பன்மன் அவைகளை விலக்கி மேலுங் கணைகளைச் செலுத்தி னன். வீரமகேந்திரர் அவைகளை விலக்கினர். மேலுங் கணைகளைப் பொழிந்தார். இருவருங் கொடும்போர் செய்தனர். சூரபன்மன் சினந்து வீரமகேந்திரருடைய கால்களில் முப்பது கணைகளையும் மார்பில் இருபது கணை களையும் தோள்களில் முப்பது கணைகளையும் விடுத்து ஆற்றலை யழித்தான். அவர் வீழ்ந்தார். சூரபன்மன் பூதப்படைகளின்மேற் புலிபோற் பாய்ந்தான்.

வீரதீரர் சூரபன்மனை யெதிர்த்துக் கணைகளைச் செலுத்தினர். சூரபன்மன் ஆயிரங்கணைகளைச் செலுத் தினன். வீரதீரர் விட்ட கணைகளை யறுத்தான். அவ ருடைய வில்லை ஒடித்தான். அவர் ஒரு தடியை எடுத்துக்

கொண்டு சூரபன்மன்மீது பாய்ந்தார். அவன் நான்கு கணைகளைத் தொடுத்து அத்தடியை முறித்தான். அவருடைய மார்பிலுந் தோளிலும் பதினான்கு கணைகளைச் செலுத்தினான். அவரை நிலத்தில் வீழ்த்தினான்.

வீரதீரர் விழுந்ததை வீரமாமகேச்சுரர் கண்டார். ஊனையும் உயிரையும் ஒருங்கு கவரத்தக்க தெய்வத்தன்மை பொருந்திய ஒரு வேற்படையைச் சூரபன்மன்மீது வீசினார். அதனை அவன் கண்டு ஆயிரங்கணைகளைச் செலுத்தினான். அவ்வேற்படை சூரபன்மன் கணைகளை யழித்து அவனுடைய மார்பில்பட்டு நுண்துகளாகி எங்குஞ் சிதறியது. சூரபன்மன்மீது வீசும்படி வீரமாமகேச்சுரர் ஒரு தடிப்படையை எடுத்தார். சூரபன்மன் ஏழு கணைகளைத் தொடுத்தான். அவை வீரமாமகேச்சுரருடைய தோளைத் துளைத்தன. அவருடைய உடல் விழுந்தது. உணர்வு அழிந்தது.

வீரகேசரி சூரபன்மனை யெதிர்த்தார். வில்லை வளைத்து நாணொலி செய்தார். அந்த வில்லைச் சூரபன்மன் ஏழு கணைகளினால் ஒடித்தான். அவருடைய தேரை நூறு கணைகளினால் அழித்தான். ஆயிரம் கணைகளை நுதலில் அழுத்தினான். குருதி பெருகியது. வீரகேசரி நிலத்திற் பாய்ந்து ஒரு பெரிய மலையைப் பிடுங்கிச் சூரபன்மன்மீது எறிந்தார். அவன் ஒரு கணையால் அம்மலையைப் பொடியாக்கினான். அவருடைய மார்பில் நூறு கணைகளை அழுத்தினான். அவை மார்பிற்புகுந்த அளவில் வீரகேசரி மனம் நொந்தார். சூரபன்மனுடைய தேரிற்பாய்ந்து அவனுடைய மார்பில் அடித்தார். அடித்த கை பிளந்தது. அதினின்றுங் குருதி பெருகியது. வீரகேசரி துடித்துப் பெருமூச்சுவிட்டுத் துன்பத்தோடு அவனுடைய தேரில் விழுந்தார். சூரபன்மன் அவரைக் கொல்வது பழியென்று எண்ணினான். அவரை ஒரு கையினால் எடுத்துப் பாற் கடலில் எறிந்தான். வீரகேசரி துன்புற்று விண்வழியாக வந்து தம் கூட்டத்தைச் சேர்ந்தார்.

பிறகு வீரமாபுரந்தரர் சூரபன்மனை யெதிர்த்தார். யமப்படைக்கலத்தை எடுத்துச் செலுத்தினர். சூரபன்மன் நகைத்துப் பேசாதிருந்தான். அப்படை அவன்மீதுபட்டு அழிந்தது. பிறகு நான்முகப்படையை விடுவதற்கு எடுத்தார். அதற்குள் சூரபன்மன் நூறுயிரங்கணைகளை அவருடைய மார்பு பிளக்கும்படி செலுத்தினன். அவை சென்று மார்பைப் பிளந்து போயின. வீரமாபுரந்தரர் கையிலெடுத்த நான்முகப்படைக்கலத்தோடு குருதி சொரிய விழுந்து மயங்கினர்.

வீரமாபுரந்தரர் தோல்வியடைந்ததைக்கண்டு வீராந்தகர் வந்து எதிர்க்கத் தொடங்கினர். ஒரு பெரிய வில்லை வளைத்து இடிபோல நாணொலி செய்தார். கணைகளைச் சிதறி ஆரவாரித்தார். அவ்வொலியைக் கேட்டுச் சூரபன்மன் அஞ்சினன். வீராந்தகர் விடுத்த கணைமழையை, விலக்கினன். ஆயிரங்கணைகளை விட்டான். அவரும் அவ்வளவு கணைகளைத் திறமாகச் செலுத்தி அவைகளைத் தடுத்தார். சூரபன்மன் முத்தலைக்கணைகள் ஓராயிரத்தைச் செலுத்தினன். அவை வீராந்தகர் விடுத்த கணைகளைச் சிந்தின; அவருடைய தேரை யழித்தன; வில்லை யொடித்தன; மார்பிற் புகுந்து குருதியைப் பருகின; உணர்வைக் கெடுத்தன. அவர் வீழ்ந்து அறிவிழந்தார்.

## வீரவாகுதேவரும் சூரபன்மனும்

வீராந்தகர் விழுந்து அறிவிழந்ததை வீரவாகுதேவர் பார்த்தார். தேரைச் செலுத்திக்கொண்டு சென்று சூரபன்மனை யெதிர்த்தார். சூரபன்மன் வீரவாகுதேவரை உற்றுப் பார்த்தான். தூதுவன் என்றுணர்ந்து மிகவுஞ் சினமடைந்தான். வீரவாகுதேவரைப் பார்த்து, "நீ நம்முடைய வீரமகேந்திரத்தை யழித்தாய்! கணக்கற்ற சுற்றத்தார்களையும் படைகளையுங் கொன்றுவிட்டு உயிர் பிழைத்து வந்தாய்! உன்னுடைய ஆற்றலை நான் இன்றோடு முடிப்பேன்," என்றான். வீரவாகுதேவர் சூரபன்மனைப் பார்த்துப், "போரைச் செய்வாயாக," என்றார்.

சூரபன்மனுடைய கண்கள் எரிந்தன. பற்கள் உதட்டைக் கடித்தன. மயிர்கள் சிலிர்த்தன. மிகுந்த சினம் உண்டாகியது மலையையொத்த வில்லை வளைத்து நாணொலி செய்தான். அவ்வொலி உலகங்களையெல்லாம் நிலைகலங்கச் செய்தது. வீரவாகுதேவரும் தம்முடைய வில்லை வளைத்து நாணொலி செய்தார். சூரபன்மன் ஆயிரங்கோடி கணைகளைத் தூண்டி ஆரவாரஞ் செய்தான். வீரவாகுதேவர் தம்முடைய கணைமழைகளால் அவற்றை விலக்கி நின்றார். சூரபன்மன் வெகுண்டு நூறாயிரங் கொடிய கணைகளைச் செலுத்தினான். வீரவாகுதேவர் ஆயிரங்கோடி கணைகளால் அவற்றைத் தடுத்தார். சூரபன்மன் பின்னுங் கோடிகணை விட்டான். வீரவாகுதேவர் அவைகளையழித்து நூறுகணைகளைச் சூரபன்மனுடைய நெற்றியில் விட்டார். அவைகள் அவனுடைய நெற்றியை அடைந்து ஒடிந்து வீழ்ந்தன. கூரிய நூறு கணைகள்போய் நெற்றியில் தாக்கியும் சூரபன்மன் ஓர் ஊறுபாடுமில்லா திருத்தலை வீரவாகுதேவர் கண்டார்.

அறுமுகப்பெருமானுடைய வேற்படையை அல்லாமல் வேறெப்படையும் அவனுடைய உடலை அழிக்காதென்று எண்ணினார். பின்னும் பல கோடிக்கணைகளைச் சொரிந்தார். சூரபன்மன் அக்கணைகளை மாற்றினான். எட்டுக் கணைகளை வீரவாகுதேவருடைய தோளிற் செலுத்தினான். அவைகள் தோளில் மூழ்கிக் குருதியைப் பருகின. பிடரைப் பிளந்துகொண்டு ஓடின. வீரவாகுதேவர் மனம் வருந்தினார். சூரபன்மனுடைய தேரோட்டிகளின்மீது பல கணைகளைச் செலுத்தி வருத்தினார். அவர்கள் வருந்தித் தேரின்மீதிருந்தார்கள். சூரபன்மன் அதனைக்கண்டு சினந்தான். ஐம்பது கணைகளைச் செலுத்தி வீரவாகுதேவருடைய தேரையுங் குதிரைகளையும் அழித்தான். வீரவாகுதேவர் வேறொரு தேரில் ஏறினார். காற்றுப்படை தீப்படை ஆகியவைகளைச் சூரபன்மன்மீது செலுத்தினார். அதனைக் கண்டு சூரபன்மன் நகைத்தான். அவற்றிற்கெதிராக ஒரு படைக்கலத்தையுஞ் செலுத்தாது வில்லோடு வாளா நின்றான். அப் படைக்கலங்கள் சூரபன்மன்மீது பட்டு

ஊறுபட்டு நூறுயிரந் துகளாய்ப்போயின. பிறகு வீரவாகு தேவர் யமப்படைக்கலத்தையும் கதிரவன் படைக்கலத்தை யும் ஒன்றுய்ச் செலுத்தினுர். அவைகளும் சூரபன்மன் இடஞ்சென்று பெருமைகெட்டு அழிந்தன. வீரவாகு தேவர் பின்னும் பல தெய்வப் படைக்கலங்களைச் செலுத்தினுர். அவைகளும் பயனற்று ஒழிந்தன.

வீரவாகுதேவர் சூரபன்மனுடைய ஆற்றலைக் கண்டு வியப்படைந்தார். நான்முகப்படையையும் நாராயணப் படையையுஞ் செலுத்தினுர். அவைகள் சென்று சூரபன்ம னுடைய மார்பில் தாக்கி ஆற்றலழிந்தன. சூரபன்மன் வீர வாகுதேவரைப் பார்த்துத் தன்னுடைய ஆற்றல்களைப் பேசி மகிழ்ந்தான். வீரவாகுதேவர் சிவப்படைக்கலத்தை யெடுத்து மனத்தால் வழிபாடுசெய்து சூரபன்மன்மீது செலுத்தினுர். அது நஞ்சையும் நெருப்பையும் இடியை யும் காற்றையும் கூற்றையுங் கதிரவனையும் பூதப்படை களையும் கணைகளையும் சூலங்களையும் வெளிப்படுத்தி ஆர வாரித்து வந்தது. சூரபன்மனுஞ் சிவப்படைக்கலத்தை உள்ளத்தால் வழிபாடுசெய்து விடுத்தான். இரு சிவப் படைக்கலங்களுங் கடுமையாக எதிர்த்து உலகம் அஞ்சும் படி பெரும்போர் செய்தன. பிறகு தம்மைச் செலுத்திய வர்களிடமே திரும்பின. பிறகு சூரபன்மன் தன் வில்லை வளைத்துக் கணைகளைச் சிந்தினுன். வீரவாகுதேவரும் வில்லை வளைத்துக் கணைகளைத் தூவினுர். சூரபன்மன் முத்தலைக்கணைகள் பதினைந்தையேவி வீரவாகுதேவருடைய வில்லை முறித்தான். வீரவாகுதேவர் சினந்து ஒரு வேற் படையை யெடுத்து வீசினுர். அது சூரபன்மனுடைய மார்பிற்பட்டு ஒடிந்தது. தேவர்களுடைய ஆற்றலைக் கவரத் தக்க ஒரு தடியை யெடுத்துச் சூரபன்மன் வீரவாகுதேவர் மீது வீசினுன். வீரவாகுதேவர் அதற்கெதிராக ஒரு தடியைச் செலுத்தினுர். சூரபன்மன் செலுத்திய தடி அதனைப் பொடியாக்கியது. பிறகு, வீரவாகுதேவருடைய மார்பிற்பட்டது; குருதி பொழிந்தது. வீரவாகுதேவர் ஆற்றல் குறைந்து தேரின்மீது வீழ்ந்தார். தேரோட்டி யாகிய விசாலி யென்பவன் வீரவாகுதேவரைத் தெளிவிக்

கக் கருதினன். தேரை ஒரு பக்கமாகச் செலுத்திக் கொண்டு சென்றான். சூரபன்மன் பூதப்படைகள்மீது திரும்பினன். கணைகளைச் சொரிந்தான். இறவாதொழிந்த பூதப்படைகள் அஞ்சியோடிப்போயின.

## முருகக்கடவுள் போருக்கு வருதல்

நூறாயிரத்தெண்மரும் வீரவாகுதேவரும் இரண்டாயிரம் வெள்ளம் பூதப்படைகளும் சூரபன்மனால் ஆற்றலழிந்தமையை ஆறுமாமுகத்தண்ணல் கண்டார். சூரபன்மன்மீது தேரைச் செலுத்துமாறு தேரோட்டிக்குக் கட்டளையிட்டருளினர். தேரோட்டியும் அவ்வாறே செய்தான். சூரபன்மன் முருகக்கடவுளைத் தன்னுடைய கண்களாலே கண்டான். அவரைப் பார்த்துப், "படைகளாக உன்னுடன் வந்தவர்கள் போராற்றலிழந்து போன விடந்தெரியாமற் போய்விட்டார்கள். என்னிடந் தூது வந்த உன்னுடைய படைத்தலைவனும் இறந்தொழிந்தான். நீ ஒரு சிறுவன என்னுடன் போர்செய்யப்போகிறாய்? உன்னுடைய தந்தையுந் திருமாலுங்கூட என்னுடன் போர்செய்வதற்கு எண்ணிலர்! தாரகாசுரன் முதலியோரைப்போல என்னையும் எண்ணாதே! நான் மிகுந்த பேராற்றல் படைத்தவன்! தேவர்களும் உமையம்மையும் வருந்துமாறு ஓரிமைப்பொழுதினுள் உன் ஆற்றலைக் கெடுப்பேன்!" என்று கூறினன்.

முருகக்கடவுள் சூரபன்மன் கூறியதைக் கேட்டருளினர். அவனைப் பார்த்து, "நாம் வெற்றியையுமுடையோம்; ஆற்றலின் மிகுதியையுமுடையோம்; மேன்மையையுமுடையோம்; எண்ணில்லாத படைகளையுமுடையோம்; அழியா இயல்பையுமுடையோம் என்று ஆணவங்கொள்ளாதே! இவைகளையெல்லாம் நாம் விரைவாக அழித்தருள்வோம். நீ மிகுந்த அறியாமையையுடையனாகவிருக்கிறாய்! சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணில் உண்டாகின்ற ஒரு சிறு பொறியல்லவா உலகங்கள் எல்லாவற்றையும் அழிப்பது! யாவர் தம்முடன்

எதிர்ப்பினும் அவர்களோடு போர்செய்வதுதான் முறைமையாகும். நூற்றெட்டு ஊழிகள் செல்வத்தோடு சிறந்து வாழ்கின்ற உன்னுடைய ஆற்றலை நாம் விரைவில் அழிப்போம்!'' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## முருகக்கடவுளும் சூரபன்மனும் போர்புரிதல்

அறுமுகப்பெருமான் அருளிய மாற்றங்களை அவுணர் கோன் கேட்டான். மிகப்பெரிய ஒரு வில்லை வளைத்தான். முருகக்கடவுள் தாமும் ஒரு பெரிய வில்லை யெடுத்து வளைத்து நாணொலி செய்தார். சூரபன்மனும் நாணொலி செய்து கணைமழைகளைத் தூவி உலகங்களை மறைத்தான். முருகக்கடவுள் பல கணைகளைத் தொடுத்து அவைகளை யெல்லாம் குறைத்தார். சூரபன்மன் சினந்து, நஞ்சு தோய்ந்த பல கணைகளைத் தொடுத்தான். அறுமுகக் கடவுள் அவைகளையறுத்து விண்வழியை மாற்றினார். சூரபன்மன் விடாமழைபோல் கணைகளைப் பொழிந்து அறுமுகக்கடவுள் கணைகளையெல்லாம் மாற்றினான். பத்துலட்சம் கணைகளை முருகக்கடவுள்மீது செலுத்தினான். முருகப்பெருமான் அக்கணைகளை விலக்கினார். சூரபன்மனுடைய தோள்களின்மீது பதினான்கு கணைகளைச் செலுத்தினார். அவைகள் சென்று சூரபன்மனுடைய தோள்களைத் துளைக்கவில்லை. அறுமுகக்கடவுள் சூரபன்மனுடைய உடல் வன்மையைக் கண்டு புன்முறுவல் கொண்டார். அவன் விடுகின்ற கணைகளையெல்லாஞ் சிந்தினார். ஆயிரங்கணைகளினால் அவனுடைய வில்லை யறுத்தார். தன் வில் துணிக்கப்பட்டதைக் கண்டு சூரபன்மன் சினங் கொண்டான். நான்முகன் கொடுத்த ஒரு வேற்படையை யெடுத்து முருகக்கடவுள்மீது எறிந்தான். முருகக்கடவுள் பதினான்கு கணைகளால் அதனைத் தொலைத்தார். சூரபன்மன் வேறொரு வில்லை வளைத்துக் கணைமழை பொழிந்தான். அறுமுகக்கடவுள் விடுகின்ற கணைகளையெல்லாம் மாற்றினான். அவருடைய திருத்தோள்களில் ஏழுகணைகளைச் செலுத்தி ஆரவாரஞ்செய்தான். அவைகள் அறுமுகப்பெருமானுடைய தோள்

களிற் பட்டு அழிந்தன. முருகக்கடவுள் சூரபன்மனுடைய ஆற்றலைக்கண்டு, "நன்று நன்று!" என்று சினநகைகொண்டார். பத்துக்கணைகளினால் அவனுடைய வில்லை யறுத்தார். ஆயிரங்கணைகளினால் தேரை யொழித்தார். பதினான்கு லட்சம் பாதுகாப்புத் தேர்களையும் இமைப்பொழுதில் தொலைத்தார்.

தன் தேர்களெல்லாம் தொலைந்ததைக் கண்டு சூரபன்மன் சினங்கொண்டான். ஒரு முத்தலைச் சூலத்தை முருகக்கடவுள்மீது எறிந்தான். முருகக்கடவுள் அதனை நான்கு கணைகளினால் துணிபடுத்தினார். ஏழு கணைகளினால் அவனுடைய குடையை அறுத்தார். ஒரு கணையினால் முடியை அறுத்தார். பல கணைகளை உடம்பெங்கும் பொழிந்து அணிகலன்களையெல்லாம் போக்கினார். சூரபன்மன் ஆற்றல் குறைந்தான். சூரபன்மன் தளர்ந்ததைக் கண்டு அவனுடைய படைத்தலைவர்கள் நால்வகைப் படைகளோடும் வந்து முருகக்கடவுளை யெதிர்த்தார்கள். படைக்கலங்களைச் செலுத்தி முருகக்கடவுளைச் சூழ்ந்தார்கள். அப்படைகளை விரைவிலழிக்க முருகக்கடவுள் எண்ணினார். தம்முடைய திருக்கையிலிருந்த ஆழிப் படையைச் செலுத்தினார். அப்படை சென்று அவுணர்களைப் பலவாறு அழித்தொழித்தது. அப்படையினால் சூரபன்மனுடைய நூறாயிரம் வெள்ளம் படைகளும் மூன்றரை நாழிகையில் அழிந்தொழிந்தன. பிறகு உருளைப்படை செந்திலாண்டவன்பால் திரும்பிவிட்டது.

## போர்க்களக் காட்சி

இறந்த அவுணர்களுடைய உடற்குறை புகையாகவும், குருதி நெருப்பாகவும், வெட்டுண்டு வீழ்ந்த குதிரைகளும் தேர்களும் யானைகளும் அவிசளாகவும், ஓடியாடித் தொழில்புரியும் உருளைப்படை வேள்வித்தலைவனாகவும் காணப்பட்டன.

பல குடைகள் காம்புகளறுந்து குருதிச்சேற்றில் வீழ்ந்து நிற்றல், தடாகத்தில் மலர்ந்த தாமரைப்பூவின் கூட்டத்தைப்போல விளங்கின.

போர்க்களத்தில் வீழ்ந்திறந்த அவுணர்கள், யானைகள், குதிரைகள் ஆகியவற்றின் பிணக்கூட்டங்கள், உலகத்தி லுள்ள மலைகளெல்லாம் ஒருங்கே வந்து நின்றாற்போன்று விளங்கின.

விண்ணையளாவிய பிணக்குவியல்களின்மேல் கொள்ளி வாய்ப்பேய்க் கூட்டங்கள் மொய்த்துப் பிணத்தை யுண்டு நகைத்து ஒலி செய்து நெருங்குதல் முகிற்கூட்டங்கள் மின்னி யிடித்து மலைச்சாரல்களில் நெருங்கினாற் போன் றிருந்தது.

யானைகளையும் அவுணர்களுடைய உடல்களையும் பிறவற்றையும் வாரிக்கொண்டு குருதிப்பெருக்குப் பாய்தல், செம்பாம்பு கடலை மறைக்க நினைத்து நஞ்சைக்கக்கி நிலத்திலே சென்றாற்போலும்.

சில அவுணர்கள் தலை வெட்டுண்டு மேலே எழுந்து ஆர்த்தலைக்கண்டு, கதிரோன் தன்னைத் துன்பஞ்செய்கின்ற இராகு கேதுக்கள் பல வந்தன என்று அஞ்சி ஓடலானான்.

## மீண்டும் சூரபன்மன் போர்புரிதல்

சூரபன்மன் தன்னுடைய படைகளைக் காணாமல் உள்ளம் வெருண்டான். எல்லாம் இறந் தொழிந்தன என்று உணர்ந்தான். "இந்தச் சிறுவன் என்னுடைய படைகளைத் தன்னுடைய வேற்படையால் அழித்தானோ? சிவப்படைக்கலத்தால் அழித்தானோ? 'அழிந்தொழிக' என்று ஒரு மொழியைக் கூறி அழித் தானோ? இவன் என் படைகளை எவ்வாறு அழித்தான்!" என்று திகைத்து நின்றான். முருகக்கடவுளின் ஆழிப் படை படைகளை அழித்தொழித்தமையைச் சூரபன்மன் காணவில்லை. அதனால்தான் சூரபன்மனுக்கு இவ்வாறு திகைப்புண்டாயிற்று. அவன் மீண்டும் போர் செய்யத் தொடங்கினான். நான்முகப்படையை எடுத்து முருகக் கடவுள்மீது செலுத்தினான். அது வந்து நெருங்கியது. அதனை முருகக்கடவுளுடைய திருக்கையிலிருந்த வேற்

படை சென்று விழுங்கிவிட்டது. அதனைக்கண்ட சூரபன்மன் உள்ளம் வருந்தினன். திருமாலின் படையை எடுத்து விட்டான். அப்படை அளவில்லாத திருமால்களின் உருவத்தை உண்டாக்கிக்கொண்டு நெருங்கியது. வேற்படை அதனையும் விழுங்கியது. பிறகு சூரபன்மன் சிவப்படைக்கலத்தையெடுத்து வழிபாடு செய்து செலுத்தினன். அப்படைக்கலம் பல உருத்திரர்களை யுண்டாக்கிக் கொண்டு நிலை வீசிப் புறப்பட்டது. திக்குயானைகள் எட்டும் தளர்ந்தன. ஊழித்தீ ஓடியது. நிலந்தாங்கும் பாம்பு நடுங்கியது. நிலம் நெக்கது. பலவகை முகில்களும் இடிகளைச்சிந்தி இரிந்தன. கதிரவன் துடித்தான். திங்கள் சுழன்றான். மேரு வெடித்தது. நூறுயிரம் வீரர்களும் நடுங்கினர். மற்றைய வீரர்களும் பூதர்களும் கலங்கினர். தேவர்கள் அஞ்சி ஓடினர்கள். முருகக்கடவுள் தம்முடைய திருக்கையை நீட்டி அப்படையைக் கைப்பற்றிக்கொண்டார். தன்னுடைய படைக்கலங்களெல்லாம் பயனற்றமையைக் கண்ட சூரமன்மன், "இனி இந்தச்சிறுவன் யாது செய்கிறான் பார்ப்போம்," என்று வாளாநின்றிருந்தான்.

முருகக்கடவுள் சூரபன்மனைப்பார்த்து, "ஓ சூரபன்மனே! நீ சயந்தனையுந் தேவர்களையும் அளவற்றகாலம் சிறையில் வைத்தாய். அனைவரையும் விட்டுவிடுமாறு முன்னர்த் தூதுவனையனுப்பினேம். நீ தூதுவன் சொல்லைக் கேட்கவில்லை. ஆதலால், நாம் போருக்கு வந்தோம். போரில் ஒப்பற்ற தாரகனை முன்னே கொன்றொழித்தோம். அதைப்போல உன்னையும் இன்றைக்கே கொன்றொழிப்போம். உன்னுடைய நூறுயிரம் வெள்ளம் படைகளும், உன் ஆற்றலும், உன்னால் தூண்டப்பெற்ற தெய்வப்படைக் கலங்களின் சிறப்பும் அழிந்து போனதைக்கண்டாய். நீ தனித்தவனாக இப்பொழுது நிற்கின்றாய். தாரகனைக் கொன்ற வேற்படையிருக்கின்றது. உன்னைக் கொல்லுதல் பெரிய வேலையன்று. வெறுங்கையனாக நிற்கும் நின்னைக் கொன்றால் பழியாக முடியுமென்று அறநெறிநோக்கிக் கொல்லாது விட்டாம். பலகூறிப் பயன் என்ன? தேவர்க

னுடைய சிறையை விடுப்பாயாயின் உன்னைக் கொல்லாது விட்டுவிடுவோம். மறுப்பாயானாற் கொன்றே தொலைப்போம். உன் எண்ணம் யாது? கூறுவாயாக," என்றார்.

முருகக்கடவுள் மொழிந்தருளியவைகளைச் சூரபன்மன் கேட்டான். அவனுக்கு நல்லறிவு உண்டாகவில்லை. "இவன் சிறியனாகவிருக்கின்றபடியால் என்னுடைய பெருமையை உணர்ந்துகொள்ளவில்லை. இவனுடைய தந்தை எனக்குக் கொடுத்துள்ள மேன்மையைச் சிறிதும் உணர்ந்துகொள்ளவில்லை. எவ்வளவு காலம் இவன் என்னோடு போர்செய்தாலும் என்னைக் கொல்லுதல் முடியுமா? இச்சிறுவன் என்னுடைய படைகளையும் படைக்கலங்களையும் அழிக்கலாமேயல்லாமல் என்னுடைய அழியாத மேன்மையை அழிக்க முடியுமா? என்னை அவன் கொல்லுதல் அரிது! நானும் அவனை இப்பொழுது வெல்லுதல் அரிது! பிறகு பெரும்படையுடன்வந்து போர் செய்கிறேன். அப்பொழுது கட்டாயம் எனக்கு வெற்றிகிடைக்கும். நான் இப்பொழுது மறைந்தோடிப்போதல் எனக்கு வசையன்று," என்று பலவாறு எண்ணினான். ஒரு மாய மறையை மனத்திலெண்ணி மறைந்துபோனான். அவன் ஒளித்தோடுதலை அறுமுகப்பெருமான் அறிந்தார். ஆயினும் அவனுடைய உயிரை உடனே கவர்தற்கு எண்ணிலர்.

## தேவர்களும் முருகனும்

சூரபன்மன் தோற்றோடிய பிறகு திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் முருகக்கடவுளையடைந்து போற்றினார்கள். "சூரபன்மன் பிறந்தது முதல் இன்றுவரை அடைந்தனவெல்லாம் வெற்றியே யல்லாமல் இதுவரையில் தோல்வியை யடைந்தவனல்லன். இன்றுதான் தேவரீரிடந் தோற்று ஒளிந்தோடிப்போனான். அவனுடன் நீர் போர்செய்தல் ஒரு திருவிளையாடலேயாகும். தேவரீர் அவனுடைய உயிரைக் கவர வெண்ணியிருந்தால் அவன் தப்பியோடுவானோ? அவனைத் தேவரீர் கொன்று, அடியேங்களைக் காத்தருளுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்

டார்கள். முருகக்கடவுள், "அவன் இனி வந்து போர் செய்யும்போது அவனைக் கொன்றருள்வோம்," என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## பூதர்கள் மகேந்திரபுரியை அழித்தல்

சூரபன்மனுடைய போருக்கு ஆற்றாது தோற்றோடிய வர்களும், துன்பமுற்றுத்தளர்ந்து வீழ்ந்தவர்களும் பிறரும் முருகக்கடவுளை வந்தடைந்தார்கள். சூரபன்மன் மறைந்தோடிப்போனதைக்கண்டு ஆரவாரித்தார்கள். "நாம் சூர பன்மனுடைய நகரத்தையழித்துக்கடலில் இட்டுவருவோம் வாருங்கள்" என்று ஒருவரையொருவர் கூப்பிட்டுக் கொண்டு புறப்பட்டார்கள். மதிற்புறத்தையடைந்தார்கள்.

பூதப்படைகள் மதிற்புறத்தை யடைந்ததை அம் மதிலைக் காத்துநின்ற அதிகோரன் என்னும் அவுணவீரன் கண்டான். மிகச் சினந்தான். உதட்டைக் கடித்தான். திண்டி, பேரி, திமிலை முதலாகிய ஒலிக்கருவிகள் முழங்கப் போர் செய்யும்பொருட்டுப் படைகளோடு வந்து எதிர்த் தான். பூதர்கள் அவுணர்களோடு எதிர்த்தார்கள். அவு ணர்கள் தோமரம், கோடரி, சூலம் முதலாகிய படைகளை யேவினார்கள். ஈட்டியாற் குத்தினார்கள். வாளால் துணித்தார்கள். பூதர்கள் மலைகளையும் மரங்களையும் வீசி னார்கள். யானைகளைக் காலால் எடுத்தெறிந்தார்கள். தேர் களைக் கைகளால் முறித்தெறிந்தார்கள். குதிரைகளைப் பிசைந்தார்கள். அவுணர்களைத் துகைத்தார்கள். யாண்டுங் குருதி பொங்கியது. மூளை சொரிந்தது. குடர்கள் சரிந் தன. பருந்துகளுங் காகங்களும் நெருங்கின. பூதர்கள் சிலர் பொன்றினார்கள். அவுணர்கள் பலர் அழிந்தார்கள். பூதர்கள் மிகவுஞ் சினந்து தாக்கியபடியால் அவுணர்கள் அஞ்சியோடினர். அதனை அதிகோரன் கண்டு வெகுண் டான். ஓர் எழுப்படையை யேந்திப் பூதப்படைகளை யெதிர்த்தான். பூதர்களுடைய தலைகளினும் கைகளினும் தோள்களினும் மார்புகளினும் முகங்களினும் ஓடி ஓடி மோதினான். ஓரிமைப்பொழுதிற் பலரைக் கொன்றான். பூதப்படைத்தலைவருள் ஒருவராகிய மேகர் என்பவர்

கண்டு, வெகுண்டு தமது கையிலிருந்த மலையொன்றை அகோரன்மேல் எறிந்தார். அவன் அதனைத் தன் கையிலிருந்த எழுவாற் காத்தான். மேகர் அதிகோரனுடைய மார்பில் அடித்தார். அவன் எழுப்படையினால் அடித்தான்; அது முறிந்தது. மேகர் அதிகோரனுடைய கதுப்பிற் கையால் அடித்தார். அவன் இறந்தான்.

பூதர்கள் பேரொலி செய்துகொண்டு மதிலின் வாயிலையடைந்தார்கள். அங்கே ஆயிரம்யோசனை உயர்ந்து நின்ற கோபுரத்தைப் பிடுங்கிக் கடலில் எறிந்தார்கள். அப்பொழுது நிலம் அசைந்தது. ஆதிசேடன் திகிலுற்றான். மகேந்திரபுரியிலுள்ள அவுணர்கள் நடுங்கினார்கள். அந்தக் கோபுரம் மந்தரமலைபோலக் கடலில் ஆழ்ந்தது. அங்கிருந்த கயல்கள் இரிந்தன. கோபுரம் கடலில் விழுந்தமையால், கடல்நீர் மேலெழுந்து நகரத்தின் மதிலைச் சூழ்ந்தது. பூதர்கள் நகரின் வடபக்கத்து மதிலைக் காலாலுதைத்தார்கள். அஃது இடிந்து விழுந்தது. பூதர்கள் மகேந்திரபுரியுட் புகுந்தார்கள். தம்மோடெதிர்க்கின்ற அவுணர்களைக் கொன்றார்கள். மாளிகைகளையும் கோபுரங்களையும் உடைத்து வீழ்த்தினார்கள். பிறகு மீண்டு போர்க்களத்தையடைந்தார்கள்.

## தந்தையும் மைந்தனும்

போரில் தோற்றோடிய சூரபன்மன் தன் அரண்மனையை அடைந்தான். யாருடனும் பேசாது தனித்தவனாக அமர்ந்து போருக்குரிய சூழ்ச்சிகளைப்பற்றி எண்ணமிட்டுக்கொண்டிருந்தான். அவன் போருக்குப் போய்த் தோற்றுவந்த செய்தியைத் தூதுவர்கள் பானுகோபனுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவன் தன்னுடைய தந்தையைச் சென்றுகண்டான். முதல்நாள் நிகழ்ந்தவைகளைக் கூறினான். மறுநாள் சென்று பகைவர்களை வென்று வருவதாகக் கூறினான். சூரபன்மன் அவைகளைக் கேட்டு மகிழ்ந்தான். முருகக்கடவுளை வெல்லுதல் என்னைத்தவிர வேறு எவராலும் இயலாது. நீ மற்றவர்களை வென்று வா. பிறகு நான் முருகக்கடவு

னைத் தோற்கடிக்கிறேன்,'' என்றான். பானுகோபன் அதற்கு உடன்பட்டான். சூரபன்மன் தன்னுடைய சூழ்ச்சிகள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு மகிழ்ந்திருந்தான்.

### பழுது பார்த்தல்

பானுகோபன் தன் தந்தையின் உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு தன்னிருப்பிடத்தை யடைந்தான். அப்பொழுது பல ஒற்றர்கள் விரைந்துவந்து பானுகோபனைப் பணிந்தார்கள். பூதப்படைகளால் நகரத்திற்கு ஏற்பட்ட அழிவைக் கூறினார்கள். அவன் அவுணத் தச்சனை யழைப்பித்து பழுதானவைகளை யெல்லாம் புதுக்குமாறு கட்டளையிட்டான். அவுணத்தச்சனும் அவ்வாறே செய்தான்.

## ரு. மூன்றாம்நாள் பானுகோபன் போர்

### மாயை வருதல்

மறுநாள் பொழுது விடிந்தது. பானுகோபன் நாட் கடனைச் செய்து முடித்தான். மாயை தன் முன்பு தோன்றுமாறு எண்ணினான். அவளும் அவ்வாறே தோன்றி நின்றாள். பானுகோபன் அவளைப் பணிந்தான். போரிலே தான் முதனாள் தோல்வி யடைந்ததைக் கூறி வருந்தினான். பானுகோபனைப் பார்த்து மாயை, "நீ மறைவழியை விலக்கினாய்! தேவர்களைச் சிறையில் வைத்தாய்! இந்திரனுடைய அரசுரிமையை அழித்தாய்! முனிவர்கள் செய்கின்ற தவத்தைக் கெடுத்தாய்! கொடுமையை வளர்த்தாய்! முத்தேவர்களும் பிறரும் பகையானால் எவ்வாறு வாழ்வாய்? கொடுமைகளையே நீ மிகுதியாகப் புரிதலால் பழியை யடைந்திருக்கின்றாய்! பகைவர்களுக்குத் தோற்றாய்! பலவற்றைப் பகர்வதாற் பயனேது? நீ வேண்டியவைகளைக் கேள், தருகிறேன்,'' என்றாள். பானுகோபன் "பகைவர்களை வெல்லத்தக்க ஒரு படைக்கலம் வேண்டும்,'' என்றான். மாயை மாயப்படைக் கலம் ஒன்றை யுண்டாக்கிப், பானுகோபனுக்குக் கொடுத்

தாள். "இதனைச் செலுத்தினால் இற்றைநாள் வெற்றி நின தாகும்," என்று கூறி மறைந்தாள்.

## பானுகோபன் போருக்குப் புறப்படுதல்

மாயப் படைக்கலத்தைப் பெற்ற பானுகோபன் போர்க்கோலங்கொண்டு புறப்பட்டான். காற்றுப்படை, தீப்படை, யமப்படை, சந்திரப் படை, சூரியப்படை, நான்முகப்படை, நாராயணப்படை, சிவப்படை ஆகிய தெய்வப் படைக்கலங்களை யெடுத்துக்கொண்டான். தேரி லேறிப் புறப்பட்டான். பதினுயிரம் வெள்ளம் குதிரை களும், பதினுயிரம் வெள்ளம் யானைகளும், பதினுயிரம் வெள்ளந் தேர்களும், இருபதினுயிரம் வெள்ளம் காலாட் களும் ஆகிய நால்வகைப் படைகளும் அவனைச் சூழ்ந்தன. முரசு, துடி, குடமுழா முதலிய வாத்தியங்கள் ஒலித்தன. அவுணமள்ளர்கள் இடிபோல ஒலிசெய்து நெருங்கினார் கள்.

## பானுகோபன் தூதனுப்புதல்

பானுகோபன் நகரைக் கடந்து மதிலின்புறத்தே வந்தான். ஆயிரங் குதிரைமுகம் படைத்த ஒரு தூது வனைப் பார்த்து, 'நீ முருகன் இருக்கிற பாசறைக்குச் சென்று, வீரவாகு என்பவனைக் கண்டு, "பானுகோபன் போருக்கு வந்துள்ளான். முதனாட் போரென்று நினை யாதே! என்று கூறிவிட்டு வருவாயாக," என்று கட்டளை யிட்டான். அத்தூதுவனும் பாசறையையடைந்து வீர வாகுதேவரைக் கண்டான். "பானுகோபன் இன்றைக்கு உன்னுடைய உயிரைக் கவரும்பொருட்டுப் போருக்கு வந்துள்ளான். இதனை உனக்குச் சொல்லி உன்னை யழைத்துக்கொண்டு வருமாறு என்னையனுப்பினான். நீ விரைந்து போருக்குப் புறப்படுவாயாக," என்றான். வீர வாகுதேவர் நகைத்து, 'நான் பானுகோபனுடைய உயி ரைக் கவருதற்கு இதோ வருகின்றேன்; நீ சென்று அவ னுக்குச் சொல்லுவாயாக' என்றார். தூதன் அதனைக் கேட்டுக்கொண்டு மீண்டான்.

## வீரவாகுதேவர் போருக்குப் புறப்படுதல்

வீரவாகுதேவர் தம்முடைய இளவல்கள் படைத் தலைவர்கள் முதலியவர்களோடு முருகக்கடவுள் முன்பு சென்றார்; வணங்கினார். முருகக்கடவுள் பானுகோபன் தூதனுப்பினதையறிந்தார். 'நீ பானுகோபனோடு போருக்குச் செல்வாயாக! அவன் ஏவுகிற படைக்கலங்களுக்கு எதிரான படைக்கலங்களை ஏவுவாயாக! அவன் மாயைகளைச் செய்தால் நம்முடைய வேற்படை வந்து அதனை நீக்கும்' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## இருபக்கத்துப் படைகளும் கலத்தல்

முருகக்கடவுளுடைய கட்டளையைப்பெற்ற வீரவாகுதேவர் போர்க்கோலங்கொண்டு தேரேறினார். துணைவர்களும் படைத் தலைவர்களும் அவரைச் சூழ்ந்தார்கள். ஆயிரம் வெள்ளம் பூதப்படைகள் மலைகளையும் மரங்களையும் படைக்கலங்களையுந் தாங்கி வீரவாகுதேவரைச் சூழ்ந்தன. படைகள் சூழ வீரவாகுதேவர் பானுகோபன் நின்ற போர்க்களத்தையடைந்தார். பூதப்படைகளும் அவுணப் படைகளும் போரைத் தொடங்கின. அவுணர்கள் வேல், தோமரம், எழு, தடி முதலிய படைகளை வீசினார்கள். பூதர்கள் முத்தலைச் சூலம், உலக்கை, மலை, மரம் முதலியவைகளை வீசினார்கள். அவுணர்கள் வாட்படையினால் பூதர்களுடைய தலைகளையுந் தோள்களையும் துணித்தார்கள். சுரிகை முதலியவற்றால் குத்தினார்கள். தடி முதலிவற்றால் தாக்கினார்கள். பூதர்கள் அவுணர்களைப் பிடித்துக் கைகளால் அடித்தார்கள். கழுத்தை ஒடித்தார்கள். மிதித்து உருட்டினார்கள். குதிரைகளையும் வீரர்களையும் கைகளால் அள்ளி அள்ளி யானைகளிலும் தேர்களிலும் அடித்தார்கள். குருதிநீர் யாண்டும் பாய்ந்தது. ஊனை விரும்பிப் பறவைகள் மொய்த்தன. பூதர்களும் அவுணர்களும் இறந்தார்கள். நூறாயிரத்தெண்மரும் கணை மழைகளைச் சொரிந்து அவுணக் கடல்களைக் கலக்கினார்கள். பானுகோபன் பூதப்படைகளை யெதிர்த்தான்.

## வீரவாகுதேவரும் பானுகோபனும்

வீரவாகுதேவர் தம் துணைவர்களுடன் பானுகோபனுக்கெதிரே சென்றார். வீரவாகுதேவரும் பானுகோபனும் வில்லை வளைத்து நாணொலி செய்தார்கள். பானுகோபன் பல கணைகளைச் சினத்துடன் செலுத்தினான். அவைகள் பிறைமுகக் கணைகள். வீரவாகுதேவரும் எண்ணில்லாத கணைகளைச் சொரிந்தார். இருவர்களுடைய கணைகளுந் தேர்களும் எல்ல வுலகங்களினும் உலாவின. பானுகோபன் வீரவாகுதேவருடைய மார்பில் ஆயிரங் கணைகளை யெய்தான். வீரவாகுதேவர் ஆயிரங் கணைகளை யேவினார். பானுகோபனுடைய குதிரை முதலியவைகளை ஒருங்கேயழித்தார். பானுகோபன் வேறொரு தேரிற்பாய்ந்து வில்லை வளைத்தான். அதற்குமுன் வீரவாகுதேவர் ஆயிரங் கணைகளைத் தொடுத்துப் பானுகோபனுடைய மார்பைப் பிளந்தார். அவன் நடுங்கித் துன்பமடைந்தான். பூதர்கள் ஆரவாரஞ் செய்தார்கள்.

பானுகோபன் தெய்வப்படைக்கலங்களைச் செலுத்தத் தொடங்கினான். வருணப்படைக்கலத்தை யெடுத்துச் செலுத்தினான். அஃது ஊழிக்காலத்துக் கடல்போல மிகுதியாகப்பரவி இடியொலிசெய்து விண்ணுலகைத் தடவி விரைந்து சென்றது. அதனைக் கண்டு தேவர்கள் நடுங்கினார்கள். பூதர்கள் கலங்கினார்கள். வீரவாகுதேவர் தீப்படையைச் செலுத்தினார். தீப்படை வருணப்படையை விழுங்கிப் பானுகோபனைச் சூழ்ந்தது. அவன் காற்றுப் படையைச் செலுத்தினான். அது தீப்படையைக் கெடுத்துப் பூதர்களைக் கொல்லுமாறு வந்தது. வீரவாகுதேவர் அதனைக்கண்டு பாம்புப்படையைச் செலுத்தினார். அது காற்றுப்படையை யுண்டுவிட்டுப் பானுகோபன்மீது சென்றது. பானுகோபன் கருடப்படைக்கலத்தைச் செலுத்தினான். பாம்புப்படைக்கலம் ஒழிந்தது. கருடப்படைக் கலம் ஆரவாரித்து வீரவாகுதேவருக்கு நேரே வந்தது. வீரவாகுதேவர் சினந்து நந்திப்படைக்கலத்தைச் செலுத்தினார். அது கருடப்படையை விழுங்கியது. பானுகோபனைக்

சொல்லுகிறேன் என்று சென்றது. பானுகோபன் எமப் படையைச் செலுத்தினான். நந்திப்படை அதனையுங் கெடுத்தது. அதன் ஆற்றலைப் பானுகோபன் கண்டு நான்முகப்படையை விடுத்தான். அது வெருண்டு விண் வழியாகச் சென்றது. நந்திப்படையைக் கண்டு பின் வாங்கியது. "இழிந்தவனாகிய பானுகோபனுடைய ஏவலினால் வந்தேன். உம்முடைய வரவை யறிந்திலேன். என்மேற் சினங்கொள்ளுதல் வேண்டாம்," என்று கூறி வணங்கி மீண்டது. பானுகோபன் நாராயணப்படையைச் செலுத்தினான். அப்படை நந்திப்படைக்கெதிரே சென்று போர் செய்து நின்றது. வீரவாகுதேவர் அதனைப் பார்த்து வீரபத்திரப்படையை யெடுத்துச் செலுத்தினார். வீரபத்திரப்படை சென்ற அளவில் நந்திப்படையோடு போர் செய்த நாராயணப்படை தொலைந்தது. பானுகோபன் சிவப்படைக்கலத்தை யெடுத்து வழிபாடுசெய்து செலுத்தினான். உடனே வீரவாகுதேவர் தாமும் அப்படைக் கலத்தை யெடுத்து வழிபாடுசெய்து செலுத்தினார். இரு சிவப்படைக்கலங்களும் எதிர்த்துப் பெரும்போர்புரியத் தொடங்கின. ஊழிக்காற்றையும் ஊழித்தீயையும் வெளிப் படுத்தின. புகையையும் நஞ்சையும் பக்கங்களில் உமிழ்ந் தன. பூதத்தொகைகள் உண்டாயின; காளித்தொகைகள் உண்டாயின; வைரவர் கூட்டங்கள் உண்டாயின; வீரத் திருமடந்தைகளை வெளிப்படுத்தின; பேய்க்கூட்டங்களை யும் இருளையும் மாயைகளையும், காலர்களையும் ஒவ்வொரு பக்கங்களில் வெளிப்படுத்தின. அளவில்லாத கடல்களையும் முகிற் கூட்டங்களையும் பாம்புக் கூட்டங்களையும் வெளிப் படுத்தின. மேலும் ஐயனார் முதலிய பல படைகளை யுண்டாக்கின. கற்களையும் கொள்ளிகளையும் இடிகளையும், மழு, உருளை, வேல், கணை ஆகிய படைகளையும் பொழிந் தன. சிவப்படைக்கலங்கள் இரண்டுந் தம்முள் மாறு பட்டுப் பெரும்போர் புரிந்தன. அப்படைக்கலங்கள் கொடுமையுடன் போர்புரிதலால் எழு கடல்களும் தேவ கங்கையும் புறக்கடலும் வற்றின. அங்கிருந்த உயிர்க ளெல்லாம் துடிதுடித்து இறந்தன. நிலம் எரிந்தது.

வானுலகம் இடிந்தது. மேருமலை பொரிந்தது. உடுக் கூட்டங்கள் தூளாயின. கதிரவர்களுடைய தேர்கள் அழிந்தன. எல்லாவுலகங்களிலும் புகை நிமிர்ந்தது. எழு மலைகளும் கரிந்தன. உயிர்கள் யாவும் வருந்தின. தேவர் கள் ஓடினர். அனைவரும் அஞ்சினர். நூறுயிரம் வீரர் களும் மருண்டனர். துணைவர்கள் எண்மரும் வீரவாகு தேவரை வந்து சூழ்ந்தனர். அவுணர்கள் புரண்டார்கள். யானைகளுங் குதிரைகளும் உருண்டன. பானுகோபன் ஒருவன்மட்டும் உயிர் பிழைத்து நின்றான். மகேந்திர புரியிலிருந்த அவுணர்களும் பதினன்கு உலகங்களும் அழியும் ஊழிக்காலம் இதுவோ என்று அஞ்சி நடுங்கி ஞர்கள். இவ்வாறு நிகழ்வதற்குக் காரணம் யாது என்று அறிந்து வாருங்கள் என்று சூரபன்மன் ஒற்றுவர்களை அனுப்பினான். ஒற்றுவர்கள் புறப்படுவதற்கு முன்னரே சில தூதுவர்கள் சூரபன்மனிடத்திற்கு வந்தார்கள். அவர் கள் சூரபன்மனைப் பார்த்து, "உன் மகனாகிய பானுகோபன் வீரவாகு என்பவனோடு பெரும்போரைச் செய்தான். பின்பு தெய்வப்படைக்கலங்களைச் செலுத்தினான். அதன் பிறகு சிவப்படைக்கலத்தை யேவினான். வீரவாகு என்பவ னும் அப்படைக்கலத்தை விட்டான். அந்த இரண்டு சிவப் படைக்கலங்களும் பல வடிவங்களைக்கொண்டு உலகம் முழுவதும் அஞ்சத்தக்கவாறு பெரும்போர் செய்தன. அதனால் உலகம் நிலைகலங்குகின்ற"தென்று கூறினார்கள். தூதர்கள் சொல்லியவைகளைச் சூரபன்மன் கேட்டான். "பானுகோபன் சிவப்படைக்கலத்தை விட்டும் இன்னும் தூதுவனை வெல்லவில்லை. அத்தூதுவனை நாம் சிறியவனாக எண்ணினோம். ஒருவருடைய உருவத்தை மதிக்காது ஆற்றலை மதிப்பதே அறிவுடைமையாகும்," என்று கூறி னான். சிவப்படைக்கலங்கள் இரண்டும் பெரும்போர் செய்துவிட்டுப் பிறகு தம்மை விட்டவர்களிடமே சென்று விட்டன.

## பானுகோபன் மறைதல்

பானுகோபன் இனி இறப்பான் என்று எண்ணி னார்கள் தேவர்கள். பானுகோபன் தன்னைச் சூழ்ந்து

நின்ற படைகளைப் பார்த்தான். ஒன்றுங் காணப்பெற வில்லை. தான் தனித்தமையைக்கண்டு இரங்கி ஏங்கினன். சிவப்படைக்கலமுந் திரும்பிவிட்டது; இனிமேல் யான் செய்வது யாது என்று எண்ணினன். போர்க்களத்தில் நின்றால் இறக்க நேரிடும் என்று அஞ்சினன். ஒரு சூழ்ச்சியை உள்ளத்தில் எண்ணினன். உருவத்தை மறைத்து விண்ணில் எழுந்து நின்றான். பானுகோபன் அஞ்சியோடிப்போனான் என்று பூதர்கள் ஆரவாரஞ் செய்தனர். கதிரவன் மறைந்தான்.

வீரவாகுதேவர் பானுகோபன் மறைந்ததைக் கண்டார். 'இந்தக் கள்ளன் இன்றைக்கும் இறந்தொழிய வில்லை. மறைந்தோடிப் போனான். மேற்கொண்டு என்ன செய்யலாம்?' என்று வீரவாகுதேவர் தம் துணைவர்களைக் கேட்டார். பொழுது போய்விட்டபடியால் அனைவரும் பாசறைக்குச் செல்லலாம் என்று முடிவு செய்தனர்.

## பானுகோபன் மாயப்படை செலுத்துதல்

விண்ணில்மறைந்து நின்ற பானுகோபன், "நேற்று நான் வீரவாகுவுக்குத் தோற்றேன். இன்றைக்குந் தோற்றோடுவேனாயின் யாவரும் என்னை இகழ்வர். போருக் கஞ்சிப் புறங்கொடுத்தோடுகின்றவர்களை அனைவரும் இகழ் வர். நான் இன்றைக்கும் இவனுக்குத் தோற்றோடுவே னாயின் என் தந்தை என்னை வெறுப்பான். கதிரவனைச் சிறைசெய்த என் புகழ் அழியும். எந்தையின் புகழும் அழி யும். பகைவரை எதிர்த்து நின்று போர்செய்து வெல்லு தலே நேர்மை. வஞ்சனையினால் வெல்லுதல் நேர்மையன்று. பகைவரை வெல்ல முடியாதாயின் தாம் இறத்தலே தகுதி யாகும். புறங்கொடுத்தல் தகுதியாகமாட்டாது. இவன் எதிர்த்து நின்று போர்செய்து இன்றைக்குந் தோற்றோடி னான் என்னும் பழியடைதல் கூடாது. சூழ்ச்சியையேனுஞ் செய்து பகைவரை வெல்லுதல் வேண்டும். இவனுக் கெதிரே நின்று போர்செய்தலினால் ஒன்றும் பயனுண் டாகமாட்டாது. மறைந்துநின்று இவனை வென்று மீளு

தலே தக்கதாகும். யான் மறைந்து நிற்றல் தெரியக் கூடாது. தெரியின் பகைவர்கள் இங்கும் வந்து போர் செய்யத் தொடங்குவர். நான் இவர்களோடு போர்செய்து களைப்படைந்தேன். ஆதலால் இன்னும் நின்று போர் செய்தல் முடியாது. ஒளித்தோடவும் இயலாது. அவர்களை வெல்லுதற்கு மாயப்படையை விடுதலே ஏற்றதாகும்'' என்று முடிவுசெய்தான். மாயவள் கொடுத்த மாயப் படையை விரைந்தெடுத்து வழிபாடு செய்தான். "நீ பகைவரிடத்திற்குச் சென்று அவர்களுடைய அறிவைக் கெடுத்து, உயிரை நீக்கி, அவர்களை நன்னீர்க்கடலில் எறிவாயாக,'' என்று கூறி ஏவினான்.

பானுகோபன் விண்ணில் நின்று செலுத்திய மாயப் படை விரைந்து மண்ணுக்கு வந்தது. பூதக் கூட்டங்களை யும் அவைகளின் தலைவர்களையும், நூறாயிரம் வீரர்களையும் ஒன்பது பேராண்மையாளர்களையும் ஒருங்கு சூழ்ந்து உணர்வையழித்தது. அதனால் யாவரும் மயங்கி வீழ்ந் தார்கள். அவர்களுடைய உயிரைக் கவர மாயப்படையால் முடியவில்லை. அவர்களைக் கடலிற் கொண்டுபோய்ப் போட எண்ணியது. வீரவாகுதேவர் முதலிய அனைவரை யும் விண்வழியாக எடுத்துச்சென்றது. அறு கடல்களையுந் தாண்டி நன்னீர்க்கடலையடைந்தது. அதில் அனைவரையும் போட்டுவிட்டுப் பிரியாமலிருந்தது.

## பானுகோபன் தந்தைக்குச் செய்திதெரிவித்தல்

நிகழ்ந்ததைப் பானுகோபன் அறிந்தான். 'நம்முடைய சூழ்ச்சி நன்று நன்று' என்று கூறித் தனக்குத்தானே மகிழ்ந்துகொண்டான். விரைந்து மகேந்திரபுரியை அடைந் தான். தன் தந்தையைக்கண்டு வணங்கினான். "நான் இன்றைக்குப் பலவாறு போர்செய்தேன். வீரவாகுவையும் அவனைச் சேர்ந்தவர்களையும் வென்று உயிரைப் பருகி னேன். அவர்களுடைய உடலை நன்னீர்க்கடலில் இட் டேன். நீ சிறிதுங் கவலைகொள்ளாதே! படைகளோடு நாளைக்குச் சென்று அறுமுகனை வெல்கிறேன். திருமால்

நான்முகன் இந்திரன் முதலியவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து தருகிறேன்," என்று கூறினான்.

## பானுகோபனைச் சூரபன்மன் பாராட்டுதல்

பானுகோபன் பகர்ந்தவைகளைச் சூரபன்மன் கேட்டு மகிழ்ந்தான். அவனுடைய தோள்கள் நிமிர்ந்தன. கைவளைகள் நெரிந்து வீழ்ந்தன. மயிர்கள் பொடித்தன. அவனுக்கு நகைப்புண்டாகியது. அவன் தன்னுடைய இருக்கையைவிட்டு எழுந்தான். தன் எதிரில் நிற்கும் பானுகோபனை மார்போடு இறுகத் தழுவிக்கொண்டான். தன்னுடைய அரியணையில் உடனிருத்திக்கொண்டான். "நீ என்னுடைய மனக்கவலையை மாற்றினாய்! நான் மகிழ்ச்சியில் சிறந்தவனானேன். நான் முன்னாளிற் செல்வங்களைப் பெற்றேனென்பது பொய். இன்றுதான் உண்மையாக நான் செல்வங்களைப் பெற்றேன்," என்று பற்பல இனிய மொழிகளை இயம்பினான். பானுகோபனுடைய பழைய அணிகலன்களை மாற்றிவிட்டுப் புதிய அணிகலன்களையணிந்தான். பிறகு பானுகோபனைப்பார்த்து, "நீ முன்னே கூறியவாறு நாளைக்குச் சென்று அறுமுகனை வென்று பூதப்படைகளைக் கொன்று தேவர்களைச் சிறைபிடித்துக் கொண்டுவந்து என்னுடைய பகையை முடிப்பாயாக," என்றான். பிறகு அவனை அவனுடைய இருப்பிடத்திற்கு அனுப்பினான். பானுகோபனும் தன்னுடைய அரண்மனையை அடைந்து மட்டற்ற மகிழ்ச்சியோடிருந்தான்.

## அறுமுகக்கடவுள் அனைவரையும் மீட்டல்

நிகழ்ந்தவைகளைத் தேவர்கள் கண்டு பெருமூச்சு விட்டார்கள். மெய் குலைந்தார்கள். மனம் பதைபதைத்துக் கண்ணீர் விட்டழுதார்கள். பலவாறு வருந்தினார்கள். முருகக்கடவுளுக்குச் செய்தி கூறுமாறு ஓடினார்கள். நாரத முனிவர் எல்லாவற்றையுங் கண்டு தேவர்கட்குமுன்னே விரைந்தோடினார். பாசறையில் வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமானையடைந்து வணங்கினார். நிகழ்ந்தவைகளைக்

கூறினார். தேவர்களும் ஓடிப்போய் நடந்தவைகளைக் கூறினார்கள்.

நாரதமுனிவருந் தேவர்களும் நவின்றவைகளை முருகக்கடவுள் திருக்காது கொடுத்துக் கேட்டருளினார். "நீ சென்று அனைவரையும் மீட்டுக்கொண்டு வருவாயாக!" என்று தமது வேற்படைக்குக் கட்டளையிட்டருளினார். அப்பணியை அப்படை தலைமேற்கொண்டு சென்றது. அறு கடல்களையும் தாண்டி நன்னீர்க்கடலை யடைந்தது. மாயப் படை தன் ஆற்றலழிந்து கெட்டுப்போயது. கடலரசன் வேற் படையை வணங்கினான். மாயப்படையின் ஆற்றலைப் போக்கும் ஆற்றல் தன்னிடத்திலில்லாமையைத் தெரியப்படுத்திக் கொண்டான். வீரவாகு முதலியோர் தளர்ச்சி நீங்கினார்கள். பழைய அறிவு பெற்றார்கள். கடலுக்கு மேலே வந்து முருகக்கடவுளைப் போற்றினார்கள். உலகம் மகிழ்ந்தது. முனிவர்களுந் தேவர்களும் பூமாரி பொழிந்தார்கள். அனைவரும் வேற்படையை வணங்கிப் போற்றினார்கள். வேற்படை அனைவரையும் அறுமுகப்பெருமானிடம் வருமாறு பணித்துவிட்டு, முன்னே சென்று தான் அப்பெருமானுடைய திருக்கையிலே வீற்றிருந்தது.

## சா. நகர் புகுதல்

### வீரவாகுதேவர் முதலியோர் மகேந்திரபுரியை அழித்தல்

வீரவாகுதேவர் துணைவர்களுடனே மகேந்திரபுரியை யடைந்தார். மகேந்திரபுரியைப் பார்த்த அளவில் அவருக்கு மிகுந்த சினமுண்டாகியது. வஞ்சகமாகப் போர்செய்து ஓடிப்போன பானுகோபனைக் கொன்று தொலைத்தாலல்லாமல், முருகப்பெருமானிடஞ் செல்வதில்லையென்று முடிவுசெய்தார். "மகேந்திரபுரிக்குட் புகுந்து அதனை யழிப்பேன்! பானுகோபன் வந்து எதிர்த்தால் அவனைக் கொல்வேன்! அவனைக் கொல்லாதொழிவேனாயின், பிறகு இவ்வுயிர் வாழ்க்கையை விரும்பேன்! யான் பிறந்தவனும் அல்லேன்!" என்று துணைவர்களைப் பார்த்துச் சூள்மொழிபுகன்றார். துணைவர்களும் மகேந்திர

புரியை அழித்தற்கு உறுதிகொண்டார்கள். வீரவாகு தேவர் எல்லோரையும் அழைத்துக்கொண்டு மேற்கு வாயிலையடைந்தார். பூதப்படைகள் கடலுடைந்தாற் போலப் பெருமுழக்கஞ் செய்தன. அவ்வொலியைக் கேட்ட அவுணர்கள் சினமடைந்தார்கள்.

புலிமுகன் என்பவன் மேற்கு வாயிலைக் காவல்காத்துக்கொண்டிருந்தான். அவன் மாயவளிடத்திற் பிறந்தவன். தன்னுடைய ஆணையைக்கடந்த கூற்றுவனையும் வருணனையும் பிடித்துச் சிறைசெய்தவன். தீயொளியைப் போன்ற உடம்பையுடையவன். நால்வகைப் படைகளும் அவனைச் சூழ்ந்திருந்தன. பூதப்படைகள் பெருமுழக்கஞ் செய்துகொண்டு அங்கு வந்ததைக்கண்டு அவன் சினமடைந்தான். பூதப்படைகளை யெதிர்த்துச் சென்றான். பூதர்கள் மலைகளையும் மரங்களையும் தடி முதலிய படைகளையும் வீசிப் போர்செய்தார்கள். அவுணர்கள், கணை, வேல், மழு முதலிய படைகளைச் சொரிந்து போர்செய்தார்கள். இருபக்கங்களிலும் பலர் மாண்டார்கள். குருதி ஆறாகப் பெருகியது. பூதப்படைத்தலைவர்கள் தேர்களையும் குதிரைகளையும் யானைகளையும் தூக்கி ஒன்றின்மேல் ஒன்றை அடித்து அழித்தார்கள். படைகள் அழிந்தமையைப் புலிமுகன் கண்டான். ஒரு சூலப்படையை யெடுத்துக்கொண்டு பூதப்படைகளுக்கு முன்னே சென்றான். மலைகள் பலவற்றைப் பிடுங்கிப் பூதர்கள் அவன் மேல் எறிந்தார்கள். புலிமுகன் சூலப்படையினால் அவைகளையெல்லாந் துண்டங்களாக்கினான். சிங்கர் என்னும் பூதப்படைத்தலைவர் புலிமுகனுடைய ஆற்றலைக் கண்டார். ஒரு முத்தலைச் சூலத்தையேந்தி அவனுக்கு முன்சென்று உரப்பினார். புலிமுகன் முத்தலைச் சூலத்தினாற் சிங்கருடைய மார்பிற் குத்தினான். சிங்கரும் புலிமுகனுடைய மார்பில் முத்தலைச் சூலத்தினாற் குத்தினார். சூலங்கள் இரண்டும் இருவருடைய மார்புகளையும் பிளந்துகொண்டு முதுகிற் புறப்பட்டன. இருவருடைய உடல்களினும் குருதி பெருகியது. மீண்டும் அச்சூலங்களை

யிழுத்து இருவரும் குத்திப் போர்செய்தனர். அதனால் இரண்டும் ஒடிந்து வீழ்ந்தன. பின்பு இருவரும் மற்போர் செய்தனர். புலிமுகன் தளர்ந்து வீழ்ந்தான். சிங்கர் அவனைக் காலினால் உதைத்துக் கொன்றார்.

பிறகு பூதப்படைகள் மேற்றிசை மதிலைக் காலினால் உதைத்து அழித்தன. மாளிகை வரிசைகளைத் தகர்த்தன. தெருக்களிலே நின்ற அவுணர்கள் இறந்தொழிந்தார்கள். வீரவாகுதேவருடைய இளவல்கள் யானைகள், தேர்கள், குதிரைகள், அவுணர்சள், மாளிகைகள் முதலியன அழிந் தொழியுமாறு கணைகளைச் செலுத்தினார்கள். வீரவாகு தேவர் தீப்படையையும் காற்றுப்படையையும் வில்லிற் பூட்டினார்; "நீவிர் சென்று இந்நகரத்தை அழியுங்கள்" என்று ஏவினார். அப்படைகளிரண்டுங் கலந்து நகரமெங் குஞ் சூழ்ந்தன. தீயை வெளிப்படுத்தின. அவுணர்கள் இறந்தொழியுமாறு சுட்டன. சில இடங்கள் எரிந்தன. சில இடங்கள் தூளாயின. சில இடங்கள் வெடித்தன. சில இடங்கள் கரிந்தன. சில இடங்கள் பொரிந்தன. சில இடங்கள் புகைந்தன. பலவாறு அந்நகரம் அழிந்தது.

ஒற்றுவர்கள் சூரபன்மனுடைய கோயிலுக்குட் புகுந் தார்கள். அவனை வணங்கினார்கள். "உன் மகனாகிய பானுகோபன் வீரவாகுதேவர் முதலானவர்களை மாயப் படையினால் வென்று நன்னீர்க் கடலில் இட்டான். அதனை நீயும் உணர்வாய். நிகழ்ந்ததை நாரதமுனிவர் முருகனுக் குத் தெரியப்படுத்தினார். அம்முருகன் வேற்படையைச் செலுத்தினான். அதனால் மாயப்படைக்கலம் அழிந்து போய் விட்டது. வீரவாகு முதலிய அனைவரும் பிழைத் தெழுந்தார்கள். தேவர்கள் அதுகண்டு பெருமுழக்கஞ் செய்தார்கள். வேற்படை திரும்பி முருகனிடஞ் சென்று விட்டது. வீரவாகு முதலியோர் நம்முடைய நகரின் மேற்றிசை வாயிலையடைந்தனர். அவ்வாயிலைக் காத் திருந்த புலிமுகன் அவர்களை யெதிர்த்துப் போர்செய் தான். அவர்கள் அவனைக் கொன்றார்கள். அவனுடன்

இருந்த படைகள் அழிந்தன. பூதர்கள் பலவாறு நகரத்தை அழிப்பார்களாயினர். அவர்கள் மூட்டிய தீ பதினாயிரம் யோசனை தொலைவை அழித்துவிட்டது. அவ்விடத்தை நாங்களும் பார்த்து வந்தோம்" என்று கூறினார்கள்.

ஒற்றுவர்கள் உரை சூரபன்மனுக்குச் செற்றத்தை உண்டாக்கியது. அவனுடைய மயிர்கள் பொடித்தன. புருவங்கள் நெற்றியில் ஏறின; கண்கள் தீயைக் கக்கின. அவன் ஒற்றுவர்களைப் பார்த்து, "நீவிர் வானுலகிற்குச் சென்று, ஊழிக்காலத்தில் உலகங்களை அழிப்பதற்காக அங்கே உறங்கிக்கொண்டிருக்கின்ற முகில்களைக்கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்கள் வானுலகிற்குச் சென்று ஏழு முகில்களையுங் கொண்டுவந்து சூரபன்மனுக்கு முன்னே விட்டார்கள். அவன் அம் முகில்களைப் பார்த்து, "நீங்கள் இந்நகரத்தை எரிக்கின்ற தீயை அணையுங்கள்" என்று கட்டளையிட்டான். அம் முகில்கள் வீரவாகுதேவருக்கு அஞ்சினவாயினும், பின் ஒருவாறு துணிந்து மிகுந்த மழையைப் பொழிந்தன. அதனால் தீ அணைந்தது. வீரவாகுதேவர் அத்தீ யெவ்வாறு அவிந்தது என்று எண்ணமிட்டார். அப்பொழுது நாரதர் தோன்றி, "இவை ஊழிக்கால முகில்கள், சூரபன்மனுடைய கட்டளையால் வந்தன. வடவைத் தீப்படையை விடுப்பீராக" என்று கூறி மறைந்தார். வீரவாகுதேவரும் அவ்வாறே செலுத்தினார். அது விரைந்து சென்று முகிற் கூட்டத்திலுள்ள நீரெல்லாவற்றையும் உண்டு மீண்டது. முகில்கள் ஆற்றலிழந்தன. அவைகள் ஆறெழுத்து மந்திரத்தையோதி அதனால் ஆற்றல் பெற்றுப் புறவேலையை நோக்கி ஓடிப்போயின. ஒற்றுவர்கள் விரைந்து சென்று இச்செய்தியையுஞ் சூரபன்மனுக்குத் தெரியப்படுத்தினார்கள். சூரபன்மன் அதனைக்கேட்டு மிகுந்த சினமடைந்தான். உடனே தன்னுடைய தேரைக் கொண்டுவருமாறு கட்டளையிட்டான்.

# எ. இரணியன் போர்

## இரணியன் அறவுரை கூறுதல்

சூரபன்மன் தேரைக் கொண்டுவாருங்கள் என்று ஒற்றுவர்களை நோக்கிக் கூறியபொழுது அவ்வவையிலே இரணியன் என்பவன் இருந்தான். அவன் ஆயிரம் மறைகளை யுணர்ந்த வேள்வியையுடையவன். அறநெறியையும் ஒழுங்கு முறையையும் அறிந்தவன். மாயங்களையும், வஞ்சனைகளையும் உணர்ந்தவன். அவுணர்களுக்குள் ஆற்றல் மிகுந்தவன். முன்னாளில் கீழுலகத்திலுள்ள அவுணர்களோடு போர்செய்து வென்றவன். மூன்று தலைகளை யுடையவன். சூரபன்மனுடைய மக்களில் ஒருவன். அவன் தன்னுடைய தந்தையைப் போற்றிப் பல அறவுரைகளைக் கூறலானான்.

"நாம் தேவர்களைச் சிறைசெய்தமையால் உண்டாவது தீவினையேயாகும். அதனால் உண்டாகப்போகிற நன்மை ஒன்றுமில்லை. தேவர்கட்கு அல்லல் செய்வதால் நம்முயிர் நீங்கிவிடும். நாம் பெற்றுள்ள செல்வம் அழிந்தொழியும். நாம் இவ்வளவு சிறப்புக்களையும் யாரிடத்திலே பெற்றோம்? அதனை நீ சிறிதும் எண்ணமாட்டேன் என்கிறாய்! முன்னாளில் திருமாலை வென்றதும், நான்முகனையும் முனிவர்களையும் ஏவல்கொண்டதும், தேவர்களுக்குத் துன்பஞ் செய்ததும் சிவபெருமான் கொடுத்த ஆற்றலினால் அல்லவா? திருமால் வந்து எதிர்த்தாலும், இந்திரனும் நான்முகனும் வந்து எதிர்த்தாலும், பிறர் வந்து எதிர்த்தாலும் அவர்களுடன் போர்செய்து வெல்லுதல் நமக்கு எளிது! நாம் செய்த தவத்தை நோக்கி அளவிறந்த நன்மைகளைத் தந்தருளிய சிவபெருமான், நாம் செய்யுந் தீமையின்பொருட்டு நமது மேன்மைகளை மாற்ற நினைப்பாராயின், நாம் பகைமை நீங்கி அக்கடவுளைப் போற்றுவதல்லாமல் அவரோடு போர்செய்யவும் எண்ணலாமா?

ஒன்றொரு பயன்தனை உதவி னோர்மனம்
கன்றிட ஒருவினை கருதிச் செய்வரேல்
புன்தொழில் அவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடும் அல்லது கூற்றம் வேண்டுமோ ?

(கன்றிட - வருந்த. கூற்று - நமன்.)

கந்தனை அருள்புரி கடவுள் ஆணையைச்
சிந்தையின் மாறுகொள் சிறியர் யாவரும்
அந்தம தடைந்தனர் அன்றி வன்மையால்
உய்ந்தனர் இவர்என உரைக்க வல்லமோ ?

(அந்தமதடைந்தனர் - இறுதியை அடைந்தார்கள்.)

கட்டுசெஞ் சடைமுடிக் கடவுள் காமனைப்
பட்டிட விழித்ததும் பண்டு மூவெயில்
சுட்டதும் அந்தகன் சுழலச் சூலமேல்
இட்டதுங் கேட்டிலை போலும் எந்தைநீ.

(எயில் - மதில்.)

காலனை உதைத்ததும் கங்கை என்பவள்
மேல்வரும் அகந்தையை வீட்டிக் கொண்டதும்
மால்அயன் அமரர்கள் இரிய வந்ததோர்
ஆலம்அது உண்டதும் அறிகி லாய்கொலோ ?

(இரிய - அஞ்சியோட.)

அண்டரை ஓர்அரி அலைப்ப அன்னது
கண்டநஞ் சுடையவன் கருதி வீரனால்
தண்டம திழைத்ததும் தக்கன் வேள்வியை
விண்டிடு வித்ததும் வினவி லாய்கொலோ ?

(விண்டிடுவித்ததும் - அழித்ததும்.)

கடிமலர் மேலவன் இகழக் கண்ணுதல்
வடுகனை யேவிவள் உகிரின் அன்னவன்
முடிகளை வித்ததும் முகுந்தன் தன்னிடை
அடைதரு வித்ததும் அறிகி லாய்கொலோ ?

(வள் - கூர்மை. உகிர் - நகம்.)

முன்னொரு மகபதி மொய்ம்பை யட்டதும்
ஐந்திய லரக்கரை யழித்த செய்கையும்
தந்தியை உழுவையை உரித்த தன்மையும்
எந்தைநிற் குணர்த்தினர் இல்லை போலுமால்.

(மொய்ம்பு - வலிமை.)

ஏமுற உலகடும் எனக் கொம்பினை
ஆமையின் ஓட்டினை அணிந்த தன்மையும்
பூமலர் மிசையவன் முதல புங்கவர்
மாமுடி அணிந்தது மதிக்கி லாய்கொலோ?

கதித்திடும் முனிவரர் கடிய வேள்வியில்
உதித்திடு முயலகன் ஒல்லென் ருர்த்தெழப்
பதத்தினில் உதைத்தவன் பதைப தைத்திட
மிதித்ததும் பிறவுநீ வினவிற் றில்லையோ?

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிகர் இல்லவன் தண்டஞ் செய்தன
இன்னமோர் கோடியுண் டிருந்தி யான்இவண்
பன்னினும் உலப்புரு செல்லும் பல்லுகம்.

ஆகவே, அருள்மிகுந்த சிவபெருமானை அடைக்கலம் என்று அடைந்தவர் உய்வர். அல்லாதவர்கள் அழிவர். நீ செய்த பெருந்தவத்திற்காக மேன்மைகளையெல்லாம் தந்தருளிய சிவபெருமான் அவைகளையெல்லாம் மாற்றவும் வல்லவராவர். அந்தக்கடவுளுடைய திருமகனோடு நீ போர் செய்வது முறையாகாது. தன்னினும் சிறந்தவர்களோடு போர் செய்தால் வெற்றியுண்டாகுமோ? முருகக்கடவுளுடைய திருவிளையாடல்களைத் தேவர்களே அறியாமல் மயங்குகின்றார்கள். அவருடைய செயல்களைக் கேட்பின், எல்லாம் வியக்கத்தக்கனவாகும். பகைவர்களுடைய முப்புரங்களையும் எரித்த சிவபெருமானுடைய திருமகனாகிய முருகக்கடவுள் அனைவரினும் ஆற்றல் மிக்கவர் என்பதைச் சாற்றவும் வேண்டுமோ? தாரகாசுரனையுங் கிரவுஞ்சமலையையும் அழித்ததே அதற்குத் தக்க சான்று அன்றோ? முருகக்கடவுளைச் சிறுவனென்று இகழாதே! செயல்களால் அவர் மிகவும் பெரியவர்! தேவர்களுடைய குறைகளை நீக்கி அவர்களுடைய செல்வங்களைக் கொடுக்கும்பொருட்டுச் சிவபெருமானே ஒரு குழந்தையைப்போல ஆறுதிருமுகங்களைக் கொண்டு தோன்றினாரென்பதல்லாமல் வேறு கூறவுங்கூடுமோ? பன்னிரண்டு திருத்தோள்களையுடைய அக்கடவுள், பானுகோபனுடைய மாயத்தினாலே மயங்கிய தம்முடைய படைகளை மீட்டற்குச் செலுத்திய வேற்படையை இந்நகரத்தின்மீது செலுத்துவாரானால் உயிரோ

டிருக்கக்கூடியவர்கள் யாவர்? பேராற்றல் பொருந்திய வேற்படையுடைய கடவுளோடு போர் செய்வோமென்பது அறிவுடைமையன்று! ஆற்றலிலே வீரவாகு என்பவனும் குறைந்தவனல்லன்! அவனோடு போர் செய்வதற்கு எண்ணுவதும் முறைமையன்று! தோற்றமும் இறுதியும் இல்லாத அறுமுகக்கடவுள் போர்செய்தற்கு வருவராயின் எல்லா உலகங்களும் அழிந்துவிடும்! நம்முடைய மேன்மைகளுஞ் செல்வங்களும் ஒழிந்துவிடும்! முருகக்கடவுள் இதுவரை நம்மை யழிக்காது தாழ்த்தது நம்மீது வைத்துள்ள திருவருளினால்தான்! நாம் இப்பொழுதே தேவர்களுடைய சிறையைநீக்கி, நம்முடைய உறவினர்களோடு விரைந்து சென்று அக்கடவுளுடைய திருவடிகளை வணங்கி வேண்டினால், அவர் நம்முடைய தீமைகள் எல்லாவற்றையும் பொறுத்து அருள்புரிவர். மேலும், பல மேன்மைகளைத்தந்து இவ்விடத்தை விட்டுத் திரும்பிப்போய்விடுவர். நாமும் உய்வோம்; இதனை நன்கு ஆராய்ந்து சொன்னேன். இதுவே சிறந்ததாகும்,'' என்று இயம்பினான்.

## சூரபன்மன் சீறுதல்

இரணியன் இயம்பியவைகளைச் சூரபன்மன் கேட்டான். அவ்வளவில் அவனுக்கு அளவற்ற சினம் உண்டாகியது. கையோடு கையைத்தட்டி நகைத்தான். அவன் இரணியனைப்பார்த்து, "நீ ஒரு சிறுவனுடைய ஆற்றலையும், தூதுவனாகவந்த வீரவாகுவினுடைய ஆற்றலையும் நான்மேற்கொண்டு செய்யவேண்டியவைகளையும் எனக்குக் கூறினாய். இதனை உனக்குச் சொல்லிக்கொடுத்தவர் யாவர்? உலகங்களைப்படைத்த நான்முகன் எனக்குப் பஞ்சாங்கம் சொல்லிக்கொண்டிருந்தான்! திருமால் என்னுடைய தம்பியாகிய தாரகனுக்குத் தோற்றான்! இந்திரன் மீன்பிடித்துக்கொடுத்துக் கொண்டிருந்தான்! அந்த முருகனா என்னுடைய பேராற்றலைத் தொலைப்பான்? அந்தச் சிவபெருமானே என்னோடு போருக்கு வந்தாலும் தோற்றோடுவானேயல்லாமல், என்னைத்தோற்கடிப்பதற்கு இயலுமா? சிறிதும் அறிவில்லாத மகனே! நான் பெற்

றுள்ள மேன்மைகளை நீ உணரவில்லையா? நீ அச்சமிகுதியினால் இவ்வாறு கூறினாய்! இனி இப்படிப்பேசுவாயாகில் உன்னை நமனுலகிற்கு அனுப்புவேன்," என்று கூறிச் சீறினான்.

## இரணியன் போருக்குப் புறப்படுதல்

தந்தை கூறிய மொழிகளைக்கேட்ட இரணியன், "நான் கூறியவைகளை இக்கொடியோன் ஏற்கவில்லை. இவன் அழிந்தொழிவது திண்ணம்," என்று எண்ணினான். பிறகு அவன் தன்னுடைய தந்தையைப்பார்த்து, "ஓ தந்தையே! நீ மிகவும் பேரறிவுடையை! நான் ஏதோ அறிந்தவன் போலச் சிலவற்றைக் கூறினேன். நான் சிறுவனாகலின் என் பிழையை நீ பொறுப்பாயாக!" என்று வேண்டினான். பிறகு இவனுக்கு முன்னே நான் இறந்தொழிவது நல்லதென்று முடிவு செய்தான். தன் தந்தையை வணங்கினான். "நான் போருக்குச் சென்று பகைவர்களை வென்று வருகிறேன்," என்று கூறினான். சூரபன்மன் அவனைப் பார்த்து, "சிறிதுபோதுக்கு முன்பு நாம் பிழைக்கும் வழியைப்பற்றிக் கூறிய நீ, இப்பொழுது போருக்குச் செல்வதற்குத் துணிந்த காரணம் யாது?" என்று கேட்டான். அதற்கு இரணியன், "உன்னுடைய மகனாகிய நான் பகைவர்கட்கு அஞ்சுவேனோ?" என்று கூறினான். சூரபன்மன், இரணியன் போருக்குச் செல்வதற்கு உடன்பட்டான்.

இரணியன் தன்னுடைய தந்தையாகிய சூரபன்மனுடைய கட்டளையைப் பெற்றுக்கொண்டு தன்னுடைய கோயிலை யடைந்தான். போர்க்கோலங்கொண்டான். தும்பை மாலையைச் சூடினான். ஆயிரம் மடங்கல்கள் பூட்டப்பெற்ற ஒரு தேரின்மீது ஏறிப் போருக்குச் சென்றான். ஆயிரந்துணைவர்களும் ஆயிரம் படைத்தலைவர்களும் போர்க்கோலங் கொண்டார்கள். நால்வகைப் படைகளோடுந் தேர்களின்மேலே ஏறிப் பக்கங்களிலே சென்றார்கள். எண்ணூறு வெள்ளந் தேர்களும், எண்ணூறு வெள்ளம் யானைகளும், ஆயிரத்து இருநூறு வெள்ளங்

குதிரைகளும், ஆயிரத்து இருநூறு வெள்ளம் காலாட்களும் பக்கங்களிற் சூழ்ந்தன. பலவகை ஒலிக் கருவிகள் முழங்கின. இரணியன் போர்க்களத்தை யடைந்தான். பூதர்கள் நகரத்தை யழித்துக்கொண்டிருத்தலை அவன் கண்டான். படைகளை நான்கு பக்கங்களினும் பிரித்துப் போர் செய்வதற்கு அனுப்பினன்.

இரணியன் போருக்கு வருதலை வீரவாகுதேவர் கண்டார். "இவன் யாவனோ?" என்று ஐயுற்றார். அப்பொழுது நாரதர் தோன்றி இரணியனைப்பற்றி வீரவாகு தேவருக்குக் கூறிச் சென்றார். வீரவாகுதேவர் தம்முடைய படைகளையும் பிரித்துப் போர் செய்வதற்கு அனுப்பினர். தாம் இரணியனை எதிர்த்துச் சென்றார். இருபக்கத்துப் படைகளுங் கைகலந்து போர் செய்தன. பூதர்கள் தலைகளையுங் கைகளையுங் கால்களையும் இழந்தார்கள். அவுணர்களும் பல வுறுப்புக்களை இழந்து குருதிப் பெருக்கில் மிதந்தார்கள். வீரவாகுதேவர் அவுணப்படையைப் பார்த்துச் சினங்கொண்டார் வில்லை வளைத்து நாணொலி செய்தார். பதினாயிரங் கணைகளைத் தொடுத்து அவுணப்படைகளின்மீது பொழிந்தார். அதனால் அவுணப் படைக்கு மிகுந்த அழிவு உண்டாயிற்று. குருதிப் பெருக்குக் கடலிற் பாய்ந்தது.

தன் படைகள் அழிந்தொழிதலை இரணியன் கண்டான். ஆயிரங்கணைகளைத் தன்னுடைய வில்லிற் பூட்டிப் பூதப்படைகள்மீது சொரிந்தான். ஆயிரங்கோடிப் பூதர்களை ஒரு நொடியிற் கொன்றான். எஞ்சிய பூதப்படைகள் அஞ்சியோடின.

## இரணியனும் நீலரும்

பூதப்படைத் தலைவர்களுள் நீலர் என்பவர் இரணியன் செய்யும் போரைக் கண்டார். வடவைத்தீபோலச் சினந்தார். இரணியனுக்கு முன் சென்றார். உலகங்களெல்லாம் நடுங்கும்படி பெருமுழக்கஞ் செய்தார். இரணியன் சினந்து ஒரு வேற்படையை யெடுத்து நீலருடைய மார்பில் எறிந்

தான். நீலர் ஒரு மாமரத்தினால் இரணியனுடைய தேரை யழித்தார். இரணியன் வேறொரு தேரிற் பாய்ந்தான். வில்லை வளைத்து நாண் பூட்டினான். ஊழிக்கால முகில்களைப் போலக் கணைகளைப்பொழிந்தான். அக்கணைகள் முழுவதும் நீலருடைய மார்பிற் புகுந்தன. அவர் பல மலைகளைப் பிடுங்கி இரணியன்மீது எறிந்தார். தன்மீது விழுந்த மலைகளையெல்லாம் இரணியன் தூளாக்கினான். நீலர் இரணியனுடைய தேரை ஒரு கையால் எடுத்தெறிந்தார். அது விண்ணிற் பறந்தது. இரணியன் வேறொரு தேரிற்பாய எண்ணினான். நீலர் அவனுடைய மார்பில் அடித்தார். அவன் நீலரைப்பிடித்து வீசினான். மீண்டு வந்த நீலர் தம்முடைய காலினால் இரணியனை உதைத்து உருட்டினார். இடியேற்றைப்போல முழக்கஞ் செய்தார். இரணியன்மேற் பாய்ந்து கால்களினால் மிதித்தார். அவ்வாறு மிதித்தபடியால் நிலங்கிழிந்தது. இரணியனுடைய முடியும் பார்பும் பிளந்தன. அவனுடைய வாயினின்றுங் குருதி வடிந்தது. அவன் ஆற்றலுஞ் சினமும் அற்றவனானான். உயிர் நீங்கும் நிலையை அடைந்தான். பிறகு அவன் மாயப்போர் செய்யத்தொடங்கினான். அவனைப் போன்ற ஓர் உருவந்தோன்றிப் பலவாறு திரிந்து போர் செய்தது. நீலர் இறுதியில் இரணியனுடைய மாயப் போரை யறிந்து நாணத்தை யடைந்தார்.

## இரணியனும் வீரவாகுதேவரும்

இரணியனுடைய மாயப்போரால் நீலர் வருத்த முறுதலை வீரவாகுதேவர் அறிந்தார். விரைந்து தேரைச் செலுத்திக்கொண்டு இரணியனுக்கு முன் வந்தார். வில்லை வளைத்து நாணொலி செய்தார். அவ்வொலியைக்கேட்டு அவுணர்கள் அஞ்சி யோடினார்கள். வீரவாகுதேவர் மாயைக்கு எதிரான அறிவுப்படைக்கலத்தை யெடுத்து இரணியனுடைய மாயையின்மீது செலுத்தினார். அவ்வளவில் மாயை அழிந்து ஒழிந்தது. தனித்தவனாக நின்ற இரணியன் வில்லை வளைத்து ஆயிரங்கணைகளை வீரவாகு தேவர்மீது செலுத்தினான். அவைகள் வீரவாகு தேவர்மீது

பட்டு அழிந்தன. வீரவாகுதேவர் நூறு கணைகளைச் செலுத்தி இரணியனுடைய வில் முதலியவைகளை அழித்தார். இரணியன் வேறொரு வில்லையெடுத்தான். வீரவாகு தேவர் ஆயிரங்கணைகளைத் தூண்டினார். அக்கணைகள் இரணியன் எடுத்த வில் கணை அம்புக்கூடு தேர் முதலியவைகளை அழித்தன. இரணியனுடைய மார்பைத் துளைத்தன. இரணியன் வேறொரு தேரிற் பாய்ந்தான். வீரவாகுதேவர் கணைகளால் அதனையும் அழித்தார். அவனுடைய மற்றைத் தேர்களையும் அழித்தொழித்தார்.

## இரணியன் மறைதல்

இரணியன் ஆற்றலழிந்து ஏங்கினான். "எனக்கு முடிவு வந்தது. என்னுயிர் இவனாலே நீங்கும்," என்று எண்ணினான். தன் தந்தை முதலானவர்களும் பிறகு இறந்தொழிவார்களென்று அறிந்தான். இந்நகரிலுள்ள நம்முடைய உறவினர்கள் பலர் இறந்தார்கள். இறவாதிருக்கின்றவர்களும் இனி இறப்பார்கள். எல்லோரும் இறந்துபோனால் இறுதிக்கடன்களை இயற்ற யாரும் இரார். என் தந்தை இறந்தால் இறுதிக்கடன் செய்தற்கு ஒரு பிள்ளையும் இல்லாதொழிவர். உலகத்திற் பழிப்புண்டாகும். மக்களைப் பெற்று அன்போடு வளர்ப்பது இறுதிக் கடன்களைச் செய்வதற்கேயாகும். போரில் நான் இறந்தால் எனக்குப் புகழுண்டாகும். இறவாதொழிந்தால் பழியுண்டாகும். எது எவ்வாறாயினும் இறுதிக்கடனைப் புரிதற்கு என்னுயிரைப் பாதுகாத்துக்கொள்வதே முறைமையாகும்," என்று எண்ணினான். விரைந்து மேலெழுந்து முகின்மண்டலத்தில் மறைந்தான். ஒரு தெய்வமறையை எண்ணிக் கயல்வடிவையெடுத்தான். கடலுக்குள் மறைந்துபோனான்.

இரணியன் மறைந்தோடிப்போனதைக் கண்ட வீரவாகுதேவர் தம்முடைய வெற்றிச்சங்கை யூதினார். பூதமள்ளர்கள் அங்கு எஞ்சிநின்ற அவுணமள்ளர்களைக் கொன்றொழித்தார்கள். போர் நிகழ்ச்சிகளைப் பார்த்துக்

கொண்டிருந்த ஒற்றுவர்கள் சூரபன்மனிடத்திற்கு விரைந்தோடிச் சென்று நிகழ்ந்ததைக் கூறினார்கள். சூரபன்மன் நாணமடைந்து பேசாதிருந்தான்.

## அ. அக்கினிமுகாசுரன் வதை

### தந்தையும் மைந்தனும்

அப்பொழுது அவ்விடத்திற்கு அக்கினிமுகன் வந்தான். அவன் சூரபன்மனுடைய மக்களில் ஒருவன். அவன் கருப்பத்தில் உண்டாகிய நாள்தொட்டுப் பதுமகோமளையாகிய தாயினுடைய உடல்முழுதும் தீச் சிந்தியது. அக்காரணத்தினால் அவன் அக்கினிமுகன் என்று பெயர் பெற்றிருந்தான். அவன் திக்குப்பாலர்களையும் திக்குயானைகளையும் வென்றவன். தன் தமையன் பகலவனைச் சிறையிட்டமையை யுணர்ந்து, தான் திங்களைப் பலநாள் சிறையிட்டவன். மிகுந்த தெய்வப்படைக்கலங்களை யுடையவன். வஞ்சனையினும் மாயத்தினும் வல்லவன். எத்தகைய படைக்சலங்களைச் செலுத்தினும் அழிக்கக் கூடியவன். இத்தன்மை பொருந்தியவன் சூரபன்மனுக்கு முன்வந்து நலம் வினவினான். நிகழ்ந்துள்ள செய்திகளை யுணர்ந்தான். தான் சென்று பகைவர்களை வென்று வருவதாகக் கூறினான். சூரபன்மனும், "அவ்வாறே செய்வாயாக!" என்று பதிலுரைத்தான்.

### அக்கினிமுகன் போருக்குப் புறப்படுதல்

அக்கினிமுகன் தன்னுடைய கோயிலையடைந்தான். போர்க்கோலம்கொண்டு புறப்பட்டான். ஆயிரம்வெள்ளம் யானைகளும், ஆயிரம்வெள்ளந் தேர்களும், இரண்டாயிரம் வெள்ளங் குதிரைகளும், அளவிறந்த அவுணப்படைகளும் போருக்கு எழுந்தன. பலவகைப் போர்முரசுகள் ஒலித்தன. போர்முரசின் ஒலியினால் முகில்கள் விழுந்தன. பலவகைப் படைக்கலங்களும் அணிகலன்களும் ஒளி செய்தன. கொடிகள் எங்கும் நெருங்கின. படைத்தலை

வர்கள் பலர் பக்கத்திற் சூழ்ந்தார்கள். இவ்வாறாக அக்கினிமுகன் பூதப்படைகளுக்கு எதிரே சென்றான்.

## இருபக்கத்துப் படைகளும் எதிர்த்துப் போர்செய்தல்

பூதர்களும் அவுணர்களும் முனைந்து போர் செய்தார்கள். விண்ணிலுள்ள உடுக்கள் உதிர்ந்தன. நிலம் அதிர்ந்தது. அவுணர்கள் வேற்படையை வீசினார்கள்; வாட்படையைச் சுழற்றினார்கள். பிண்டி, பாலம், மழு, தடி முதலிய படைக்கலங்களை ஏவினார்கள். அதனால் பூதர்கள் கணக்கற்றவர்கள் இறந்தார்கள். குருதிப்பெருக்கு எங்கும் பாய்ந்தது. பூதர்கள் வீசிய படைக்கலங்களால் அவுணர்களும் அளவற்றவர்கள் இறந்தார்கள். குதிரை யானை தேர் முதலியவைகளும் கணக்கில்லாமல் அழிந்தன. போர்க்களத்திலே கழுகுகளுங் காகங்களும் நெருங்கின. பேய்களும் பூதங்களுந் திரண்டன. நூறாயிரம் வீரர்களும் விற்களை வளைத்துக் கணைகளைப்பொழிந்து சூழ்ந்தார்கள். அவுணர்கள் அனைவருந் தோற்று ஓடினர். அக்கினிமுகாசுரன் தன்னுடைய படைத்தலைவர்கள் பலரை யனுப்பினான். அவர்கள் நூறாயிரம் வீரர்களை யெதிர்த்துக் கணைகளை மழைபோலத் தூவினார்கள். அதனை வீரபுரந்தரர் பார்த்தார். தீக்கடவுள்போலச் சினங்கொண்டார். இடியேறும் அஞ்சுமாறு பெருமுழக்கஞ்செய்து தம்முடைய படைகளுக்கு முன்வந்தார். கையிலுள்ள வில்லை வளைத்துக் கணைமழையைப் பொழிந்தார். அவுணப் படைத்தலைவர்களுடைய தேர்களையழித்தார். சோமகண்டகன் என்பவனுடைய தலையை அறுத்துக்கொன்றார். அவுணமள்ளர்கள் பலர் தேரின்மேல் வந்து வீரபுரந்தரரைச் சூழ்ந்துகொண்டு கணைமழைகளைத் தூவினார்கள். வீரபுரந்தரர் சினந்து அவர்களுடைய விற்களையும் தேர்களையும் அழித்தார். நெற்றியிலும் தோள்களிலும் மார்பிலும் கணைகள் பலவற்றை விடுத்தார். அக்கினிமுகனுக்குத் துணையாக நின்ற மேகன் என்பவன்; ஒரு தடியையெடுத்து வீரபுராந்தகருடைய தேர்ப்பாகனைக் கொன்று பெருமுழக்கஞ் செய்தான். வீரபுராந்தகர் ஒரு வேற்படையை

யெடுத்து மேகன்மீது வீசினார். அவன் அப்படையினால் இறந்து நிலத்தில் வீழ்ந்தான். மேகன் இறந்ததுகண்டு அவுணப்படைத்தலைவர்கள் அஞ்சியோடினர்.

அக்கினிமுகன் படைகளோடு வந்து வில்லை வளைத்து நாணொலி செய்தான். பிறைமுகக் கணைகளைப் பூதப்படைகள்மீது சொரிந்தான். பூதர்கள் பலர் இறந்தார்கள். பூதப்படைத்தலைவர்களுடைய தேர்கள் குதிரைகள் முதலியன அழிந்தன. குருதிவெள்ளம் பாய்ந்தது. தலையற்ற முண்டங்கள் ஆடின. பேய்க் கூட்டங்கள் பாடின. அக்கினிமுகன் போர்புரிதலை வீரபுரந்தரர் பார்த்தார். வில்லை வளைத்துக் கணைமழைகளைப் பொழிந்தார். அக்கினி முகனும் அவற்றிற் கெதிராகக் கணைமழை பொழிந்தான். வீரபுரந்தரருடைய தேரையும் வில்லையும் அம்புக்கூட்டையும் அழித்தான். நூறு கணைகளை அவருடைய மார்பில் எய்து ஆரவாரஞ் செய்தான்.

வீரபுரந்தரருடைய துணைவர்கள் எழுவரும் அக்கினி முகனை யெதிர்த்தார்கள். கணைகளைச் சிந்தினார்கள். அக்கினிமுகன், அவர்கள் விடுத்த கணைகளெல்லாவற்றையும் விலக்கினான். அவர்களுடைய தோள்களின்மேல் கணைகளை மழைபோலச் சொரிந்தான். அக்கணைகளால் எழுவரும் மெலிந்தார்கள். அக்கினிமுகனுடைய முகத்திலும் கைகளிலும் பிற வுறுப்புக்களிலும் ஆயிரக்கணக்கான கணைகளை அழுத்தினார்கள். அவனுடைய தேரையும் அழித்தார்கள். அக்கினிமுகன் வேறொரு தேரிற் பாய்ந்தான். எழுவரையுஞ் சினந்து பார்த்தான். எழுவரும் பல கணைகளை யேவினார்கள். அவனுடைய தேரையுங் குதிரைகளையும் அழித்தார்கள். மார்பையுந் துளைத்தார்கள். அக்கினிமுகன் சிவப்படைக்கலத்தை யெடுத்து வழிபாடு செய்து செலுத்தினான். எழுவரும் சிவப்படைக்கலத்தை நன்கு உணர்ந்துகொள்ளவில்லை. இது தீப்படைபோலும் என்று எண்ணினார்கள். அதற்கெதிராக வருணப்படையைச் செலுத்தினார்கள். சிவப்படைக்கலம் வருணப்படைக் கலத்தை விழுங்கியது. அடலுடன் சென்று ஏழு வீரர்களை

யும் மெலிவு செய்தது. அவர்களுடைய உயிரைக் கவர்ந்து கொண்டு மீண்டது. எழுவரும் இறந்து திருக்கைலை மலையை அடைந்தார்கள். அக்கினிமுகன் அதனைக் கண்டு மகிழ்ந்தான். பூதப்படையினர் நடுங்கி ஒடுங்கி ஓடிப் போனார்கள்.

## வீரவாகுதேவரும் அக்கினிமுகனும் போர் செய்தல்

முன்னணிவீரர்கள் அழிந்தமையையும், பூதர்கள் தோற்றோடுவதையும் வீரவாகுதேவர் கண்டார். அக்கினி முகனுக்கு எதிரே சென்றார். இருவரும் ஆண்மை மொழி களைக் கூறிக்கொண்டார்கள். பிறகு வில்லைவளைத்து நா ணொலி செய்துகொண்டார்கள். அக்கினிமுகன் வீரவாகு தேவர்மீது பதினைந்து கணைகளைச் செலுத்தி ஆரவாரஞ் செய்தான். வீரவாகுதேவர் பதினைந்து கணைகளைச் செலுத்தி அவற்றை விலக்கினார். அக்கினிமுகன் இருபது கணைகளைத் தொடுத்தான். வீரவாகுதேவர் இருபது கணை களைச் செலுத்தி அவைகளைத் தடுத்தார். அக்கினிமுகன் ஆயிரங்கணைகளை வீரவாகுதேவருடைய நெற்றியிற் செலுத்தினான். வெற்றிச் சங்கை வாயில்வைத்து ஊதினான். வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைச் செலுத்தி அக்கினி முகனுடைய தேரையும் குதிரைகளையும் வில்லையும் அழித் தார். அவன் வேறொரு தேரிற் பாய்ந்தான். ஒரு தடிப் படையை வீரவாகுதேவர்மீது வீசினான். அவர் மொட்டுக் கணையைச் செலுத்தி அத்தடியைப் பல துண்டங்களாக்கி னார். அக்கினிமுகன் வேறொரு வில்லை வளைத்துக் காற்றுப் படையைச் செலுத்தினான். வீரவாகுதேவரும் அப்படை யைச் செலுத்தினார். அக்கினிமுகன் யமப்படையைச் செலுத்தினான். வீரவாகுதேவரும் அதனையே செலுத்தி னார். அக்கினிமுகன் ஞாயிற்றுப்படையைச் செலுத்தி னான். வீரவாகுதேவரும் அப்படையை விடுத்து விலக்கி னார். மேலும் நஞ்சுபாய்ச்சிய நூறுகணைகளை அக்கினி முகனுடைய மார்பிற் செலுத்தி ஆரவாரித்தார். அவைகள் மார்பிற்பட்ட அளவில் அக்கினிமுகன் தேரில் வீழ்ந்தான். அவனுடைய மார்பாகிய மலையினின்று குருதிப்பெருக்கு

ஆறாகப் பெருகியது. அவனுடைய உயிரைக் கவரும் பொருட்டு வந்த நமன் அவனை அணுகுதற்கு அஞ்சினான். அக்கினிமுகன் ஆபத்துக்காலத்தில் தனக்கு உதவி செய்யும்பொருட்டு ஒரு காளியை வழிபட்டுக்கொண்டிருந்தான். அன்று போருக்கு வரும்பொழுதும் அக்காளிக்குப் பலியூட்டி வழிபாடு செய்துவிட்டு வந்திருந்தான். உதவி செய்யவேண்டுமென்று உயிர்போய்விடக்கூடிய அந்தச் சமயத்தில் அக்கினிமுகன் காளியை எண்ணினான்.

## காளியின் போர்

காளியானவள், காளிகளும் கூளிகளும் நெருங்கித் தன்னைச் சூழச், சூலப்படையும் வாட்படையும், ஏந்திய கைகளையுடையவளாகவும், உரப்புகின்ற ஒலியுடன் போருக்கு வந்தாள். கூளிகளை யெழுதிய கொடிகள் விண்ணையளாவின. சங்கு முதலிய வாத்தியங்கள் ஒலித்தன. காளி மடங்கலின்மீது ஏறியவளாக விருந்தாள். அவள் அக்கினிமுகனையடைந்து அவனுக்கு ஆறுதல் உரைகள் கூறினாள். பூதப்படைகளோடு போர்செய்ய எண்ணினாள். ஐம்பெரும் பூதங்களும் அஞ்சும்படி பெருமுழக்கஞ் செய்தாள். அம்முழக்கத்தைக் கேட்டுப் பூதர்கள் வருந்தினார்கள். காளியைச் சூழ்ந்துவந்த காளிகளும் கூளிகளும், சூலங்களையும் வேற்படைகளையும் மழுப் படைகளையும் கணைகளையுஞ் செலுத்தியும் மலைகளையும் மரங்களையும் உருளைப்படைகளையும் வீசிப் போர்செய்தன. காளியானவள் "பூதர்கள் யாவரையுங் கொல்வா"யென்று முத்தலைச் சூலத்தை வீசினாள். அப்படை தீயையும் புகையையும் உண்டாக்கிப் பல காளிகளை வெளிப்படுத்திப் பூதப்படை அஞ்சுமாறு சென்றது. சூலத்தின் ஆற்றலை வீரவாகுதேவர் கண்டார். இது பூதர்களுடைய உயிரையுண்ணும் என்று எண்ணினார். அதன்மேற் பதினான்கு கணைகளைச் செலுத்தினார். அவைகள் அம்முத்தலைச் சூலத்தைப் பொடியாக்கின. அதனைக் காளி கண்டாள். இவன் என்னுடைய முத்தலைச் சூலத்தைப் பொடியாக்கி

விட்டு என்னுடைய ஆற்றலை மதியாதவனாகி நிற்கிறான். இவனுடைய உயிரை யுண்பேன்,'' என்று எண்ணி வீரவாகுதேவருக்கு முன்னே சென்றாள். வீரவாகுதேவரைப் பார்த்து, “நான் முன்னே விடுத்த முத்தலைச்சூலத்தைத் தடுத்து நின்றாய்! இன்னுமொரு சூல்ப்படையிருக்கின்றது! அதனைச் செலுத்துகிறேன்! அதனால் இறப்பாய்! அதனைக் காத்தல் உன்னால் இயலாது,'' என்று கூறினாள். 'ஒன்றல்ல! ஒருங்கே நீ ஆயிரஞ் சூலங்களை விட்டாலும் அவைகளை யெல்லாம் நான் பொடியாக்குவேன்,'' என்றார் வீரவாகு தேவர். காளிக்குச் சினம் மூண்டது. உரப்பினாள். பூதப்படைகள் அஞ்சுமாறு வேறொரு சூலத்தை வீசினாள். அப்படையைக் கண்ட அனைவரும் அஞ்சியோடினார்கள். வீரவாகுதேவர் ஆயிரங் கணைகளைத் தூண்டி அப்படையை ஒடித்தார். சூலப்படை ஒடிந்து வீழ்ந்ததைக் காளி கண்டாள். ஒரு வாட்படையை யெடுத்துக்கொண்டு வீரவாகு தேவருடைய தேரிற் பாய்ந்தாள். “பெண்ணாகிய இவளுடைய உயிரை நீக்குதல் தகுதியன்று'' என்று எண்ணினார் வீரவாகுதேவர். அவளுடைய ஆற்றலைப் போக்குதற்கு முடிவுசெய்தார். இடிபோல உரப்பினார். அவளுடைய எட்டுக் கைகளையுந் தம்முடைய ஒரு கையாற் பிடித்துக் கொண்டார். மற்றொரு கையால் அவளுடைய மார்பிலே அடித்தார். காளி மயங்கி விழுந்தாள். அவ்வடியினால் அவளுடைய மார்பு கிழிந்தது. அதினின்றுங் குருதி கடல் போலப் பெருகியது. காளி மிகுந்த துன்பமடைந்தாள். அவளுடைய ஆணவம் முழுவதும் அடங்கியது. அறிவில்லாமல் யான் இங்கே போருக்கு வந்தேன் என்று எண்ணினாள். ஆற்றலில்லாமல் எழுந்தாள். வீரவாகுதேவரைப் பலவாறு புகழ்ந்தாள். 'பெருமையிற் சிறந்த வீரரே! நான் உம்முடைய பெருமையையும் ஆற்றலையும் உணர்ந்திலேன். உம்மோடு போர்செய்து இந்த நிலைமையை அடைந்தேன். இனி நான் என்னுடைய இடத்திற்குச் செல்கிறேன். விரைந்து அக்கினிமுகனைக் கொல்வீராக! ஒழிந்தவர்களையும் பிறகு அழிப்பீராக! அறுமுகக்கடவுளுடைய திருவருளைப்பெற்று நீண்டகாலம் இனிது வாழ்வீராக!''

என்று கூறி வீரவாகுதேவரிடத்திலே விடைபெற்றுக் கொண்டு தான் முன்பிருந்த விடத்திற்குச் சென்றாள்.

காளியின் செயலை அக்கினிமுகன் பார்த்துச் சின மடைந்தான். காளியின் ஆற்றலை இகழ்ந்தான். எனக்குத் துணை வேண்டியதில்லை. நான் காளியை அழைத்தது அவளுடைய ஆற்றலைப் பார்க்குமாறுதான் என்றான். பூதப்படைகளின் அண்மையில் வந்து ஒரு வில்லை வளைத் தான். நூறுகணைகளை வீரவாகுதேவர்மீது செலுத்தினான். வீரவாகுதேவர் அக்கினிமுகனைப் பார்த்து, "இறக்கும் படியாக வந்தாய்போலும்! உன்னுடைய முயற்சி நல்லது தான்!" என்று கூறி நூறுகணைகளை விடுத்து அக்கினிமுக னுடைய கணைகளையறுத்தார். அவன் சிறந்த நூறு கணைகளை விட்டு வீரவாகுதேவருடைய தேரையழித்தான். வீரவாகுதேவர் பதினான்கு கணைகளைத் தூண்டி அக்கினிமுகனுடைய வில்லை முறித்தார். அவன் வேறொரு வில்லை வளைத்து நான்முகப்படையைச் செலுத்தினான். வீரவாகுதேவர் வீரபத்திரப்படையைச் செலுத்தினார். நான்முகப்படைக்கலம் நடுங்கி யொடுங்கி யாவரும் நகைக்கும்படி தொலைந்தது. மேலும், அக்கினிமுகனுடைய உயிரைக் கவர்ந்து வீரவாகுதேவரிடத்திற்கு மீண்டது. அக்கினிமுகன் வீழ்ந்து இறந்தான்.

## வீரவாகுதேவரும் இருபத்துநாலாயிரவரும்

அக்கினிமுகன் இறந்த அளவில் அவனுடைய படை வீரர்கள்இருபத்துநாலாயிரவர் வீரவாகுதேவரைச் சூழ்ந்து கொண்டார்கள். கப்பணம், உருளை, வேல், மழு, கணை முதலிய படைகளைச் சொரிந்து போர்செய்தார்கள். வீரவாகுதேவர் அதனைக்கண்டு சினந்தார். வில்லை வளைத்து நூறுஆயிரங்கோடிக் கணைகளை யெய்தார். அவு ணர்கள் அஞ்சுமாறு உரப்பினார். கொடியகணைகளை இடை விடாமல் சொரிந்தார். அவுணப்படைஞர்கள்வீசிய படைக் கலங்கள் எல்லாம் அழிந்தன. அவர்களுடைய உறுப்பு கள் பலவாறு வெட்டுண்டு வீழ்ந்தன. அவர்கள் இறந்தார்

கள். யானைகளும் குதிரைகளும் அழிந்தன. தேர்நிரைகள் எல்லாம் ஒழிந்தன. விண்ணிற் பருந்துகள் மொய்த்தன. மண்ணிற் குருதிப்பெருக்குப் பாய்ந்தது. குருதிப்பெருக்கில் வேல் வாள் முதலிய படைக்கலங்கள் கயல்களைப் போல விளங்கின. கடலிலுள்ள கயல்கள் அவைகளைத் தம்மினம் என்று எதிர்கொண்டன. காம்பை யிழந்த வெள்ளிய குடைகள் குருதிப்பெருக்கிற் செல்லுதல், செவ்வானத்தில் முழுத்திங்கள் செல்லுவதைப்போன்று காணப்பட்டன. அவுணப்படைஞர்கள் அனைவரும் பலவாறு அழிந்து ஒழிந்தார்கள்.

## வீரவாகுதேவர் துணைவர்களைக் காணாது வருந்துதல்

பலவிடங்களினும் பிரிந்து போர்செய்த நூறாயிரம் வீரர்களும் போர்க்களத்தின் நடுவே நிற்கின்ற வீரவாகு தேவரிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அக்கினிமுகனால் ஆற்றலழிந்த வீரபுரந்தரர் ஒரு பக்கத்தில் வந்துசேர்ந்தார். வீரவாகுதேவர் எஞ்சிய எழுவரையுங் காணாது வருந்தினார். அவர்கள் எங்கே என்று கேட்டார். உக்கிரர் என்னும் படைத்தலைவர், "உம்முடைய தம்பியர்கள் எழுவரையும் அக்கினிமுகன் கொன்றுவிட்டான். அவர்களுடைய உயிரைக் கூற்றுவனுங் கொண்டுபோய் விட்டான். அவர்கள் இறந்த இடம் இங்கிருந்து நூறு யோசனைக்கப்பாலுள்ள ஓர் ஆலமரத்தடியாகும். உம்முடைய தம்பியர்கள் இறந்தது உண்மைதான்" என்றார்.

வீரவாகுதேவர் உக்கிரர் விளம்பிய மாற்றத்தைக் கேட்டுமிகுந்த துன்பமடைந்தார். அனைவரும் உடன்வர ஆலமரத்தடியை அடைந்தார். அவர்கள் மாண்டு கிடத்தலைக் கண்டார். அவர்களைத் தழுவிக்கொண்டு வாய்விட்டு அரற்றினார். பலவாறு புலம்பினார். கூற்றுவன்மீது சினந்தார். தமது முதுகிற்கட்டியுள்ள கணைகளில் ஒன்றைப் பிடுங்கி, "வேற்படையை யேந்திய முழுமுதற்கடவுளாகிய அறுமுகப்பெருமானின் இளவலாகிய வீரவாகு என்னும் யான் எழுதினேன். உயிர்களைக் கவருங்

கூற்றுவன் இதனைக் காண்க. நீ என்னுடைய இளவல்களின் உயிர்களைக் கவர்ந்துள்ளாய். இஃது உனக்கு நன்றாகாது. நீ உடனே அவர்களுடைய உயிரை விட்டுவிடுவாயாக!" என்று எழுதினார். அதனை வில்லிற்பூட்டி எமபுரத்திற்குச் செலுத்தினார். அக்கணை கடல்களையெல்லாங் கடந்து விரைவில் எமபுரத்தையடைந்து எமனுக்கு முன்னே வீழ்ந்தது. நமன் அதனை யெடுத்துப் பார்த்தான். அதிற் பொறித்துள்ள செய்தியைப் படித்துணர்ந்தான். துன்பமுற்று அஞ்சினான். "வீரவாகுதேவருடைய தம்பியர்கள் இங்கே வந்திலர். அவர்கள் எங்குசென்றார்களோ என்று எண்ணமிட்டான். அவர்கள் திருக்கைலைமலையில் இருப்பதாக அறிவுப்பார்வையில் கண்டுணர்ந்தான்.

## இறந்தவர் உயிர் பெற்று எழுதல்

எருமைக்கடாவிலேறிப் படைகள் சூழத் திருக்கைலைமலையை அடைந்தான். வீரவாகுதேவருடைய தம்பியர்களும் அக்கினிமுகனுடைய போரிலே இறந்தவர்களும் அம்மலைச் சாரலில் விஞ்சையர்களுடைய ஆடல்பாடல்களைக்கேட்டு மகிழ்ந்திருந்தார்கள். நமன் அவர்களைக் கண்டு வணங்கினான். "உங்களுடைய தமையனார் உங்களைக் காணாது வருந்தித் தேடுகிறார்! நீங்களோ இங்கு மகிழ்ச்சியுடன் அமர்ந்திருக்கிறீர்கள்! உங்களுடைய செயல் மிகவும் நன்றாகவிருக்கிறது! விரைந்து படைகளுடன் புறப்படுங்கள்" என்றான். அனைவரும் கணப்பொழுதுள் மகேந்திரபுரியிலுள்ள போர்க்களத்தை யடைந்தார்கள். தமது உடலிற்புகுந்து எழுந்தார்கள். வீரவாகுதேவருடைய அடிகளை வணங்கினார்கள். வீரவாகுதேவர் அவர்களை மார்போடணைத்துத் தழுவினார். அனைவரும் மகிழ்ச்சியடைந்தார்கள். நமன் வீரவாகுதேவரை வணங்கி நிகழ்ந்ததைக் கூறினான். "உடலில் நீற்றினையும் கண்மணியினையும் அணிந்தவர்களிடத்திலும் செல்லுதற்கு அஞ்சுகின்ற அடியேன், உம்முடைய தம்பியர்களின் உயிர்களைக் கவர்வேனோ? பசிநோய் மிகுந்தவர்கள் தீப்பொறியை உண்பார்களோ? என்மீது சினங்கொள்ளாதொழிக" என்று கூறினான்.

வீரவாகுதேவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடத்திற்குச் சென்றான். வீரவாகுதேவருந் துணைவர்களும் போர்க்களத்தில் இருந்தார்கள்.

### சூரபன்மன் செய்தியறிதல்

போர்க்கள நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண்டிருந்த ஒற்றுவர்கள் விரைந்து சூரபன்மனிடத்திற்குச் சென்றார்கள். 'உன் மகனாகிய அக்கினிமுகன் வீரவாகுதேவரோடு போர் செய்தான். அவர் விடுத்த வீரபத்திரப் படைக்கலத்தால் இறந்து தொலைந்தான்' என்று இழவுச் செய்தி கூறினார்கள். அதனைக் கேட்ட சூரபன்மன் பலவாறு வருந்திப் புலம்பினான். அன்று அந்நகர் எங்கணும் அழுகையொலி மிகுந்தது.

## ௯. மூவாயிரர் வதை

### மூவாயிரர் போருக்குப் புறப்படுதல்

அக்கினிமுகன் இறந்து ஒழிந்தமையையும், சூரபன்மன் மிகுந்த துன்பத்தினாலும் பழியினாலும் வருந்துவதையும் அவனுடைய மக்கள் மூவாயிரம்பேருங் கேள்விப்பட்டார்கள். தந்தையினுடைய இருப்பிடத்தையடைந்தார்கள். அவன் முன்னிலையில் வணங்கியெழுந்தார்கள். சூரபன்மனைப் பார்த்து, 'ஆற்றல் மிகுந்த நூறாயிரம் வீரர்களும் ஒன்பது பேராண்மையாளர்களும் பிறரும் போருக்கு வந்திருக்கும்பொழுது, தீமுகன் ஒருவனைப் போருக்கனுப்பியிருக்கிறாய்! அவன் ஒருவன் அவ்வளவு பேர்களோடு போர் செய்தற்கு ஆற்றலுடையவன் ஆவானோ? மெலியவராயின் மிகப் பலர் ஒன்று கூடின் ஆற்றல் மிகுந்தவனையுந் தோற்கடிப்பர். இஃது உலகத்தின் இயல்பு. அவ்வாறாகவும் பகைவர் கூட்டத்திற்குள் ஒருவனைப் போருக்கனுப்பியிருக்கிறாய்! மேல் நிகழக்கூடியவைகளைச் சிறிதும் எண்ணிப் பார்த்தாயில்லை! அவன் ஒருவனுக்காக இரங்கி வருந்தாதே! நாங்கள் இருக்கிறோம்; பானுகோபன் இருக்கிறான்; மற்றும் பலர் இருக்கிறார்கள்.

அளவற்ற படைகள் இருக்கின்றன. நீ உடனே எங்களைப் போருக்கனுப்பு. நாங்கள் சென்று பகைவர்கள் அனைவரையும் பிடித்துக்கொண்டு வருகிறோம். நீ எண்ணிய எண்ணங்கள் எதுவாகவிருந்தாலும் அதனை நாங்கள் விரைந்து முடிப்போம். உடனே நீ எங்களைப் போருக்கனுப்புவாயாக!' என்று கூறினார்கள்.

மக்கள் கூறிய உரைகளைக் கேட்டுச் சூரபன்மன் துன்பம் நீங்கினான். 'நீங்கள் கூறியது மிகவும் நல்லது. உடனே விரைந்து போருக்குச் செல்லுங்கள்' என்றான். அவர்கள் சூரபன்மனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்கினார்கள். பலவகையணிகலன்களைப் பூண்டு படைக்கலங்களைத் தாங்கிப் போர்க்கோலங் கொண்டார்கள். சங்கு, மத்தளம், பேரிகை முதலிய ஒலிக் கருவிகள் இடிபோல முழங்கின. கணக்கற்ற யானை, தேர், குதிரை, காலாட்படை ஆகியன நெருங்கி ஆரவாரித்தன. மூவாயிரவரும் போர்க்களத்தையடைந்தார்கள்.

## போர் தொடங்குதல்

பூதர்களும் அவுணர்களும் எதிர்த்துப் போர் தொடங்கினார்கள். பலவகைப் படைக்கலங்களை வீசிக்கொண்டார்கள். இருபக்கங்களிலும் பலர் இறந்தொழிந்தார்கள். குருதிப் பெருக்கு கடலிற் பாய்ந்தது. பூதக்கூட்டங்களின் போரால் அவுணக்கூட்டங்கள் அளவில்லாமல் மடிதலைக் கண்டு மூவாயிரவர்கள் சினங்கொண்டார்கள். விற்களை வளைத்து நாணொலி செய்தார்கள். கணைகளை மாரியாகச் சொரிந்தார்கள். பூதப்படைகள் நடுங்கியோடின. பூதப்படைத் தலைவர்கள் மூவாயிரவரை எதிர்த்தனர். கடும்போர் நடந்தது. இறுதியிற் பூதப்படைத் தலைவர்கள் தளர்ந்து வருந்தி நின்றார்கள்.

## ஆயிரவரும் மூவாயிரவரும்

மூவாயிரவருடைய வில்லாண்மைக்குப் பூதப்படைத் தலைவர்கள் தளர்ந்து நிற்றலை நூறாயிரவருள் ஓர் ஆயிரவர் கண்டனர். வீரவாகுதேவரின் உடன்பாடு பெற்று மூவா

யிரவர்களை யெதிர்த்தார்கள். விற்களை வளைத்துக் கணை களைச் சொரிந்து ஆரவாரித்தார்கள். ஆயிரவர் ஆற்றலைக் கண்ட மூவாயிரவர்களும் அளவற்ற கணைகளைச் சொரிந் தார்கள். ஆயிரவர்களுடைய தேர்களை மூவாயிரவர்கள் கணைகளால் அழித்தார்கள். ஆயிரவர் மூவாயிரவர்க ளுடைய விற்களையுந் தேர்களையுங் கணைகளால் அழித்தார்கள். பாதுகாப்பாக அமைந்து நின்ற தேர்களையும் ஒழித்தார்கள். அவர்களை நிலத்திலே நிற்குமாறு செய்தார்கள். தாங்கள் தேரிலேறிக்கொண்டு அவர்களைச் சூழ்ந்தார்கள். ஆயிரவர்கள் மலைகளைப் பறித் தும் மரங்களை முறித்தும் ஆயிரவர்மேலே வீசினுர்கள். விண்ணையும் மண்ணையும் மறைத்தார்கள். ஆயிரவர்கள் அவைகளை அரைமாத்திரையில் அழித்து வீழ்த்தினுர்கள். மூவாயிரவர்களுடைய மார்புகளிற் கணைகளைச் செலுத்தி னுர்கள். மற்றைய உறுப்புக்களையுந் துளைத்தார்கள். இறுதியில் ஆயிரவர்கள் மூவாயிரவருக்குத் தோற்றுர்கள்.

## விசயரும் மூவாயிரவரும்

தம்முடைய துணைவர்கள் தோற்றுப்போனமையை விசயர் என்பவர் கண்டு சினங்கொண்டார். மூவாயிர வர்களை யெதிர்த்துக் கணைகளை மழையாகச் சொரிந்தார். சிலருடைய கைகளை யறுத்தார்; சிலருடைய கால்களை யறுத்தார்; சிலருடைய மார்பை யறுத்தார்; சிலருடைய தோள்களையுந் தலைகளையும் அறுத்தார். அறுக்கப்பெற்ற அவர்களுடைய உறுப்புக்கள் எல்லாம் பின்னும் பின்னும் உண்டாயின. அவர்கள் விசயர்மேல் மலைகளைப் பொழிந்து போர் செய்தார்கள். நான்முகன் கொடுத்த மேன்மையின் சிறப்பால் அறுக்கப்பெற்ற அவர்களுடைய உறுப்புக்கள் மேன்மேலும் உண்டாயின. வெட்டுண்டு இறந்து போன வர்கள் மீண்டும் உயிர்பெற்றுப் போர் செய்தலை விசயர் கண்டு வியப்புக்கொண்டார். எத்தனையோ முறை அறுக் கப்பெற்ற அவர்களுடைய உறுப்புக்கள் மீண்டும் மீண்டுந் தோன்றின. விசயர் இவர்களை வெல்வது எவ்வாறு என்று எண்ணமிட்டார். முருகப்பெருமானை நினைந்து வணங்கி

ஞர். முருகக்கடவுள் விண்ணில் தோன்றி விசயருடைய கண்ணுக்குத் தோன்றுமாறு நின்று அருள் புரிந்தார். வைரவப்படைக்கலத்தை யுண்டாக்கி விசயருக்குக் கொடுத்து, "இதனைப் பகைவர்கள்மீது விடுவாயாயின் அனைவரும் இறந்தொழிவர்" என்று கூறி மறைந் தருளினார்.

### மூவாயிரவர் முடிவு

விசயர் வைரவப்படைக்கலத்தைப் பெற்று அதனைப் போற்றினார். மூவாயிரவர்களில் ஒருவன் மாயப்படையைச் செலுத்தினான். விசயரும் வைரவப்படையைச் செலுத்தி னார். அது சென்று இருளைப் பரப்பிவருகின்ற மாயப் படையை யழித்து, மூவாயிரவரையுங் கொன்று மீண்டது. மூவாயிரவரும் நொடிப்பொழுதினுள் இறந்தனர். விசயர் அதனைக்கண்டு முருகக்கடவுளைப் போற்றி நின்றார். தேவர் கள் மகிழ்ச்சி மிகுந்து மலர்மழை சொரிந்தார்கள்.

### சூரபன்மன் செய்தியுணர்தல்

போர் நிகழ்ச்சிகளைப் பார்த்துக்கொண்டிருந்த ஒற்றுவர்கள் விரைந்து சூரபன்மனிடத்துக்குச் சென்றார் கள். அவனை வணங்கினார்கள். "உன்னுடைய மக்கள் மூவாயிரம் பேரையும் நூறாயிரம் வீரர்களுள் ஒருவனே கொன்றான். நாங்கள் கூறுவது பொய்யன்று; மெய்தான்" என்றார்கள். சூரபன்மன் அதனைக் கேட்டுத் துன்பக் கடலில் ஆழ்ந்தான்.

## ௧௦. தருமகோபன் வதை

### தருமகோபன் போருக்குப் புறப்படுதல்

மூவாயிரம் மக்களையும் நினைத்து நினைத்துச் சூரபன் மன் துன்பப்பட்டுக்கொண்டிருந்தான். அப்போது தருமகோபன் என்னும் அமைச்சன் சூரபன்மனை வணங்கி னான். "நீ மனதில் துன்பமுற்று வருந்துவாயானால் நம்முடைய பகைவர்கள் களிப்பார்கள். நம்மவரும் நாணத்தையடைவார்கள். பகைவர்களுடைய போர்

முனையிலே யார் இறப்பினும், ஆற்றல் மிகுந்த வீரர்கள் சிறிதுந் தளர்ச்சியடையமாட்டார்கள். நாம் பகைவர்களை எளிதில் வென்று வெற்றியை யடையலாம். ஆற்றலற்ற வர்கள் அடைகின்ற துன்பத்தை நீ அடையாதே!'' என்று பலவாறு சூரபன்மனைத் தேற்றினன்.

சூரபன்மன் சிறிது துன்பம் நீங்கினன். "நானே சென்று பகைவர்களை வென்று வருகிறேன்'' என்று போருக்குப் புறப்பட்டான். தருமகோபன் சூரபன் மனைத் தடுத்தான். "நீ பேசாதிரு! நான் படைகளோடு விரைந்து சென்று பகைவர்களை வென்று வருகிறேன்'' என்று வேண்டிக்கொண்டான். போருக்கு எழுந்த சூரபன் மன் மீண்டும் அரியணையில் அமர்ந்தான். தருமகோபன் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தான். போர்க் கோலங்கொண்டான். புண்டரீகம் என்னுந் திக்குயானை யைக் கொண்டுவருமாறு ஏவலர்களுக்குக் கட்டளை யிட்டான். ஏவலர்கள் அவ்வாறே கொண்டுவந்து நிறுத்தி னார்கள். தருமகோபன் பல படைக்கலங்களை யேந்தி அந்த யானையின்மேல் ஏறினன். மற்றைய அமைச்சர்கள் முதலாயினோர் அவனைச் சூழ்ந்தார்கள். பல ஒலிக்கருவி கள் முழங்கின. யானைகளுந் தேர்களும் நெருங்கின. நால் வகைப் படைகளுஞ் சூழப் போர்க்களத்தை யடைந்தான். தேவர்கள் தருமகோபனைக்கண்டு அஞ்சி நடுங்கினர்கள். பூதர்கள் தருமகோபனை யெதிர்த்து ஆரவாரஞ் செய்தார்கள்.

ஆரவாரஞ் செய்கின்ற பூதர்களையும் நூறுயிரத் தெண்மரையும் வீரவாகுதேவரையும் அவருடைய துணை வர்களையும் தருமகோபன் பார்த்தான். நம்முடைய வாழ்வு அழிந்ததோ என்று இரங்கினன். ஒருவாறு தெளிந்தான்; போருக்குச் சென்றான்.

## இருபக்கத்துப் படைகளும் கை கலத்தல்

அவுணப்படைகளும் பூதப்படைகளும் போரைத் தொடங்கின. பூதர்கள் எழு, தடி, உருளை, மழு, மலை முதலியவைகளை மோதிப் போர் செய்தனர். அவுணர்கள் கணை, வேல், வாள், தடி, பிண்டி, பாலம் முதலியவை

களை வீசிப் போர் செய்தார்கள். அவுணர்களும் நாறு யிரம் வீரர்களும் கணைகளைச் சொரிந்து போர் செய்தார்கள். அவுணர்கள் பலர் இறந்தார்கள். யானைகளுங் குதிரைகளுந் தேர்களும் அழிந்தன. பூதர்களும் பலர் இறந் தார்கள். குருதி பெருகியது. நாறுயிரம் வீரர்களும் ஆற்றலிழந்து நொந்தார்கள். வீரமார்த்தாண்டர் இடி போல உரப்பி வில்லை வளைத்துக் கணைகளை அவுணப்படை மீது சொரிந்தார். அவுணர்கள் பலவாறு இறந்தொழிந் தார்கள். இறவாது ஓடியவர்களைப் பூதர்கள் தொடர்ந்து பற்றிக் கொன்றார்கள்.

## தருமகோபன் போர்

தருமகோபன் தன்னுடைய படை அழிந்தொழிதலைக் கண்டான். பூதர்களை யெதிர்த்துக் கணக்கற்ற கணைகளைச் செலுத்தினன். பூதர்கள் நடுங்கி மெலிந்தனர். தரும கோபன் ஏறிய யானையானது பூதர்களைத் துதிக்கையினல் வாரி யெறிந்து கொன்று கொடும்போர் செய்தது. நான்கு கோடுகளினலும் குத்தியது. கால்களினல் மிதித்து வருத்தி யது. வாலால் அடித்தது. யானையின் போரைக் கண்ட பூதர்கள் மலைகளைப் பிடுங்கி அதன் மேல் வீசினர். கணை களைச் செலுத்தினர். அதனல் அதன்உடம்பு முழுவதும் குருதி பெருகியது. ஆயினும், அது தன்னுடைய ஆற்றல் குறையாது பூதப்படைகளைக் கொன்றது. அந்த யானை யின் போருக்காற்றது பூதப்படைகள் உடைந்தன. அதனை வீரமார்த்தாண்டர் கண்டு சினந்தார். அந்த யானை யின்மீது பலதீக்கணைகளைச் செலுத்தினர். யானை சிறிது நேரந் தளர்ந்துநின்றது. அதனைத் தருமகோபன் கண்டு வீர மார்த்தாண்டருடைய நுதலில் நாறு கணைகளைச் செலுத்தி னன். அவர் வடிகின்ற குருதியோடு தேரிலிருந்தார். அவர் மீது தருமகோபன் ஒரு வேற் படையைச் செலுத் தினன். வீரபுரந்தரர் அதனைப் பார்த்து உடனே வந்து எதிர்த்தார். அவ்வேற்படை இரு துண்டாகும்படி ஒரு கணையைத் தொடுத்தார். அவுணர்கள் அஞ்சும்படி கணை மழைகளினல் தருமகோபனை மறைத்தார். அவனுங் கணை

மழைகளைப் பொழிந்து அக்கணைகளைத் தடுத்தான். வீரபுரந்தரர்மீது ஒரு தடியை வீசினான். அது மார்பிற் பட்டதனால் வீரபுரந்தரர் தளர்ந்தார்.

## தருமகோபனும் வீரவாகுதேவரும்

தருமகோபனுடைய செய்கையை வீரவாகுதேவர் பார்த்தார். அவனுக் கெதிரே விரைந்து சென்றார். அவரைத் தருமகோபன் மிகுந்த சினத்துடன் முறைத்துப் பார்த்தான். "நான் உன்னைக் கொல்வேன். நீ உன்னைக் காத்துக்கொள்ள முடியுமானாற் காத்துக்கொள்," என்றான். வீரவாகுதேவர் தருமகோபனைப் பார்த்து, "எல்லோரிடத்தினும் வெற்றியைப் பெறும் நான் உன்னிடத்தில் தோல்வியைப் பெறுவேனோ? நீ கற்றுள்ள போரை விரைந்து செய்வாயாக," என்றார். தருமகோபன் யானையின்மீதிருந்து வில்லை வளைத்து இடிபோல நாணொலி செய்தான். கணைகளைத் தொடுத்து வீரவாகுதேவருடைய உடலை மறைத்தான். அக்கணைகள் வீரவாகுதேவருடைய உடலிற்பட்டுக் கூர்மழுங்கிப் பயனின்றிப் பக்கத்தில் விழுந்தன. வீரவாகுதேவர் சினந்து ஒரு வேற்படையையெடுத்துத் தருமகோபனுடைய மார்பில் எறிந்தார். அவன் அதற்கெதிராகக் கணைகளை விடுத்தான். அவ்வேற்படை தருமகோபன் செலுத்திய கணைகளையெல்லாம் அழித்து, அவன் மனம் நடுங்கும்படி தாக்கி, மார்பு மூடியைக் கிழித்து மார்பிற் புகுந்து புறத்திற் போயது. தருமகோபன் மார்பினின்றும் குருதி வடிந்தது. அவன் அறிவிழந் திருந்தான். தருமகோபனுடைய நிலைமையைப் புண்டரீகம் என்னும் யானை உணர்ந்தது. வீரவாகுதேவரைக் கொல்ல எண்ணியது. அவரைக் கோடுகளினால் தாக்கியது. போர்க்களத்திற் கிடந்த ஓர் எழுப்படையையெடுத்துத் தேர்ப்பாகன் இறக்கும்படி அடித்தது. வீரவாகுதேவர் வேறொரு தேரிற் பாய்ந்தார். தம்மேல் வரும் யானையினுடைய துதிக்கையை ஒரு கையாற் பற்றிக் கொண்டு, மற்றொரு கையால் அதனுடைய கன்னத்தில் அடித்தார். அதனைத் தூக்கி வெகுதொலை செல்லுமாறு

எறிந்தார். யானை விண்ணுலகம் வரை சென்று மீண்டு மண்ணுலகத்தில் வந்து விழுந்தது. விழுந்த யானை எழுந்து ஒரு பக்கமாகச் சென்றுவிட்டது. தருமகோபன் அறிவு தெளிந்து எழுந்தான். ஒரு தடிப்படையை யெடுத்து வீரவாகுதேவருடைய மார்பில் எறிந்தான். அவர் அதனை வாட் படையினால் துணித்தார். தருமகோபன் குலிசத்தை வீசினான். வீரவாகுதேவர் அதனைக் கையினாற் பற்றினார்; தருமகோபனுடைய மார்பில் அடித்தார். அவன் நிலத்தில் விழுந்தான். வீரவாகுதேவர் கால்களினால் உதைத்தார். தருமகோபன் இறந்தான். அவனுடைய படைகள் அழிந் தோடின.

## புண்டரீகம் என்னும் யானை தன் திசை அடைதல்

புண்டரீகம் என்னும் யானை தருமகோபன் இறந்ததைக் கண்டு வருந்தியது. வீரவாகுதேவரை யடைந்து பணிந்தது. "அடியேன்மீது சினங்கொள்ளற்க. அடியேன் கூறுவதைக் கேளும். பொய் என்று எண்ணற்க. அடியேனுடைய பெயர் புண்டரீகம். நான் உலகத்தார் போற்றுஞ் சிறப்பையுடையேன். திக்கைக் காவல் புரிவேன். கீழ் மகனாகிய இந்தத் தருமகோபனுடைய சிறையிற் பலநாட்களாக அகப்பட்டுக்கொண்டேன். அவனை இன்றுவரை சுமந்து அவனுடைய ஊர்தியாகத் திரிந்தேன். அவனது ஏவல்கள் பலவற்றையுஞ் செய்தேன். அவனுடைய ஏவலை நான் மறுத்திருப்பின், அவன் என்னைக் கொன்றிருப்பான். என் ஊனையுந் தின்றிருப்பான். மிகுந்த ஆற்றல் படைத்த தருமகோபனை நீர் கொன்றீர். உம்மைத் தவிர வேறு யாரால் அவனைக் கொல்ல இயலும்? நீர் தருமகோபனைக் கொன்றமையினாலே தேவர்கள் துன்பந் தீர்ந்தார்கள்? நானும் உய்ந்தேன். நான் முன்செய்த தீவினை நீங்கியது. நான் உம்மை யணுகுதற்கு எத்தவம் இயற்றினேனோ! அடியேன் என்னுடைய திக்குக்குச் செல்லுகிறேன்." என்று கூறியது. யானையின் உரைகளைக்கேட்ட வீரவாகு தேவர், "நீ உன்னுடைய இடத்திற்குச் செல்வாயாக" என்று கட்டளையிட்டார். அது சென்றது.

### சூரபன்மன் செய்தியறிதல்

போர்க்களப் நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண்டிருந்த ஒற்றுவர்கள் விரைந்து சூரபன்மனிடத்திற்கு ஓடினார்கள். அவனுடைய கால்களை வணங்கினார்கள். "தருமகோபன் வீரவாகுதேவரோடு போர்புரிந்து இறந்தான். படைகளும் அழிந்தன. அவன் ஏறிச்சென்ற புண்டரீகம் என்னும் யானை தன்னுடைய இருப்பிடத்திற்குச் சென்றுவிட்டது" என்று கூறினார்கள். சூரபன்மன் துன்பக்கடலில் ஆழ்ந்தான்.

## கக. பானுகோபன் முடிவு

### சூரபன்மனும் பானுகோபனும்

மறுநாட் காலையில் தூதுவர் சிலர் பானுகோபன் இடத்திற்குச் சென்றார்கள். பானுகோபனைப் பார்த்து, "பானுகோபனே! நீ மாயப்படையைச் செலுத்தி வீரவாகுவையும் அவன் படைகளையும் மயக்கி, நன்னீர்க் கடலில் இட்டு வந்தாய். அதனைத் தேவர்கள் அறுமுகக் கடவுளுக்குச் சொன்னார்கள். அவர் தமது வேற்படையைச் செலுத்தினர். அஃது ஆறு கடல்களையுந் தாண்டி நன்னீர்க் கடலை யடைந்தது. வேற்படையைக் கண்ட அளவில் மாயப் படைக்கலம் அழிந்துபோய்விட்டது. வீரவாகுவும் மற்றைய வீரர்களும் மீண்டு வந்துவிட்டார்கள். அவர்கள் இந்நகரத்துட் புகுந்து அழிவுசெய்யத் தொடங்கினார்கள். அதனை உன் தந்தையாகிய சூரபன்மன் அறிந்து இரணியன், தீமுகன், மூவாயிரர், தருமகோபன் ஆகியவர்களை முறையே போருக்கனுப்பினான். அவர்களுள், இரணியன் போர்செய்து தோற்றுக் கடலி[illegible] ஒளித்துக்கொண்டான். மற்றவர்கள் இறந்துபே[illegible] நம் நகரத்தில் இருந்த படைகளும் அழிந்தன[illegible] பர்கள் இன்னும் இந்நகரத்தில்தான் இருக்கிறார்க[illegible]று கூறினார்கள்.

தூதுவர் கூறியவற்றைக்கே[illegible]னுகோபன், நம் மூடைய பெரிய வாழ்க்கை [illegible] வந்துவிட்டது போலும் என்று எண்ணி இர[illegible] தன் தந்தையி

னுடைய கோயிலுக்குச் சென்றான். தன் தந்தையைக் கண்டு வணங்கினான். அவனுக்குப் பல அறிவுரைகளைக் கூறலானான்.

## பானுகோபன் கூறும் அறிவுரை

"பேரரசே! நான் கூறும் இவ்வுறுதிமொழிகளை நீ நன்கு கேட்பாயாக! மாயை கொடுத்த படையினால் நான் அனைவரையும் மயக்கி நன்னீர்க்கடலில் இட்டுவந்தேன். அதனையுணர்ந்து வேற்படையைச் செலுத்தி, உடனே அனைவரையும் மீட்டுவிட்ட அச்சிறுவரை வெல்வது கனவினும் முடியாது. எல்லாந் தெரிந்த உனக்கு நான் கூறத் தக்கது யாதிருக்கின்றது? நீ முதனாள் அந்த அறுமுகக் கடவுளோடு போர்செய்து வருந்தி, படைவலியுமிழந்து புறங்காட்டி யோடிவந்தமையாற் பிழைத்தாய்! நீ மறைந்து வந்தும் அக்கடவுள் சினங்கொண்டிலர்! அவர் சினங் கொண்டால் எல்லா வுலகங்களும் அழிந்துபோகும்! திருமாலினுடைய உருளைப்படையைப் பதக்கமாக அணிந்த தாரகாசுரனைக் கிரவுஞ்சமலையோடு அழித்த பேராண்மையாளரைப் போர்செய்து வெல்பவர் யாவர்? எல்லோராலும் புகழப்பெறும் அந்தக் கடவுளுடைய ஆற்றலைப்பற்றிச் சொல்வதென்ன? அவருடைய ஏவலைச் செய்யும் வீரவாகுவை வெல்வதுகூட அரிது! நான் ஓர் உறுதிமொழியை உரைக்கின்றேன். தேவர்களுடைய சிறையை விடு. அறுமுகக்கடவுள் நம்மிடத்திற் கொண்டுள்ள சினந்தணிந்து, தாம் வந்தவிடத்திற்குத் திரும்பிச் சென்றுவிடுவார். அதன்பின் உன்னுடைய பெருவளங்கள் அளவில்லாத காலம் நிலைபெற்றிருக்கும். நாம் என்றும் அழியாச்சிறப்புடன் விளங்கியிருக்கலாம்.

மாயை தந்ததொல் படையினால் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கடல் இட்டனன் சூரது புகல
ஆய காலையில் வேல்விடுத் தவர்தமை மீட்ட
சேயை வெல்வது கனவிலும் இல்லையால் தெரியின்.

(செறுநர் - பகைவர். தூயநீர்க்கடல்-நன்னீர்க்கடல்.)

தெரிந்த மற்றுனக் குரைப்பதென் முற்பகல் செவ்வேல்
பொருந்து கைத்தலத் தாறுமா முகனொடு பொருது
வருந்தி வன்படை ஆற்றலும் இழந்தனை வறிதாய்
இரிந்து மற்றிவண் வருதலால் உய்ந்தனை எந்தாய்!

(பொருது - போர்செய்து, இரிந்து - தோற்று.)

ஏற்ற தோர்சிலை இழந்தனை மானமும் இன்றித்
தோற்று வந்தனை தொல்வரத் தியற்கையும் தொலைந்தாய்!
சீற்றம் உற்றிலன் முருகவேள் அவன்சினஞ் செய்யில்
ஆற்று மேஎலா அண்டமும் புவனங்கள் அனைத்தும்.

(சிலை - வில். மானம் - பெருமை.)

ஆர ணன்தனை உலகொடும் உண்டுமுன் அளித்த
கார ணன்தனி ஆழியைக் களத்திடை அணிந்த
தார கன்தனை நெடியமால் வரையொடுந் தடிந்த
வீர வீரனை யாவரே வன்மையால் வெல்வார்?

(ஆரணன் - நான்முகன். களம் - கழுத்து. தடிந்த - கொன்ற.)

புல்லி தாகிய விலங்கினைப் படுப்பவர் புதலுள்
வல்லி யந்தன்க் குண்டியாய் மாய்ந்திடுங் கதைபோல்
எல்லை இல்பகல் அமரரை அலைத்திடும் யாமும்
தொல்லை நாள்வலி சிந்தியே குமரனால் தொலைந்தோம்!

(படுப்பவர் - அழிப்பவர். வல்லியம் - புலி.)

கோட லுஞ்சுனைக் குவளையும் குளவியும் குரவும்
ஏட லர்ந்திடு நீபமும் புனைந்திடும் இளையோன்
பாடல் அம்திறல் உரைப்பதென் ஆங்கவன் பணித்த
ஆடல் அம்புயத் தண்ணலை வெல்வதும் அரிதால்!

(கோடல் - செங்காந்தள். ஆடல் அம்புயத்து அண்ணல் - வீரவாகுதேவர்.)

ஆற்றல் மைந்தரை இழந்தனை நால்வகை அனிகத்
தேற்ற மற்றனை என்னுடன் ஒருவன்நீ இருந்தாய்
மேற்றி கழ்ந்தநின் குலத்தினை வேரொடு வீட்டக்
கூற்றம் வந்ததும் உணர்கிலை இகலைமேற் கொண்டாய்!

(அனிகம் - படை. வீட்ட - அழிக்க.)

உறுதி யொன்றினி மொழிகுவன் பொன்னகர் உள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
அறுமு கத்தவன் வந்துழி மீண்டிடும் அதன்பின்
இறுதி இல்பகல் நிலைக்கும்நின் பெருவளம் என்றான்.

(செற்றம் - பகை.)

## சூரபன்மன் மறுத்துரைத்தல்

பானுகோபன் பகர்ந்தவைகளைக்கேட்ட சூரபன்மன் எள்ளி நகையாடினான். "தம்பி! உன்னுடைய மந்திரச் சூழ்ச்சி நன்றாகவிருக்கின்றது! இப்பொழுது யான் எளியவனாகித் தேவர்களுடைய சிறையை நீக்கினால் என்னை எவர் ஒருபொருட்படுத்துவர்? பெருமையிழந்து ஆற்றலிழந்து, உலகில் உயிரோடிருப்போர்க்கு உளதாகும் பழி எழுமையினும் நீங்குமா? ஆற்றலற்றவர்கள்போல நான் இப்பொழுது தேவர்களுடைய சிறையை விடுவேனோ? கட்டழகு, இளமை, ஆற்றல், செல்வம், சுற்றம், உடல் முதலியன நிலையுடையனவல்ல. புகழ் என்று சிறப்பித்துச் சொல்லப்பெறுகிற ஒன்றுதான் நிலைபெறுவது! பகைவர்களுடைய போரில் உயிரைவிடினும் தேவர்களுடைய சிறையைவிடுவதுண்டோ? தமக்கு ஒரு துன்பம்வரினும் அல்லது இறக்கநேரிடினும், தம்மோடு கூடப்பிறந்த பெருமையைப் பெரியோர்கள் விடுவார்களோ? சூரன் என்னும் பெயர் பெற்ற யானும் நிலையற்ற செல்வத்தை விரும்பி மேற்கொண்ட கொள்கையை விடமாட்டேன். இன்னும் ஓர் ஊழிகாலம் இவ்வுலகத்தில் இருப்பினும் இறப்பதன்றி இவ்வுலகில் உயிரோடிருப்பவர் யார்? பிறந்தவர் இறத்தல் உறுதி. திருமாலையும் வென்ற நான், நிலையற்ற வாழ்வை விரும்பித் தேவர்களுக்கஞ்சி, இந்த உயிரைச் சுமக்கமாட்டேன். மகனே! நீ அஞ்சினாய்! உன்னுடைய மாளிகைக்குப் போய் உறங்கு! அழியா வரத்தினையுடைய நான் அழிவதில்லை!" என்று சினத்தொடு கூறினான்.

பேர்எழில் இளமை ஆற்றல் பெறலரும் வெறுக்கை வீரம்
நேர்அறு சுற்றம் யாக்கை யாவையும் நிலைய அன்றே
சீர்எனப் பட்ட தன்றோ நிற்பது செறுநர் போரில்
ஆர்உயிர் விடினும் வானோர் அருஞ்சிறை விடுவ துண்டோ?
(வெறுக்கை - செல்வம். நிலைய - நிலைப்பன.)

இறந்திட வரினும் அல்லால் இடுக்கண்ஒன் றுறினும் தம்பால்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர் பெற்றேன்!

இன்னுமோர் ஊழி காலம் இருக்கினும் இறப்ப தல்லால்
பின்னுமிங் காவ துண்டோ பிறந்தவர் இறக்கை திண்ணம்
மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி யிந்த
மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் தனையும் வென்றேன்.
(மாயவன்—மாயஞ் செய்வதிற் சிறந்த திருமால்.)

## பானுகோபன் போருக்குப் புறப்படுதல்

சூரபன்மன் கூறியவைகளைப் பானுகோபன் கேட்டான். யான் கூறியவைகளை எந்தை உள்ளத்திற் கொண்டிலன். ஊழை வென்றவர் உலகில் யாவர் உளர்? நானும் அதற்கேற்ற செயலைச் செய்வேன் என்று எண்ணினான். தன் தந்தையைப்பார்த்து, "அறிவில்லாத யான் கூறியவைகளைச் சிறிதும் மனத்திற்கொள்ளாது பொறுத்துக்கொள். நான் போருக்குச் சென்று பகைவர்களை வென்று மீள்கிறேன்," என்று கூறினான். சூரபன்மனுடைய அடிகளில் விழுந்து வணங்கினான். சூரபன்மன் சினந்தணிந்து மகிழ்ச்சியடைந்தான். அவன் தன் மகனைப் பார்த்து, "மகனே! நீ கூறியது நன்று! படைகளைத் திரட்டிக் கொண்டு போருக்குச் செல்வாயாக!" என்று கூறினான்.

பானுகோபன் தன்னுடைய கோயிலை யடைந்தான். பல தேவர்களுந் தந்த படைக்கலங்களையெல்லாம் எடுத்துக் கொண்டான். மார்பில் ஊடியைக் கட்டினான். விரலிற் புட்டிலைச் சேர்த்தான். கையில் தோற்பட்டையைக் கட்டி வில்லை யேந்தினான். அம்புக்கூட்டை முதுகிற் கட்டினான். ஒரு பெரிய தேர்மீது ஏறினான். நால்வகைப் படைகளுங் கணக்கின்றி அவனைச் சூழ்ந்தன. பலவகைப் போர்ப் பறைகள் முழங்கின. கொடிகள் கதிரவன் மண்டிலத்தை மறைத்தன. பானுகோபன் போர்களத்தையடைந்தான். தன்னுடன் பிறந்தோர்கள் இறந்துகிடத்தலைக் கண்டு வருந்தினான். பெருஞ் சினங்கொண்டு போர்செய்யத் தொடங்கினான்.

## போர் தொடங்குதல்

அவுணப்படைகளும் பூதப்படைகளும் எதிர்த்தன. போர்ப்பறைகள் முழங்கின. தூளியெழுந்து விண்ணை மறைத்தது. பூதர்கள் மலைகளையும் மரங்களையும் எறிந்தார்

கள். அவுணர்கள் எழு, கலப்பை, மழு, தடி, கணை ஆகியவைகளைச் செலுத்தினார்கள். போர் கடுமையாக நடைபெற்றது. இருபக்கத்துப் படைகளும் கணக்கின்றி அழிந்து ஒழிந்தன. குருதி பெருகியது. பிணமலைகள் விண்ணை மறைத்தன. நாய் நரிகளும் காக்கைகளும் பருந்துகளும் உலாவின. அவுணப்படைகள் மிகுதியாக அழிந்து ஒழிந்தன. தன் படைகள் மிகுதியாக அழிதலைப் பானுகோபன் கண்டான். வில்லை வளைத்துக் கணைகளைச் சொரிந்தான். பூதர்கள் மரங்கள் மலைகள் சூலம் எழு முதலானவற்றைச் சொரிந்தார்கள். பானுகோபன் தீக் கணைகளைத் தூண்டினான். பூதர்கள் விடுத்த படைகள் எரிந்து ஒழிந்தன. பூதர்கள் பானுகோபனுக்குத் தோற்றோடினார்கள். பூதர்களுக்குத் தோற்றோடிய பானுகோபனுடைய படைகள் பானுகோபனிடம் வந்து கூடின.

## வீரவாகுதேவரும் பானுகோபனும்

பூதர்களுடைய தோல்வியையும் அவுணர்களுடைய வெற்றியையும் வீரவாகுதேவர் கண்டார். பூதப்படைகளுக்கு எதிரே சென்றார். ஒரு வில்லை வளைத்தார். அவுணர்கள், தடி, தோமரம், சூலம் முதலாகிய படைகளை வீரவாகுதேவர்மீது சொரிந்தார்கள். அவைகள் அழிந்தொழியும்படி வீரவாகுதேவர் கணைகளை விடுத்தார். அவுணர்களுடைய கால் கை தலை முதலாகிய உறுப்புக்கள் அறுபடும்படி மேலுங் கணைகளைப் பொழிந்தார். வீரவாகு தேவருடைய கணைகளால் தேர்களும் குதிரைகளும் யானைகளும் அழிந்தன. அவுணர்களுடைய போர் ஒழிந்தது. குருதி பெருகியது. பானுகோபன் தன்னுடைய வில்லில் ஆயிரங்கணைகளைப் பூட்டி வீரவாகுதேவருடைய மார்பிற் செலுத்தினான். அக்கணைகள் வீரவாகுதேவருடைய மார்பைத் துளைத்துப் புறஞ்சென்றன. வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைப் பூட்டிப் பானுகோபனுடைய தோளிற் செலுத்தினார். அவைகளால் பானுகோபன் வருந்தினான். நூறு கணைகளினால் வீரவாகுதேவருடைய வில்லை முறித்தான். வீரவாகுதேவர் ஒருவேற்படையை எடுத்து பானு

கோபனுடைய நெற்றியில் எறிந்தார். அது நெற்றியிற் புகுந்த அளவில் குருதிப்பெருக்கு ஆறுகப் பெருகியது. பானுகோபன் ஓர் இறைப்பொழுது உணர்விழந்து தளர்ந்து நின்றான். வீரவாகுதேவர் விரைவில் வேறொரு வில்லை யெடுத்து வளைத்துக் காற்றுப்படைக்கலத்தைச் செலுத்தினர். பானுகோபனும் அதனைவிட்டான். வீரவாகு தேவர் தீக்கணையைச் செலுத்தினர். பானுகோபனும் அதனை விடுத்தான். வீரவாகுதேவர் விடுத்த தீககணை அதனோடு போர்செய்து மீண்டது. பானுகோபன் ஞாயிற்றுப்படைக்கலத்தை யெடுத்தான். "இவனுடைய உயிரைக் கவருதி," என்று கூறிச் செலுத்தினன். வீரவாகுதேவர் தாமும் அதனைச்செலுத்தி அதனை யழித்தார். பானுகோபன் நான்முகப்படையை விடுத்தான். வீரவாகுதேவரும் அதனைச் செலுத்தினர். அது சென்று பானுகோபன் விடுத்த நான்முகப்படையை நீக்கிவிட்டது. பானுகோபன் நாராயணப்படையைச் செலுத்தினன். வீரவாகுதேவர் அப்படையைவிடுத்து அதனை விலக்கி விட்டார். பானுகோபன் மாயப்போர் செய்ய எண்ணினன். மாயமறையை எண்ணித் தேரோடு மறைந்தான். வீரவாகுதேவருக்கு நாற்புறங்களினும் தேருடன் சுற்றி வந்தான். கணைகளைப்பொழிந்தான். வீரவாகுதேவருடைய உடலிலிருந்து குருதி ஆறுகப்பெருகியது. பானுகோபன் மாயஞ்செய்கிறுன் என்பதை வீரவாகுதேவர் உணர்ந்தார். அறிவுக்கணையை எடுத்து வழிபாடு செய்து பானுகோபனைக் குறித்துச் செலுத்தினர். அதனுற் பானுகோபனுடைய மாயை அழிந்தது. அவன் தேருடன் விண்ணில் வெளிப்பட்டு நின்றுன். வீரவாகுதேவர் தாமும் தேருடன் விண்ணிலுள்ள பானுகோபனுக்கு முன் சென்றுர். அவன்மேற் பலகோடிக் கணைகளைச் சொரிந்தார். பானுகோபனும் கணைகளைப்பொழிந்தான். இருவருங் கடுமையாகப் போர் புரிந்தார்கள்.

பானுகோபன் நூறுயிரங்கணைகளால் வீரவாகுதேவருடைய தேரைப் பொடியாக்கினன். வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைத் தூண்டிப் பானுகோபனுடைய தேரை

யழித்தார். பானுகோபன் நஞ்சூட்டப்பெற்ற இருபத்தைந்து கணைகளை வீரவாகுதேவருடைய மார்பில்செலுத்தினான். அக்கணைகளால் வருந்திய வீரவாகுதேவர் பதினான்கு கணைகளைச் செலுத்திப் பானுகோபனுடைய முடியை அழித்தார். பதினான்கு கணைகளைப் பானுகோபன் தூண்டி வீரவாகுதேவருடைய மார்புமூடியை யறுத்தான். வீரவாகுதேவர் ஏழு பிறைமுகக் கணைகளைச்செலுத்திப் பானுகோபனுடைய வில்லை முறித்தார். பானுகோபன் சினமடைந்து முன்னாளில் நான்முகன் கொடுத்த வேற்படையை யெடுத்து, "இவனைக் கொல்!" என்று கூறி வீரவாகுதேவர்மீது வீசினான். அவ் வேற்படையைத் தடுக்குமாறு வீரவாகுதேவர், ஆற்றல் மிகுந்த ஆயிரங் கோடிக் கணைகளைச் செலுத்தினார். அஃது அக்கணைகளெல்லாவற்றையும் அழித்துவிட்டு விண்வழியாக வந்தது. வீரவாகுதேவர் அதனுடைய ஆற்றலைக் கண்டார். சிவபெருமான் கொடுத்த வாட்படையை யெடுத்தார். இரு துண்டாகும்படி அவ்வேற்படையை வெட்டினார். அதனைக் கண்டு தேவர்கள் மகிழ்ந்தார்கள். அவுணர்கள் ஏங்கித் திகைத்தார்கள். வீரவாகுதேவர் வாட்படையை உறையிலிட்டார். தான் செலுத்திய வேற்படை துணிபட்டதைப் பானுகோபன் பார்த்தான். வாட்போர் செய்யும்படி வீரவாகுதேவருக்கு முன் சென்றான். அவர் பல்லாயிரங் கணைகளைச் செலுத்திப், பானுகோபனுடைய மார்பைக் கிழித்தார். மலையருவிபோலக் குருதி பெருகியது. பானுகோபன் எதையும் பொருட்படுத்தாமல் வீரவாகுதேவரைக் கிட்டினான். அவருடைய வில்லை வாளினால் துணித்தான். இடிபோல உரப்பி வாளை வீசித்திரிந்தான். வீரவாகுதேவரும் தம்முடைய வாட்படையை உருவிக் கொண்டார். இருவரும் மிகுந்த சினத்துடன் வாட்போர் புரிந்தனர். பானுகோபன் தான் கற்ற வாள் வித்தையின் ஆற்றலால் வீரவாகுதேவருடைய வாள்வீச்சை விலக்கினான். அவருடைய திருத்தோளில் வெட்டினான். தோளினின்றுங் குருதி பெருகியது. வீரவாகுதேவர் பானுகோபனுடைய வலத்தோளை வெட்டினார்.

### பானுகோபன் அழிதல்

அவனுடைய வலக்கையோடு வாட்படை கீழே விழுந்தது. பானுகோபன் கீழேவிழும் வாட்படையை இடக்கையாற் பற்றிக்கொண்டு போர்செய்ய முயன்றான். வீரவாகுதேவர் பானுகோபனுடைய இடக்கையையுந் துணித்தார். அவனுடைய தலையை அறுத்தார். அவன் இறந்து வீழ்ந்தான். அவனுடைய உயிரை நமன் கவர்ந்து கொண்டு சென்றான். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். சதிரவன் கவலை நீங்கினான்.

### அனைவரும் முருகக்கடவுள் இருக்குமிடத்திற்குச் செல்லுதல்

வீரவாகுதேவர் மகிழ்ச்சியடைந்து விண்ணினின்றும் மண்ணில் இறங்கினார். "முருகப்பெருமானை யடைந்து வணங்குவோம் வாருங்கள்!" என்று துணைவர்களைக் கூப்பிட்டார். அனைவரும் முருகக்கடவுள் எழுந்தருளி யிருக்குமிடத்தை யடைந்தார்கள். அப்பெருமானுடைய அடிமலர்களைப் போற்றி வணங்கினார்கள். அனைவருக்கும் முருகக் கடவுள் திருவருள் புரிந்தார். அனைவரும் தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்று இனிது அமர்ந்திருந்தார்கள்.

### சூரபன்மன் செய்தியறிதல்

பானுகோபன் இறந்தமையை ஒற்றர்கள் கண்டார்கள். "இவர்கள் இவ்வாறு பானுகோபனையே கொன்றார்களென்றால் சூரபன்மனையுங் கொல்வார்கள்" என்று எண்ணி நடுங்கினார்கள். மிக விரைந்து சூரபன்மனுடைய அவைக்களத்துக்குட் புகுந்தார்கள். சூரபன்மனுடைய அடியில் விழுந்து வணங்கினார்கள். "பேரரசே! முன்பு இங்கு வந்த தூதுவனால் உன்னுடைய மகன் இறந்தான்!" என்றார்கள். அதனைக் கேட்டுச் சூரபன்மன் பலவாறு வருந்திப் புலம்பினான். பானுகோபன் தாயாகிய பதுமகோமளையும் பலவாறு வருந்திப் புலம்பினாள். நகரமெங்கும் அழுகையொலி மிகுந்தது. சூரபன்மன் தன் தம்பியாகிய சிங்கமுகனை அழைத்து வருமாறு தூதர்களுக்குக் கட்டளையிட்டான்.

# ௧௨. சிங்கமுகாசுரன் வதை

## சிங்கமுகன் செய்தியுணர்தல்

சிங்கமுகன் வடகடலில் உள்ள ஆசுரம் என்னும் நகரில் அரசுபுரிந்துகொண்டிருந்தான். தூதுவர்கள் விரைந்து சென்று அவனைக் கண்டார்கள். சிங்கமுகன் தூதுவர்களைப்பார்த்து 'எங்கே வந்தீர்கள்?' என்று உசாவினான். "நம்மரசனாகிய சூரபன்மன் உன்னை அழைத்துக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான். விரைந்து வருக!' என்றார்கள். சிங்கமுகன் அதனைக் கேட்டு, அங்கே நிகழ்ந்தது யாது? கூறுங்கள்' என்றான். தூதுவர்கள் நிகழ்ந்தவைகளை விளக்கமாகக் கூறினார்கள்.

## சிங்கமுகன் மகேந்திரபுரியை அடைதல்

தூதர்கள் கூறியவற்றைச் சிங்கமுகன் கேட்டான். நால்வகைப் படைகளையுந் திரட்டிக்கொண்டு புறப்பட்டான். ஒரு நாழிகைப் பொழுதில் மகேந்திரபுரியை யடைந்தான். தேவர்கள் அவனைக் கண்டு அஞ்சியோடினார்கள்.

## சிங்கமுகனும் சூரபன்மனும்

சிங்கமுகன் சூரபன்மனுடைய கோயிலையடைந்தான். சூரபன்மனுடைய கால்களிலே விழுந்து வணங்கினான். சூரபன்மன் அவனைக் கையினால் எடுத்து மார்போடு இறுகத் தழுவிக்கொண்டான். சிங்கமுகன் சூரபன்மனைப் பார்த்து, "உனக்கு வந்த துன்பம் யாது? கூறுவாயாக!" என்றான்.

சூரபன்மன் சிங்கமுகனைப் பார்த்து, "சிவகுமாரன் என்பவன் படைகளுடன் இந்நகருக்கு வந்தான். அவனுடைய படைகள் போர்செய்ய என் மக்கள் இறந்தார்கள்; அமைச்சனாகிய தருமகோபனும் இறந்தான். இரணியன் தோற்றுக் கடலில் ஒளித்தான். இவ்விடத்தில் நிகழ்ந்தது இதுவேயாகும் நீ அளவிறந்த படைகளோடு போருக்குச் சென்று சிவபெருமானுடைய ஆற்றலைக்கெடுத்து மீள்வாயாக! இதன்பொருட்டே உன்னை இங்கே அழைத்தேன்," என்றான்.

## சிங்கமுகன் அறவுரை கூறுதல்

சூரபன்மன் கூறியவைகளைக் கேட்டுச் சிங்கமுகன் துன்பமடைந்தான். "அரசனே! நீ மக்களையும் அமைச்சர்களையும் சுற்றத்தார்களையும் மற்றவர்களையும் இழந்துவிட்டு இருக்கின்றாய்! உன் எண்ணம் இழிந்தது! தோற்றமும் அழிவும் இல்லாத கடவுளைச் சிறுவன் என்று எண்ணினாய்! மேல் விளையக்கூடியதனை எண்ணிப் பார்க்கவில்லை! ஊழை யாவர் வெல்லுவார்?" என்று கூறினான்.

## சிங்கமுகன் போருக்குப் புறப்படுதல்

மேற்கூறியவாறு கூறிய சிங்கமுகன், தான் யாது கூறினும் அதனைக் கேளான் என்று ஐயமறவறிந்தான். சூரபன்மன் பார்த்து, "பெருகுகின்ற நீருக்குக் கரை கோலியாவதென்ன? நான் இப்பொழுதே போருக்குச் சென்று பகைவர் கூட்டங்களைக் கொன்று உண்டுவருகின்றேன்! நீயும் அதனைக் காண்! பகைவர்களை வென்றால் உன்னைவந்து காண்பேன்! அஃதில்லையென்றால் எல்லோரும் இறப்பர்!" என்று கூறி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான்! சிங்கமுகன் உணவுச்சாலைக்குச் சென்று, மேருமலைபோன்ற சோற்றுக்குவியலையும், மிகுந்த ஊனையும், கடல்போன்ற குருதி தேன் பால் தயிர்கள் முதலானவைகளையும் உண்டான். மணப்பொருள்களைப் பூசினான். மலர்மாலையை அணிந்தான். புதிய அணிகலன்களைச் சூடினான். ஆயிரம் நெற்றிகளிலும் திருநீறு புனைந்தான். தடி, உருளை, சூலம், குலிசம் முதலாகிய தெய்வப்படைகளையும், மாயவள் கொடுத்த பாசத்தையுங் கைகளில் எடுத்துக்கொண்டான். பத்துநூறாயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற ஒரு தேரில் ஏறினான். இலக்கம் வெள்ளம் நால்வகைப்படைகள் அவனைச் சூழ்ந்து சென்றன. அவுணமள்ளர்கள் பலர் பலவகைப் படைக்கலங்களோடு சூரபன்மனைச் சூழ்ந்து சென்றனர். கொம்பு, பேரி, உடுக்கை முதலிய ஒலிக்கருவிகள் ஒலித்தன. சிங்கமுகன் போர்க்களத்தை யடைந்தான்.

## தேவர்கள் வேண்டுகோள்

சிங்கமுகன் போருக்கு வந்துள்ள செய்தியைத் தேவர்கள் அறிந்து மிகுந்த அச்சங்கொண்டார்கள். அவர்கள் முருகக்கடவுளை யடைந்து, "ஆயிரந்தலைகளையும இரண்டாயிரம் கைகளையும் உடையவனும், ஆயிரத்திற்கு மேற்பட்ட உலகங்களை வென்றவனும், ஆயிரம் யோசனை உயர்ந்த உடலையுடையவனும், நினைத்தற்கரிய வஞ்சனையை யுடையவனும், மாயையிற் சிறந்தவனும், இவ்வுலகமெல்லாம் அழியினும் அழியாதவனும், முன் ஒரு காலத்தில் உலகங்கள் எல்லாவற்றையும் ஒரு கையால் சுமந்தவனும் ஆகிய சிங்கமுகன் என்பவன் போருக்கு வருகின்றான். அவன் கொடிய சூலப்படையுடையவன். உலகங்களையெல்லாம் ஒரு கையால் அள்ளியுண்டு உமிழத்தக்க ஆற்றல் பொருந்தியவன். நடக்கும்போது ஒரு பக்கம் தாழ்ந்து ஒரு பக்கம் உயர்தலால் கடல்கள் உலகில் தாக்கும்படி நடக்கின்ற நடையை யுடையவன். மேருமலையை எளிதாகக் கையில் எடுத்தவன். வடகடலில் உள்ள ஆசுரம் என்னும் நகரத்தில் வாழ்பவன். சூரபன்மனுக்கு இளவல். ஆற்றலில் சூரபன்மனினும் சிறந்தவன். நம்மவர்களை நாடோறும் துன்பப்படுத்துகின்றவன். தேவரீரே அவனைக்கொன்று எங்களைக் காத்தருளவேண்டும்," என்றார்கள்.

## வீரவாகுதேவர் போருக்குப் புறப்படுதல்

முருகக்கடவுள் தமது பக்கத்தில்நின்ற காற்றைப் பார்த்து, "நம்முடைய தேரைக் கொண்டுவருவாயாக!" என்று கட்டளையிட்டருளினார். அண்மையில் நின்ற வீரவாகுதேவர் தாம் போருக்குச் செல்வதாக முருகக் கடவுளை வேண்டிக்கொண்டார். ஆறுமுகப்பெருமான், "அவ்வாறே செல்க!" என்று உடன்பாடு தெரிவித்தருளினார். வீரவாகுதேவர் போர்க்கோலம்பூண்டு போருக்குப் புறப்பட்டார். நூறாயிரத்தெண்மரும் போர்க் கோலம்பூண்டு வீரவாகுதேவரைச் சூழ்ந்தார்கள். போர் முரசுகள் முழங்கின. வீரவாகுதேவர் போர்க்களத்தை யடைந்தார்.

## போர் தொடங்குதல்

பூதப்படைகளும் அவுணப்படைகளும் கைகலந்து போரைத்தொடங்கின. தடிகளையும், மழுக்களையும், பிண்டிபாலங்களையும், தோமரங்களையும் வீசிக்கொண்டார்கள். வில்லை வளைத்துக் கணைகளை மழைபோலச் சொரிந்து கொண்டார்கள். இருபக்கங்களிலும் அவுணர்கள் பலர் இறந்து வீழ்ந்தார்கள். எங்கும் குருதிபெருகியது; பிணங்கள் மிதந்தன. அவுணப்படைத்தலைவர்களின் தாக்குதலால் பூதப்படையின் முன்னணி முறிந்தது. பூதர்கள் அழிதலைச் சிங்கர் என்னும் பூதப்படைத்தலைவர் கண்டார். மிகுந்த சினங்கொண்டார். ஒரு தடியை எடுத்தார். எதிர்த்த அவுணர்களுடைய பற்களும் தலைகளும் சிதறுமாறு அடித்து வீழ்த்திவிட்டுச் சென்றார். அப்பொழுது தசமுகன் என்னும் ஓர் அவுணன் சிங்கருக்கெதிரே சென்று வில்லை வளைத்து நாணொலி செய்தான். கணைகளை மழை போலச் சொரிந்தான். சிங்கர் அக்கணைகளைத் தடியினால் அடித்து வீழ்த்தினார். ஓர் அடியினால் அவன் அணிந்துள்ள முடியையும் அழித்தார். தசமுகன் ஒரு தடியைச் சிங்கர்மீது எறிந்தான். அவர் அதனை மார்பில் ஏற்றார். தடி பொடியாய் வீழ்ந்தது. பிறகு ஒரு மழுவை யெறிந்தான். அது தேவர்கள் அஞ்சுமாறு சிங்கர்மேற் சென்றது. சிங்கர் அதனைத் தடியினால் அடித்து வீழ்த்தினார். அத்தடியினாலே தசமுகனுடைய வில்லைப் பொடியாக்கினார். தசமுகன் தீத்தன்மை பொருந்திய ஒரு வேற்படையைச் செலுத்தினான். சிங்கர் அதற்கெதிராக ஓர் உருளைப் படையைச் செலுத்தினார். அது சென்று வேற்படையை அழித்தது. தசமுகன் ஒரு தடியை எடுத்தெறிந்தான். அது சிங்கருடைய மார்பிற் பட்டது. குருதி பெருகியது. சிறிது தளர்ந்தார். பின்பு ஓடிப்போய்த் தசமுகனுடைய மார்பில் ஒருகையால் அடித்தார் அவன் வீழ்ந்து இறந்தான். அவுணர்கள் பலர் பூதரை யெதிர்த்துப் போர் செய்தார்கள். நூறுயிரம் வீரர்களுள் ஒருவராகிய அநகர் என்பவர் அவுணர்களை யெதிர்த்துத் தாக்கினார். பலரைக் கொன்றார். இறந்த அவுணர்கள்போக எஞ்சிய அவுணர்கள் ஓடினார்கள்.

அவுணர்கள் ஓடுவதைத் துன்முகன் என்னும் அவுணன் கண்டான். அவர்களை ஓடாதவாறு தடுத்துப் பார்த்தான். துன்முகன் கூறுவதைக் கேளாமல் மேலும் விரைவாக ஓடினார்கள். துன்முகன் வில்லை வளைத்துக் கணைகளை விடாமழைபோலப் பொழிந்தான். பூதர்களும் மரங்களையும் மலைகளையும் வீசினார்கள். அதனால் துன்முகனுடைய கணைகள் பலவாறு அழிந்தன. துன்முகன் மாயப்போர் செய்ய எண்ணினான். ஒவ்வொரு பூதர்க்கும் நூறு நூறு வடிவங்கொண்டு தாக்கினான்.

வீரவாகுதேவர் துன்முகனை யெதிர்த்து அறிவுப் படைக்கலத்தைச் செலுத்தினார். துன்முகனுடைய மாயைகள் எல்லாம் அழிந்தன. அவன் தான் ஒருவனாகத் தனித்து நின்றான். வில்லை வளைத்து ஆயிரங்கணைகளை ஒரு வரிசையாகச் செலுத்தினான். வீரவாகுதேவர் ஆயிரம் அம்புகளால் துன்முகனுடைய கணைகளை மாற்றினார். ஏழு கணைகளினால் அவனுடைய வில்லை ஒடித்தார். ஒரு கணையினால் மார்புமுடியை அழித்தார். அளவில்லாத கணைகளை அவன் உடல்முழுவதும் செலுத்தினார். தன்னுடலைக் கணைகள் பிளத்தலால் துன்முகன் இறந்தவன் போல மயங்கி வீழ்ந்தான். பின் தெளிந்தான். போர் செய்ய அஞ்சினான். ஓடிப் பிழைப்பதற்கு முடிவு செய்தான். ஒரு மாய மறையை எண்ணி உருவமற்றவனாக விண்ணில் மறைந்தான். பூதர்கள் அவனைத் தொடர்ந்து பிடிக்க எண்ணினார்கள். வீரவாகுதேவர் அவ்வாறு செய்யாது தடுத்துவிட்டார்.

## சிங்கமுகன் போர்

தன் படை தோற்றோடுதலைச் சிங்கமுகன் கண்டான். பூதர்களை நோக்கி முன்னே சென்றான். பூதர்கள் சிங்கமுகனை யெதிர்த்தார்கள். மலைகளையும், மரங்களையும், மழுக்களையும், சூலங்களையும், தடிகளையும், எழுப்படைகளையும், கலப்பைப் படைகளையும் பொழிந்தார்கள். சிங்கமுகன் அவற்றை நோக்கினான். தீ வெளிப்படவுயிர்த்தான். பூதர்கள் வீசிய மரம் முதலிய யாவும் அவனுடைய மூச்சுக்

கெதிரே சென்று பலவாறாக அழிந்துபோயின. பூதர்கள் அதனைக்கண்டு சினங்கொண்டார்கள். யாவரும் ஒருங்கே போய் மலைகளையும் மரங்களையும் பறித்துக்கொண்டு வந்து சிங்கமுகன் மேல் மீண்டும் வீசினார்கள். அவைகளெல்லாம் ஒன்றாகச்சென்று விண் வெளியை மூடின. அதனால் கதிரவன் மறைய இருள் உண்டாயிற்று. இராக்காலம் வந்ததென்று பறவைகள் கூடுகளையடைந்தன. பகலவன் பகல்கழியு முன்பே ஓடினான். பலருங் கலக்கத்தை யடைந்தார்கள். விண்ணில் நின்று போரைப் பார்த்துக் கொண்டு நின்ற தேவர்களும் அஞ்சி யோடிப்போனார்கள். பூதர்கள் எறிந்த மலைகளும் மரங்களும் சென்று கைலாய மலையைச்சூழ்ந்த முகில்களைப்போலச் சிங்கமுகன்மேற் பட்டு அவனுக்கு எத்தகைய ஊறையுஞ் செய்தில. அவனுடைய உடலிலேபட்டு, மலையிலே பருத்திப்பஞ்சு பட்டாற்போல வீழ்ந்தன. அதனைப் பூதர்கள் கண்டு துன்பமுற்றார்கள். தேவர்கள் ஏங்கினார்கள்.

சிங்கமுகாசுரன் தேரினின்று நிலத்திற் குதித்தான். சிலரை நிலத்தில் எற்றினான். சிலரைத் தேவருலகில் எற்றினான். சிலரைக் கதிரவனுடைய தேரில் எற்றினான். சிலரைக் கடலில் எற்றினான். சிலரை வாயால் குத்தினான். சிலரைக் கூட்டமாக வாரிச்சுற்றினான். சிலரை உலகச் சுவரின்கண் எற்றினான். சிலரை அள்ளி யெறிந்தான். சிலரை நான்முகன் உலகத்தில் வீசினான். சிலரைத் திருமால் உலகத்தில் வீசினான். சிலரை இந்திர உலகத்தில் வீசினான். பலரைக் கடலில் வீசினான். சிலரை நிலமெங்கும் வீசினான். சிங்கமுகன் கண்டபடி அள்ளி வீசியதால் உலகமெங்கும் பூதர்கள் நிறைந்தார்கள். சிலரை மிதித்துக் கொன்றான். சிலரைக் காலினால் தள்ளிக் கொன்றான். சிலர் உடம்பை நசுக்கிக் கொன்றான். சிலரை உதைத்துக் கொன்றான். சிங்கமுகன் கண்ட கண்டபடி பூதர்களைப் பலவாறு அழித்துக் கொன்றான். குருதிப் பெருக்கு யாண்டும் மிகுந்து கடலை யடைந்தது. அதனைச் செந்நிற மாக்கியது. தன்னை யெதிர்த்த பூதர்களைச் சிங்கமுகன் இவ்வாறு அழித்துக் கொன்றான்.

## சிங்கமுகனும் அழற்கண்ணரும்

சிங்கமுகன் செய்த போர்விளையாட்டை அழற்கண்ணர் என்னும் பூதப்படைத்தலைவர் பார்த்தார். சிங்கமுகனுக் கெதிரே சென்றார். "கொடியவனே! இப்பொழுதே உன்னைக் கொல்வேன்," என்றார். அப்பூதப் படைத்தலைவரைச் சிங்கமுகன் பார்த்தான். "நீ எதனையும் எண்ணுகின்றாயில்லை! அஞ்சுகின்றாயுமில்லை! எனக்கெதிரே நின்று இவ்வாறு கூறிய உனக்கு ஒப்பானவர் யாவர் உளர்? உன் ஆற்றல் மிகவும் நன்று!" என்று கூறி நகைத்தான். அழற்கண்ணர் ஒரு சூலப்படையை அவன்மீது விட்டார். சிங்கமுகன் அப்படை தன்னை நோக்கி வருதலைக் கண்டும் அதற்கு மாறாக எதனையுஞ் செலுத்தாமலிருந்தான். சூலத்தைத் தன்னுடைய மார்பிலேற்றான். அது மலையிற் பட்ட முள்ளைப்போல ஒடிந்தது. பிறகு ஒரு தடியை விரைந்து செலுத்தினார். அது சிங்கமுகனுடைய தேர்ப்பாகன் தலையைத் துணித்தது. சிங்கமுகன் அதனைக்கண்டு சினந்தான். தன் கையிலிருந்த தடியை எறிந்தான். அஃது அழற்கண்ணருடைய மார்பில் தாக்கிற்று. அவர் மனம் வருந்தினார். அவருடைய மார்பு பிளந்தது. அவருடைய மூக்கிலும் மார்பிலும் வாயிலும் தீமழைபோலக் குருதி சிந்தியது. அழற்கண்ணர் அறிவிழந்தும் ஆற்றல் தொலைந்திலர். சிங்கமுகன் தன்னுடைய தேரில் வேறொரு பாகனை நிறுத்தினான். பூதப்படைத் தலைவர்கள்மீது மேலும் போர்புரியத் தொடங்கினான்.

## சிங்கமுகனும் சுமாலியும்

சுமாலி என்பவர் சிங்கமுகனை யெதிர்த்தார். மேரு மலைபோலப் பெரிய ஒருமலையைப் பிடுங்கிச்சிங்கமுகன்மீது எறிந்தார். சிங்கமுகன் அந்த மலையை ஒரு பந்துபோலப் பிடித்தான். அதனைச் சுமாலியின்மீதே வீசினான். அது திரும்பிவந்து சுமாலியினுடைய மார்பில் தாக்கிற்று. சுமாலி செயலற்று நிலத்தில் விழுந்தார்.

## சிங்கமுகனுந் தண்டியும்

சுமாலி வீழ்ந்ததைத் தண்டி என்பவர் கண்டார். ஒரு தடியை யேந்திச் சிங்கமுகாசுரனுடைய தேரிற் பாய்ந்தார். அவனுடைய மார்பிலே அடித்தார். அத்தடி அழிந்தது. சிங்கமுகாசுரன்மேல் இடியிடித்தாற்போலக் கையினால் அடித்தார். சிங்கமுகன் அவரை ஒரு காலினாலே உந்தி யெறிந்தான். தேவர்கள் அஞ்சுமாறு ஆரவாரித்தான். தண்டி விண்ணில் போய் திரும்பினார். சிங்கமுகனுடைய இரண்டாயிரந் தோள்களிலுங் குதித்தார். அவனுடைய உடலெங்கும் பாய்ந்துமிதித்தார். அவ்வாறு மிதித்தலைச் சிங்கமுகன் ஒருபொருட்படுத்தவில்லை. தண்டியைத் தன் மேல் திரியும் ஓர் ஈயாகவே மதித்தான். பின்பு கையாற் சொறிந்து உருட்டித் துடைத்துவிட்டான். அதனால் தண்டி மிகவும் வருந்தித் தோற்றுப்போனார்.

## நூறுயிரத்தெண்மரும் சிங்கமுகனும்

தண்டி தோற்றதையும் பூதமன்னர்கள் அஞ்சியோடு தலையும் நூறுயிரதலைகெட்டுவீரர்களும் பார்த்தார்கள். தேரைச் செலுத்திக்கொண்டு சிங்கமுகனுக்கு முன்னே சென்றார் கள். சிங்கமுகனைச் சூழ்ந்தார்கள். கணைகளை மழை போலப் பொழிந்தார்கள். அவைகளெல்லாம் சிங்கமுக னுக்குப் பூமழையைப்போன்றிருந்தன. அவைகளால் சிங்கமுகன் எள்ளளவு ஊறுபாடும் உறுதிருத்தலை நூறு யிரத்தெண்மரும் பார்த்தார்கள். நம்முடைய ஆற்றல் அழிந்தது என்று அஞ்சினார்கள். சிங்கமுகன் தேரினின் றுங் கீழே இறங்கினான். இடிபோல உரப்பினான். சில ருடைய தேரை யெடுத்தெறிந்தான். சிலருடைய தேரை ஒன்றோடொன்று மோதும்படி அடித்தான். சிலருடைய தேரைக் கையால் அள்ளி ஒடித்தான். சிலருடைய தேரை உதைத்தான். சிலருடைய தேரைப் பொடியாக்கினான். சிங்கமுகன் இவ்வாறு தாக்கவே நூறுயிரத்தெண்மரும் புறமுதுகுகாட்டி யோடிப்போனார்கள்.

## வீரவாகுதேவரும் சிங்கமுகனும்

நூறுயிரத்தெண்மரும் தோற்றுப்போனதை வீரவாகு தேவர் கண்டார். 'நம்முடைய பெரிய படையை இவன் இன்றொரு நாளில் அழித்துவிடுவான்போலும்' என்று எண்ணினார். மேருமலை போன்ற பெரிய வில்லை வளைத்தார். சிங்கமுகன்மீது பல கோடிக் கணைகளை விடாமழை போலப் பொழிந்து நின்றார். எதிர்த்துநின்ற அவுணப் படை மள்ளர்கள் இறந்து வீழ்ந்தார்கள். எண்ணற்ற குதிரைகளுந் தேர்களும் யானைகளும் அழிந்தன. எங்கும் பிணமலைகள் மிகுந்தன. பேய்கள் மொய்த்தன. இறவாத அவுணப் படையைக் குருதிப்பெருக்குக் கடலுக்கு வாரிச் சென்றது. போர்க்களமெங்கும் பலவகை ஒலிகள் மிகுந்தன. வீரவாகுதேவருடைய கணைகள் அவுணப் படைக்கு மிகுந்த அழிவையுண்டுசெய்தது.

அவுணப்படைகள் பலவாறு அழிந்தொழிதலைச் சிங்கமுகனுடைய மக்கள் நூற்றுவர்கள் கண்டார்கள். சினந்து உதட்டைப் பற்களாற் கடித்தார்கள். வீரவாகு தேவருக்கு முன் தேரைச் செலுத்திக்கொண்டு சென்றார்கள். தனித்தனியாக விற்களை வளைத்தார்கள். வீரவாகுதேவர்மேல் கணைகளை மழையாகப் பொழிந்தார்கள். அக்கணைகளை வீரவாகுதேவர் அழித்து ஆரவாரித்தார். சிங்கமுகனுடைய மக்கள் பின்னுங் கோடாகோடிக் கணைகளைச் செலுத்தினார்கள். வீரவாகுதேவர் அவைகளைக் கணைகளால் மாற்றினார். அவர்களுடைய விற்களையும் தேர்களையும் கணைகளினால் அழித்தார். நூற்றுவர் ஒரு சூழ்ச்சியை உள்ளத்தில் எண்ணினார்கள். 'வாட்போருக்கு வருக' என்று கூப்பிட்டார்கள். வீரவாகுதேவர் சிவ பெருமான் கொடுத்த வாட்படையை யெடுத்துக்கொண்டு நிலத்திற் பாய்ந்தார். சிங்கமுகனுடைய மக்கள் தனித்தனி வாட்படையை யெடுத்துக்கொண்டு வீரவாகுதேவரைச் சூழ்ந்தார்கள். வீரவாகுதேவருடைய தோள்களிலும், மார்பிலும், கைகளிலும், கழுத்திலும் தலையிலும் குறி பார்த்து வாட்படையை வீசினார்கள். அதனால் வீரவாகு

தேவருக்குச் சிறிதும் ஊறுபாடு ஏற்படவில்லை. நூற்றுவர்கள் வீரவாகுதேவர்மீது கூட்டமாகப்போய் விழுந்து கட்டிப் பிடித்தார்கள். வீரவாகுதேவர் வாட்படையை வீசி நூற்றுவரையுங் கொன்றார்.

நூற்றுவரையுங் கொன்றபின் வீரவாகுதேவர் மீண்டுந் தம்முடைய தேரில் ஏறினார். சிங்கமுகன் தன்னுடைய மக்களிறந்ததைப் பார்த்து மிகுந்த துன்பத்திலாழ்ந்தான். 'வீரவாகுதேவரையும் பிறரையும் உடனே கொன்று தொலைப்பேன்' என்று கூறி ஆரவாரஞ்செய்தான். வீரவாகுதேவருக்கு முன்னே தன்னுடைய தேரைக்கொண்டு செல்லுமாறு தேரோட்டிக்குக் கட்டளையிட்டான். தேரோட்டியும் அவ்வண்ணமே செய்தான். சிங்கமுகன் வருதலை வீரவாகுதேவர் பார்த்து மகிழ்ந்தார். தேரோடு வந்து எதிர்த்தார். சிங்கமுகன் வீரவாகுதேவரைப் பார்த்து, "நீ யார் கூறு?" என்று கேட்டான். வீரவாகுதேவர் தாம் யார் என்பதையும், செய்த செயல்களையும் கூறினார். சிங்கமுகன் தன்னுடைய பெருமைகளைக் கூறினான். வீரவாகுதேவர் வில்லை வளைத்தார். பதினெட்டுக் கணைகளைச் சிங்கமுகனுடைய மார்பிற் செலுத்தினார். அவைகள் பயனற்று முறிந்து விழுந்தன. சிங்கமுகன் தன்னுடைய கையிலிருந்த ஒரு தடியை வீரவாகுதேவர்மீது செலுத்தினான். அதனை வீரவாகுதேவர் நான்கு கணைகளால் துண்டித்தார். ஆயிரங்கணைகளைச் சிங்கமுகனுடைய தலையில் செலுத்தினார். அக்கணைகள் பலதுண்டங்களாய் விழுந்தன. சிங்கமுகன் தன் கையிலிருந்த சூலப்படையைச் சுழற்றியெறிந்தான். அச் சூலப்படை விண்வழியாக வந்தது. அதன் ஆற்றலையும் வெற்றியையும் வீரவாகுதேவர் பார்த்தார். அதற்கெதிராக ஆயிரங்கணைகளைச் செலுத்தினார். சூலப்படை ஆயிரங்கணைகளையும் அழித்து அவர்மேல் வந்தது. அவர் மனம் வருந்திப் பின்னும் ஆயிரங்கணைகளை வீசினார். அவற்றையுஞ் சூலப்படை அழித்துவிட்டு வீரவாகுதேவர் மேற் சென்றது. அனைவரும் அஞ்சினார்கள். சூலப்படை மிகுந்த பேராற்றல் பொருந்தியதென்று வீரவாகுதேவர்

அறிந்தார். சிவபெருமான் கொடுத்த வாட்படையை யெடுத்து அச் சூலத்தை இருதுண்டாக வெட்டினுர்.

பிறகு வீரவாகுதேவர் சிவப்படைக்கலத்தை யெடுத்து வழிபாடு செய்து, "சிங்கமுகனைக் கொல்வாயாக" என்றுகூறி அதனைவிட்டார். சிங்கமுகன் தானுஞ் சிவப்படைக்கலத்தைச் செலுத்தினுன். அப் படைகள் இரண்டும் ஒன்ரேடு ஒன்றுவந்து கலந்து தம்மை விடுவித்தவர்களிடமே திரும்பிச்சென்றன. வீர வாகுதேவர் சிங்கமுகனுடைய ஆற்றலை யெண்ணி வியந் தார். பதினுன்குகணைகளைச் செலுத்திச் சிங்கமுகனுடைய தேர்ப்பாகன் தலையைக் கீழே தள்ளினுர். சிங்கமுகன் சினந் தான். ஒருதடியை வீரவாகுதேவர்மீது வீசினுன். அஃது அவருடைய மார்பிற்பட்டுப் பொடியாகப்போயிற்று. வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைச் செலுத்திச் சிங்க முகனுடைய தேரையழித்தார். தேரழிந்ததைக் கண்டதும் பூதர்கள் சிங்கமுகனைச் சூழ்ந்து மலைகளையும் படைக்கலங் களையும் வீசினுர்கள். சிங்கமுகன் வேருருதேரில் ஏறி னுன். ஆயிரங்கைகளினும் ஆயிரம் விற்களையெடுத்து வளைத்தான். நாணெலிசெய்தான். அவ்வொலியைக் கேட்டு உயிர்கள்யாவும் கலங்கின. வளைத்தவிற்களில் எண்ணற்றகணைகளைத் தொடுத்துச் செலுத்தினுன். போருக்குவந்த பூதர்கள் பிணங்களாயினர். அவனுடைய கணைகள் நிலமெங்கும் நெருங்கின. விண்ணைத் தூர்த்தன. எண்டிசைகளையும் மறைத்தன. அவனுடைய கணைகள் செல்லாதஇடமே உலகில் எங்கும் இல்லை. சிங்கமுகனு டைய வில்லில் இருந்து கணைகள் அளவுகடந்து புறப்பட்ட படியால், அவைகள் அவனுடைய படையையுங் கொன் றன. குருதிப்பெருக்கு கடலிற் பாய்ந்தது.

இவ்வாறு சிங்கமுகன் செய்கின்றபோரை வீரவாகு தேவர் பார்த்தார். அவனுக்கெதிரேபோய் வில்லைவளைத்து நாணெலிசெய்தார். அதனுல் உலகம் நடுங்கியது. அவுணர் கள் ஏக்கமடைந்து அஞ்சி ஓடினுர்கள். யானைவீரர்களும் குதிரைவீரர்களும் படைகள்நழுவ நடுங்கி வீழ்ந்தார்கள்.

வீரவாகுதேவர் கணைமழைகளைச்சிந்திச் சிங்கமுகனுடைய கணைகள் எல்லாவற்றையும் அறுத்தார். ஆயிரம் விற்களால் சிங்கமுகன் விடுகின்ற கணைகளையெல்லாம் வீரவாகுதேவர் அறுத்துத் தள்ளினார். சிங்கமுகனுடைய கணைகள் சென்றவிடங்களுக்கெல்லாம் வீரவாகுதேவருடைய கணைகளுஞ்சென்று அவற்றை அழித்தொழித்தன. சிங்கமுகன் பத்துநூறாயிரங்கணைகளை வீரவாகுதேவர் மேல் விடுத்தான். வீரவாகுதேவர் பத்துநூறாயிரங் கணைகளைத் தாமும் தூண்டிச் சிங்கமுகனுடைய கணைகளெல்லாவற்றையும் அறுத்தார். பின்னும் பத்துநூறாயிரங் கணைகளைச் சிங்கமுகன்மேல் தூண்டினார். சிங்கமுகன் அவைகள் எல்லாவற்றையும் அழித்தான். மேலும் ஆயிரங் கோடி கணைகளை வீரவாகுதேவர்மீது விடுத்தான். வீரவாகுதேவர் அத்துணைக் கணைகளைச்செலுத்தி அவைகளை யழித்தார். சிங்கமுகன் இரண்டாயிரங் கணைகளைத் தொடுத்து வீரவாகுதேவருடைய வில்லை வெட்டினான். அவர் வேறொருவில்லை வளைப்பதற்குமுன் அவருடைய மார்பில் நூறுகோடி கணைகளை யழுத்தினான். மார்பினின்று குருதி ஆறுபோலப்பாய்ந்தது. அவர் வில்லை வளைத்து நூறாயிரம் பிறைமுகக் கணைகளைச் சிங்கமுகன் மேற் செலுத்தினார். சிங்கமுகன் அவைகளை யழித்துப் பின்னுங் கணைமழைகளைப் பொழிந்தான். வீரவாகுதேவர் ஆயிரங்கணைகளைச் செலுத்திச் சிங்கமுகனுடைய தேரை யழித்தார். சிங்கமுகன் வேறொரு தேரின்மேற் பாய்ந்து விற்களை வளைத்தான். வீரவாகுதேவர் அவருடைய ஆயிரம் விற்களையும் நொடிப்பொழுதில் அறுத்தார். சிங்கமுகன் துன்பமுற்றான். அதனைக்கண்டு தேவர்கள் மகிழ்ந்தார்கள்.

சிங்கமுகன் மாயாபாசத்தைக் கையிலெடுத்தான். "நீ விரைந்து சென்று பகைவர்களைக் கட்டி அவர்களுடைய உயிரையுண்டு, கதிரவன் தோன்றும் மலையின் மேற் கொண்டுபோய் வைத்து, அவர்களைவிட்டு நீங்காமல் அங்கேயே இருப்பாயாக," என்று கூறி வீசினான். அது

திக்குகளெல்லாவற்றையும் மூடித், தீயைவெளிப்படுத்திக் கொண்டு சென்றது. அதனைத் தேவர்கள் யாவரும் கண்டு அஞ்சியோடினர். வீரவாகுதேவர் அதற்கு மாறான படைக் கலத்தை யெடுக்க முயன்றார். அதற்குள் அஃது அனை வரையுங் கட்டியது. பூதப்படைஞர்கள், படைத்தலைவர் கள், நூறாயிரத்தெண்மர்கள், ஒன்பது பேராண்மையாளர் கள் ஆகிய அனைவரும் மாயாபாசத்தின் பிணிப்புக்கு உள்ளாயினர். அப்பாசம் அவர்கள் எல்லோருடைய அறிவையும் மயக்கியது. குறிப்பிட்ட இடத்திற்குக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு இருந்தது. சிங்கமுகன் தன்னுடைய சூழ்ச்சியைத் தானே புகழ்ந்து மகிழ்ந்து கொண்டான். "சிவன் மகன் எங்கே! அவன் என்னோடு போர்செய்தற்கு அஞ்சிப் பாடிவீட்டில் தானே பதுங்கி யுள்ளானோ அல்லது ஓடிப்போய்விட்டானோ?" என்றான். பிறகு அறுமுகக்கடவுள் எழுந்தருளியிருக்குமிடத்தை நோக்கிப் போருக்குச் சென்றான்.

நிகழ்ந்தவைகளை யுணர்ந்த தேவர்கள் வாட்டமடைந்து ஓட்டம் பிடித்தார்கள். இச்செய்தியை முருகப் பெருமா னிடம் காற்றுவேந்தன் கூறினான். அறுமுகப்பெருமான் "அந்தச் சிங்கமுகன் எங்குள்ளான்?" என்று உசாவினார். 'அவன் இறக்கும் ஊழினால் இங்கு வருவான்போலும்' என்றான் காற்று வேந்தன்.

## முருகக்கடவுள் போருக்குப் புறப்படுதல்

முருகக்கடவுள் வெளியே வந்து தம்முடைய தேரில் ஏறியருளினார். தேவர்கள் யாவரும் மகிழ்ந்து ஆரவாரஞ் செய்தார்கள். தேவர்கள் பலவகை வழிபாட்டுப் பொருள் களை யேந்தி முருகப்பெருமானுடைய இருமருங்கினுஞ் சூழ்ந்தார்கள். ஆயிரம் வெள்ளம் பூதர்கள், மழு, சூலம், தடி, எழு, கலப்பை, மரம், மலை முதலியவைகளை யேந்தி உடன் சென்றார்கள். பலவகையான போர்க்கருவிகள் முழங்கின. திருச்சின்னங்கள் ஒலித்தன.

## போர் தொடங்குதல்

முருகக்கடவுள் விரைந்து போர்க்களத்தை யடைந்தார். சிங்கமுகனும் படைகளோடு வந்து எதிர்த்தான். பூதர்கள் எழு, மரம், தடி முதலியவைகளை அவுணப் படைகளின்மீது வீசி, யானை, குதிரை, தேர் முதலியவைகளை அழிப்பார்களாயினர். அவுணர்கள் வேல், மழு, தடி, குலிசம், இருப்புலக்கை முதலியவைகளைச் செலுத்திப் பூதர்களை அழிக்கலானார்கள். அவுணர்கள் மிகுதியாக அழிதலைச் சிங்கமுகன் கண்டான். மாயையினால் ஒரு பேருருவத்தை யெடுத்துக்கொண்டு ஆரவாரஞ் செய்தான். தேவர்கள் அவனுடைய தோற்றத்தைக் கண்டு மருண்டார்கள். சிங்கமுகன் இரண்டாயிரங் கைகளையும் நீட்டிப் பூதர்களை அள்ளி வாயிலிட்டு விழுங்கலானான். அவனுடைய ஆயிரம் வாய்களும் ஆயிரம் அண்டங்களைப்போல விளங்கின. சிங்கமுகனால் விழுங்கப்பெறும் பூதர்கள் அவனுடைய மூக்கையும் காதையும் பார்த்து, இவைகள் மலைமுழைஞ்சுகளோ என்று ஓடினார்கள். சிங்கமுகன் மூச்சுக்காற்றை உள்வாங்கும்பொழுது அதனால் வயிற்றினுட்புகுந்த பூதர்கள், அவன் அதனை விடும்பொழுது ஆயிரம் யோசனை வெளியே வந்தார்கள். அவன் விழுங்கியதனால் வயிற்றிற் புகுந்த பூதர்கள் மற்றைய இடங்களைப் பார்க்கினும், சிவபெருமானை ஒருமையுடன் எண்ணுதற்கு இவ்விடமே தகுதிவாய்ந்தது என்று எண்ணினார்கள். சிலர் சிங்கமுகனுடைய வயிற்றைத் தம் கையிலுள்ள படைகளினால் கிறியும் துளைத்தும் அது கெடாமையினாலே ஆற்றலிழந்து இளைத்தார்கள். சிங்கமுகன் ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் விழுங்கி வயிற்றில் வைத்துவிட்டான். அவனுடைய செயலைக் கண்டு தேவர்கள் அஞ்சியோடினார்கள்.

## சூரபன்மன் மகிழ்ச்சி

போர்நிகழ்ச்சிகளைப் பார்த்துக்கொண்டு நின்ற தூதுவர் சூரபன்மனிடம் ஓடினார்கள். சிங்கமுகன் மாயா பாசத்தால் வீரவாகுதேவர் முதலியோரை வெற்றி

கொண்டதையும், பூதப்படைகளைப் பேருருவங்கொண்டு விழுங்கித் தீர்த்துவிட்ட தன்மையையும் கூறினார்கள். சூரபன்மன் அத்தூதுவர்களைத் தழுவி மகிழ்ந்தான். அவர்கள் விரும்பியதை யளித்தான். மேலும், மகேந்திரபுரியில் எஞ்சியுள்ள படைகளையெல்லாந் திரட்டிச் சிங்கமுகனுக்குப் பக்கத் துணையாக அனுப்பினான். தன் தம்பி போர் செய்வதைப் பார்க்க விரும்பினான். மேருமலைபோல் உயர்ந்த ஒரு கோபுரத்தின்மேல் ஏறினான். சிங்கமுகனுடைய மிகப் பெரிய வடிவத்தையும் பூதப்படைகள் அழிந்துபோய் முருகக்கடவுள்மட்டுந் தனித்து நின்றிருத்தலையுங் கண்டான். மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தான்.

## அவுணர்கள் அறுமுகக்கடவுளைச் சூழ்தல்

முருகக்கடவுள் ஒரு பெரிய வில்லை வளைத்தார். நாணொலி செய்தார். அவ்வொலியால் ஆயிரங் கோடி அண்டங்களும் வெடித்தன. அவுணர்கள் அறிவிழந்து வீழ்ந்தார்கள். யானைகளுங் குதிரைகளும் வீழ்ந்தன. தேர்கள் உடைந்தன. அந் நாணொலியைக் கேட்ட சிங்கமுகன், "இவன் என் தம்பியை முன்னே கொன்றான் என்பது உண்மைதான் போலும்," என்று எண்ணினான். முருகக் கடவுளுக்கு நேரே சென்றான். முருகக் கடவுளைப் பார்த்து, "சிவனுடைய திருமகனாரே! நான் ஒன்று சொல்கிறேன் கேளும். தம் பகைவர்களுடைய ஆற்றலைக் கெடுத்தல் அரசர்கட்குக் கடன். அதனால் நாங்கள் எங்கள் பகைவர்களாகிய தேவர்களை ஒறுத்தோம். நீர் தேவர்களுள் ஒருவரல்லர். நமக்குப் பகைவரும் ஆகமாட்டீர். அவ்வாறாக எம்மொடு போர்செய்ய வரவேண்டிய காரணம் யாது?" என்று கேட்டான்.

முருகக் கடவுள் சிங்கமுகனைப் பார்த்துப் பதிலுரைக்கத் தொடங்கினார். "எளியவனை வலியவன் ஒறுத்தால், அவ் வலியவனை அறநூல் முறைப்படி நாம் ஒறுத்து எளியவர்களைப் பாதுகாப்போம். உலகங்கள் எல்லாவற்றிற்கும் இறைமைத் தன்மை பூண்டிருக்கின்றோம். ஆகவே

ஆற்றல் மிக்கவர்களாகிய நீவிர் தேவர்களைச் சிறையில டைத்துக் கொடுமை புரிதலைத் தடைசெய்து தேவர்களைக் காக்க வந்தோம்," என்று கூறியருளினார்.

சிங்கமுகன் அறுமுகக் கடவுள் கூறியவைகளைக் கேட்டான். பலவாறு இகழ்ந்து உரையாடினான். "நீ ஓடிப்போனாற் பிழைப்பாய். இன்றேல் தோல்வியடைவாய்; தாரகனைப்போல் நான் தோல்வியடைய மாட்டேன். போர் புரிவதென்றால் விரைந்து புரிவாயாக," என்றான்.

## முருகக்கடவுள் சிங்கமுகனோடு போர்புரிதல்.

முருகக் கடவுள் ஒரு கணையை வில்லிற் பூட்டிச் சிங்க முகனுடைய மார்பிற் செலுத்தினார். அது மார்பிற் புகுந்து முதுகில் ஊடுருவிப் போயது. குருதி அருவியாகச் சொரியச் சிங்கமுகன் நின்றான். கணை புகுந்து புறப்பட்ட இடங்கள் பெரிய வழிகளாயின. சிங்கமுகனுடைய வயிற் றிற்குட் சென்றிருந்த பூதர்கள் அவ்வழிகளால் வெளியே வந்தார்கள். சிங்கமுகனுடைய வயிற்றிற் குள்ளிருந்து வெளிப்பட்ட தோற்றம் கரையான் புற்றுக்குள்ளிருந்து வருவது போன்றிருந்தது. சிங்கமுகன் முருகக் கடவுள் மீது ஒரு தடியை யெறிந்தான். முருகக் கடவுள் அதன் மீது நான்கு கணைகளை விட்டு அத்தடியை அழித்தார். அக்கணைகளே சிங்கமுகனுடைய நெற்றியிலுஞ் சென்று புதைந்தன. அவன் வருந்திநின்றனன். முன்பு திறந்த வழிகளால் அவனுடைய உடலுக்குள் சென்றிருந்த பூதர்கள் அனைவரும் வெளியே வந்தார்கள்.

அறுமுகக் கடவுள், வீரவாகுதேவர் முதலியவர்களை யும் படைத் தலைவர்களையும் பூதக் கூட்டங்களையும் அழைப் பதற்குத் திருவுளத்தில் எண்ணினார். அவர்களிருந்த விடத்திற்கு ஒரு கணையைச் செலுத்தினார். அது கதிரவன் தோன்றும் மலையை அடைந்தது. அவர்களைப் பிணித் திருந்த மாயக் கயிற்றை யறுத்தது. அனைவரும் உறங்கி யெழுந்தவர்களைப் போல வெழுந்தார்கள். அளவிடற் கரிய இன்பத்தை யடைந்தார்கள். முருகப் பெருமா

னுடைய அடிமலர்களைப் போற்றினார்கள், அக்கணையே ஒரு மலரைப் போன்ற விண்ணூர்தியாகி அனைவரையும் தாங்கி வந்து முருகப் பெருமான் திருமுன்பு விட்டுத் தான் தூணியுட்புகுந்தது. முருகக் கடவுளை அனைவரும் போற்றினார்கள். எல்லோருக்கும் முருகக் கடவுள் திருவருள் புரிந்தார்.

அறுமுகக்கடவுளுடைய நாணொலியால் முன்பு தளர்ந்து வீழ்ந்த படைகள், அப்பெருமானுடைய ஒரு திருவிளையாடலால் தளர்ச்சிநீங்கி யெழுந்தன. சினங் கொண்டு முருகக்கடவுளைச் சூழ்ந்து போர்புரிய முயன்றன. முருகக்கடவுள் வில்லை வளைத்துக் கணைகளைச் சிந்தினார். அக் கணைகள் தீயைப் போன்றன. நஞ்சைப் போன்றன. இருளைப் போன்றன. நமனைப்போன்றன. பாம்புகளைப் போன்றன. கதிரவனைப் போன்றன. இடியினுங் கொடியன. பலவாறு நெருங்கிய கணைகளால் அவுணர்கள் அழிந்து ஒழிந்தார்கள். பருந்துகளுங் காகங்களும் போர்க்களத்தில் நெருங்கின. பிணமலைகள் எங்கும் நிறைந்தன.

படைகளெல்லாம் அழிந்தொழியச் சிங்கமுகன் ஒருவன் மட்டும் போர்க்களத்தில் தனித்தவனாக நின்றான். அறுமுகக்கடவுளின் கணைகள் தாக்குதலால் மாயத்தினால் அவன் முன்பு கொண்டிருந்த பேருருவம் அழிந்துவிட்டது. அவன் பழைய வடிவத்தோடு தேரில் நின்றான்; தன் படைகளைக் காணாது மனங் கொதித்தான். ஒரே தன்மையான ஆயிரம் விற்களை யெடுத்து வளைத்தான். பத்து நூறாயிரங்கணைகளைத் தெரிந்தெடுத்து எய்தான். அறுமுகப் பெருமான் அவுணர்கோன் விடுத்த கணைகள் எல்லாவற்றையும் ஆயிரங்கணைகளைத் தூண்டி அழித்தருளினார். பின்னும் ஆயிரங்கணைகளை அவன்மீது செலுத்தியருளினார். அரிமாமுகன் ஆயிரங்கணைகளைச் செலுத்தி அழித்தான். பத்து நூறாயிரங்கணைகளை முருகக்கடவுள்மீது செலுத்தினான். அவைகளை முருகக்கடவுள் விலக்கியருளினார். சிங்கமுகன் ஆயிரங்கணைகளை அறுமுகப்பெருமானுடைய தேரோட்டியாகிய காற்றின்மீது செலுத்தினான். அக்கணைகளால்

காற்று குருதி வடியப்பெற்றுத் துன்பமடைந்தான். அறுமுகக்கடவுள் நூறுகணைகளால் சிங்கமுகனுடைய தேரை யழித்தார். அவன் நிலத்தில் இழிந்து முருகக் கடவுள்மீது கணைகளைச் செலுத்தினான். முருகப்பெரு மான் ஆயிரங்கணைகளைத் தூண்டிச் சிங்கமுகனுடைய விற்களை முறித்தார். முருகக்கடவுள்மீது சிங்கமுகன் ஒரு சூலத்தைச் சுழற்றி யெறிந்தான். முருகக்கடவுள் பதினான்கு கணைகளால் அதனைப் பொடியாக்கினார். ஆயி ரங்கணைகளை அவன்மீது செலுத்தினார். சிங்கமுகன் ஒரு தடியால் அவற்றை யழித்தான். ஏழுகணைகளைச் செலுத் திச் சிங்கமுகனுடைய தடியெடுத்த கையை நிலத்தில் வீழ்த்தினார். அது விழுமுன் அவனுடைய தோளில் நின்றும் வேறொருகை புறப்பட்டது. நிலத்தில் விழுகின்ற தடியை அக்கையாற் பற்றி அறுமுகக்கடவுளின்மேல் எறிந்தான். அவர் அத்தடியின்மேல் ஆயிரங்கணைகளை விடுத்து அறுத்தார். சிங்கமுகன் சினந்து நமனிடத்திற் கவர்ந்த பாசத்தை வீசினான். அறுமுகக்கடவுள் அதன் மீது ஆயிரங்கணைகளை ஏவினார். அது பொடியாகியது. பாசமழிந்ததைக் கண்ட அரிமாமுகன் நாணமடைந்தான். அறுமுகக்கடவுளைத் தன்னுடைய இரண்டாயிரங் கைகளை யுங்கொண்டு பிடிப்பதற்கு நினைத்துச் சினத்தோடு வந் தான். முருகக்கடவுள் அதனைப்பார்த்து இரண்டாயிரங் கணைகளைச் செலுத்தி அவனுடைய இரண்டாயிரங் கை களையும் அறுத்தார். அவைகள் நிலத்தில் விழுமுன் வேறு கைகள் முளைத்தன. நிலத்தில் விழுகின்ற கைகளை முளைத்தெழுந்த கைகளாற் பற்றிக்கொண்டு சிங்கமுகன் போருக்கு வந்தான். முருகக்கடவுள் ஆயிரங்கணைகளால் அவனுடைய ஆயிரந்தலைகளையும் அறுத்து, இரண்டாயிரங் கணைகளால் அவனுடைய இரண்டாயிரங் கைகளையும் வெட்டினார். அவைகள் திரும்பவும் முளைத்தன. அதனைக் கண்டு தேவர்கள் நடுங்கித் துன்ப மடைந்தார்கள்.

சிங்கமுகன் தன்னுடைய தலைகளையும் கைகளையும் அறுத்துத் தொலைக்க முடியாதென்று மிகவும் பெருமை

படித்துக்கொண்டான். முருகக்கடவுள் அதனைப் பார்த்து, "அறிவில்லாதவனே! வீணாக ஏன் பிதற்றுகின்றனை? உனக்கு எல்லை செய்யப்பட்ட வாணாள் முடிந்தது. உன்னை விரைவிலே கொல்வோம் பார்ப்பாயாக!" என்று கூறியருளினார். சிங்கமுகன் இடிபோல ஆரவாரித்தான். இரண்டாயிரம் மலைகளைப்பிடுங்கி வீசினான். முருகக் கடவுள் நொடிப்பொழுதுக்குள் அவைகளைப் பொடியாக்கினார். அவனுடைய மார்பிற் புகும்படி ஆயிரங்கணைகளைச் செலுத்தினார். அவைகள் மார்பைப் பிளந்தன. சிங்கமுகன் பெரிய மலைகளைத்தேடிப் பிடுங்கினான். அறுமுகக் கடவுள் ஆயிரங்கணைகளை விட்டு அவனுடைய தலைகளையறுத்து வீழ்த்தினார். அறுத்து வீழ்த்தப்பெற்ற தலைகள் மீட்டும் மீட்டும் முளைத்தெழுந்தன. சிங்கமுகன் தான் பிடுங்கிய மலைகளெல்லாவற்றையும் முருகக்கடவுள்மீது எறிந்து ஆரவாரித்தான். முருகக்கடவுள் இரண்டாயிரங்கணைகளால் அம்மலைகளையெல்லாம் அழித்தருளினார். அவனுடைய தோள்கள் எல்லாவற்றையும் வீழ்த்தினார். அவைகள் மீட்டும் மீட்டும் முளைத்தெழுந்தன. அவனுடைய தலைகளையும் கைகளையும் அறுத்தலை, முருகக்கடவுள் ஒரு திருவிளையாட்டாகக் கொண்டருளினார். ஆயிரத்தெட்டு முறை சிங்கமுகனுடைய கைகளையுந் தலைகளையும் அறுத்து அறுத்து வீழ்த்தினார்.

## வெட்டுண்ட உறுப்புக்கள்

வெட்டுண்ட உறுப்புக்கள் திக்குகளிற் போகும்; கடல்களிற் போகும்; மலைகளிற் போகும்; நிலத்திற் போகும்; விண்ணுலகத்திற் போகும்; சிங்கமுகனுடைய தலைகள் சென்றவிடங்களில் இருந்தவர்கள் அச்சுற்று மயங்கி நிலத்தில் விழுந்தார்கள். எங்கு நோக்கினும் சிங்கமுகனுடைய உறுப்புக்களே வெட்டுண்டு திரிந்தன.

## சிங்கமுகன் முடிவு

முருகக்கடவுள், சிங்கமுகனுடைய உறுப்புக்கள் அறுக்க அறுக்க முளைத்தலைப் பார்த்தார். அவனுடைய ஒரு தலையையும் இரண்டு கைகளையும்மட்டும் நிறுத்திவிட்டு

மற்றைக் கைகளையுந் தலைகளையும் அறுத்துத் தள்ளினார். வெட்டுண்ட உறுப்புக்கள் மீண்டும் முளைக்கத் தொடங்கின. முருகக்கடவுள் சினங் கொண்டார்போல அதட்டினார். முளைக்கத்தொடங்கியவைகள் முளைக்காமல் அடங்கி விட்டன. மீளவுந் தோன்றாமையைக் கண்டு உள்ளம் வருந்தினான். ஒரு மலையைப்பிடுங்கி யெறிந்தான். அம் மலையை அறுமுகமுடைய அண்ணல் ஒருகணையாற் பொடியாக்கினார். போர்க்களத்திற் கிடந்த ஒரு தடியை யெடுத்துச் சிங்கமுகன் முருகக்கடவுள்மீது வீசினான். முருகக் கடவுள் தமது திருக்கையிலிருந்த குலிசப்படையை நோக்கிச், "சிங்கமுகனுடைய உயிரை உண்டு வருவாயாக," என்று கூறி விடுத்தருளினார். அது விரைந்துசென்று தடியைப் பொடி செய்தது. சிங்கமுகனுடைய மார்பிற் புகுந்து உயிரைப் பருகிச் சென்றது. சிங்கமுகன் நிலத்தில் வீழ்ந்து இறந்தான். குலிசம் தேவகங்கையில் மூழ்கி அறுமுகப்பெருமான் திருக்கையை அடைந்தது. நான்முகன் முதலிய தேவர்கள் சிங்கமுகன் ஒழிந்தமையைக் கண்டு மகிழ்ந்து ஆரவாரஞ் செய்தார்கள். முருகக்கடவுள் மீது பூமழை பொழிந்து போற்றினார்கள். தேவர்கள் சூழச் செவ்வேள் தமது பாடிவீட்டைச் சேர்ந்தார்.

## சூரபன்மன் செய்தியுணர்ந்து வருந்துதல்

சிங்கமுகன் இறந்தொழிந்தமையை ஒற்றர்கள் பார்த்தார்கள். விரைந்து மகேந்திரபுரத்திற்கு ஓடினார்கள். கோபுரத்தின்மேல் நின்று தன்னுடைய இளவலின் போரைப் பார்த்துக்கொண்டிருந்த சூரபன்மன் தன்தம்பி கீழே விழுந்ததைப் பார்த்து இறந்தானோ மயங்கினானோ என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். ஓடிச்சென்ற ஒற்றர்கள் சூரபன்மனைக் கண்டு வணங்கினார்கள். 'சிங்கமுகன் இறந்தான். மாயபாசத்தால் மயங்கிக்கிடந்த வீரவாகுதேவர் முதலியோர் போர்க்களத்திற்கு வந்து சேர்ந்தார்கள். இஃது உண்மை' என்று இழவோலை படித்தார்கள். அதனைக்கேட்ட சூரபன்மன் துன்பக் கடலிலே அழுந்தினான். பலவாறு ஓலமிட்டுப் புலம்பினான்.

# கரு. சூரபன்மன் அழிதல்

## சூரபன்மன் போருக்குப் புறப்படுதல்

சூரபன்மன் தான் முருகக்கடவுளோடு போர்செய்ய வெண்ணினன். பல ஒற்றர்களை யழைத்து, "ஆயிரத் தெட்டு உலகங்களிலுமுள்ள என்னுடைய படைகள் எல்லாவற்றையும் விரைவிற்கொண்டு வாருங்கள்," என்று கட்டளையிட்டான். ஒற்றர்கள் எல்லா உலகங்கட்கும் விரைந்து சென்று சூரபன்மனுடைய கட்டளையைத் தெரியப்படுத்தினர்கள். ஆங்காங்கிருந்த அவுணர்கள் நால்வகைப் படைகளோடும் இவ்வுலகத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்படைகளின் பெருக்கம் அளவிடற் கரியதாக விருந்தது. கதிரவனுடைய ஒளிகள் மறைந் தன. தீயும் நடுங்கினன். காற்றும் நெருக்கத்தால் வியர் வை யொழுகப் பெற்றான். அப்படைகளின் ஒலியால் உலகங்களெல்லாம் நடுங்கின. எழுந்த துகள்களால் கடல் கள் வற்றின. தேவர்கள் மிகவும் அஞ்சினர்கள். அவர்கள் ஓடுவதற்கும் இடம் அகப்படவில்லை. இந்திரன் மருண் டான். நான்முகனும் திருமாலும் கலங்கினர்கள். அவுணப் படைகள் மண்ணினும் விண்ணினும், திக்குகளினும், கடல் களினும், மற்றை இடங்களினும் நெருங்கிச் சென்றன. சூரபன்மனுடைய படைகள் எண்ணில் அடங்காவாயின. சூரபன்மனுடைய படைக்கு ஒப்புச் சொல்வதற்கு உலகில் வேறொன்றும் இல்லாமற்போயிற்று. படைகள் மிகுதியாக வந்து குவிந்த செய்தியை ஒற்றர்கள் சூரபன் மனிடஞ் சென்று உரைத்தார்கள். சூரபன்மன் நீராடல் உணவருந்தல் முதலியவைகளை முடித்துக்கொண்டான். ஆடையணிகலன்களைப் புதியனவாகப் புனைந்துகொண் டான். சிவப்படைக்கலம் முதலிய தெய்வப்படைக் கலங் களை ஆயிரங்கோடி தேர்களிலே நிரப்பிக்கொண்டான். அரிமாவூர்தியையும் இந்திரஞாலத் தேரையும் தன்னுடன் கொண்டு வருமாறு பணித்தான். ஏவலர் அவ்வாறே கொண்டு சென்றனர். சூரபன்மன் தான் ஏறிச் செல்வ

தற்கு ஒரு தேரினைக்கொண்டுவருமாறு கட்டளையிட்டான் தேரோட்டிகள் ஒரு பெரிய தேரை அழகு செய்து கொண்டு வந்து நிறுத்தினார்கள். அத்தேரில் எழுபதினாயிரம் அரிமாக்களும், எழுபதினாயிரம் பாய்மாக்களும், எழுபதினாயிரம் பேய்களும் பூட்டப்பெற்றிருந்தன. அத்தேர் நிலவுலகத்தினும் மிகுந்த இடத்தையுடையது. மண்ணுலகம் ஆயிரங்கோடிகளையுஞ் சுமந்துகொண்டு செல்லக்கூடிய ஆற்றலமைந்தது. அரிமாக் கொடியை யுடையது. பெருங்காற்றினும் விரைந்து செல்லக்கூடியது. அத்தேர் சூரபன்மன் வேள்வித்தீயில் தோன்றியபொழுது அவனுடன் தோன்றியது. பகைவர்களை வென்று விரட்டுவது. நான்முகன் அழியுங்காலத்தினும் அழியாதிருப்பது. அளவற்ற படைக்கலங்களைத் தாங்கியது. சிவபெருமான் கொடுத்த இந்திரஞாலத் தேரைப் போன்றது. அழகிற் சிறந்தது. சூரபன்மன் அத்தேர்மீது ஏறினான். அவுணர்கள் வாழ்த்துரை கூறிப் பூமழை பொழிந்தார்கள். தேரோட்டிகள் சூரபன்மனுடைய கட்டளையின்மீது தேரைச்செலுத்தினார்கள். பலவகை ஒலிக்கருவிகள் முழங்கின. அவுணர்கள் ஆரவாரஞ் செய்தார்கள். சூரபன்மனைச் சூழ்ந்து பலர் வழிபாட்டுப் பொருள்களைச் சுமந்துகொண்டு சென்றார்கள். சூரபன்மன் நகரத்தை நீங்கிப் போர்க்களத்தை யடைந்தான். சூரபன்மனுடைய வரவைக் கண்டு தேவர்கள் அஞ்சினார்கள்.

## முருகக்கடவுள் போருக்குப் புறப்படுதல்

சூரபன்மன் போருக்கு வந்துள்ள செய்தியைத் தேவர்கள் அறுமுகப்பெருமானுக்குக் கூறினார்கள். முருகப்பெருமான் தம்முடைய தேரோட்டியாகிய காற்றைப் பார்த்தார். அவன் மனவேகம் என்னுந்தேரை விரைவில் முருகக்கடவுள் திருமுன்பு கொண்டு வந்து நிறுத்தினான். முருகக்கடவுள் மழு, குலிசம், சூலம், வேல், வாள், பரிசை, உருளை, தடி, எழு, வில், கணை முதலிய படைக்கலங்களுடன் தேரில் எழுந்தருளினார். வீரவாகுதேவரும் நூறாயிரத்தெண்மரும் பக்கத்திலே

சென்றார்கள். இரண்டாயிரம் வெள்ளம் பூதர்கள் மரா மரங்களையும் மலைகளையும் அளவற்ற படைக்கலங்களையுந் தாங்கியவர்களாய் முருகக்கடவுளைச் சூழ்ந்து சென்றார்கள். திருமால் முதலிய தேவர்கள் பூமழை பொழிந்து போற்றினார்கள். பூதப்படைகள் போர்க்களத்தை யடைந்தன. அவுணப்படைகளின் பெருக்கத்தைக்கண்டு தேவர்களும் பிறரும் அஞ்சினார்கள்.

## போர் தொடங்குதல்

இருபக்கத்துப் படைகளும் கைகலந்து போர் செய்தன. முன்னாற் சென்ற பூதர்கள் அனைவருந் தோல்வி யடைந்தார்கள். பூதப்படைத் தலைவர்கள் புறங்காட்டி யோடினார்கள். நூறாயிரத்தெண்மரும் போருக்குடைந்து நீங்கினார்கள். வீரவாகுதேவர் தம்மையெதிர்த்த அவுணப் படைகள்மீது கணைகளைப்பொழிந்து சிறிது நேரம் போர் செய்தார். பிறகு இப்படைகளை நம்மால் அழிக்க முடியாது என்று நீங்கினார். அவுணப்படைகள் அறு முகப் பெருமானைச் சூழ்ந்துகொண்டு பல படைக்கலங் களைச் சொரிந்து ஆரவாரஞ் செய்தன.

## முருகக்கடவுள் போர் செய்தல்

பூதப்படைகள் உடைந்தமையையும், வீரவாகு தேவரும் பிறரும் வருந்தி மீண்டதையும், அவுணர்களுடைய செய்கைகளையும் முருகக்கடவுள் பார்த்தார். வில்லை வளைத்து நாணொலி செய்தார். அவ்வொலியைக் கேட்டுத் தேவர்களும் நடுங்கினார்கள். உயிர்த்தொகைக ளெல்லாம் கலங்கின. அவுணர் கூட்டங்கள் அஞ்சின தேர்கள் பிளந்தன. குதிரைகள் புரண்டன. யானைகள் வீழ்ந்தன. அறுமுகக்கடவுள் அளவற்ற கணைகளைப் பொழிந்தார். அக்கணைகள் கொடிகளைத் துணித்தன. குடைகளைக் கிழித்தன. குதிரைகளை மாய்த்தன. யானை களை அழித்தன. அளவற்ற தேர்கள் அழிந்தன. அள வில்லாத அவுணர்களுடைய தலைகள் வெட்டுண்டன. மற்றும் பலவாறு அக்கணைகள் அவுணப்படைகளை

அழிந்தொழிந்தன. கணைகள் அவுணப்படைகளை யழிக்குங் காட்சியைக்கண்டு தேவர்கள் மகிழ்ந்தார்கள். இவ்வுலகத்தினுள் நுழைதற்கு இடமில்லாமல் உலகத்தின் வாயிலில் நெருங்கி நின்ற அவுணர்கள் மேலும் இவ்வுலகத்தில் வந்து நெருங்கி நிறைந்தார்கள். நெருங்கிய அவுணப் படைகள் அழியுமாறு முருகக்கடவுள் ஒரு தொடையில் பலபல கோடி கணைகளைச் செலுத்தினர். சூழ்ந்த அவுணர்கள் பலவாறு வீழ்ந்தொழிந்தார்கள். குருதிப் பெருக்கு மிகுந்தது. பிணமலைகள் நெருங்கின. அவுணர்களுடைய பிணங்களை அவர்கள் வளர்த்த நாய்களே பிடுங்கித் தின்றன. பிணக்குவியல்கள் மண்ணுலகம் முழுதும் பரந்து விண்ணுலகத்தையும் விழுங்கின.

இவ் வுலகத்தில் நெருங்கிய படைகள் முற்றும் அழிந்தொழியவே மற்றைய வுலகில் மிகுந்துநின்ற படைகள் வந்தன. முருகக்கடவுள் அவைகளையும் அழித்தார். மேலும் படைகள்வந்து சேராதவாறு அண்டகோளகையின் வாயிலை அடைத்தார். உலகம் முற்றும் பிணக்குவியல்களால் நிரம்பி நின்றன. முருகக்கடவுள் தம்முடைய பன்னிரண்டு திருக்கண்களையும் ஊழித்தீபோலக் கனலுமாறு மாறுசெய்து உற்று நோக்கினர். பிணமலைகள் வெந்து சாம்பராய் விட்டன. குருதி காய்ந்து சுவறிப் போய்விட்டது. மூவுலகங்களும் முன்போல விளங்கின. தேவர்கள் திரு முருகப்பெருமானை புகழ்ந்து வணங்கினர்கள்.

## முருகக்கடவுளும் சூரபன்மனும் போர் செய்தல்

போர்க்களத்தில் நின்ற சூரபன்மன் முருகக்கடவுளுடைய திருவிளையாடல்களை யெல்லாம் பார்த்தான். முருகப்பெருமானுடன் போர் செய்ய வெண்ணினன். அப்பெருமானை யெதிர்த்தான். முருகக்கடவுளைப் பார்த்து, "ஒ சிறுவனே! சிவபெருமான் கொடுத்தருளிய மேன்மையினல் நான் இறக்கமாட்டேன். என்றும் இத் தன்மையனகவே யிருப்பேன். தேவர்கள் மறந்துகூட என்னேடு போர் செய்திலர். போர் செய்து அழிந்தவர்கள்

பலர். நீ இச் செய்தியை உணரவில்லைபோலும். தேவர்கள் பேச்சைக்கேட்டு நீ சிறுபிள்ளைத் தன்மையினாலே என்னோடு போர் செய்தற்கு வந்திருக்கின்றாய். என்னுடைய மிகுந்த படைகளை அழித்தொழித்தாய். நீ சிறுபிள்ளையென்று நான் உன்னை விட்டுவிடமாட்டேன். விரைவில் உன்னைக்கொன்று தேவர்களையும் பூதர்களையும் ஒழிப்பேன்," என்று கூறினான். மேருமலைபோன்ற ஒரு பெரிய வில்லை வளைத்து நாணேற்றினான். பூதர்கள் மலைகளையும் மரங்களையும் பல படைக்கலங்களையும் அவன் மேல் வீசினார்கள். சூரபன்மன் கணைகளைப்பொழிந்து பூதப்படையை அழித்தான். பூதர்கள் பலவாறு அழிந்து வீழ்ந்தார்கள். வீரவாகுதேவரும் நூறாயிரத்தெண்மரும் அவனைச் சூழ்ந்து கணைமழைகளைப் பொழிந்தார்கள். அவைகள் சூரமன்மன் யாக்கையிற்பட்டு அழிந்து போயின. சூரபன்மன், அவர்கள் தன்னைச் சூழ்ந்ததைக் கண்டு உரப்பினான். நூறுகோடி கணைகளை ஒரு வரிசையாகச் செலுத்தி வீரவாகுதேவர் முதலானோர் செலுத்திய கணைகளை மாற்றினான். அவர்களுடைய தேர்களையும் விற்களையும் அழித்தான். தோள்களிலும் மார்புகளிலும் தலைகளிலும் கைகளிலும் ஆயிரம் ஆயிரம் கணைகளைக் குருதி பெருகும்படி அழுத்தினான். அவர்கள் அனைவரும் புறங்கொடுத்தோடினார்கள். வீரவாகுதேவர் சினத்துடன் சூரபன்மனின் தேரிற்பாய்ந்தார். சிவபெருமான் கொடுத்த வாட்படையினால் சூரபன்மனுடைய வில்லை வெட்டினார். சூரபன்மன் வீரவாகுதேவரின் மார்பிலே ஒரு கையால் அடித்தான். அவர் தளர்ந்து வீழ்ந்தார். சூரபன்மன், தூதுவனைக் கொல்லக்கூடாது என்று எண்ணி அவரை விண்ணிலெடுத்தெறிந்தான். அவர் விரைந்து மண்ணில் வந்து விழுந்து அறுமுகக்கடவுளின் பக்கத்திற் சென்றார்.

சூரபன்மன் வேறொருவில்லை யெடுத்துவளைத்து நாணொலி செய்தான். முருகக்கடவுளும் வில்லைவளைத்து நாணொலி செய்தார். சூரபன்மன் தான்வளைத்த வில்லில் இருபதுநூறாயிரங்கணைகளைச் செலுத்தினான். அவைகள்

உலகத்தையும் உலகத்துப்பொருள்களையும் மறைத்தன. அவைகளால் அனைவரும் துன்பமடைந்தார்கள். முருகக் கடவுள் தாம்சில கணைகளைத் தூண்டினார். சூரபன்மன் விட்டகணைகளையெல்லாம் அழித்தார். சூரபன்மன் முருகக்கடவுள்மீது பலகணைகளைச் செலுத்தினான். அறு முகக்கடவுள் அவைகளையெல்லாம்தம்முடைய கணைகளால் மாற்றினார். சூரபன்மன் விட்டகணைகளையெல்லாம் மாற்றி அவனுடைய படைகள் அலக்கணுறும்படி இரண்டாயிரங் கணைகளைச் செலுத்தினார். சூரபன்மன் அவைகளையெல் லாம் அழித்தான். முருகக்கடவுளின் தேரிற்கட்டிய கொடியை அறுத்துத் தன் வெற்றிச்சங்கை வாயில் வைத்து ஊதினான், மேலும் பலகணைகளைச் செலுத்தி முருகக்கடவுளை மறைத்தான். முருகக்கடவுள் ஏழுகணைக ளால் சூரபன்மனுடைய தேர்க்கொடியை அறுத்துக் கட லில்போட்டார். அதனைப் பானுகம்மர் என்னும் பூதப் படைத்தலைவர் பார்த்தார். தம்முடைய ஆயிரம்வாய்களி லும் ஆயிரம் வெற்றிச்சங்குகளை வைத்து ஊதினார்.

தேவர்கள் தீக்கடவுளைப்பார்த்து, "நம் முருகப்பெரு மான்மீது கொடியில்லை. நீ சென்று கொடியாயிருப்பா யாக" என்று கூறினார்கள். அவன் அவ்வாறே கோழிக் கொடியாகஅமர்ந்து உலகம் வெடிக்குமாறு கூவினான். தேவர்கள் விண்ணில் நின்று மகிழ்ந்து ஆரவாரஞ் செய்து கொண்டிருந்தார்கள். அவ்வாரவாரம் சூரபன்மனுக்கு மிகுந்த சினத்தை யுண்டுபண்ணியது. தேவர்களை விரட்ட வெண்ணினான். "என்தேரை விண்ணிற்செலுத்துவாயாக" என்று தேரோட்டிக்குக் கட்டளையிட்டான். தேரோட்டி யும் அவ்வாறே செய்தான். சூரபன்மன் விண்ணிற்சென்று தேவர்கூட்டத்தின்மீது மிகுந்த கணைகளைச் சொரிந்தான். அறுமுகக்கடவுள் மண்ணில் நின்றபடியே சூரபன்மனு டைய கணைகளையழித்தார். பிறகு தேரை விண்ணுலகிற் செலுத்துமாறு காற்றிற்குக் கட்டளையிட்டார். அவனும் அவ்வாறே செய்தான். அறுமுகக்கடவுள் அஞ்சியோடு கின்ற தேவர்களைப்பார்த்து அஞ்சியோடாதவாறு அருள்

புரிந்தார். சூரபன்மனுடைய கணைகளையெல்லாம் அழித்தருளினார். இருவரும் விண்ணில்நின்று பெரும்போர் புரிந்தார்கள். பலவிடங்களிலுந் திரிந்துபோர் புரிந்தார்கள். முருகக்கடவுள் சூரபன்மனுடையதேரை யழித்தருளினர். சூரபன்மன் தன்னுடைய இந்திரஞாலத்தேரை யழைத்து அதன்மீது ஏறிக்கொண்டு போர்செய்தான்.

## தடைப்பட்ட படைகள்வருதல்

முருகக்கடவுள் பிறவுலகுக்கும் இவ்வுலகுக்கும் தொடர்பாக அமைந்துள்ள வாயிலை முருகக்கடவுள் கணைகளால் அடைத்திருத்தலையும், அதனாற்றன் படைகள் வராது தடைப்பட்டு நிற்றலையும் சூரபன்மன் கண்டான். மூடியுள்ள கணைக்கதவுகளைத் திறந்துவிட்டான். தடைப்பட்டு நின்றுகொண்டிருந்த அவுணப்படைகள் இவ்வுலகில் நுழைந்தன. முருகக்கடவுளோடு போர்செய்யத் தொடங்கின. அறுமுகப்பெருமான் அப்படைகளைச் சினத்துடன் விழித்துப்பார்த்தார். அப்படைகளெல்லாம் எரிந்து சாம்பராயின. மேன்மேலும் வந்தபடைகளும் அவ்வாறே அழிந்தொழிந்தன. அதற்குமேலும் படைகள் வருதலை முருகக்கடவுள் கண்டார். தமது கையிலிருந்த மழு சூலம் உருளை முதலிய படைகளைவிட்டு இவ்வுலகில் வந்தபடைகளையும் வேறுலகில் இருந்த படைகளையும் அடியோடு ஒழித்தருளினார்

## அறுமுகப்பெருமான்மீது ஆழிப்படையை விடுதல்

முன்னாளிற் சிவபெருமானாற் கொடுக்கப்பெற்ற ஆழிப்படையைச் சூரபன்மன் எடுத்து வழிபாடு செய்து முருகக்கடவுள்மீது செலுத்தினான். அவ்வாழி அனைவரும் அஞ்சும்படியாக வந்தது. அறுமுகக்கடவுள் ஒரு திருக்கையை நீட்டி அவ்வாழியைக் கைப்பற்றிக்கொண்டார். அதனைச் சூரபன்மன் பார்த்துத் தளர்ச்சியடைந்தான். அளவிறந்த உருவங்களை யெடுத்துக் கணைமழைகளைச் சொரிந்தான். முருகக்கடவுள் அறிவுக்கணையை எடுத்துச் செலுத்திச் சூரபன்மனுடைய மாயைகளை நொடிப்பொழு

தில் நீக்கினார். சூரபன்மன் ஆற்றலிழந்து தனித்தவனைத் தேரின்மீது நின்றான். தேவர்கள் சூரபன்மனுடைய தளர்ச்சியைக் கண்டு கடல்போல ஆரவாரித்தார்கள். முருகக்கடவுள் மீது மலர்களைப் பொழிந்தார்கள். சூரபன்மன் தேருடன் விரைவில் மறைந்தான். இவ்வுலகச்சுவரை யொட்டியுள்ள வாயிலையடைந்து அறைகூவினான். அடுத்த உலகத்திற்குச் சென்றான். முருகக்கடவுளும் அவனைத் தொடர்ந்து அவன் நின்றவிடத்திற்குச் சென்றார். அங்கே போர்செய்து அதற்கு அடுத்த உலகத்திற்கு மறைந்து சென்றான். இவ்வாறே பல உலகங்களுக்குஞ் சென்று போர் செய்தான். முருகக்கடவுளும் அவனை விடாது தொடர்ந்து பின்பற்றினார்.

தேவர்கள் முருகக்கடவுளைக் காணாது வாடி வருந்தினார்கள். திருமால் அவர்களைத் தேற்றினார். சூரபன்மன் பலவுலகங்களினுஞ் சுற்றிப் பிறகு மகேந்திரபுரியில் வந்தான். அவுணப்படைகள் அறுமுகப்பெருமானோடு போர்செய்ய முயன்றன. முருகக்கடவுள் அப்படைகளைப் புன்முறுவலால் அழித்தார்.

## சூரபன்மன் இறந்த படைகளை உயிர்ப்பித்தல்

தன் படைகள் முற்றும் அழிந்தொழிந்தமையைச் சூரபன்மன் கண்டான். மேற்கொண்டு என்ன செய்வதென்று எண்ணமிட்டான். மாயவளை மனத்தில் எண்ணினான். அவள் வந்து தோன்றினாள். "என்னை எண்ணியது என்ன காரணம்?" என்று கேட்டாள். சூரபன்மன் தன்னுடைய தாயைப்பார்த்து, "நிகழ்ந்த போரிலே அனைவரும் அழிந்தொழிய நான் ஒருவன்மட்டும் எஞ்சிநின்றேன். இறந்தவர்கள் உயிர்பெற்றெழுதற்குத் தக்க சூழ்ச்சியை இயம்புவாயாக!" என்றான். மகன் விளம்பிய மாற்றத்தைக் கேட்ட மாயை, "ஓ மகனே! நீ மக்களையும் மற்றவர்களையும் இழந்தும் தேவர்களுடைய சிறையை நீக்கி, நீ பிழைத்தற்குத் தக்க வழியை எண்ணினையல்லை. நீ முருகக்கடவுளோடு மேலும் போர்செய்ய எண்ணுவாயாகில் விரைவில் அழிந்தொழிவாய். பன்னிரண்டு திருந்

தோள்களையுடைய அறுமுகக்கடவுளைச் சிறுவன் என்று எண்ணாதே. அவருடைய கையிலுள்ள வேற்படையினால் விரைவில் இறந்தொழிவாய். இறப்பதற்குத் துணிந்து நிற்கும் நீ நான் கூறுபவைகளைக் கேட்கமாட்டாய். ஊழ் வினையை வென்றார் எவருமிலர். நிற்க, உன்னுடைய உள்ளம் உவகையுறுமாறு இறந்தவர்கள் அனைவரும் உயிர் பெற்றெழ வேண்டுமானால், அதற்கொரு சூழ்ச்சி சொல்லுகிறேன் கேள். பெரும்புறக்கடலில் அண்மையில், அமுதசீதமந்தரகூடம் என்று ஒரு மலையிருக்கின்றது. அதனை இங்கே கொண்டுவருவாயானால் இறந்தவர்கள் யாவரும் எழுவர்,'' என்று கூறி மறைந்தாள்.

மாயவள் கூறிய சூழ்ச்சியைக் கேட்டுச் சூரபன்மன் மகிழ்ச்சியடைந்தான். மாயவள் கூறிய மலையைக்கொண்டு வருமாறு தன்னுடைய இந்திரஞாலத் தேரையனுப்பினான். இந்திரஞாலத் தேர் விரைந்து சென்று அம்மலையை யெடுத்துக்கொண்டு மகேந்திரபுரிக்கு வந்தது. அம்மலைக் காற்றுப்பட்ட அளவில், போர் தொடங்கிய காலம் முதல் அன்றுவரை இறந்த அனைவரும் உயிர்பெற்றெழுந்தனர். குதிரைகள் எல்லாம் எழுந்தன. யானைகள் எல்லாம் எழுந்தன. தேர்களையிழுத்து இறந்த அரிமாக்களின் கூட்டங்களெல்லாம் எழுந்தன. சிங்கமுகாசுரன் எழுந்தான்; பானுகோபன் எழுந்தான்; அக்கினிமுகன் எழுந்தான்; வச்சிரவாகு எழுந்தான்; தருமகோபன் எழுந்தான்; அதிசூரன் எழுந்தான்; அசுரேந்திரன் எழுந்தான்; மூவாயிரரும் எழுந்தார்; மற்றவர்களும் எழுந்தார்கள்.

உயிர்பெற்றெழுந்தவர்கள் சூரபன்மனுக்குப் பக்கத்தில் வந்து கூடினார்கள். போர்செய்யுந் தொழிலை மேற்கொள்ளத்தொடங்கினார்கள். இந்திரஞாலத்தேர் சூரபன்மனிடம் வந்தது. தன்னுடைய படைகள்முற்றும் எழுந்தமையைக் கண்டு சூரபன்மன் வியப்படைந்தான். தேவர்களை இழந்தான். தன்னுடைய தாயைப் புகழ்ந்தான். அவன் அடைந்த மகிழ்ச்சி அளவிடற்கரியதாக விருந்தது.

அவுணப்படையின் எழுச்சியைக் கண்ட தேவர்கள் அஞ்சி நடுங்கினார்கள். பலவகை வேற்றுருவங்களைக் கொண்டு ஓடினார்கள். பூதப்படை வீரர்கள் தளர்ச்சி யடைந்தார்கள். நூறாயிரத்தெண்மரும் வீரவாகுதேவரும் துன்பமுங் கடுஞ்சினமுங் கொண்டார்கள்.

அறுமுகக்கடவுள் இந்நிகழ்ச்சிகளையெல்லாம் கண்டருளினார். திருக்கையோடு திருக்கையைத் தட்டிப் புன்முறுவல் கொண்டார். அப்பொழுது சிங்கமுகன் பானுகோபன் அக்கினிமுகன் முதலியோர் சூரபன்மனை யடைந்து வணங்கினார்கள். "எம் அரசே! நீ இங்கே நிற்பாயாக! யாங்கள் சென்று அறுமுகனையும் அவனுடைய படையினரையும் விரைவில் வென்று வந்து உன்னுடைய அடிகளை வணங்குகிறோம்," என்றார்கள். சூரபன்மன், "அப்படியே செய்யுங்கள்," என்று கட்டளையிட்டான்.

## மீண்டும் போர் தொடங்குதல்

விடைபெற்றுச்சென்றோர் பலவகைப் படைக்கலங்களையுஞ் சொரிந்து, முருகக்கடவுளைச் சூழ்ந்தார்கள். முருகக்கடவுள் பாசுபதப் படைக்கலத்தைத் தமது திருக்கையிலெடுத்தார். திருவுளத்தால் வழிபாடு செய்தார். "சிங்கமுகாசுரன் முதலாகிய அவுணர் கூட்டங்களையும், அளவின்றி நிற்கின்ற அவுணப்படைகளையும் விரைவில் அழித்தருள்வாயாக!" என்று கூறி விடுத்தருளினார். அப்படைக்கலம் பாம்புகளையும், நஞ்சையும், இடிக்கூட்டங்களையும், உருத்திரர்களையும், தீயையும், பூதக்கூட்டத் தொகுதியையும், அளவிறந்த தெய்வப் படைக்கலங்களையும் வெளிப்படுத்தி, உலகமெங்கும் நெருங்கிச் சூழ்ந்து ஆரவாரித்து வந்தது. உயிர்பெற்றெழுந்த அனைவரையும் ஒருங்கே கொன்று தொலைத்தது. இந்திரஞாலத் தேரின் மேலிருந்த உயிர்கொடுக்கும் மலையைப் பொடியாக்கி யழித்தது. அறுமுகக் கடவுளிடத்திற்கு மீண்டு வந்து சேர்ந்தது. சூரபன்மன் முன்போலத் தனித்தவனானான். மிகுந்த துன்பத்தையடைந்து வருந்தினான்.

## இந்திரஞாலத் தேர் மீளுதல்

சூரபன்மன் அறுமுகக்கடவுளைத் தனித்தவராக்கி வெல்லவேண்டுமென்று முடிவுசெய்தான். தன்னுடைய இந்திரஞாலத் தேரைப் பார்த்து, "நீ சிறுவனைச்சூழ்ந்த பூதப்படைகளையும் வீரர்களையுங் கவர்ந்துசென்று உலகத்தின் உச்சியிலே வைத்துக்கொண்டிருப்பாயாக," என்று கூறினான். அத்தேர் பூதப்படைகளையும், வீரவாகுதேவர் முதலியோரையும் மயக்கி, உலகத்தின் உச்சிக்குக் கொண்டு சென்று அங்கு வைத்துக்கொண்டிருந்தது. அதனைச் சூரபன்மன் கண்டு, "நம்முடைய தேரின் ஆற்றல் நன்று நன்று," என்று கூறி நகைத்தான். தேவர்கள் அச்செயலையுணர்ந்து வருந்தினார்கள். அறுமுகக்கடவுள் சூரபன்மனுடைய சூழ்ச்சியை யுணர்ந்து சினங்கொண்டார். ஒரு கணையை எடுத்து வில்லிற் பூட்டினார். "நம்முடைய படைகளைக் கவர்ந்துகொண்டுபோய் வைத்திருக்கின்ற இந்திரஞாலத்தேரை விரைவில் இங்குக் கொண்டுவருவாயாக!" என்று கூறிவிடுத்தார். அக்கணை எல்லா வுலகங்களையுங் கடந்துசென்று இந்திரஞாலத்தேர் இருக்கும் இடத்தை யடைந்தது. அதன் ஆற்றலைத் தொலைத்தது. அதனைக் கொண்டுவந்து முருகக்கடவுள் திருமுன்பு சேர்த்தது. இந்திரஞாலத் தேரிலிருந்தவர்கள் முருகக்கடவுளை யடைந்து அவருடைய திருவடியைப் போற்றினார்கள். முருகக்கடவுள் இந்திரஞாலத்தேரைப் பார்த்து, "நீ சூரபன்மனிடஞ் செல்லாதே. அவன் இனி இறத்தல் உறுதி. இங்கே நில்," என்றார். அத்தேர் அதனைக்கேட்டு அஞ்சியது. சூரபன்மனிடத்திற்குச் செல்லாமல் முருகக்கடவுள் பக்கத்தில் தானே நின்றது.

## முருகக்கடவுள் விற்போர் புரிதல்

இந்திரஞாலத்தேர் முருகக்கடவுளுடைய ஒரு கணையினால் இவ்வுலகத்திற்குத் திரும்பிவந்ததையும், அனைவரும் மீண்டதையும் தேர் தன்னிடத்திற்கு மீண்டு வராமல் முருகக்கடவுளிடமே நின்றுவிட்டதையுஞ் சூரபன்மன் கண்டான். தீயைப்போலச் சினங்கொண்டான். ஒரு

பெரிய வில்லை வளைத்தான். அறுமுகக்கடவுள்மீது கணை களைச் சொரிந்தான். முருகக்கடவுளும் மிகுந்த சினங் கொண்டார். ஒரு பெரிய வில்லை வளைத்துச் சூரபன்மன் செலுத்திய கணைகளையெல்லாம் அறுத்தார்.

முருகக்கடவுளின் தேரோட்டியாகிய காற்றின் உடல் முழுவதும் கணைகளைப் பொழிந்தான் சூரபன்மன். சூர பன்மனுடைய கணைகளால் வருந்திப் புலம்பினான் காற்று. குதிரைகளைத் தூண்டாமல் வறிதே யிருந்தான். தண் ணருள் வடிவராகிய அறுமுகக்கடவுள் தேரோட்டியி னுடைய துன்பத்தை யுணர்ந்தார். ஆயிரங் கணைகளைத் தூண்டிச் சூரபன்மனுடைய வில்லைப் பல துண்டங்களாக முறித்தார்.

## சூரபன்மன் சூலம் எறிதல்

தன் வில் முறிந்ததைக் கண்டான் சூரபன்மன். சிவ பெருமான் தந்த ஒரு முத்தலைச் சூலத்தை யெடுத்தான். அரிமா வூர்தியிலேறினான். அதனை முருகக்கடவுளுடைய தேருக்கண்மையில் தூண்டினான். அவ்வரிமா அறுமுகக் கடவுளுடைய தேர்க்குதிரைகளை யடித்து வருத்தி ஆர வாரித்தது. சூரபன்மன் தான் கையிலெடுத்த சூலத்தை முருகக்கடவுள்மீது வீசினான். அது மின்போல ஒளி வீசிக்கொண்டு விண்வழியாகச் சென்றது. அது செல்லும் பொழுது தீயுண்டாகியது. இடிகள் உண்டாயின. படைக் கலங்கள் பல தோன்றின. பூதர்கள் அதனைக் கண்டு அஞ்சி ஓடினர். முருகக்கடவுள் அம்முத்தலைச் சூலத்தின் மீது ஆயிரங்கோடி கணைகளைச் செலுத்தினார். அக்கணைகளை யெல்லாம் சூலப்படை வீழ்த்திச்சென்றது. அப்படையின் ஆற்றலை முருகக்கடவுள் பார்த்தார். தம்முடைய திருக் கையிலிருக்கின்ற குலிசத்தைப் பார்த்து, "அந்தச் சூலப் படையைப் பிடித்துக்கொண்டு வருவாயாக," என்று கூறி விடுத்தார். அக்குலிசம் சூலப்படைக்கு எதிரே சென்றது. தீப்பிழம்பை வெளிப்படுத்திக்கொண்டு வருஞ் சூலப்படை தன்னைக் கிட்டியபொழுது அதனுடைய மூன்று தலைகளை யும் கௌவிப் பற்றிக்கொண்டு விரைந்து மீண்டது.

முருகக்கடவுள் இரண்டாயிரங் கணைகளைப் பூட்டிச் சூர பன்மன் ஏறியிருந்த அரிமாவைக் கொன்று வீழ்த்தினர்.

## சூரபன்மன் சக்கரவாளப்பறவை வடிவெடுத்துப் போர் புரிதல்

சூரபன்மன் தன் சூலம் தொலைந்ததையும் அரிமா அழிந்ததையுங் கண்டான். ஊழித் தீபோலச் சினங் கொண்டான். மாயத்தீயினால் சக்கரவாளப் பறவையின் வடிவத்தையெடுத்தான். நிலம் பிளக்கும்படி சிறகுகளால் அடித்து விண்ணில் எழுந்தான். பூதப்படைகளைப் பல வாறு வருத்தினன். பறவை வடிவெடுத்துத் திரியுஞ் சூரபன்மனைத் தேர்மீது சென்றுகொன்று தொலைத்தல் கூடாது என்று திருவுள்ளங் கொண்டருளினர். இந்திரன் மயில் வடிவெடுத்து முருகக்கடவுளைத் தாங்கினன். சக்கர வாளப் பறவையாயுள்ள சூரபன்மன்மீது எண்ணிறந்த கணைகளைச் செலுத்தினர். சூரபன்மன் சென்றவிடங்கட் கெல்லாந் துரத்திச் சென்று போர்புரிந்தார். முருகக் கடவுளுடைய கையின்கண் உள்ள வில்லைத்கறிக்க வெண்ணி வந்தான். முருகக்கடவுள் தம்முடைய திருக்கையிலுள்ள வாட்படையை வீசி அவனுடைய பறவை வடிவை இரண் டாக வெட்டினர். நான்முகன் திருமால் முதலிய தேவர் கள் இன்பக் கூத்தாடினர்கள்.

## சூரபன்மன் பலவேறு வடிவெடுத்துப் போர் புரிதல்

சூரபன்மன் ஒரு பேருருவங்கொண்டு திக்குகளை யெல்லாம் மூடிநின்றான். முருகக்கடவுள் கணைகளையேவி அவ்வடிவத்தை யழித்தார். சூரபன்மன் பிறகு மண்ணுல கத்தையும் விண்ணுலகத்தையும் அழித்தற்கெழுந்தாற் போல மிகுந்த நீர் வடிவங்கொண்டு விண்ணுலகம் வரை நிமிர்ந்து நின்றான். முருகக்கடவுள் நூறு தீக்கணைகளை விடுத்து நீர் வடிவத்தை யொழித்தார். பிறகு சூரபன்மன் தீயின் வடிவெடுத்து நின்றான். முருகக்கடவுள் பெருங் காற்றுக் கணைகளையேவி அத்தீயின் வடிவத்தைத் தொலைத் தார். பின்பு சூரபன்மன் காற்றாகி நின்றான். முருகக்

கடவுள் பாம்புக் கணைகளையேவிக் காற்று வடிவத்தைக் கெடுத்தார்.

சூரபன்மன் நான்கு நாட்கள் தொடர்ந்து போர் செய்தான். பல வடிவங்களைக் கொண்டு தோன்றினான். மும்மூர்த்திகளைப் போல வந்தான்; தேவர்களையும் அவுணர்களையும் போல வந்தான். இந்திரனைப் போல வந்தான்; பூதங்களைப்போல வந்தான்; இயமனைப்போல வந்தான்; பேயைப்போல வந்தான்; தீயைப்போல வந்தான்; காற்றைப்போல வந்தான்; கடலைப்போல வந்தான்; நஞ்சைப்போல வந்தான்; பாம்பைப்போல வந்தான்; முகிலைப்போல வந்தான்; இடியைப்போல வந்தான்; இருளைப்போல வந்தான்; மலையைப்போல வந்தான்; தாரகனைப்போல வந்தான்; சிங்கமுகனைப்போல வந்தான்; பானுகோபனைப்போல வந்தான்; அக்கினிமுகனைப்போல வந்தான்; தருமகோபனைப்போல வந்தான். இவ்வாறு பல வடிவங்களைக் கொண்டு முருகக்கடவுளைச் சூழ்ந்தான். அவன் கொண்ட வடிவங்களைக் கண்ட தேவர்கள் அஞ்சியோடினார்கள். அறுமுகக்கடவுள் கணைகளைச் செலுத்திச், சூரபன்மன் கொண்ட மாயவடிவங்களையெல்லாம் அழித்தருளினார். சூரபன்மன் தனித்தவனாக நின்றான்.

## முருகக்கடவுள் பேருருவங் காட்டுதல்

முருகக்கடவுள் சூரபன்மனை நோக்கி, "ஓ சூரபன்மனே! நீ பயனற்ற பல பொய் வடிவங்களை நம்முன் கொண்டாய். நாம் அவைகளை யெல்லாம் அழித்தோம். நாம் அழியாத நம்முடைய பேருருவத்தைக் கொள்ளுகிறோம்; நீ அதனைக் காண்பாயாக," என்று கூறியருளினார். கடல், உலகம், திக்கு, தேவர்கள், உயிர்கள் எல்லாம் அடங்கப்பெற்ற ஒரு பெரிய வடிவத்தைக் கொண்டருளினார். அவ்வுடற்கண், உள்ளடியில் மலைகளும், புறவடியிற் கடல்களும் காலடிவிரல்களில் இடி, விண்மீன் முதலிவைகளும் அடங்கியிருந்தன. பரட்டில் வருணன் முதலியவர்களும், கணைக்காலில் முனிவர்களும் அமைந்திருந்தார்கள். முழந்தாளில் வித்தியாதரர் முதலாயினோர் இருந்தார்கள்.

தொடையில் இந்திரன் முதலியோர் இருந்தார்கள். தொடைமூலத்திற் காலன் முதலியோர் இருந்தார்கள். அரையில் அவுணர் இருந்தார்கள் விலாப்புறங்களில் தேவர்கள் இருந்தார்கள். மூலாதாரத்தில் நாகர்கள் இருந்தார்கள். குறியில் அமுதம் இருந்தது. நாபியில் உயிர்த் தொகைகள் இருந்தன. மயிரில் உலகங்கள் அமைந்திருந்தன. தோள்களில் திருமால் நான்முகன் முதலியோர் இருந்தனர். கைவிரல்களில் தெய்வப்பெண்கள் இருந்தார்கள். வாயில் மறைகள் இருந்தன. இவ்வாறு பலபொருள்களுந் தம்மிடத்தே யடங்கிய பேருருவத்தை முருகக்கடவுள் காட்டி நின்றார். அவ்வடிவத்தைத் தேவர்கள் கண்டு அஞ்சி நடுங்கி நின்றார்கள். முருகக்கடவுள் அஞ்சுதல் வேண்டாமென்று அவர்கட்கு அருள்புரிந்தார். அவர்கள் மகிழ்ச்சியோடு தொழுதுகொண்டு நின்றார்கள்.

## சூரபன்மன் அறுமுகக்கடவுளைப் போற்றுதல்

முருகக்கடவுள் கொண்ட பேருருவத்தைக் கண்ட சூரபன்மன் மிகுந்த வியப்படைந்து நின்றான். முருகக்கடவுள் அவனுக்குச் சிறிது நல்லுணர்வைக் கொடுத்தருளினார். நல்லுணர்வுபெற்ற சூரபன்மன், “இக்கடவுள் எண்ணற்ற அவுணப்படைகளை ஒரு நொடிப்பொழுதிற் கொன்றருளினார். உலகங்கள்தோறும் என்னோடு போர் செய்து என்னைச் சேர்ந்தவர்கள் யாவரையும் அழித்தருளினார். இந்திரஞாலத்தேரையும் என்னிடம் மீண்டு வராவண்ணம் தடுத்துவிட்டார். மிகுந்த ஆற்றலுடையவனாகிய யான் செலுத்திய படைக்கலங்கள் எல்லாவற்றையும் நீக்கினார். நான் கொண்ட பொய்ம்மைகள் முழுவதையும் கணைகளால் போக்கினார். உலகங்களும் உலகத்துப் பொருள்களும் தம்மிடத்தே அமைந்த ஒரு பெருவடிவத்தை என் கண்முன்னே காட்டி நின்றார். அழகிய மயிலூர்தியின்மீது விளங்கிய இந்தக் கடவுளை நான் அந்நாளில் சிறுவன் என்று எண்ணியிருந்தேன். இத்தன்மைகளை யெல்லாம் நான் முன்பு உணர்ந்திலேன். நான்முகன் திருமால் முதலிய தேவர்களுக்கும் யாவர்க்கும் மூலகாரண

மாய் நின்ற வடிவம் இவ்வடிவமன்றோ? முன்னே ஒற்றனாகவந்த வீரவாகு, வேலாயுதம் பொருந்திய கையையுடைய இக்கடவுளை முழுமுதற்பொருள் என்றே சொன்னான். அவன் கூறியவைகளை நான் அன்று நம்பவில்லை. இன்று இக்கடவுளே முழுமுதற்பொருள் என்னும் உண்மையை உணர்ந்தேன். அத்தூதுவன் கூறியவைகள் உண்மையேயாம். நான் பெற்ற ஆயிரத்தெட்டு உலகங்களும் பிறவும் பெருமையிற் சிறந்த இவ்வாறுமுகக் கடவுளுடைய அடித்தாமரைகளிலுள்ள ஒரு மயிரில் தோன்றி நிற்கின்றன. எல்லாப் பொருள்களையும் உள்ளடக்கி இக்கடவுள் கொண்டுள்ள வடிவம் முழுமையையும் யாவர் குறித்தறிய வல்லவர்? உடல் முழுவதும் கண்களாக அமையப்பெற்றவர்களுக்கும் காண்டற்கு நீண்ட காலம் வேண்டும். பேரழகு பொருந்திய பெருவடிவத்தில் உள்ள பேரொளியும் பிறவும் உலகில் வேறு யாவரிடத்திலுள்ளன? நான் பலமுறை பார்த்தும் எனக்கு மனநிறைவு உண்டாயிற்றில்லை. இக்கடவுளுடைய பேருருவத்தைக் கண்டு அஞ்சுவதல்லாமல் தேவர்களில்தாம் யார் இதனைக் காண வல்லவர்? நான் அழியாத சிறந்த மேன்மையைப் பெற்றுள்ளேனாதலிற் சாண்கின்றேன். ஆயிரங்கோடி காமர்களுடைய அழகுகளெல்லாம் ஒன்றுசேர்ந்து பொருந்தினவாயினும் இக்கடவுளுடைய திருவடியின் மேலான அழகிற்குச் சிறிதும் ஈடாகமாட்டாதென்றால் இக்கடவுளுடைய பெருவடிவப் பேரழகிற்கு எவரால் ஒப்புக்கூற இயலும்? என் தம்பி சிங்கமுகன், என் மகன் இரணியன் முதலியோர் முருகக்கடவுளைச் சிறுவர் என்று எண்ணாதே; அவர் திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் காணாத சிவபெருமானேயாகும்,'' என்று கூறினார்கள். அவர்கள் இயம்பியது உண்மையேயாகியது. பெருமை பொருந்திய இக்கடவுளுடைய திருவடிமுதல் திருமுடிவரை எவ்வளவு காலம் பார்த்தாலும் கண்களுக்கு அடங்காது. நினைத்தால் உள்ளத்திற்கு அடங்காது. பேரியல்பு பொருந்திய இக்கடவுள் என்னோடு போருக்கு வந்தது என்னிடத்து வைத்த பேரருளென்றே உறுதியாக

எண்ணலாம். என்னுடைய சினந் தீர்ந்தது; போரின் ஊக்கம் குறைந்தது; மயிர்கள் பொடித்தன; கண்கள் இன்பநீரைச் சொரியலாயின: அடியேனுக்கு இக்கடவுளிடத்தே அன்பு பிறந்தது; உள்ளம் உருகியது; ஆணவம் அகன்றது; அறிவு உண்டாகியது; வலத்தோளும் வலக்கண்ணுந் துடித்தன; எல்லா உலகங்களும் அவற்றின் பொருள்களும் அமைந்த இக்கடவுளுடைய பெரிய வடிவத்தை நான் கண்டேன்; இது நான் முன்பு செய்த தவத்தின் பயனேயாகும்; இக்கடவுளை என் கால்கள் வலம் வருதல் வேண்டும்; கைகள் தொழுதல்வேண்டும்; தலை வணங்குதல்வேண்டும்; நா புகழ்ந்து பேசுதல்வேண்டும்; நான் தீவினையினின்று நீங்கி இக்கடவுளுடைய அடிமையாக வாழ்தலை விரும்புகிறேன். மானந்தான் அவ்வாறு செய்தலைத் தடுக்கின்றது. தேவர்கள்பொருட்டு வந்து போரைச்செய்த இக்கடவுளை நான் சினப்பதே தக்கதாகும். ஆனால், என்னுள்ளம் அக்கடவுள் வழியாகவே செல்கின்றது. இப்பெருமான் இதுவரை என்னோடு நீண்ட போரைச்செய்து பிரியாதவராக நிற்பதெல்லாம் ஒரு திருவிளையாடல் என்றே உணருகின்றேன். இவர் என்னைக் கொல்ல வேண்டுமென்று எண்ணினால், அதனை யாரால் தடுக்க இயலும்? ஒரு குற்றமுஞ் செய்யாத தேவர்களை நான் சிறையில் வைத்தது தீமையென்று பலதரம் சொன்னார். தேவர்களைச் சிறை செய்தமையால்தான், மறைகளாலும் தேவர்களாலும் காணப்பெறாத கடவுள் இங்கு எழுந்தருளிவரப் பெற்றேன். நான் தேவர்களைச் சிறை செய்தது நன்மையையே உண்டாக்கியது. ஒப்பற்ற முழுமுதற்கடவுள் முன்பு நின்று நான் இதுவரை போர் செய்தேன். இனி மனந் தளரேன். மேலாகிய பெருமையைப் பெற்றேன். பேராண்மையாளனும் நானேயானேன். என்றும் என் புகழ் நிலை பெறும்; இவ்வுடம்பு நிலைபெறுமோ? நான் இப்பொழுது தேவர்கள் சிறையை நீக்கி, இக்கடவுளை வணங்கி எளியார் போன்றிருப்பின், என் புகழ் அழிந்துவிடும்,'' என்பன போல் பல மொழிகளைச் சொல்லி முருகக்கடவுளுடைய

திருமுன்பு நின்றான். முருகக்கடவுள் சூரபன்மனுக்குக் கொடுத்த நல்லுணர்வைப் போக்கி முன்போல் ஆணவத்தை யுண்டாக்கினார். தாமும் பேருரு நீங்கிப் பழைய வடிவத்தைக் கொண்டார்.

கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி அன்றே?

ஒற்றெனை முன்னம் வந்தோன் ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிகல் இன்றி நின்ற பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற வெல்லாம் துணிபெனக் கொண்டி லேனால்
இற்றைஇப் பொழுதில் ஈசன் இவன்எனும் தன்மை கண்டேன்!

மீயுயர் வடிவங் கொண்டு மேவிய தூதன் சொற்ற
வாய்மைகள் சரதம் அம்மா மற்றியான் பெற்ற அண்டம்
ஆயவை முழுது மற்றும் அறுமுகம் படைத்த செம்மல்
தூயபொற் பதரோ மத்தில் தோன்றியே நிற்கும் அன்றே!

அண்டர்கள் முனிவர் ஏனோர் அகிலமுங் காட்டி அண்ணல்
கொண்டிடு படிவம் முற்றும் குறித்தியார் தெரிதற் பாலார்
எண்டரு விழிகள் யாக்கை எங்கணும் படைத்தோர்க் கேனும்
கண்டிட அநந்த கோடி கற்பமுங் கடக்கும் அன்றே!

சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னில்
ஏர்க்குறும் ஒளியும் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள உலகில் அம்மா அற்புதத் தோடும் பல்கால்
பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை இன்னும்என் பார்வை தானும்!

நேரிலன் ஆகி ஈண்டே நின்றிடும் முதல்வன் நீடும்
பேருரு வதனை நோக்கிப் பெரிதும்அச் சுறுவ தல்லால்
ஆரிது நின்று காண்பர் அமரரில் அழிவி லாத
சீரிய வரங்கொண் டுள்ளேன் ஆதலில் தெரிகின் றேனால்!

ஆயிர கோடி காமர் அழகெலாம் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாம் சரணம் தன்னில்
தூயநல் எழிலுக் காற்றா தென்றிடில் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்?

இங்கென துயிர்போல் உற்ற இளவலும் இளைய சேயும்
செங்கையில் வேலோன் தன்னைச் சிறுவனென் றெண்ணல் கண்டாய்
பங்கயன் முதலோர் காணாப் பரமனே ஆகும் என்றார்
அங்கவர் மொழிந்த ஆறுஞ் சரதமே ஆன தன்றே!

அண்ணலார் குமரன் மேனி அடிமுதன் முடியின் காறும்
எண்ணிலா ஊழி காலம் எத்திறம் நோக்கி னாலும்
கண்ணினால் அடங்கா துன்னிற் கருத்தினால் அடங்கா தென்பால்
நண்ணினான் அமருக் கென்கை அருள்என நாட்ட லாமே!

திருகிய வெகுளி முற்றும் தீர்ந்தன செருவின் ஊக்கம்
அருகிய துரோமம் புள்ளி ஆயின விழியில் நீர்
பெருகிய திவன்பால் அன்பு பிறந்தன தமியேற் குள்ளம்
உருகிய தென்பு தானும் உலைமெழு காகும் அன்றே!

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணும் துடித்தன புவனம் எங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயன்ஈ தன்றோ!

சூழுதல் வேண்டும் தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திட வேண்டுந் தாலு
வாழுதல் வேண்டுந் தீமை அகன்றுநான் இவற் காளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே!

ஒன்னலர் பொருட்டால் ஏகி உறுசமர் இழைத்த செம்மல்
தன்னுரு வதனைக் காண்கின் முனிவதே தகுதி யாகும்
வன்னிகொள் வெண்ணெ யேபோல் வலியழிந் துருகிற் றென்னால்
என்னுடை யத்த அன்றோ உணர்ச்சியும் யாக்கை முற்றும்!

ஏடவிழ் அலங்கல் மார்பன் என்னுடன் இந்நாள் காறும்
நீடிய இகல்போர் ஆற்றி நீங்கலான் நின்ற தெல்லாம்
ஆடலின் இயற்கை என்றே அறிந்தனன் அஃதான் றன்னோன்
சாடிய வேண்டும் என்னின் யாரது தாங்கற் பாலார்?

ஏதமில் அமரர் தம்மை யான்சிறை செய்த தெல்லாம்
தீதென உரைத்தார் பல்லோர் அன்னதன் செயற்கை யாலே
வேதமும் அயனும் ஏனை விண்ணவர் பலருங் காணா
நாதன்இங் கணுகப் பெற்றேன் நன்றதே ஆன தென்றே!

ஒன்றொரு முதல்வன் ஆகி உறைதரு மூர்த்தி முன்னம்
நின்றமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினித் தளரேன் அம்மா
நன்றிதோர் பெருமை பெற்றேன் வீரனும் நானே ஆனேன்
என்றும்இப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்ப துண்டோ?

வானுளோர் சிறையை நீக்கி வள்ளலை வணங்கி இந்த
ஊனுலாம் உயிரைப் போற்றி அளியர்போல் உறுவன் என்னில்
ஆனதோ எனக்கி தம்மா ஆயிர கோடி அண்டம்
போனதோர் புகழும் வீரத் தன்மையும் பொன்றி டாவோ?

என்னஇத் தகைய பன்னி நிற்றலும் எவர்க்கும் மேலோன்
உன்னருந் தகைத்தாய் நின்ற ஒருபெருந் தோற்றம் நீத்து
மின்னிவர் கலாபம் ஊர்ந்த வியன்உருக் கொண்டு நண்ணித்
துன்னலன் போதம் மாற்றித் தொன்மைபோல் ஆகச் செய்தான்.

## அறுமுகக்கடவுளோடு சூரபன்மன் மீண்டும் போர் செய்யத்தொடங்குதல்

அவ்வளவில் சூரபன்மனுக்குப் பழைய பகையும் சினமும் உண்டாயிற்று. போரில் ஊக்கஞ்செலுத்தினன். கையோடு கையைத்தட்டித் தலையை அசைத்து நகைத்தான். "சிறுவனாகிய இந்தக் கள்வன் என்னோடு போர் செய்தற்கு ஆற்றாதவனாகித் தான் கற்ற மாயங்களுள் ஒன்றைக் காட்டி என்னை யிங்கே மயக்கிவிட்டான். நான் அந்த மாயத்தைத் தெரிந்து அழித்துவிட்டேன். எனக்கு ஒப்பானவர்கள் யார் இருக்கிறார்கள்? என்றும் உடலழியாத நான் கருத்தழிகிறதுண்டோ? முன்னே இந்தப் போரை மூட்டிய தேவர்களை வென்று பிறகு இந்தச் சிறுவனை வெல்லுகிறேன்," என்றான்.

பிறகு சூரபன்மன் ஒரு மாய மறையைச் சொன்னான். மிகப் பெரிய இருள் வடிவத்தைக்கொண்டான். அதனுள் மறைந்து நின்று ஆரவாரித்தான். தேவர்கள் கலக்கமடைந்தார்கள். பல பெரிய தலைகளையும் அளவில்லாத கைகளையுமுடைய ஒரு பெரிய வடிவத்தை யெடுத்து விண்ணில் நின்றான். தேவர் கூட்டங்களை உண்ண எண்ணினான். தேவர்கள் அஞ்சி நடுங்கிச் சிதறி யோடினார்கள். அவர்கள் முருகக்கடவுளை நோக்கி,

நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே யோலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமான் நல்கும் கடவுளே ஓலம் ஓலம்.

தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரும் ஆகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

என்று வாய்விட்டலறி ஓலமிட்டார்கள். பாதுகாக்க வேண்டும் என்று பலவாறு முறையிட்டார்கள்.

## சூரபன்மன் முடிவு

தேவர்களுடைய துன்பத்தையும் சூரபன்மனுடைய சீற்றத்தையும் முருகக்கடவுள் திருவுள்ளத்திலே கொண்டருளினார். தம்முடைய திருக்கையிலிருக்கும் வேற்படையைப் பார்த்து, "இச்சூரபன்மனுடைய மார்பைப் பிளந்து விரைவிலே மீள்வாயாக!" என்று கூறி அவன் மீது செலுத்தியருளினார். வேற்படை ஆயிரங்கோடி கதிரவர்களைப்போல ஒளிவிட்டுத் தீப்பிழம்புகளை வெளிப்படுத்திச் சென்றது. சூரபன்மனுடைய இருள் வடிவம் உடனே நீங்கியது. மாயம் மாய்ந்ததையும் வேற்படை எதிரே வருதலையுஞ் சூரபன்மன் கண்டான். 'அழியாத மேன்மையினையுடைய என்னை, இச் சிறுவன் விடுத்த வேற்படை என்ன செய்யும்!' என்று எண்ணி நகைத்துப் பெருஞ் சீற்றங்கொண்டான். உலகங்களையெல்லாம் அழித்துப் பிறகு இவ் வேற்படையை அழிக்கிறேன். என்று எண்ணினான். கடலின் நடுவிடத்திற்குச் சென்றான். தீயைப்போன்ற தளிர்களையும், புகையைப்போன்ற இலைகளையும், பொன்போலப் பூங்கொத்துக்களையும் வெளிப்படுத்தி, மரகதமணிபோலக் காய்த்து, மாணிக்கமணி போலப் பழுத்து, முகில்களைப்போலக் கிளைகளைப்போக்கி, மிகவும் உயர்ந்து நூறாயிரம் யோசனை அகன்ற அரையினையுடைய ஒரு பெரிய மாமர வடிவமாக நின்றான். தன் வடிவத்தை யசைத்தான். அதனால் நிலவுலகங்கள் இடிந்து சரிந்தன. உலகத்துப் பொருள்களெல்லாம் நிலை தடுமாறின. மாமர வடிவாகநிற்குஞ் சூரபன்மனுடைய தன்மையை வேற்படை பார்த்தது. சினத்துடன் விரைந்து சென்று தாக்கியழித்தது. சூரபன்மன் அரற்றுதலோடு வெட்டுண்டு வீழ்ந்தான். ஆயினும், சிவபெருமான் கொடுத்த மேன்மையின் சிறப்பால் இறக்கவில்லை. அவன் விரைந்து பழைய வடிவத்தைக்கொண்டான். உடைவாளை

உறையினின்றுங் கழற்றினன். போர்செய்ய எண்ணி எதிர்த்துச் சீறினன். வேற்படை அவனுடைய மார்பைப் பிளந்து உடலை இருகூறுக்கிக் கடலில் வீழ்த்தியது. தேவர்கள் மகிழ்ந்து மலர்மழை சொரிந்தார்கள். வேற்படை தேவகங்கையில் நீராடி முருகக்கடவுளுடைய திருக்கையை அடைந்து வீற்றிருந்தது.

### சூரபன்மன் சேவலும் மயிலும் ஆதல்

சிவபெருமான் கொடுத்த மேன்மையினுல் அழியாத சூரபன்மன் மீட்டும் எழுந்தான். முருகக்கடவுளோடு போர்செய்யவெண்ணினன். கோழியும் மயிலும் ஆனன். அவருடைய திருமுன்பு வந்தான். தேவர்கள் அஞ்சியோடு மாறு போர்ச் செருக்குக்கொண்டான். அறுமுகக்கடவுள் அவன்மீது திருவருள்நோக்கஞ் செலுத்தியருளினர். அத்திருவருட் பார்வையால் சூரபன்மனுக்கு நல்லறிவு உண்டாகியது. அறுமுகக்கடவுள் நல்லறிவுபெற்ற கோழியைப்பார்த்து, "நீ நம்முடைய தேரிற் கொடியாக அமர்ந்திருந்து கூவுவாயாக!" என்று திருவருள்புரிந்தார். கோழி கொடியாகிக் கூவியது. பின்பு முருகக்கடவுள் இந்திரனுகிய மயிலில்நின்றும்இறங்கினர். தமது அருளைப்பெற்றுக் குறிப்பின் வழிநின்ற சூரனுகிய மயிலின்மீது ஏறினர். "நம்மைச் சுமப்பாயாக!" என்று அதனை ஊர்தியாகக் கொண்டார். மகேந்திரபுரியிலுள்ள போர்க்களத்தையடைந்தார். தேவர்களும் வீரவாகுதேவரும் முருகக் கடவுளை வணங்கி ஆரவாரித்துச் சூழ்ந்தார்கள்.

## கச. தேவர்கள் போற்றுதல்

### தேவர்கள் மகிழ்ச்சி

முருகக்கடவுள் சூரபன்மனைக்கொன்று அவனுடைய ஆணவத்தைப் போக்கி அடிமை கொண்டதைக்கண்டு திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் முருகக்கடவுளைப் பலவாறு போற்றலானர்கள்.

கார்தடிந்து துய்க்கும் கனைகடலின் நீர்வறப்பப்
போாதடிந்து செல்லும் புகர்வேல் தனைவிடுத்துச்
சூர்தடிந்தாய் அன்றே தொழும்அடியேம் வல்வினையின்
வேர்தடிந்தாய் மற்றெமக்கு வேறோர் குறையுண்டோ ?

மாறுமுகங் கொண்டுபொரும் வல்லவுணர் மாளாமல்
நூறுமுகம் எட்டு நோதக் கனபுரிய
தேறுமுகம் இன்றித் திரிந்தேமை ஆளவன்றோ
ஆறுமுகங் கொண்டே அவதரித்தாய் எம்பெருமான்.

நீதி முறையதனில் நில்லா அசுரர்புரி
தீது பலவுளவுந் தீர்ந்தோம் பழியகன்றோம்
வேத நெறிதொல்லை வெறுக்கையொடு பெற்றனமால்
ஏதும் இலையால் எமக்கோர் குறைஎந்தாய்.

மன்ற அவுணர் வருத்திட இந் நாள்வரையும்
பொன்றி னவரென்னப் புலம்பித் திரிந்தனமால்
இன்று பகைமாற்றி எமக்கருள்நீ செய்கையினால்
சென்ற உயிர்மீண்ட திறம்பெற் றனம்ஐயா.

இவ்வாறு தம்மைப் போற்றிய தேவர்கட்கு முருகக் கடவுள் திருவருள் புரிந்தார்.

## கரு. இரணியன் புலப்புதல்

### மனைவியர் மாளல்

போர்க்கள நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண்டிருந்த அவுணர்கள் சிலர் விரைந்துசென்று, "ஆறுமுகக் கடவுளுடைய வேற்படையினாலே சூரபன்மன் இறந்தான்" என்று அவனுடைய பட்டத்து மனைவியாகிய பதுமகோமளைக்குப் பகர்ந்தார்கள். அவள் அம்மொழிகளைக் கேட்டு உயிர் நீங்கினாள். மற்றைப் பெண்களும் வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதார்கள். தீக்குழி ஒன்றை உண்டாக்கினார்கள். பதுமகோமளையின் உடலை அதிற் போட்டுத் தாமும் வீழ்ந்து இறந்தார்கள். திருமகள் அந் நகரத்தைவிட்டு நீங்கினாள்.

### இரணியன் புலம்பி இறுதிக்கடன் இயற்றுதல்

தன் தந்தை இறந்து, சேவலும் மயிலுமாகி முருகக் கடவுளிடத்து வந்ததனை இரணியன் கண்டான். மனம்

கலங்கி நொந்தான். விண்ணில் நின்றுகொண்டு, "ஓ பேரரசே! நான் அந்நாளில் நவின்ற மொழிகளைச் சிறிதும் நீ கேட்டாய் இல்லை. இறக்கும்படியாகப் போர்செய்தாய். நான் உனக்காக என்னுடைய உயிரைக் கொடுக்காமல் இப்பொழுது அன்புடையவன்போலத் துன்புறுகின்றேன். நிலையற்ற உடலை நிலையெனக்கருதிப் பலருங்கண்டு இகழுமாறு உனக்குத் தெரியாமல் ஒளித்தோடினேன். நீ மறைந்த பின்பு வந்தேன். நான் மிகவும் நல்லன் அல்லனோ? நான்முகன் முதலிய தேவர்கள் போற்ற அரசு செய்திருந்த நீ, இப்பொழுது முருகக்கடவுளுடைய தேரிலே கொடியாக நின்று கூவுகின்றாய்! உலகத்துயிர்களெல்லாம் வந்து வணங்கப் பெற்றிருந்த நீ, இப்பொழுது அறுமுகக் கடவுளைத் தாங்கும் ஊர்தியாக அமைந்துநின்றாய். சிவனுடைய மகனாகிய முருகனோடு போர் செய்தமையால் தான் நீ இவ்வாறு மயிலூர்தியாகி அக்கடவுளைச் சுமக்கலானாய்," என்று கூறிப் பலவாறு புலம்பினான். அதன்பின் சுக்கிராச்சாரியாரைக் கொண்டு இறுதிக் கடன்களை இறந்தவர்கட்கெல்லாம் முறைப்படி செய்தான். 'செல்வம் துன்பத்திற்கு வித்தாகும்' என்று அதனை வெறுத்தான். சிவபெருமானை யெண்ணித் தவஞ்செய்து வீடுபேற்றை யடையுமாறு ஓரிடத்திற்குச் சென்றான்.

## கசு. திருச்செந்திற்பதிக்கு மீளுதல்

### தேவர்களைச் சிறைமீட்டல்

முருகக்கடவுள் வீரவாகுதேவரைப் பார்த்து, "இந்திரன் மகனாகிய சயந்தனையும் பிறதேவர்களையும் சிறையிலே நின்றும் மீட்டுக்கொண்டு வருவாயாக," என்று கட்டளையிட்டருளினார். வீரவாகுதேவர் அதனைக்கேட்டு நன்று என்று மகிழ்ந்தார். போர்க்களத்தை நீங்கி மகேந்திரபுரியை அடைந்தார். சயந்தனுந் தேவர்களுந் துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்ற சிறைச்சாலைக்குச் சென்றார். வீரவாகுதேவரைக் கண்டு சயந்தனுந் தேவர்களும் போற்றினார்கள். வீரவாகுதேவர், சயந்தன் முதலிய

தேவர்களைப் பார்த்து, "முருகப்பெருமான் சூரபன்மன் முதலியோரை அழித்தருளினார். நீங்கள் அனைவரும் புறப்பட்டு முருகக்கடவுளிடம் வாருங்கள்," என்று கூறியருளினார். அனைவருஞ் சிறை நீங்கிப் போர்க்களத்தை யடைந்து முருகக்கடவுளை வணங்கினார்கள். முருகக்கடவுள் அனைவருக்குந் திருவருள் புரிந்தருளினார். இந்திரன் தன் மகன் சயந்தனைத் தழுவி மகிழ்ந்தான்.

## மகேந்திரபுரியை மறைத்தல்

போரில் அன்றுவரை இறந்த பூதப்படைகள் முற்றும் உயிர்பெற்றெழுமாறு முருகக்கடவுள் திருவுளங்கொண்டருளினார். அப்படைகளும் அவ்வாறே யெழுந்தன. அவைகள் அறுமுகக்கடவுளை வணங்கி நின்றன. முருகக்கடவுள் வருணனைப் பார்த்து, "சூரபன்மன் இருந்த மகேந்திரபுரியை ஊழிக்காலத்தைப்போல நீரில் மறைத்து ஒழிப்பாயாக!" என்று கட்டளையிட்டருளினார். வருணனும் மேலெழுந்து மகேந்திரபுரியை அங்குள்ள உயிர்களோடு கடலில் அழுத்தினான். முருகக்கடவுள் போர்க்களத்தை நீங்கிப் படைகளுடன் திருச்செந்திற்பதியை அடைந்தார்.

## அறுமுகக்கடவுளை வழிபடுதல்

நான்முகன் முதலியோர் அறுமுகக்கடவுளை வணங்கி, "நாங்கள் தேவரீருக்கு வழிபாடு செய்ய விரும்புகிறோம்," என்றார்கள். முருகக்கடவுள் அதற்கு உடன்பட்டார். வழிபாட்டுப் பொருள்களை மிக விரைந்து தேவர்கள் கொண்டுவந்தார்கள். இறைவனருளிய மறைமுறைப்படி வழிபாடு செய்யப்பெற்றது. முருகக்கடவுள் தேவர்கள் எல்லோருக்குந் திருவருள் புரிந்தருளினார்.

நான்காவது

போர்புரிகாண்டம் முற்றிற்று.

## 5. தேவகாண்டம்

### முருகவேள் வணக்கம்

*மாயையின் வலியோன் ஆகி மான்முத லோரை வென்றே*
*ஆயிரத் தோரெட் டண்டம் அரசுசெய் தகம்நூ றெட்டுக்*
*காயம தழிவின் றுகிக் கடவுளர்க் கலக்கண் செய்த*
*தீயசூர் முதலைச் செற்ற குமரன்தாள் சென்னி வைப்பாம்.*

## க. திருப்பரங்குன்று சேர்தல்

### திருச்செந்தூரைவிட்டுப் புறப்படுதல்

திருமுருகப்பெருமான் மயிலூர்தியின்மேல் ஏறித் திருச்செந்தூரை விட்டுப் புறப்பட்டார். நான்முகன் திருமால் இந்திரன் முதலிய யாவரையும் பார்த்து, "நீங்கள் உங்களுக்குரிய ஊர்திகளில் ஏறி நமக்குப் பக்கத்தில் வாருங்கள்," என்று திருவாய்மலர்ந்தருளினர். அவர்களும் அவ்வாறே தத்தமக்குரிய வூர்திகளிலேறி முருகப்பெருமானைச் சூழ்ந்து சென்றார்கள். கொம்பு காகளம் பேரிகை முதலிய ஒலிக்கருவிகள் முழங்கின. மறையொலியும் தேவர்களுடைய வாழ்த்தொலியும் பிற வொலிகளும் முருகக்கடவுளின் ஊர்தியாகிய மயிலும், கொடியாகிய சேவற்கோழியுஞ் செய்கின்ற வொலிகளால் மறைந்தன. பூதர்களின் செலவால் மலைகள் அசைந்தன. முருகக் கடவுள் இடைவழிகளையெல்லாங் கடந்து நான்மாடக் கூடல் என்னும் மதுரைமாநகர்க்கு மேல்பாலுள்ள திருப்பரங்குன்றத்தை யடைந்தார்.

### திருப்பரங்குன்றத்தில் அமர்ந்தருளுதல்

திருப்பரங்குன்றில் தவஞ்செய்து கொண்டிருந்த பராசர முனிவருடைய மக்களறுவரும், நான்முகன் முதலிய தேவர்களும் முருகப்பெருமானை வணங்கித், "தேவரீர் இங்கே அமர்ந்தருளுதல் வேண்டும். இது மிகவுஞ் சிறந்த இடம்," என்று வேண்டிக்கொண்டார்கள்.

முருகக்கடவுள் அதற்கு உடன்பட்டருளினார். தேவத்தச்சன் அம்மலையின்மீது அளவற்ற தெருக்களையும், கோயில்களையும், பொழில்களையும், குளங்களையும் அமைத்தான். முருகக்கடவுள் அவைகளைக் கண்டு மகிழ்ந்தார். தெய்வத் தச்சனுக்குத் திருவருள் புரிந்தார். அவரவர்கட்குரிய இடங்களில் அனைவரையும் அமர்த்தித் தாம் திருக்கோயிலையடைந்து அரியணையின்மீது வீற்றிருந்தருளினார். பராசர முனிவருடைய மக்களறுவரும் முருகக்கடவுளுடைய திருவடிகளை வழிபட்டு நின்றார்கள். முருகக்கடவுள் அவர்களுக்கு மெய்யறிவை உரைத்தருளினார். அனைவருக்குந் திருவருள் புரிந்தார்.

## உ. தெய்வயானையம்மை திருமணம்

### இந்திரன் மனைவியையும் மகளையும் வரவழைத்தல்

தன் பகைவனாகிய சூரபன்மனை முருகக்கடவுள் அழித்ததுபற்றி, இந்திரன் தன் மகளாகிய தெய்வயானையம்மையை முருகக்கடவுளுக்கு மணஞ்செய்துகொடுக்க எண்ணினான். அவ்வெண்ணத்தைத் திருமால் நான்முகன் முதலிய தேவர்களுக்குத் தெரியப்படுத்தினான். அவர்கள் அதனைக் கேட்டு மனமகிழ்ச்சி யடைந்தார்கள். உன் எண்ணம் நன்று என்று வியந்தார்கள். "உன் மகளாகிய தெய்வயானையும் அறுமுகக்கடவுளைத் திருமணஞ் செய்யுமாறு முன்னளிலே சரவணப்பொய்கையில் தவஞ் செய்தாள். அத்தவத்தின் பயன் இப்பொழுது கைகூடும் போலும்! மணஞ்செய்து கொடுத்தற்கு விரைந்து முயல்வாயாக!" என்று கூறினார்கள்.

இந்திரன் ஓர் ஒற்றனைப் பார்த்து, "நீ விரைந்து சென்று மேருமலையிலிருக்கும் என் மனைவியாகிய இந்திராணியையும், மகளாகிய தெய்வயானையையும் இங்கே அழைத்து வருவாயாக!" என்று கட்டளையிட்டான். ஒற்றன் அதற்கு இசைந்தான். விரைந்து மேருமலையை அடைந்தான். இந்திராணியைக் கண்டு வணங்கினான்.

"முருகக்கடவுள் சூரபன்மனைக் கொன்று தொலைத்தார். சயந்தனும் தேவர்களும் சிறையினின்றும் நீங்கினார்கள். இப்பொழுது அனைவருந் திருப்பரங்குன்றத்தை யடைந்து அங்கு தங்கியிருக்கின்றார்கள். உன்னுடைய கணவர் உன்னையும் உன் மகளையும் அங்கு அழைத்து வருமாறு என்னை அனுப்பியுள்ளார். உடனே தெய்வயானையம்மை யோடும் புறப்பட்டு வருவாயாக!" என்று கூறினான்.

ஒற்றன் உரைத்தவைகளைக் கேட்டு இந்திராணி மகிழ்ச்சியடைந்தாள். தான் அடைந்திருந்த துன்பங்க ளெல்லாம் நீங்கப்பெற்றாள். தன் மகளாகிய தெய்வ யானையோடு ஐராவத யானையின்மேல் ஏறினாள். பக்கத் திலே அரம்பையர்கள் பாதுகாவலாகத் தன்னைச் சூழ்ந்து வர, விசும்பாறாகத் திருப்பரங்குன்றத்தை யடைந்தாள். தன் கணவனாகிய இந்திரனைக் கண்டு மகிழ்ந்தாள். தன் மகனாகிய சயந்தனைக் கட்டித்தழுவி உச்சிமோந்து துன்பம் நீங்கினாள். இந்திரன் இந்திராணியைக் கண்டு களிப் படைந்தான்.

## திருமணத்திற்கு முருகக்கடவுள் உடன்பாடு

முருகக்கடவுள் தெய்வயானையைத் திருமணஞ்செய்து கொள்ள வேண்டுமென்னுஞ் செய்தியை அவருக்குத் தெரியப்படுத்தவேண்டுமென்று எண்ணினான் இந்திரன். தேவர்களோடு சென்று முருகப்பெருமானை வணங்கினான். அவருடைய திருவடிகளிலே மலர்களைத் தூவினான். "எம் பெருமானே! சூரபன்மனைக் கொன்று எங்களுடைய துன்பங்களையெல்லாம் நீக்கியருளினீர். இதற்கு யான் யாதேனும் கைம்மாறு செய்ய முடியுமோ? தேவரீர் திரு வுளம் மகிழ்ந்து என் மகளாகிய தெய்வயானையைத் திரு மணஞ் செய்தருளல்வேண்டு," மென்று வேண்டிக்கொண் டான்.

அறுமுகக்கடவுள் இந்திரனை நோக்கினார். "உன் னுடைய மகளும் நம்மைத் திருமணஞ்செய்துகொள்ளுதல் வேண்டும் என்னும் எண்ணத்துடன் முன்னே மிகுந்

தவத்தைச்செய்தாள். ஆகவே, உன் எண்ணப்படி நாளைக்கு அவளைத் திருமணஞ் செய்துகொள்வோம்,'' என்று திருவாய்மலர்ந்தருளினார். முருகக்கடவுள் மொழிந்தவைகளைக் கேட்டு இந்திரன் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தான்.

## திருமணச்செய்தி அனுப்புதல்

இந்திரன் வெளியே வந்து பல தூதுவர்களைப் பார்த்து, "முசுகுந்தச் சக்கரவர்த்தி முதலிய பூவுலக அரசர்களுக்கும், தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், மற்றுமுள்ளவர்களுக்கும் அறுமுகப்பெருமானுடைய திருமணம் நாளைக்கு என்று கூறி அவர்கள் அனைவரையும் விரைவாகத் திருப்பரங்குன்றத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்,'' என்று கட்டளையிட்டான். அவர்கள் உடனே விரைந்து சென்றார்கள்.

## திருமணச் சிறப்புச் செய்தி

இந்திரன் தெய்வத்தச்சனை யழைத்தான். "திருமுருகப்பெருமானுடைய திருமணத்திற்கு ஏற்றவாறு அழகுகள் எல்லாம் செய்வாயாக!'' என்றான். விசுவகன்மன் உடனே திருமண மண்டபம் வருகின்றவர்கள் தங்கியிருத்தற்கு இருப்பிடங்கள், சோலைகள், சுனைகள் ஆகியவைகளையெல்லாம் அனைவரும் வியக்கத்தக்கவாறு அமைத்தான். இந்திரன் திருமணத்திற்கு வேண்டும் பொருள்களையெல்லாம் வருவித்தான்.

## முசுகுந்தச் சக்கரவர்த்தி

திருக்கைலைமலையில் உள்ள சோலையொன்றிலே ஒரு காலத்தில் இறைவனும் இறைவியும் இனிது அமர்ந்திருந்தார்கள். அங்குள்ள வில்வ மரங்களிலே முசுவின் கூட்டங்கள் தங்கியிருந்தன. அவற்றுள் ஓர் ஆண் முசுவானது அவ்விருவர்மீதும் வில்வ இலைகளைப் பறித்துச் சொரிந்துகொண்டிருந்தது. அதனை இறைவி கண்டு சினங்கொண்டாள். "நம்மைப் போற்றுகிற முசுவை நீ ஏன் சினக்கின்றாய்?"

அதனை விட்டுவிடு," என்றார் இறைவன். இறைவியுந் தான் கொண்ட சினத்தை மாற்றி அதற்கு அருள்புரிந்தாள். இறைவன் அம்முசுவின் அறிவின்மையைக் கெடுத்து அதற்கு மெய்யறிவைக் கொடுத்தருளினார். நல்லறிவுபெற்ற முசு வில்வமரத்தினின்று விரைந்து இறங்கியது. உள்ளம் நடுங்கியது. இறைவனையும் இறைவியையும் அன்போடு வணங்கியது. "அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டு,"மென்று வேண்டிக்கொண்டது.

இறைவன் அம்முசுவைப் பார்த்து, "நீ செய்த இதனைக் குற்றமென்று கூறற்க. பெருமையிற் சிறந்த வில்வ இலைகளைக்கொண்டு நம்மை வழிபட்டாய். அதனால் நீ மனுவின் வழியிற் பிறந்து உலகம் முழுவதையும் அரசாள்வாய்," என்று கூறியருளினார். முசு அம்மொழியைக் கேட்டு மிகுந்த துன்பத்தை யடைந்தது. நடுங்கி இரங்கியது. சிவபெருமானைப் பார்த்து, "அடியேன் உங்களை நாடோறும் பார்த்துக்கொண்டு அழியாத பேரின்பப் பெருஞ் செல்வத்தோடு இங்கே இனிதிருத்தலை விட்டு, நிலவுலகிற்போய் அழியுமியல்பையுடைய செல்வ வலையில் அகப்படுவேனே! அங்ஙனம் அகப்படுவேனாயின் பிறகு எவ்வாறு பிழைப்பேன்?" என்றது.

முசுவின் மொழிகளைக் கேட்ட சிவபெருமான், "முசுவே! உன் உள்ளக்கிடக்கை நல்லது. நீ இப்பொழுது நிலவுலகத்திற்குப் போய் அரசாண்டிருந்து பிறகு நம்மிடத்திற்கு வருவாயாக! இதன்பொருட்டு வருந்தாதே!" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

முசு இறைவனைப் பார்த்து, "இறைவனே! நான் பொய்யுடம்பில் மயங்காவாறு, இம்முசுவின் முகத்தோடு பிறக்கும்படி அடியேனுக்குத் திருவருள் புரிதல்வேண்டும்," என்று வேண்டிக்கொண்டது. இறைவன் "அவ்வாறே யாகுக!" என்று திருவருள்புரிந்தார்.

முசு திருக்கைலைமலையை நீங்கி நிலவுலகில் வந்தது. அரிச்சந்திரனுடைய வழித்தோன்றலாகக் குரங்குமுகத்

துடன் பிறந்தது. முகம் குரங்குமுகமாக விருப்பினும் மற்றைய வுறுப்புக்கள் அழகிற் சிறந்து விளங்கின. அது முசுகுந்தன் என்னும் பெயரைப் பெற்றது. இவ்வாறு தோன்றிய முசுகுந்தமன்னன், சோழநாட்டில் கருவூரி லிருந்து அரசு செலுத்தினுன். அவன் சூரபன்மனுடைய ஆணையைக் கடக்கமாட்டாதவனாய், அவனுக்கு அஞ்சி நடந்தான். சூரபன்மன் அறுமுகப்பெருமானால் அழிந் தமையைக் கேட்டு மகிழ்ந்திருந்தான். இந்திரன் அனுப்பிய தூதுவர்கள் அவன்முன் சென்று வாழ்த்தினர். அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! நாங்கள் உன் நண்பனாகிய இந்திர னுடைய தூதுவர்கள். உன் சுற்றமும் நீயும் அழியாத செல்வத்தோடு சிறந்து வாழ்வாயாக! அறுமுகக்கடவுள் சூரபன்மனைக் கொன்று, தன்னுடைய திருக்கூட்டத் துடன் திருப்பரங்குன்றத்தில் வந்து தங்கியிருக்கின்றார். அக்கடவுளுக்கு இந்திரன் தன்னுடைய மகளாகிய தெய்வ யானையம்மையை நாளைக்குத் திருமணஞ்செய்து கொடுக் கிறான். இந்தச் செய்தியை உனக்குச் சொல்லும்படி இந்திரன் எம்மை அனுப்பினான். அத்திருமணத்தைக் காண்டற்கு நீ உன்னுடைய உறுதிச் சுற்றத்துடன் புறப் பட்டுத் திருப்பரங்குன்றத்திற்கு வருவாயாக!" என்று கூறினார்கள்.

## முசுகுந்தன் மகிழ்ச்சி

தூதுவர்கள் சொல்லியவற்றைக் கேட்டு, இந்திரன் நண்பனாகிய முசுகுந்தன் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தான். தூதுவர்களைத் தழுவிக்கொண்டான். "இந்த நற்செய்தியை இயம்பிய உங்களுக்கு நான் கொடுக்கக்கூடிய பொருள் ஒன்றுமில்லை. இங்குள்ள என்னுடைய செல்வங்களை யெல்லாந் தருவேனோ? என்னுடைய அரசியலைத் தரு வேனோ? நீங்கள் விரும்பியது யாது? அதனைச் சொல்லுங் கள் கொடுக்கிறேன்," என்றான். அரசன் கூறியவற்றைக் கேட்ட தூதுவர்கள், "நீ கூறியவைகளெல்லாம் தூதுவர்க ளாகிய எங்களுக்கு ஏன்? நீ விரைந்து திருமணத்திற்குப் புறப்பட்டுச் செல்வதே எமக்கு நன்கொடையாகும்,"

என்று கூறி அவனை நீங்கினார்கள். மற்றைய அரசர்கள் முனிவர்கள் தேவர்கள் முதலிய அனைவருக்குந் திருமணச் செய்தியைச் சொல்லிச் சென்றார்கள்.

## திருமணத்திற்குச் செல்லுதல்

இந்திரன் அனுப்பிய தூதுவர்கள் சென்ற பின்பு, முசுகுந்த மன்னன் திருமணச் செய்தியை நகர மக்கட்குத் தெரிவித்தான். நகர மக்கள் திருமணத்திற்குப் புறப் பட்டார்கள் நால்வகைப் படைகளும் புறப்பட்டன. முருகக்கடவுளுடைய திருமணத்திற்காகப் புறப்பட்டவர் களுள், கைகால் முதலிய உறுப்புக்கள் இல்லாதவர்கள் அவைகளைப் பெற்றார்கள். ஊமைகள் பேசப்பெற்றார்கள். குருடர்கள் பார்வை பெற்றார்கள். ஆற்றலில்லாதவர்கள் ஆற்றல் பெற்றார்கள். பலர் பலவகை ஒலிக்கருவிகளை முழக்கிச் சென்றனர். முசுகுந்த மன்னன் சுற்றத்தார் அமைச்சர் முதலியவர்களுடன் தேரிற் புறப்பட்டான். அனைவரும் திருப்பரங்குன்றத்தை யடைந்தனர். நில வுலகத்து மற்றைய அரசர்களும் படைகளும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அங்கு வந்து சேர்ந்த அரசர்கள் தம் முடைய படைகளையும் மக்களையும் திருப்பரங்குன்றத் தைச்சூழ நிறுத்தினார்கள். மக்களனைவரும் ஆடல்பாடல் களிலே பொழுதைப் போக்கினார்கள்.

முசுகுந்தச் சக்ரவர்த்தி முதலிய அரசர்கள் அனைவரும் திருப்பரங்குன்றத்தில் ஏறினார்கள். தெய்வத்தச்சனால் அமைக்கப்பட்ட நகரத்தின் சிறப்பைப் பார்த்து மகிழ்ந் தார்கள். திருமணச்சாலையை அடைந்தார்கள். இந்திர னுடைய அடிகளை வணங்கிக் களிப்படைந்தார்கள். இந் திரன் அவர்கள் அனைவருக்கும் அருள் செய்தான். எல்லோருடைய நன்மைகளையும் வினவினான். விண்ணில் இயங்கும் கதிரவன் முதலியவர்களும், திக்குப்பாலகர் களும், முனிவர்களும், தேவர்களும் பிறரும் திருப்பரங் குன்றத்தை யடைந்து அதன் மேலேறி இந்திரனைக்கண்டு தொழுது களிப்படைந்தார்கள். முனிவர்கள் ஆசி கூறி னார்கள். வரையரமகளிர்களும், தேவமகளிர்களும், நீரர

மகளிர்களும், திக்குகளிலுள்ள பெண்களும், முனிவர் மனைவியரும் நாககன்னியர்களும் இந்திராணிக்குப் பக்கத்தில் வந்து நெருங்கினார்கள். தெய்வயானையைப் போற்றி வணங்கினார்கள்.

## தெய்வயானையம்மையை அழகுபடுத்தல்

தேவமங்கையர் தெய்வயானையம்மைக்குச் செயற்கையழகு சிறிது செய்யவெண்ணினார்கள். நெய்யைத் தடவி நீராட்டினார்கள். அழகிய ஆடையை அணிந்தார்கள். கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டினார்கள். பின்னர் அதில் தலைக்கோலங்களை வைத்து அழகுபடுத்தினார்கள். கருஞ் சாந்தினால் பொட்டிட்டார்கள். காதிலே புலிமுகப் பணியை அணிந்தார்கள். கழுத்திலே முத்துமாலையிட்டார்கள். கைகளிலே வளையல்கள் புனைந்தார்கள். தோள்களிலே தொடிகளைச் சேர்த்தார்கள். மற்றும் பல அணிகலன்களைப் புனைந்து பலவாறு அழகு செய்தார்கள்.

## அறுமுகப்பெருமான் திருமணச்சாலைக்கு எழுந்தருளுதல்

இந்திரன் நான்முகனை நோக்கித், "திருமணச்சாலை அமைக்கப்பட்டது. திருமணத்திற்கு வரவேண்டிய எல்லோரும்வந்து சேர்ந்தார்கள். முருகக்கடவுளுக்குத் திருமணஞ்செய்யத்தக்க நற்பொழுதை ஆராய்ந்து சொல்லும்," என்றான். நான்முகன் இந்திரனைப் பார்த்து, "முருகப் பெருமான் திருமணஞ் செய்தருளுதற்கு எந்த நேரமும் நல்ல நேரந்தான். ஆயினும் இந்த நேரம் மிகவுஞ் சிறந்த நேரமாக விருக்கின்றது," என்று கூறினான்.

இந்திரன், நான்முகன், திருமால் முதலிய தேவர்கள் அறுமுகப்பெருமானை அழைத்தற்குப் புறப்பட்டார்கள். முனிவர்களும் தேவர்களும் அவர்களைச் சூழ்ந்து சென்றார்கள். அனைவரும் அறுமுகப்பெருமான் அமர்ந்துள்ள திருக்கோயிலை அடைந்தார்கள். அவருடைய திருவடிகளை வணங்கிப் போற்றினார்கள். "எம்பெருமானே! தேவரீர் தெய்வயானையைத் திருமணஞ் செய்யும்பொருட்டுத் திருமணச்சாலைக்கு எழுந்தருளி வருதல்வேண்டும்," என்று

வேண்டிக்கொண்டார்கள். முருகக்கடவுள் அதனைக் கேட்டு, 'அவ்வாறே யாகுக' என்று திருவருள்புரிந்தார். வீரவாகுதேவர் முதலியோரும் பூதப்படைத் தலைவர்களும் போற்ற அரியணையினின்று விரைந்து எழுந்தருளினார். திருமுன்பு நின்ற மயிலின்மீது ஏறியருளினார். நான்முகன் முதலியோர் விழுந்து வணங்கினார்கள். மலர்மழைகளைப் பொழிந்துகொண்டு மருங்கிலே சென்றார்கள். கதிரவனும் திங்களும் வெண்கொற்றக் குடையை எடுத்தார்கள். காற்று சாமரங்களை வீசினான். வருணன் ஆரவட்டங்களை யசைத்தான். நமன் வாட்படையை ஏந்தினான். கொடியாகிய கோழி நிலம் அதிரக் கூவியது. மறைகள் ஒலித்தன. அரம்பையர்கள், முனிவர்கள், பூதர்கள் முதலியோர் ஆரவாரஞ் செய்தார்கள். திண்டி, பேரிகை, தண்ணுமை, சல்லரி, திமிலை, குடமுழா, காளம், சங்கு முதலிய ஒலிக்கருவிகள் உலகம் வெடிக்கும்படி ஒலி செய்தன. தேவமாதர்கள் பாடியாடினார்கள். வித்தியாதரர் முதலாயினோர் இன்னிசை பாடினார்கள். முருகக்கடவுள் திருமணச்சாலைக்கு முன்பு வந்தருளினார். தேவமங்கையர் ஆலத்தி சுற்றினர். முருகப்பெருமான் மயிலைவிட்டு இறங்கித் திருமணச்சாலை வாயிலையடைந்தார். இந்திராணி அரம்பையர்களோடு எதிரேவந்து வணங்கினாள். பொன் ஏனத்திலிருந்த காமதேனுவின் பாலினால் முருகக் கடவுளின் திருவடிகளைக் கழுவினாள். மலர்களையும் மாலையையுஞ் சூட்டினாள். மற்றுஞ் செய்யவேண்டியவைகளைச் செய்து நீங்கினாள். முருகக்கடவுள் திருமணச் சாலைக்குட்புகுந்து தமக்கு அமைக்கப்பட்ட அரியணைமீது வீற்றிருந்தருளினார். நான்முகன், திருமால், முனிவர்கள் தேவர்கள் முதலியோர் தத்தமக்கேற்ற இடங்களில் அமர்ந்தார்கள். முசுகுந்தன் முதலிய மன்னர்கள் முருகக்கடவுளை வணங்கித் திருவருள் பெற்றார்கள்.

## சிவபெருமானும் மலைமகளும் திருமணத்துக்கு வருதல்

அப்பொழுது, சிவபெருமான் இறைவியோடு விண்ணில் தோன்றியருளினார். முருகக்கடவுள் தம்முடைய

தாய் தந்தையரைக்கண்டு விரைந்து இருக்கையை விட்டு எழுந்தார். திருமால் நான்முகன் முதலியோரும் விரைந்தெழுந்தார்கள். இறைவன் இறைவியோடு திருமணச் சாலைக்குள் எழுந்தருளினார். முருகக்கடவுள் எதிர் சென்று இருவருடைய திருவடிகளையும் போற்றிப் பணிந்தார். இறைவனும் இறைவியும் தங்களுடைய திருக்கைகளால் எடுத்து மார்போடு தழுவி உச்சிமோந்தார்கள். திருமால் முதலிய தேவர்களும் இறைவனையும் இறைவியையும் வணங்கித் திருவருள் பெற்றார்கள். அப்பொழுது திருவருளினாலே ஒரு சிறந்த அரியணை விண்வழியாக அவ்விடத்திற்கு வந்தது. இறைவனும் இறைவியும் அதன் மீது இனிது அமர்ந்திருந்தார்கள். நான்முகன் இறைவனைப் பார்த்து, "முன்னாளில் அவுணர்களை அழிக்கும்படி அறுமுகக்கடவுளை அனுப்பியருளினீர். அவரும் அவ்வாறே அவுணர்களை யழித்துத் தேவர்களைச் சிறைநீக்கியருளினார். அனைவரும் களிப்படைந்தோம். இந்திரன் தன் மகளை முருகப்பெருமானுக்கு திருமணஞ்செய்து கொடுக்க விரும்பினான். தாங்கள் இந்தச்சமயத்தில் இங்கு எழுந்தருளிவந்தீர்கள். அதனால் நாங்கள் மிகுந்த களிப்படைந்தோம்," என்றான். சிவபெருமான் திருமணச் சடங்கைத் தொடங்குமாறு பணித்தார்.

## முருகக்கடவுள் திருமணம்

நான்முகனும் திருமாலும் இந்திரனைப் பார்த்து, "உன் மகளை இங்கே அழைத்து வருவாயாக!" என்று கூறினார்கள். இந்திரன் அந்தப்புரஞ் சென்று தெய்வயானையம்மையை அழைத்துக்கொண்டு வந்தான். தேவர்களும் முனிவர்களும் தெய்வயானையம்மையைப் போற்றினார்கள். தெய்வயானையம்மை இறைவனையும் இறைவியையும் வணங்கிப் போற்றினார்கள். முருகக்கடவுளைக் கண்டு நாணினாள். இறைவி தெய்வயானையம்மையை முருகக்கடவுள் பக்கத்தில் இருக்கவைத்தாள். முருகக்கடவுளுடைய திருமணக்கோலத்தை அனைவரும் கண்டு மகிழ்ந்தார்கள். திருமணச் சடங்குகள் முற்றுஞ் செய்யப்

பெற்றன. இந்திரன் அறுமுகக்கடவுளுடைய திருக்கையிலே தெய்வயானையம்மையினுடைய திருக்கையை வைத்தான். "அடியேன் இவளை உமக்குத் திருமணஞ்செய்து தந்தேன்," என்று கூறி மறைமொழியோடு நீரைவிட்டான். நான்முகன் மனத்தினுற் செய்துகொடுத்த திருத்தாலியைக் கையில் வாங்கித் தெய்வயானையம்மையாருடைய திருக்கழுத்திலே அணிந்தருளினர் முருகக்கடவுள். மேலும் கூந்தலிலே மாலையைப் புனைந்தருளினர். மத்தளம், சங்கம், பேரிகை முதலிய பலவகை ஒலிக்கருவிகள் முழங்கின. நூறாயிரத்தொன்பது வீரர்களும் பூதப்படைத்தலைவர்களும் ஆரவாரஞ் செய்தார்கள். நான்முகன் திருமண வேள்வியை முறைப்படி செய்தான். திருமணச் சடங்குகள் முற்றும் நடைபெற்றபின் முருகக்கடவுளும் தெய்வயானையம்மையாரும் இறைவனையும் இறைவியையும் வணங்கினர்கள். அவர்கள் இருவரையும் அன்போடு எடுத்தணைத்து உச்சிமோந்து, "உங்கட்கு எங்களுடைய முதன்மையைக் கொடுத்தோம்," என்று கூறியருளினர்கள். நான்முகன் முதலியோர் முருகக்கடவுளை வணங்கிப் போற்றினர்கள். இறைவனும் இறைவியும் அனைவர்க்கும் அருள் புரிந்து மறைந்தருளினர்கள்.

## திருமண நிறைவு

முருகக்கடவுள் திருமணச்சாலையை விட்டு நீங்கித் தெய்வயானையம்மையாரோடு தம்முடைய திருக்கோயிலையடைந்தார். இந்திரன் திருமால் நான்முகன் முதலியோருக்குப் விடைகொடுத்தார். அவரவர்கள் தந்தமக்கு அமைக்கப்பட்ட இடங்கட்குச் சென்று அமர்ந்திருந்தார்கள். திருமணத்திற்கு வந்தோர் அனைவருக்கும் இந்திரன் காமதேனுவைக்கொண்டு அரிய விருந்து நடத்தினன். உடை அணிகலன் முதலிய பொருள்களை யளித்தான். பிறகு அனைவரையும் அவரவர்கட்குரிய இருப்பிடங்கட்கு அனுப்பினன். அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்கள். இந்திரன் இந்திராணியோடு இனிது மகிழ்ந்திருந்தான். சிலநாட்கள் சென்றன.

# ௬. விண்குடியேற்றுதல்

## அமராவதியை அடைதல்

முருகக்கடவுள் இந்திரன் முதலிய தேவர்களை விண்ணுலகத்திற் குடியேற்றுவதற்கு எண்ணினார். தெய்வயானையம்மையாரோடு தேரின்மீது புறப்பட்டார். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். அனைவரும் தத்தமக்குரிய ஊர்திகளில் ஏறிக்கொண்டு முருகக்கடவுளைச் சூழ்ந்தார்கள். இரண்டாயிரம் வெள்ளம் பூதப்படைகளும் விரைந்து புறப்பட்டன. பலவகை ஒலிக்கருவிகள் முழங்கின. அனைவரும் அமராவதியை அடைந்தார்கள்.

## நகரைப் புதுப்பித்தல்

பானுகோபனால் அமராவதி எரிந்து அழிந்திருந்தது. முருகக்கடவுள் தெய்வத்தச்சனைப் பார்த்து, "விண்ணுலகத்தை முன்போல விரைந்து உண்டாக்குவாயாக!" என்று பணித்தருளினார். அவன் உடனே தேவருலகத்தைச் சூழ மதிலையும், நான்கு வாயில்களையும், கோபுரங்களையும் எண்ணில்லாத தெருக்களையும், இந்திரனுக்கு அழகிய கோயிலையும், செய்குன்றுகளையும், அளவற்ற நீர் நிலைகளையும், மாடமாளிகைகளையும் கண்டோர் கண்களைக் கவரத்தக்கவாறு உண்டாக்கினான்.

## இந்திரனுக்கு முடி சூட்டுதல்

இந்திரன் அந்த நகரத்தின் அழகைப் பார்த்து, விசுவகன்மனைக் கட்டித் தழுவிக்கொண்டான். முருகக்கடவுள் திருக்கூட்டத்துடன் நகரத்துக்குட் சென்றார். நான்முகனைப் பார்த்து, "இந்திரனுக்கு விரைவில் முடி சூட்டுவாயாக," என்று கட்டளையிட்டார். தேவர்கள் அதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் விரைந்து தொகுத்தார்கள். இந்திரனைக் கங்கை நீரினால் ஆட்டினார்கள். பொன்னுடை அணிகலன் முதலியவைகளைப் புனைந்தார்கள். அரியணையின்மீது அமரச்செய்து முடிசூட்டினார்கள். முடிசூட்டப்பெற்ற இந்திரனைத் தேவர்கள்

வணங்கினார்கள். முனிவர்கள் வாழ்த்துக் கூறினார்கள். இந்திரன் அறுமுகப்பெருமானை வணங்கிப் போற்றினான். தேவலோக அரசாட்சியை மீண்டுந் தனக்குக் கொடுத்தமைக்காக நன்றியறிதலைப் புலப்படுத்திக்கொண்டான். "இந்திரனே! இந்நகரை இனிது அரசாட்சி செய்து வாழ்வாயாக!" என்று முருகக்கடவுள் வாழ்த்துரை கூறினார். அனைவரும் மகிழ்ந்திருந்தனர்.

## ச. கந்தவெற்படைதல்

### முருகக்கடவுள் தமது இருப்பிடம் அடைதல்

முருகக்கடவுள் கந்தவெற்பிற்கு எழுந்தருளத் திருவுள்ளங் கொண்டார். தெய்வயானையம்மையாரோடு புறப்பட்டார். நான்முகன் திருமால் முதலியோர் முருகக்கடவுளிடம் வந்தனர். அனைவரையும் அவரவர்கட்குரிய இருப்பிடங்கட்குச் செல்லுமாறு பணித்தருளினார். வீரவாகுதேவர் தேரைச்செலுத்தத் தாம் கயிலைவெற்பை யடைந்தார். தேரினின்றும் இறங்கினார். இறைவனையும் இறைவியையும் வணங்கினார். அவர்களுடைய திருவருளையும் உடன்பாட்டையும் பெற்றுக்கொண்டு கந்தவெற்பை யடைந்தார். வீரவாகுதேவர் முதலியோர் தம் பணிகளைச் செய்துநிற்கத் தெய்வயானையம்மையாரோடு அரியணைமீது எழுந்தருளினார்.

## ரு. இந்திரபுரி

### இந்திரன் தவஞ்செய்ய எண்ணுதல்

முருகக்கடவுளுடைய திருவருளால் இந்திரன் விண்ணுலகத்தை யரசாண்டுகொண்டிருந்தான். சூரபன்மனால் தான் அடைந்ததுன்பங்கள் பலவற்றை ஒருநாள் எண்ணிப் பார்த்தான். இன்பவாழ்க்கையையும் செல்வத்தையும் அரசுரிமையையும் வெறுத்துத் தவஞ்செய்து வீடுபேற்றையடைய விரும்பினான். அக்கருத்தைத் தேவகுருவாகிய வியாழபகவான் அறிந்தார். அக் கருத்தை மாற்ற ஒரு சூழ்ச்சியை எண்ணினார்.

## இந்திரனுக்கு இன்பநாட்டம் இயம்பல்

வியாழபகவான் இந்திரனைப் பார்த்து, "ஓ அரசனே! நீ சூரபன்மனாகிய கொடியோனால் அடைந்த துன்பத்தை யெண்ணி விண்ணுலக அரசாட்சியையும் இல்வாழ்வையும் வெறுக்கின்றாய். இவைகளை வெறுத்துத் தவஞ்செய்வதால் ஏற்படக்கூடிய பயன் யாது? ஒழிந்துபோன துன்பத்திற் கஞ்சி அடைதற்கரிய இப்பெருஞ் செல்வத்தை வெறுத்துத் தவஞ்செய்துழல எண்ணலாமா? தவஞ்செய்வதால் உண்டாகுந் துன்பத்திற்கு ஓர் அளவும் உண்டோ? கானலை நீந்த அஞ்சிக் கடலிற்போய் விழலாமா? உடம்பை வருத்தி ஐம்புலன்களையும் ஒடுக்கி, முக்குறும்புகளையும் நீக்கிப் புலனடக்கஞ்செய்யும் பெரியோர்கள் அடையும் பயனைச் சொன்னால் அதுவும்போகமேயன்றி வேறன்று. ஐம்புலன்களும் ஒடுங்கும்; மனம் முதலிய கருவிகளும் செயலும் இல்லை; உடம்பும் அழியும்; இவ்வாறாக ஆங்கு ஒரு பேரின்பம் உண்டு என்பர் சிலர். அதனை யாவர் அறிந்தவர்? உலகிலுள்ள அறிஞர்கள் அனைவரும் இவ்வுலகிற் கண்டதே மெய் என்பர். அமுதத்தை நிலப்பிளப்பிற் சொரிந்தாற்போல, அறியார் சிலர் உள்ளதுபோலக் கூறுகின்ற வீடுபேற்றை மெய்யென்றெண்ணி நீ இம்மைப்பயனை இழக்க எண்ணுகின்றாய்! பெண்களோடு கூடி நுகரும் இன்பமே இன்பம்! அவரோடு கூடி வாழும் வாழ்வே வாழ்வு! அவர்களை யடையுஞ் செல்வமே பெருஞ்செல்வம்! அவர்களையடையாத வறுமையே வறுமை.

'மங்கை மாரிடத் தின்பமே இன்பமற் றவரோ (டு)
இங்கு வாழ்வுறும் வாழ்க்கையே இயல்புறும் வாழ்க்கை
அங்க வர்ப்பெறு செல்வமே செல்வமாங் கவர்தம்
கொங்கை புல்குறா வறுமையே கொடியதோர் வறுமை!'

பெண்களுடைய இன்பத்தைச் சிலர் சிற்றின்பம் என்று கூறுவார்கள். அவர்கள் அதன் சிறப்பை உள்ளவாறு உணரமாட்டார்கள். அவ்வின்பமே பேரின்பமாகும்," என்று கூறியதுடன் இன்பநலங்களையும் பலவாறு விரித்துரைத்தார். இந்திரன் தன் எண்ணத்தை மாற்றி

ஞன். தன்னரசியலைத் தன் மகனிடம் ஒப்படைத்து விட்டுத் தான் இன்பக்கடலிலே இனிது படிந்து கிடந்தான்.

அரசுரிமையை நடத்திக்கொண்டிருந்த சயந்தன் ஒருநாள் வியாழபகவானைப் பார்த்து, "சூரபன்மனால் துன்பமடைந்து தாழ்வடையக் காரணம் யாது?" என்று கேட்டான். "தக்கன் சிவபெருமானை ஒழித்துச் செய்த வேள்வியிற் புகுந்த தீவினையால் வந்தது" என்று அவர் பதிலுரைத்தார். "தக்கன் சிவபெருமானை நீக்கி வேள்வி செய்ததில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் பிறவற்றையும் விளக்கமாக வுரைக்கவேண்டும்," என்று சயந்தன் வேண்டிக் கொண்டான். அவர் அதனைக் கூறலானார்.

ஐந்தாவது

தேவகாண்டம் முற்றிற்று.

# 6. தக்க காண்டம்

வாழ்த்து

தூய்யதோர் மறைக ளாலும் துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க வாழ்கஇப் புவனம் எல்லாம்.

## க. தக்கனுக்கு நான்முகன் அறிவுரை

### நான்முகனும் தக்கனும்

நான்முகன் சத்திய உலகத்திலுள்ள தன்னுடைய கோயிலிலே ஒருநாள், முனிவர்களும் தேவர்களும் தன்னுடைய மக்களும் தன்னைச் சூழ வீற்றிருந்தான். தக்கன் என்பவன் நான்முகனுடைய மக்களிலே ஒருவன். அவன் நான்முகனைப் பார்த்து, "முழுமுதற் கடவுள் யாவர்?" என்று கேட்டான்.

நான்முகன் தக்கனைப் பார்த்து, "நானும் திருமாலும் முன்னாளிலே செருக்கடைந்து போர் செய்தபொழுது, ஒளிவடிவமாக வெழுந்து விண்ணிலுயர்ந்த சிவபெருமான் ஒருவரே அனைவருக்கும் மேலான முழுமுதற்கடவுள். இதனை நீ உணர்ந்துகொள்வாயாக!" என்று பதிலுரைத்தார்.

தக்கன் நான்முகனைப் பார்த்து, படைத்தலையும் காத்தலையும் செய்யுஞ் சிறப்புடைய நீங்கள் இருவரும் முழுமுதற்கடவுளாகாமல் இறுதியாகிய அழித்தல் தொழிலைச் செய்யுஞ் சிவபெருமான் முழுமுதற்கடவுளாகக் காரணம் யாது? அதனைக் கூறியருளும்," என்று கேட்டான்.

நான்முகன் தக்கனைப் பார்த்து, "நான்முகன் திருமால் ஆகிய எங்களையும் தேவர்களையும் பிறவுயிர்களையும் ஈற்றில் அழிப்பவர் அச் சிவபெருமானேயாவர். இறுதிக் காலத்தில் தாம் எத்தகைய மாறுபாடும் அடையாதவராக

விருந்து; மீட்டும் உயிர்கட்கு உடல் முதலியவைகளைக் கொடுத்துப் பாதுகாக்கின்ற சிவனுடைய செய்கை முழுவதையும் என்னால் உரைக்க இயலாது. திருமாலையும் என்னையும் முறையே தம்முடைய இடத்தோளினின்றும் வலத்தோளினின்றும் உண்டாக்கினார். படைத்தல் காத்தல் தொழில்களையுந் தந்தார். "நாமும் உங்கள்மாட்டு இருக்கிறோம்!" என்று எம்முயிர்க்குயிராக நின்று அவரே எல்லாவற்றையும் புரிகின்றார். எங்களால் முடியுஞ்செயல் ஒன்றும் இல்லை. நம்முடைய மனத்துள் இருந்து, நாம் பிழைபடாவண்ணம் காப்பார். நம்முடைய இருகண்களினுள்ளும் அவர் உள்ளார். நாம் நம்மையறியாமல் மயங்கும்பொழுது நம்மிடத்திற்கு வந்து அருள்செய்வார். தாமும் ஒரு செயல் செய்கின்றவர்போல எம்மோடு ஒருவராக எண்ணப்படுவார். அவர் மலரும் மணமும்போலவும், எள்ளும் எண்ணெயும் போலவும், மணியும் ஒளியும் போலவும், உலகம் எங்கும உள்ளும் புறம்புமாய் நிறைந்து நிற்பார். மறை ஆகமம் முதலிய உயர்ந்த நூல்களெல்லாம் முன்னாளில் அருளிச்செய்தவர் அவரே யாவர். அவர் அவைகளை எங்களுக்கு உரைக்க நாங்கள் அவைகளை உணர்ந்தோம்," என்று கூறினார்.

"சிவபெருமான் அருளிச்செய்த மறைகள், ஐம்பூதங்களையும், உயிர்களையும், மற்றைத் தேவர்களையும் பிரமம் என்று சொல்வதென்ன? அதனைச் சொல்லும்," என்று கேட்டான். நான்முகன் தக்கனைப் பார்த்து, "இஃது எல்லோராலும் அறியமுடியாதது. நான் நவில்வதனை நன்கு கேட்பாயாக! சிவபெருமானையொழிந்த மற்றைத் தேவர்களுக்கும், உயிர்களுக்கும் ஐம்பூதங்களுக்கும் மறைகள் முதன்மை கூறுதல் முகமனாம். ஒரு பொருளைப் புகழும்போது அதனை அதனுடைய நிலைமைக்கு மேலாகவும் புகழலாம். எப்பொருளை எவர் போற்றினாலும் அப்போற்றுதல் எல்லாம் சிவபெருமானையே சேரும். மறைகள் மற்றைத் தேவர்களுக்குச் சொல்லுகின்ற புகழ்கள் சிவபெருமானையே அடைவனவாம். மேலும் நான் கூறுபவைகளைக் கேட்பாயாக!

"உலகத்துப் பொருள்களையெல்லாம் படைத்துக் காத்தழித்து மீண்டும் படைப்பவனும், ஆன்மாக்கட்கு அருள்செய்து ஆண்டருள்கின்ற தலைவனும் முதல் இறுதியற்றவனும் சிவபெருமானேயாவன். உலகங்கட்குத் தந்தையும், தூய்மையான அறுகுணங்களையுடையவனும், அறியவொண்ணாத ஒளி வடிவனும், எங்கும் நிறைந்திருக்கும் அறிவும் வடிவனும், தேவர்களுக்குத் தேவனும், என்றும் அழியாதவனும், உயிர்களுக்குள் நீங்காதிருக்கின்றவனும் அந்தச் சிவபெருமானே யாவன். மூவுலகப் பொருள்களையும் பெற்றருள்பவனும், முக்கண்களையுடையவனும் எல்லாவற்றிற்குங் காண்பவனாய் நிற்கின்றவனும், தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனும் அந்தச் சிவபெருமானே யாவன். உயிர்த்தொகைகள் சிவபெருமானையறியாமல் பிறவித் துன்பம் நீங்கி வீடுபேற்றையடைவோமென்று கூறுதலானது உருவமற்ற விண்ணின் தோலை உரித்து உடுப்பதற்கு நிகராகும். சிவபெருமானே பரம்பொருள் என்பதனை வலியுறுத்துதற்குச் சொல்லிய மறைமொழிகள் இன்னும் பலவுள. அவைகளை எடுத்துக் கூற என்னால் இயலாது. கூறத்தொடங்கினும் பலநாள் ஆகும். நீ இதனை முன்னே என்னிடத்து உணர்ந்தாய்! இப்பொழுது மறந்துவிட்டாய்போலும்! இறைவனைப் போற்றியதைப்போல மறை வேறு எவரையும் போற்றியதில்லை. நான்முகன் திருமால் ஆகிய நம்மையும் முழுமுதற்பொருள் என்று எண்ணிச் சிவபெருமானைப்போலச் சிறப்புச் செய்கின்ற தீயவர்கள் கொடிய நிரயப் படுகுழியில் விழுவார்கள். அவர்களைத் தன்னகப்படுத்திய நரகம் வெளியேவிடாது. நம்மோடு அச்சிவபெருமானையும் ஒப்பெனச் சொல்கின்றவர்கள் எப்பிறப்பினும் துன்பக் கடலுள் ஆழ்வார்கள். நம்மைச் சிவபெருமானுக்கு அன்பர்கள் என்றும், அவருடைய திருவடித்தொண்டர் என்றும் எண்ணிப் போற்றுபவர்கட்கு நாம் அருள் செய்வோம். இவ்வாறன்றி நம்மையும் முழுமுதற்கடவுள் என்றும் எண்ணுகின்ற மற்றவர்களை நமக்குப் பகைவர்கள் என்று எண்ணியிருப்போம். சிவபெருமான் உயிர்கட்குத்

தலைவர்! நாமெல்லாம் பாசத்தாற் பந்திக்கப்பட்டுழலும் உயிர்கள்! நாங்கள் படைத்தல் காத்தல் ஆகிய இத் தொழிலைச் செய்யுமாறு சிவபெருமானுடைய திருவடிகளை வழிபட்டுப் போற்றிய கோயில்கள் பலவற்றையும் பார்ப்பாயாக! சிவபெருமானுடைய திருவருளைப் பெறாமல் வீடுபேறடைந்தவர்கள் இல்லை. அவருடைய அருளின்றி வாழ்கின்ற தேவர்களும் பிறரும் இல்லை. சிவபெருமானுடைய திருவருளைப்பெற்றால், அடைதற்கரிய அரும் பொருள் ஒன்றுமில்லை. அவரன்றித் தலைமைப்பொருளும் இல்லை. இஃதுண்மை. ஆதலால், அக்கடவுளையே அடைக்கலமாக அடைவாயாக!'' என்று கூறியருளினான்.

## உ. தக்கன் தவஞ்செய்தல்

### தக்கன் சிவனருள் பெறுதல்

தக்கன் சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்து மேன்மையடைய விரும்பினான். தன் தந்தையாகிய நான்முகனை வணங்கி, "நீர் கூறிய சிவபெருமானையே முழுமுதற்பொருள் என்று துணிந்தேன். அவரை யெண்ணித் தவஞ்செய்து பெருவளங்களைப் பெற விரும்புகிறேன். யான் தவஞ்செய்தற்கு ஓர் இடத்தை ஏற்படுத்திக்கொடுத்தருளும்,'' என்று வேண்டினான். நான்முகன் தன்னுடைய மனத்தினின்றுந் தோன்றிய மானசவாவியை அதற்குரிய இடமாக ஏற்படுத்திக் கொடுத்தான். தக்கன் அத்தடாகத்தை யடைந்தான். ஒரு பக்கத்திலிருந்து, காற்று, மழை, வெய்யில், பனி ஆகியவைகட் கஞ்சாமல் உயிர்க் காற்றைச் சுழுமுனை வழியாய் எழுப்பி மூலத்தீயை வெளிப்படுத்திப் புருவ நடுவிலுள்ள அமிர்த தாரையை வீழ்த்தி, உடம்பை அன்பினால் முழுக்காட்டினான். மன ஒருமையோடு ஐந்தெழுத்து மறையை முறைப்படி எண்ணி ஆயிரம் ஆண்டுகள் அருந்தவஞ் செய்தான்.

தக்கனுடைய தவத்தைச் சிவபெருமான் திருவுளங் கொண்டருளினார். அவனுக்கு மேன்மையளிக்க விரும்பி

ஞர். இறைவியோடு காளையூர்தியின்மேல் எழுந்தருளி வந்தார். தக்கன் இருக்கைவிட்டெழுந்தான். இறைவனை யும் இறைவியையும் போற்றிப் பணிந்தான். சிவபெருமான் தக்கனைப் பார்த்து, "உன்னுடைய வழிபாட்டிற்கு மகிழ்ந் தோம். உனக்கு வேண்டியதென்னை? கூறுவாயாக!" என்ருர். தக்கன் வீடுபேற்றைக் கேட்கவில்லை. மற்ருே, "மண்ணுலகமும் விண்ணுலகமும் எல்லாத் திக்குகளும் என்னுடைய ஆணையுருளை செல்லுமாறு அருள்புரியும்! உம்மை வந்து போற்றும் உயிர்களெல்லாம் என்னை வந்து போற்றவும், நான் உம்மையன்றிப் பிறரை உள்ளத்தாலும் வழிபடாதிருக்கவும் மேன்மை புரிந்தருளும்; தேவர்களும் அவுணர்களும் யான் பணித்த பணிகளைச் செய்யவும், எனக்கு மக்கட்பேறு உண்டாகவும் அருள்புரியும்! மேலும் இறைவியார் எனக்கு மகளாகவந்து தோன்ற நீர் வந்து மணந்தருளுதல் வேண்டும்," என்றும் வேண்டிக் கொண்டான். சிவபெருமான், தக்கனைப் பார்த்து, "அவ் வாறே தந்தருளினேம். நீர் நேர்மையான நெறியில் நிற்பையாயின் இம்மேன்மைகள் நிலைபெறும்," என்று அருள்புரிந்து மறைந்தருளினர்.

## தக்கன் அரசாட்சி

தக்கன் பெருமகிழ்ச்சி யடைந்தான். தன் தந்தை யாகிய நான்முகன் வரும்படி நினைத்தான். நான்முகன் தக்கன் மேன்மை பெற்றதை அறிவுப் பார்வையால் அறிந்தான். மேலே நிகழப் போகின்றவைகளையும் உணர்ந்தான். தக்கனுடைய அறிவின்மையை எண்ணிப் பலவாறு வருந்தினன். விரைந்து தக்கனிடம் வந்து வாழ்த்துக் கூறினன். தக்கன் நான்முகனைப் பார்த்து, "இவ்விடத்தில் ஒரு நகரத்தை உண்டாக்குவாயாக!" என்ருன். நான்முகனும் உடனே ஓரழகிய நகரத்தை யுண்டாக்கி அதற்குத் 'தட்சபுரி' என்று பெயரிட்டான். அந்நகரைப் பார்த்துத் தக்கன் மனமகிழ்ந்தான். தனக்கு அமைக்கப்பட்ட கோயிலின்கண் புகுந்து அரியணைமீது அமர்ந்திருந்தான். சிவபெருமானிடத்திலே தக்கன் மேன்

மைகள் பெற்றதைத் தேவகுருவாகிய வியாழன் சொல்ல இந்திரன் முதலிய தேவர்கள் உணர்ந்தார்கள். அஞ்சி நடுங்கித் தக்கனிடத்திலே வந்தார்கள். அசுர குருவாகிய சுக்கிரன் தேவர்கள் யாவருந் தக்கனிடஞ் சென்று வழி பாடு செய்தமையை அறிந்தான். இந்திரனுக்கு அஞ்சி மேருமலையில் இருக்கும் அசுரராசனை அடைந்தான். அவனைப் பார்த்து, "அரசே! உனது துன்பம் நீங்கியது. இந்திரனுக்குத் தக்கன் தலைவனானான். இனி நீ தக்கனிடஞ் செல்வாயாக," என்றான். அசுரராசன் அதனைக்கேட்டு மகிழ்ச்சி யடைந்தான். உறவினர்களோடு தக்கனிடஞ் சென்றான். கதிரவனும் திக்குப் பாலகர்களும் பிறருந் தக்க னிடத்திற்கு வந்தார்கள். தக்கனை வணங்கிப் புகழ்ந்து நின்றார்கள். தக்கன் பெருமிதத்தோடு அரசியற்றி யிருந் தான்.

## ரு. தக்கன் மகப்பெறுதல்

### மணமும் மக்கட்பேறும்

நான்முகனுடைய அடியிற் பிறந்தவளும், கற்பிற் சிறந்தவளும், அழகில் மிகுந்தவளும் ஆகிய வேதவல்லி யென்பவளைத் தக்கன் திருமணஞ் செய்துகொண்டான். ஆயிரம் மக்களைப் பெற்றான். அவர்கட்குக் கல்வி முதலி யவைகளைக் கற்பித்தான். பிறகு அவர்களைப் பார்த்து, "நீங்கள் யாவரும் மானசவாவிக்குச்சென்று, சிவபெரு மானை நோக்கித் தவஞ்செய்து, உயிர்களைப் படைக்கும் மேன்மையைப் பெற்றுவாருங்கள்," என்று கூறி யனுப்பினான்.

### தக்கன் மக்களுக்கு நாரதர் அறவுரை

அவர்கள் அவ்வாறே சென்று சிவபெருமானை நோக்கி நெடுங்காலந் தவஞ்செய்துகொண்டிருந்தார்கள். அப் பொழுது நாரதர் அவர்களிடத்திற்கு எழுந்தருளினார். அவர்களைப் பார்த்து, "நீங்கள் தண்ணீரின்கண் நின்று தவஞ்செய்து வருந்துகின்றீர்கள்! நீங்கள் அவாவியது யாது கூறுங்கள்!" என்று கேட்டார். தக்கன்மக்கள்

நாரதரைப் பார்த்து, "எங்கள் தந்தையின் கட்டளைப்படி படைப்புத்தொழிலை பெறும்படி தவஞ்செய்கிறோம்," என்றார்கள். நாரதர் அவர்களைப் பார்த்து நகைத்து, "இதுதானா? சிவபெருமானால் பெறக்கூடிய மேன்மை? படைப்புத்தொழில் மிகுந்த குற்றமுடையதாகும். அதனால் பெருந்துன்பத்தைத்தருகிற பிறப்பும் இறப்புமே வரும். படைப்புத் தொழிலைச்செய்யும் நான்முகனுடைய தலைகளுள் ஒன்றைச் சிவபெருமான் கிள்ளினார். நான்முகன் ஒருகால் ஆணவங்கொண்டு திருமாலோடு எதிர்த்துப் போர்செய்து, பிறகு ஒளிவடிவான மலையைக்கண்டு அதன் முடியைத் தேடும்படி பறந்தார். எல்லாவற்றையுஞ் சிவபெருமானே படைக்கின்றார். படைப்புத்தொழில் செய்வதால் அடையக்கூடிய பயன் பெருமை ஒன்றைத்தவிர, வேறு ஒன்றும் இல்லை. நான் சொல்லுவதைக் கேளுங்கள். அழகாக இருக்கின்றதென்று பொன்விலங்கைக் காலிலே பூட்டிக்கொள்ளலாமா? ஒருவர் எவ்வளவுக்கு எவ்வளவு இன்பத்தை விரும்புகிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு துன்பமே வந்தடையும். இஃது உண்மை! நீங்கள் படைப்புத்தொழிலைப் பெறுவீர்களாயின் பெருந் துன்பத்தை யடைவீர்கள்! மேலும், சிவபெருமானை மறந்து யாமே முழுமுதற்கடவுள் என்று எண்ணுவீர்கள்! தீவினைகள் பலவற்றையுஞ் செய்வீர்கள்! மயங்கிப் பேருணர்வை இழப்பீர்கள். ஆதலாற் படைப்புத்தொழிலை விரும்புவதை விட்டுவிடுங்கள். வீடுபேறாகிய மேலான நிலையை அடைய முயலுங்கள். மேலாகிய தவத்தைச்செய்து வீடுபேற்றை யடைந்தவர்கள் பலர். அதனைப் பெறுதற்கு முயன்று கொண்டிருப்பவர் பலர். எவ்வகைப் பற்றுமில்லாத மேலான நெறியை அடைந்து வீடுபேற்றை யடைதலே சிறந்ததாம். பெருஞ் செல்வங்களைப்பெற்று அதனால் அறிவிழந்திருக்கின்ற உங்கள் தக்கன் கூறியதை மறந்து விடுங்கள்," என்று அறிவுரைப் புகட்டினார்.

தக்கனுடைய மக்கள் நாரதர் கூறியவைகளைத் தம்முள் ஆராய்ந்து பார்த்தனர். நாரதர் நவின்றது நல்லதே என்று முடிவுசெய்தனர். நாரதமுனிவருடைய அடிகளை

வணங்கிப் போற்றினர். நாரதமுனிவர் அவர்களுக்கு உண்மை யுணர்வைப் போதித்து அவர்களுடைய பழைய உணர்வை மாற்றி, "நீங்கள் வீடுபேற்றையடைவீர்களாக!" என்று கூறிச் சென்றார். தக்கன் மக்கள் நாரதமுனிவர் நவின்ற நெறியே நின்று வீடுபேற்றை யடைந்தனர்.

## தவத்திற்கனுப்பிய மக்கள் வீடுபேறடைதல்

மக்களைத் தவத்துக்கனுப்பிய தக்கன் அவர்களுடைய நிலைமையை அறிவுப்பார்வையாற் பார்த்தான். நிகழ்ந்ததை யுணர்ந்து வருந்தினான். பிறகும் ஆயிரம் மக்களைப் பெற்றான். அவர்களுக்குக் கல்வி முதலியன கற்பித்தான். அவர்களைப் பார்த்து, "நீங்கள் மானசவாவிக்குச் சென்று சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து படைத்தல் தொழில்புரியும் மேன்மையைப் பெற்று வாருங்கள்," என்று கூறியனுப்பினான். அவர்களும் அவ்வாறே சென்று தவஞ்செய்தார்கள். நாரதமுனிவர் முன்போல் இவர்களிடத்திற்கும் வந்தார். "நீங்கள் யாவர்? எதன்பொருட்டுத் தவஞ்செய்கிறீர்கள்?" என்று கேட்டார்.

தக்கனுடைய மக்கள் நாரதரைப் பார்த்து, "நாங்கள் தக்கனுடைய மக்கள். எங்கள் தந்தையினுடைய விருப்பப்படி படைப்புத்தொழிலைப் பெறுவதற்காக இவ்வாறு தவஞ்செய்கிறோம்," என்றார்கள். நாரதமுனிவர் அவர்களைப் பார்த்து, நீங்கள் தவங்களைச்செய்து இறைவனுடைய திருவடியைப் புகலிடமாக அடைதலைத் தவத்தின் பயன் என்று எண்ணாமல், குற்றம்பொருந்திய படைப்புத்தொழிலைப் பெறுவதற்கு எண்ணினீர்கள். படைப்புத்தொழிலைப் பெறுதலால் எத்தகைய பயனையும் அடையமாட்டீர்கள். நீங்கள் கைக்கொண்ட இந்த நிலை, அழுக்குப்படிந்தவுடலையுடையவர்கள் தூய்மை மிக்க நீர்த்துறையை அடைந்தும், அதனால் தம்முடம்பின் அழுக்கைக் கழுவிக்கொள்ள எண்ணாது சேற்றில் மூழ்குதலைப் போலும். சிறந்த தவத்தின் பயனாக நீர் பெறும் படைப்புத்தொழில் நிலையுள்ளதாகுமோ? அழிவுந் தோற்றமும் இன்பதுன்பங்களும் இல்லாத வீடுபேறு ஒன்றே உயிர்கட்கு உறுதி

பயப்பதாகும். நீங்கள் அவ்வியல்லையுடைய வீடுபேற்றை யடைய விரும்புகின்றீர்கள் இல்லை. பிறப்புக்கள் உம்மை விட்டு நீங்குமோ? குழந்தைகளுடைய மனமும், பெண்களுடைய மனமும், பித்துற்ரோர் மனமும், மெய்ந்நூல்களும் தாங்கொண்ட கோட்பாட்டையே வலியுறுத்துமன்றி அதனினின்றும் மாறுதல் பெறுமோ? படைப்புத்தொழிலைப் பெறுமாறு உங்களுக்குக் கற்பித்தவன் அறிவற்றவனாவான். அவனுடைய மக்களாகிய நீங்களும் அத்தன்மையினரே. நன்மையைக்கூறி யருள்பவனன்றே நல்ல ஆசிரியனாவான். உமக்கு முன் பிறந்த ஆயிரம் மக்களும் இங்குவந்து படைப்புத்தொழிலை விரும்பித் தவஞ்செய்தபொழுது, அவர்களுடைய பொய்யறிவு கெடுமாறு உண்மையறிவை யுரைத்து, அறிவின்மையைக் கெடுத்து அறிவு நெறியில் நிலைபெறச்செய்து வீடுபேற்றையடைவித்தோம்," என்று நாரதமுனிவர் இயம்பியருளினார். "தக்கனுடைய மக்கள் நாரதமுனிவருடைய அடிகளைத் தலைமேற்கொண்டு வணங்கினார்கள். நாங்கள் உய்யவேண்டுமென்று திருவுளங்கொண்டு இங்கெழுந்தருளிவந்தீர்! நீர் கூறும் மெய்ந்நெறி இன்னதென்று அறியேம். எமக்கு அதனைக்கூறியருளும்," என்று கேட்டார்கள். நாரதமுனிவர் மிக்க அன்போடு அவர்கட்கு அருள்புரியத்தொடங்கினார். "சிறுவர்காள்! சிவபெருமானுடைய திருவடிகளை அவர் அருளால் வழிபடுகின்ற பெரியோர்கள் மேற்கொள்ளும் முறைகளும் அவர்கள் அடையும் பதங்களும் நான்காம். அவற்றுள் அறிவு வழியில் நிற்போர் பெறுவது எல்லாவற்றினும் உயர்ந்த ஒருகதியாம். அதுவே வீடுபேறு என்று கூறப்பெறும். அது மெய்யறிவுடையவர்களால் அறியப்படுவதல்லது தேவர்களாலும் அறிதற்கரியது. அந்த ஞான வழியில் நிற்போர் சிவபெருமானுடைய திருவடிகளையடைந்து பின்பு பிறவியிற் பொருந்தார். சொல்லுதற்கரிய அருளறிவோடு பொருந்தி எந்நாளும் பேரின்பத்தையே நுகர்ந்திருப்பார். ஆதலால், நீங்களும் அந்நெறியில் நின்று அறிவு வழியால் வீடுபேற்றை யடையுங்கள்," என்று சிவாகமத்தின் அறிவு நெறிப் பொருள் முழுவதையும் சிவபெருமானுடைய

திருவருளினால் அவர்களுக்கு அறிவுறுத்தி அவர்களை அந் நெறியில் நிற்குமாறு நிறுத்தித் தம் வழிச்சென்றார். ஆயிரவரும் ஒருமைப்பாடு பொருந்திய உள்ளத்தோடு நின்று அறிவுநெறியைக் கடைப்பிடித்து வீடுபேற்றை யடைந்தார்கள்.

## தக்கன் பெண்களைப் பெறுதல்

நீண்ட நாட்களாகியும் தன் மக்கள் திரும்பி வாராமை யைக் கண்ட தக்கன் அவர்களுடைய நிலைமையை அறிவு நெறியால் ஆராய்ந்து பார்த்தான். நிகழ்ந்ததை யுணர்ந் தான். அவனுக்குச்சினம்மிகுதியாகவுண்டாயிற்று. உள்ளம் வருந்தியது. உயிர் பதைத்தது. துன்பம் மிகுந்தது. உடல் வியர்த்தது. தக்கனுடைய சினத்தினால் கோள்கள் அஞ்சி யோடின. மண்ணுலகமெல்லாம் இரங்கின. "என் மக்களை எனக்கு இல்லாமற்செய்த நாரதன் இனி நாள்தோறும் உலகமெங்கும் உழன்று திரியக்கடவன்," என்று வசவுரை வழங்கினான். இனி ஆண்மக்களைப் பெறேன்! பெண் மக்க ளையே பெறுவேன் என்று உறுதி செய்துகொண்டான். சுபுத்தி, புத்தி, சுரசை, திருதி, துட்டை, கிரியை, கீர்த்தி, சிரத்தை, இலச்சை, மேதா, சத்தி, சாந்தை, வபு, கியாதி, சம்பூதி, நாரிசன்னதி, மிருதி, பிருதி, ஊற்சை, அந சூயை, சுவா, சுமை, சுவதை என்னும் இருபத்துமூன்று பெண்களைப்பெற்றான்.

## பெண்களை மணஞ்செய்து கொடுத்தல்

அப்பெண்களுள் சுபுத்தி முதலிய முதற் பதின்மூன்று பெண்களையும் தருமருக்கு மணஞ்செய்து கொடுத்தான். கியாதி முதலிய பத்துப்பெண்களையும் பிருகு, மரீசி, புலத் தியர், அங்கிரா, புலகர், வசிட்டர், அத்திரி, அக்கினி, கிரது, பிதரா என்னும் பதின்மருக்கும் முறையே திரு மணஞ்செய்து கொடுத்தான். தருமர் இருபத்தேழு புதல்வர்களைப் பெற்றார். பிருகு, விதாதா, தாதா என்னும் இரண்டு புதல்வர்களையும் இலக்குமியையும் பெற்றார். இலக்குமியைத் திருமாலுக்கு மணஞ்செய்து கொடுத்தார். மரீசி நான்கு பெண்களைப்பெற்றார். இவர்கள் வழியிலே

பலர் பிறந்தார்கள். புலத்தியர் பல பிள்ளைகளைப்பெற்றார். அங்கிரா அங்கிதீரன், பரதன் என்னும் இரண்டு புதல்வர்களையும் நான்கு புதல்விகளையும் பெற்றார். மற்றவர்களும் பல மக்களைப்பெற்றார்கள்.

## ௪. திங்கள் சாபமடைதல்

### தக்கனுடைய இருபத்தேழு பெண்கள்

தக்கன் பின்னும் இருபத்தேழு பெண்களைப் பெற்றான். அவர்களைத் திங்களுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். திங்களைப் பார்த்து, "நீ இருபத்தேழு மனைவியர்களிடத்திலேயும் ஒரே தன்மையான அன்புடையவனாக இருத்தல்வேண்டும். சிலரை மிகுதியாகக் காதலித்தலும் சிலரை இகழ்தலுஞ் செய்யாதே!" என்று கூறி மனைவிமார்களுடன் அனுப்பினான். திங்கள் மனைவியர்களோடு தனது இருப்பிடத்தை யடைந்தான். எல்லோரிடத்திலும் ஒரேவிதமான அன்பு பாராட்டி மகிழ எண்ணினான். இருபத்தேழ்வரையும் தினம் ஒவ்வொருவராகச் சேர்ந்துவந்தான். அப்பெண்களுள், கார்த்திகையும் உரோகணியும் பேரழகுடையவர்களாக விருத்தலைக் கண்டான். அவர்களிருவர்களிடத்தும் மிகுந்த காதல் வைத்தான். மற்றவர்களைத் திரும்பிப்பாராமல் வெறுத்துத் திரிந்தான். அவர்கள் வருந்தினார்கள். மிகுந்த சினங் கொண்டார்கள். தந்தையாகிய தக்கனிடஞ்சென்று இந் நிகழ்ச்சியைக் கூறினார்கள். தக்கன் சினமடைந்தான். "திங்களுடைய கலைகள் யாவுந் தேய்ந்து இல்லாமற் போகுக" என்று சாபம் இட்டான்.

### திங்கள் தேய்வு பெறுதல்

தக்கனுடைய வசவுரையால் திங்களுடைய கலைகள் நாடோறும் ஒவ்வொன்றாகக் குறைந்தன. பதினைந்து நாட்கள் கழிந்தபொழுது அவனுடைய பதினைந்து கலைகள் அழிந்தன. ஒரு கலைமட்டும் எஞ்சியது. அவன் மயங்கி மெலிந்து நாணமடைந்தான். இந்திரனிடஞ்சென்று,

"தக்கனுடைய சாபத்தால் என்னுடைய கலைகள் அனைத்தும் அழிந்தன. இந்த ஒரு கலைமட்டும் எஞ்சி நின்றது. இன்றைக்கு இந்தக் கலையும் அழியுமாயின் என்னியல்பு குன்றும்; என்னுடைய பெயரும் மறையும். எங்கும் பரவிய என் புகழும் அழியும். இனி நான் செய்யக்கூடியதென்ன? எனக்கு ஓர் அறிவுரையை இயம்புவாயாக," என்று கூறித் துன்பக்கடலுள் அழுந்தினன்.

இந்திரன் சந்திரனைப் பார்த்து, "என் நண்பனே! அஞ்சாதே! நீ முன் ஒரு காலத்திலே விநாயகக்கடவுளுடைய பெரிய திருவயிற்றையும் திருக்கையிலுள்ள மோதகத்தையும் பார்த்து நகைத்தாய்! அவர் சினந்து, 'உன்னை யாருங் காணாராய் இகழ்ந்து அகலுமாறு இழிந்தவர்போல் ஆவாயாக' என்று வசவுரை வழங்கினர். அன்று தொட்டு யாவரும் இகழ்ந்து உன்னைப்பார்க்காமல் அகல நீ நாணமடைந்து விண்ணில் இயங்காமல் ஒடுங்கினாய்! நான்முகன் முதலிய தேவர்கள் கைலாசத்திற்குச் சென்று விநாயகக்கடவுளுடைய திருவடியைப் பணிந்து, 'சந்திரன் உமது பெருமையைக் கருதாமல் இகழ்ந்து நீர் கூறிய சாபவுரையால் இழிதன்மையடைந்து வருந்தியொடுங்கினான். அவன் இவ்வுலகத்திற்கு வேண்டும். தேவரீர் இட்ட சாபத்தை ஆண்டிற்கு ஒரு நாளைக்கு அவன்மேற் கொள்ளுமாறு திருவருள் செய்யும்' என்று வேண்டிக் கொண்டார்கள். விநாயகக்கடவுள் அவ்வாறே அருள் புரிந்தார். ஆவணித்திங்கள் பூர்வபக்கச் சதுர்த்தியில் உலகோர் அக்கடவுளுக்குச் சிறப்பான வழிபாடு செய்து உன்னைப் பாராதவாறு இருந்தார்! இந்தப்பழியொன்றிருக்க இப்பொழுது புதியகுறை ஒன்றையும் பெற்றாய். சிறப்பும் அழகுந் தீர்ந்தாய்! நீ விரைந்துசென்று நான்முகனிடம் கூறு. அவர் தம்முடைய மகனால் சாபத்தை விலக்குவார்," என்றான்.

## சந்திரன் நான்முகனிடம் செல்லுதல்

சந்திரன் விரைந்து சத்தியவுலகத்தையடைந்து நான்முகனைக் கண்டு வணங்கினான். தன் மாமன் இட்ட

சாபத்தை நான்முகனுக்குக் கூறினன். "உம்முடைய மகனுக்கு அறிவு புகட்டி என்னுடைய இச் சாபத்தை நீக்கிக் கவலையைப் போக்கியருளும்," என்று வேண்டிக்கொண்டான். திங்களின் வேண்டுகோளை நான்முகன் மறுத்துவிட்டான். "தக்கன் ஆணவம் மிக்கவன். அவனிடஞ் சென்று கூறுவதால் யாதும் பயனுண்டாகமாட்டாது. நீ சிவபெருமானை யடைந்து முறையிட்டுக்கொண்டால் அவர் விரைந்து நீக்கியருள்வார். இதனை நான் சொல்லவும் வேண்டுமா? மெய்யன்பினோடு தம்முடைய அடிகளை அடைக்கலம் என்று அடைபவர்களுடைய துன்பங்களை நீக்குதற்கன்றோ சிவபெருமான் திருவருளே திருவுடலாகக் கொண்டு திருக்கைலைமலையில் வற்றிருக்கின்றார். ஒருவர் தமக்குத் துன்பம் வந்த காலத்தில் சிவபெருமானுடைய திருவடிகளே புகலிடமென்று அடைவாராயின் அக்கடவுள் அவருடைய துன்பங்களைத் துடைத்து வினைகளையுந் தொலைப்பார். தம்முடைய அடிகளை யெண்ணி வழிபாடு செய்த மார்க்கண்டன்மேல் வந்த யமனைச் சிவபெருமான் உதைத்து மார்க்கண்டனுக்கு அருள்புரிந்ததை நீ மறந்தனைபோலும். சிவபெருமான் தம்மடியார்கட்கு அருள் செய்தபேரருட்டிறங்களைக் கூறின் அவைகள் கணக்கில் அடங்கா. ஆகவே, நீ சிவபெருமானுடைய திருவடிகளையே அடைக்கலமாக அடைந்து உன்னுடைய சாபத்தை யொழிப்பாயாக!" என்று நான்முகன் கூறினன்.

## சிவன் திங்களுக்கு அருள்புரிதல்

சந்திரன் நான்முகனை வணங்கித் திருக்கைலைமலையை அடைந்தான். திருநந்திதேவரைக் கண்டு தன்னுடைய குறையை முறையிட்டான். அவர் சிவபெருமானுடைய கட்டளைப்படி அவனை உள்ளேயனுப்பினர். திங்கள் சிவபெருமானைப் போற்றிப் பணிந்தான். தானடைந்த சாபத்தைக் கூறித் தனக்கு அருள்புரியவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் திங்களுக்குத் திருவருள்புரிந்தார். எஞ்சிய ஒரு கலையைத் தம்முடைய

திருக்கையால் எடுத்து திருச்சடையின்மீது சேர்த்தருளினார். தக்கனுடைய சாபம் அவனைச் சார்ந்திலது. இறைவன் திங்களைப் பார்த்து, "இனி நீ கவலையடையாதே! நம்முடைய முடியிலணிந்த சிறப்பினால் அழிவற்றதாகவிருக்கும். அஃதனால் உன்னுடைய பழைய கலைகள் யாவும் பதினைந்து நாட்களில் நிரம்பிப் பின்முறையாகத் தேய்ந்து வந்து ஒரு கலைமட்டும் தேயாதிருக்கும். இவ்வாறே எக்காலமும் நிகழும்," என்று அருளிச்செய்தார். இறைவனைத் திங்கள் வணங்கி விடைபெற்றுக்கொண்டு, விண்ணிற்குச் சென்று முன்போல இயங்கினான். அவனுடைய கலைகள் வளர்வதுந் தேய்வதுமாக இருந்தன.

## நிகழ்ந்தவைகளைத் தக்கனுணர்ந்து வெகுளல்

திங்களினுடைய செயல்கள் எல்லாவற்றையுந் தக்கன் அறிவினால் அறிந்தான். "நான் கொடுத்த சாபத்தை இறைவனா தடுக்கவல்லவர்?" என்று கூறி நகைத்தான். என் தந்தையாகிய நான்முகனும், நான்முகன் தந்தையாகிய திருமாலும் என் மருகனுக்கு நான் கூறிய சாபத்தை விலக்குமாறு என்முன் வந்தும் கேட்டிலர். அவ்வாறாகத் தந்தையில்லாத சிவபெருமானா என் சாபத்தைத் தடுக்கக்கூடியவர்? இது மிகவும் நன்றாக இருக்கின்றது! அந்தச் சிவபெருமான், "நாமே பரம்பொருள். நான்முகன் முதலாகிய உயிர்கள் யாவையும் அழித்தும், நாம் அழிவின்றி நின்று ஐந்தொழில்களையும் புரிகின்றோம்; எங்கும் நிறைந்திருக்கின்றோம் என அகந்தையுற்றார் போலும்," என்று பலவற்றைக் கூறி வெகுண்டான். அப்பொழுது புலகர் என்னும் முனிவர் அங்கு இருந்தார். அவர் தக்கனைப் பார்த்து, "தமக்கு நிகரில்லாத சிவபெருமானை நீ இகழாதே! அவரை இகழ்ந்தால் உன்னை யாவரும் இகழ்வர்! உன் செல்வமும் அழியும்!" என்றார்.

தக்கன் அம் முனிவரைப்பார்த்து! "நான் செய்த தவத்தினால் என்னை யடைந்த இச் செல்வங்கள் என்னை விட்டு நீங்குமோ? திருமால் முதலிய தேவர்கள் என் பணி

யொன்றையும் மறுக்கிலர். அவர்கள் என்னை இகழ்வதுமுண்டோ? உம்முடைய அறிவு நன்று நன்று!" என்று கூறி நகைத்தான். புலகர் அவனைப் பார்த்து "உன் பெருஞ் செல்வங் குறையாதாயினும், உனக்கு அருள்புரிந்த சிவபெருமானைப் பழிப்பது தகுமோ?" என்றார்.

தக்கன் மிகவும் பெருமிதங்கொண்டு, "முன்னே நான் தவஞ்செய்து அதனாற் பெற்ற பெருஞ் செல்வங்களை நுகருமுன் அக்கடவுள் மாற்றுவாரல்லர். செய்த வினைக்குத் தக்கபடியாக வல்லாமல், அவரொன்றையுஞ் செய்தற்கு வல்லவரல்லர். ஆதலால், சிவன் என்னிடத்திலே செய்யக் கூடியது யாது?" என்றான்.

புகலர் தக்கனைப் பார்த்து, "நீ கூறியது ஒக்குமாயினும், சிவபெருமானை இகழ்ந்தவர்கள் உய்யமாட்டார்கள். இதனை மறைகளெல்லாம் உறுதிபெற மொழிகின்றன. ஆதலால் அவரை இகழற்க! அவரையெண்ணிப் போற்றுவாயாக! தம்மையடைந்த அன்பர்களுடைய துன்பத்தைமாற்றி, அவர்கள் விரும்பியவைகளைக் கொடுத்தருள்புரிவதே அவருடைய இயற்கையாம். அதனைச் சந்திரன் உணர்ந்து அவரையடைந்தான். அவர் அவனுடைய குறையை மாற்றினார். இதனால் உனக்குச் சினம் நிகழவேண்டிய காரணம் யாதிருக்கின்றது? சந்திரனோ உன்னுடைய மருமகன். அச்சிவபெருமானும் வருங்காலத்தில் உனக்கு அம்முறையினராவர்," என்று கூறினார். தக்கன் சினம் நீங்கினான். தேவர்கள் புகழ அரசியற்றிக் கொண்டிருந்தான்.

## ரு. உமை கயிலை நீங்குதல்

### இறைவனும் இறைவியும்

இறைவனும் இறைவியும் திருக்கயிலைமலையில் இனிது வீற்றிருந்தார்கள். ஒருநாள் இறைவி இறைவனை வணங்கி, "உம்முடைய உண்மைத்தன்மையை யெனக்கு உரைத்தருளவேண்டும்," என்று வேண்டிக்கொண்டாள். இறைவ

னும் அதனைக் கூறலானார். தாம் உருவமும் குணங்களும் தொழில்களும் இன்றிக் குற்றமற்றவராய் எங்கும் நிறைந்து நிற்கின்ற தன்மை, உயிர்களுடைய பாசங்களை நீக்குமாறு எண்ணியது! ஐவகைச் சக்திகளைப் பிறப்பித்தமை, பஞ்ச சாதாக்கியவடிவங்கள் தோன்றினமை, முப்பத்தாறு தத்துவங்களுந் தோன்றுமாறு செய்தமை, ஐவகைத் தொழில் நடத்துஞ்செய்கை, தாம் எக்காலத்தும் ஒரே பெற்றியாய் நிற்குந்தன்மை ஆகிய தம்முடைய இயல்புகளனைத்தையும் மறைமுறைப்படி கூறியருளினார்.

இறைவன் அருளியவைகளைக் கேட்ட இறைவி, "உமக்கு உருவமில்லையென்று முன்பு கூறினீர்! பின்பு பலவடிவங்களை அடைந்ததென்னை!" என்று கேட்டார்.

இறைவன் இறைவியைப் பார்த்து, "நமக்கு உருவமில்லையென்றது பொருந்தும். பின்பு நாம் உருவமென்று கூறியவைகளெல்லாம் சக்திகாரியமே," என்று அருளிச் செய்தார். உமாதேவியார் அதனை மெய்ம்மை என்று எண்ணிப் பெருமகிழ்ச்சியடைந்தார். இறைவனைப்பார்த்து, "அந்த வடிவங்களெல்லாம் சக்திகாரியமாதலால், உம்முடைய அருள் யானென்று சொல்வது உண்மையே! அவைகளெல்லாம் என்னுடைய உருவங்களே," என்று தம்மை வியந்து கூறினார்.

இறைவன் இறைவியைப்பார்த்து, "நீ உன் புகழை நம்முன்னே வியந்தெடுத்துப் பேசினாய்! நாம் ஆணவமலத்தால் மறைப்புண்ட உயிர்களிடமும் நிறைந்திருந்து அவைகள் அழியுமாறு செலுத்துவோம். அச்செயலை நாம் ஒழிவோமாயின் உயிர்களெல்லாம் அறிவற்றதாய் அழியும். சக்தியாகிய உன்னிடத்தும் யாம் இல்லாதவழி உன்னுயிரும் உணர்வைப் பொருந்தாது. அதனை உனக்குக் காட்டுவோம் காண்பாய்!" என்று கூறினார். நான்முகன் முதலிய உயிர்களைத்தாம் இயக்குதலைச் சிறிதே ஒழித்தார். சிவபெருமான் ஒருசெயலும் இன்றி இருந்தமையினால், உலகங்களிலுள்ள உயிர்களெல்லாம் உணர்வின்றியிருந்தன. இறைவி இதனைப்பார்த்து அஞ்சி நடுங்கி

ளாள். இறைவனைப்பார்த்து, "நீர் அசையும்பொருள் அசையாப் பொருள் எங்கும் நிறைந்திருத்தலை நானறியேன். உலகமுடிவிற்போல உயிர்களெல்லாம் இருளின்கண்ணே மூழ்கிப்போக, நீர் அவற்றுள்ளே நின்று அவற்றின் அறிவை இயக்கி நிற்பதை என்பொருட்டு ஒழிந்தொழிந்தீர். இஃது உமக்கு இறைப்பொழுதாயினும் உலகத்துயிர்கட்கு அளவில்லாத பல யுகங்களாகும். அடியேன் செய்த குற்றத்தைத் திருவுள்ளத்திற் கொள்ளற்க! உயிர்கள் தெளிவுபெற்றெழுந்து தத்தந் தொழிலிற்செல்லும்படி திருவருள்புரியும்," என்று வேண்டிக்கொண்டாள். இறைவனும் திருவருள்புரிந்தார். உயிர்த்தொகைகளெல்லாம் தத்தந்தொழிலில் ஈடுபட்டன.

நான்முகன் முதலிய தேவர்கள் அனைவரும் திருக்கயிலைமலையை அடைந்தார்கள். சிவபெருமானை வணங்கிநின்று, "உயிர்க்குயிராயுள்ள கடவுளே! நாங்களெல்லாம் உம்முடைய திருவருளைப்பெருமையால் உணர்வுநீங்கி நெடுங்காலம் வீணேகிடந்து தீவினையில் மூழ்கினோம். அதற்கு ஒரு கழுவாயைக் கூறியருளும்," என்று வேண்டிக்கொண்டார்கள்.

சிவபெருமான் அவர்களைப்பார்த்து, "நீவிர் அறிவு மயங்கி மறைவழி ஒழுகாமையால் உங்களிடத்துண்டாகுந் தீவினைகளெல்லாம் உமையைச் சேரும். நீவிர் இனி உங்கள் கடமைகளைப் புரியுங்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். தேவர்கள் சிவபெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்.

இறைவி இறைவனுடைய அடிகளை வணங்கி, "உயிர்களைப் பற்றிய தீவினை என்னை வந்து சேர்தற்குக் காரணம் யாது? கூறியருள்வீராக," என்று வேண்டிக்கொண்டாள். இறைவன் இறைவியைப் பார்த்து, "நீ உன்னை வியந்தமையின் நாம் உணர்ச்சியை நீக்கினோம். ஆகவே, தீவினை உன்னைச் சேருதல் முறைமையாயிற்று. மேலும், இத் தீவினைகளை நீதான் சுமத்தற்கு ஆற்றல் அமைந்தவள். ஆகவே சுமப்பாயாக!" என்று கூறியருளினார்.

## இறைவி காளிந்தியை அடைதல்

இறைவி இறைவனை வணங்கி, "நான் செய்த தீவினையை நீக்கிக்கொள்வதற்கு ஒரு வழியைக் கூறும்," என்று வேண்டிக்கொண்டாள். இறைவன் இறைவியைப் பார்த்து, "நீ காளிந்தி என்னும் ஆற்றிலே ஒரு சங்கினுருவத்தையடைந்து, உலகங்களையெல்லாம் போற்றுகுறிப்போடு தவஞ்செய்துகொண்டிரு. நான்முகன் மகனாகிய தக்கன் அங்கு வந்து நின்னையெடுப்பான். நீ ஒரு குழந்தையாகி அவனிடத்திலே வளர்ந்துகொண்டிரு. அகவை ஐந்து நிரம்பியபின் நம்மையெண்ணித் தவஞ்செய். நாம் அங்கே வந்து உன்னைத் திருமணஞ் செய்து இங்கே அழைத்துக்கொண்டு வருவோம்," என்று திருவாய்மலர்ந்தருளினார். இறைவி அதற்கு உடன்பட்டாள். கயிலையை நீங்கிக் காளிந்தியாற்றை யடைந்தாள். சங்கினுருவையெடுத்து ஒரு வெண்டாமரை மலர்மீது தவஞ்செய்திருந்தாள்.

## ௬. காளிந்தி யாறு

### தக்கன் உமாதேவியைக் கண்டு எடுத்தல்

மாசிமக நாளிலே யமுனையாற்றில் நீராடுதல்பொருட்டு அந்நாட்டார் அனைவருஞ் சென்றனர். தக்கனும் நீராடுதற்பொருட்டுச் சென்றான். தன் மனைவி வேதவல்லியைப் பல பெண்களோடு முன்னே யனுப்பிவைத்தான். தான் தேவர்களோடு சென்று நீராடி மீண்டான். ஓரிடத்தில் ஒரு வெண்டாமரைப் பூவின்மீது சங்கினுருவாய் வீற்றிருக்கும் உமாதேவியாரைக் கண்டான். மகிழ்ந்து தன்னுடைய கையிலே எடுத்தான். அஃது ஓர் அழகிய குழந்தையாயிற்று. உமாதேவியே இவ்வாறு வந்துள்ளாள் என்று தக்கன் அறிவினால் அறிந்துகொண்டான். குழந்தையைக் கொண்டுபோய்த் தன் மனைவி வேதவல்லி கையிலே கொடுத்தான். அது தனக்குக் கிடைத்த வரலாற்றைச் சொன்னான். அவள் அக்குழவியை மகிழ்ந்து தழுவினாள்.

கொங்கைகளிலிருந்து ஒழுகும் பாலையூட்டினாள். தன் மாளிகைக்குக் கொண்டு சென்று வளர்க்கலானாள். தக்கன் தேவர்கள்சூழ முன்போல அரசியலை நடத்திக்கொண் டிருந்தான்.

## எ. உமை தவம்புரிதல்

### இறைவியின் தவம்

தக்கன் மாளிகை சென்று வளரத்தொடங்கிய இறைவிக்கு ஐந்தாண்டுகள் நிரம்பி ஆறுவதாண்டு பிறந் தது. குழந்தையாகிய இறைவி தாய்தந்தையர்களைப் பார்த்து, "சிவபெருமான் என்னை மணஞ்செய்து கொள் ளும்படி தவமபுரிவேன். எனக்கோர் இடம் அமைத்துக் கொடுத்து என்னை அங்கு அனுப்புங்கள்," என்று கேட்டுக் கொண்டாள். தக்கனும் வேதவல்லியும் மகிழ்ந்தனர். ஒரு தவச்சாலையை அமைத்துக்கொடுத்து அதிலிருந்து தவம் புரியுமாறு தோழிமார்களுடன் அங்கே அனுப்பி னார்கள். வேதவல்லி தன் கணவனாகிய தக்கனைப் பார்த்து, "சிறு குழந்தையாகிய இவள் சிவபெருமானை உணர்ந்தது எவ்வாறு? அதனை யெனக்குக் கூறும்," என்று கேட் டாள்.

தக்கன் தன்னுடைய மனைவியைப் பார்த்து, "நான் மானசவாவியில் செய்த தவத்திற்காகச் சிவபெருமான் எழுந்தருளியபோது அவரிடத்தே பல மேன்மைகளைப் பெற்றேன். 'உம்முடைய சத்தியாகிய இறைவியானவள் என்னுடைய மகளாக வந்து தோன்ற நீர் மருகராக வந்து அவளை மணஞ்செய்தருளுதல்வேண்டும்,' என்று வேண் டிக்கொண்டேன். அவர் அவ்வாறேயாகுக என்று அருள் புரிந்தார். அதன்படியே இப்பொழுது நம்மிடம் இறைவி வந்து வளருகின்றாள். நீ அவளைச் சிறு குழந்தை என்று எண்ணாதே!" என்று கூறினான். வேதவல்லி கேட்டு மகிழ்ச்சியடைந்தாள். இறைவியோ இறைவனை யெண்ணித் தவஞ்செய்துகொண்டிருந்தாள்.

## ஆறணிசடையோன் மாறுகோலத்துடன் வருதல்

குழந்தையாகித் தவஞ்செய்துகொண்டிருந்த இறைவிக்கு ஆண்டு பன்னிரண்டு நிரம்பியது. சிவபெருமான் இறைவிக்கு அருள்புரியவெண்ணினர். திருக்கைலமலையை நீங்கினர். முந்நூலையும் கோவணத்தையும் தருப்பையையுங் கட்டிய தடி ஒன்றைத் திருக்கையிற் கொண்டார். மணமாகாத ஒரு பார்ப்பனனுடைய கோலத்தைப் பூண்டார். தக்கனுடைய தக்கமாபுரத்தையடைந்தார். இறைவி தவஞ்செய்யும் இடத்தைச் சேர்ந்தார். தோழியர்களிடங் கூறித் தம்முடைய வரவை இறைவிக்குத் தெரியப்படுத்தச் சொன்னர். தோழிப்பெண்கள் சிலர் சென்று இறைவியிடந் தெரியப்படுத்தினர்கள். இறைவி அந்தப் பார்ப்பனரைத் தன்னிடம் அழைத்துக்கொண்டு வருமாறு கட்டளையிட்டாள். தோழிப் பெண்களும் அவ்வாறே அழைத்துக்கொண்டுபோய் இறைவி திருமுன்பு விட்டனர். சிவக்கோலத்தைக் கண்ட இறைவி அவரைப் போற்றி நின்ருள். பொய்க்கோலம்பூண்ட இறைவன் இறைவியைப் பார்த்து, "அழகிற்சிறந்த பெண்ணே! நாம் இங்கே வந்தது ஒன்றை விரும்பியேயாகும். நீ அருள் செய்வாயாயின் நாம் அதனைச் சொல்வோம்" என்ருர். இறைவி இறைவனைப் பார்த்து "இசைந்ததைச் சொல்வீராயின் நான் இப்பொழுதே அதனை உமக்குத் தருதல் கூடும்," என்ருர். மேலும், "நீர் விரும்பியது யாது? அதனைக் கூறும்," என்ருர்.

பார்ப்பனர் இறைவியைப் பார்த்து, "நாம் உன்னை மணஞ்செய்துகொள்ள விரும்பி வந்தோம். அதுவே எனக்கு நீ அருள்புரிய வேண்டியதாகும். இதனைத் தடுத்துக் கூருதே!" என்ருர். இறைவி தன்னுடைய கைகளாற் காதுகளை மூடிக்கொண்டாள். மனம்நொந்து பெருமூச்சு விட்டாள். பிறகு அப்பார்ப்பனக்கோல இறைவனைப் பார்த்து, "நான் இறைவனை மணக்க எண்ணித் தவஞ் செய்துகொண்டிருக்கிறேன். நீ இவ்வாறு கூறக் காரணம் யாது?" என்று கேட்டாள். பார்ப்பன இறைவன் இறைவியைப் பார்த்து, "இத்தன்மையினர் என்று எவராலும்

எண்ணமுடியாமல் நின்ற முழுமுதற் கடவுளாகிய சிவ பெருமான் உன்னைத் திருமணஞ்செய்வது அருமை! நீ தவங்களைச் செய்து வருந்தாதே!'' என்று கூறினர். "சிவ பெருமானே விரும்பிவந்து மணஞ்செய்யுமாறு அரிய தவங்களைச் செய்வேன். அவர் வாராதொழியின் என் னுயிரை விடுவேன்! இஃது உறுதி! நீ ஒரு பித்தனை போ!'' என்றாள்.

சிவபெருமான் மகிழ்ச்சியடைந்தார். "பெண்ணே! உன்னுடைய அன்பும் மனவுறுதியும் நன்று!'' என்றார். பிறருக்குத் தெரியாமல் தம்முடைய உண்மை வடிவத் தைக் காட்டினர். இறைவியார் கண்டு மெய்ந் நடுங்கினர். அவருடைய அடிகளை வணங்கிப் போற்றினர். என் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். இறைவன் இறைவியைப் பார்த்து, "அஞ் சாதே!'' என்று கூறித் திருவருள் புரிந்தார். இறைவி இறைவனுடைய புகழ்களை எண்ணிக்கொண்டு அமைதி யில் நின்றார்.

### தக்கனுக்குச் செய்தி கூறல்

இறைவன் வடிவத்தைக் காணாத தோழிகள் மருண்ட னர். "இப்பார்ப்பான் மாயத்திலே வல்லவன் போலும். இறைவி நம்மைக் கண்ணெடுத்தும் பாராமல் அப்பார்ப் பானையே பார்த்துக்கொண்டிருக்கின்றாள். இவர்கள் நிலைமை ஐயத்தை யுண்டு செய்கின்றது. இச்செய்தியைத் தக்கனுக்குரைத்துத் தக்கது புரிவோம்,'' என்று எண்ணி னர். தக்கனிடஞ் சென்று சாற்றினர். அவன் அறிவுக் கண்கொண்டு பார்த்தான். வந்துள்ளவர் சிவபெருமானே என்று உணர்ந்தான். அவருக்குத் தன் மகளைத் திருமணஞ் செய்துகொடுக்க எண்ணினான்.

## அ. திருமணம்

### இறைவன் திருமணஞ்செய்து மறைதல்

திருமணஞ்செய்து கொடுத்தற்கேற்ற நற்பொழுது எப்பொழுது என்று தக்கன் ஆராய்ந்தான். அன்றே நகய

பொழுது வந்தது. திருமணச் செய்தியைத் தேவர்கள் அனைவருக்குந் தெரியப்படுத்தினான். நகரத்தையுங் கோயிலையும் அழகுபடுத்தினான். தவச்சாலையில் வந்திருக்குஞ் சிவபெருமானை யடைந்து வணங்கினான். "உம்மைத் திருமணஞ்செய்து கொள்ளும்பொருட்டு என்னுடைய மகள் தவஞ் செய்தாள். திருமணத்திற்கு எழுந்தருளும்!" என்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் உமா தேவியாரோடு தக்கனுடைய மாளிகையை அடைந்தார். அவரெதிரே மங்கையர் மங்கலப் பொருள்களை ஏந்தி வந்தார்கள். சிவபெருமான் ஓர் இருக்கையில் எழுந்தருளியிருந்தார். வேதவல்லி தன் மகளாகிய இறைவிக்கு நீராட்டி ஆடையணிகலன்களை யணிந்து அழகுபடுத்தினாள். இறைவனுக்கு அண்மையிற் கொண்டுவந்து இருத்தினாள். தேவர்கள் திருமணத்துக்கு வந்து இறைவனை வணங்கினார்கள். வேதவல்லி நீர்விடத் தக்கன் மறைமொழிகளைச் சொல்லிச் சிவபெருமானுடைய திருவடிகளை விளக்கினான். சந்தனம் மலர் முதலியவைகளைக் கொண்டு வழிபாடு செய்தான். சிவபெருமானுடைய திருக்கைமீது இறைவியினுடைய கையை வைத்து "இவளை உமக்குத் திருமணஞ் செய்து தந்தேன்!" என்று கூறி நீர் ஊற்றினான். தேவர்கள் திருமணத்தைக் கண்டு கை தொழுது ஆரவாரஞ் செய்தார்கள்.

நான்முகன் திருமணச் சடங்கிற்கு வேண்டிய பொருளைக் கொண்டுவந்து, வேள்வித்தீ வளர்த்தல் முதலிய திருமணச் செயல்களைச் செய்தான். அப்பொழுது சிவபெருமான் தம்முடைய வடிவத்தை மறைத்தருளினார். இறைவி இறைவனைக் காணாது வருந்தினாள்.

## இறைவி தவஞ்செய்யத் தக்கன் சினம்

வருந்துகின்ற உமாதேவியை வேதவல்லி பார்த்து, "உன் கணவர் உன்னிடத்திற்கு வருதற்குரிய வழி தவமே யாகும். நீ மேலும் அதனையே தொடர்ந்து செய்வாயாக," என்று கூறினாள். பூமகளும் நாமகளும் இறைவியைத் தேற்றி வேதவல்லி கூறியபடி தவஞ்செய்திருத்தலை

தக்கது," என்றார்கள். உமாதேவி தவஞ்செய்தற்குத் தவச்சாலையை அடைந்தாள். திருமால் முதலியோர் நிகழ்ந்தவைகளைப் பார்த்துக் கவலை யடைந்தார்கள். இவைகளையெல்லாங் கண்ட தக்கன் மிகுந்த சினம் அடைந்தான். "நான் சிறப்புடன் செய்த திருமணம் மிக அழகாக இருக்கின்றது! சிவன் என் மகளிடத்திற்கு வந்து தன்னைத் திருமணஞ்செய்து கொள்ளும்படி இரந்தான்! யான் அதனைக் கேள்வியுற்றுத் திருமணஞ்செய்து கொடுத்தேன். கொடுத்தபின் எவரும் நாணத்தையடையும்படி அந்தச் சிவன் மறைந்தான்! என்னிடத்தில் எவ்விதமான குற்றமும் இல்லை," என்று பலவாறியம்பினான். தேவர்களை அவரவர்களுடைய இருப்பிடங்கட்கு அனுப்பிவிட்டு மிகுந்த சினத்துடன் இருந்தான்.

## இறைவன் உமாதேவியைக் கொண்டுசெல்ல தக்கன் வெகுளல்

தவச்சாலையை அடைந்த இறைவி மேலும் பலநாள் வருந்தித் தவஞ்செய்தாள். ஒருநன்னாளிற் சிவபெருமான் வெண்தலை மாலையும் அக்கமணி மாலைகளும் திருநீற்றுப் பூச்சுந் திகழ உமாதேவியாரிடத்திற்கு எழுந்தருளினார். உமாதேவியார் அவரைப் போற்றிவணங்கினார். சிவபெருமான் காளையூர்தியின்மீது தாயாந்தன்மை வெளிப்படுமாறு காட்சியளித்தார். இறைவியைத் தம்முடன் அழைத்துக் கொண்டுதிருக்கைலைமலையை அடைந்தார். உமாதேவியாருடைய தோழிப்பெண்கள் அதனைக்கண்டு வருந்தினர். தக்கனிடஞ்சென்று, நிகழ்ந்ததை அறிவித்தனர். தக்கன் அதனைக் கேட்டு அளவற்ற சினங்கொண்டான். அப்பொழுது தேவர்கள் அங்குவந்து தக்கனை வணங்கிப் பக்கத்திலிருந்தார்கள். தக்கன் அத்தேவர்களைப் பார்த்து, "முன்னே என் மகளைத் திருமணஞ்செய்து மணச்சடங்கு முடிவதற்குள் மறைந்த சிவன் என் மகள் தவஞ்செய்திருந்த இடத்திற்குவந்து, எனக்குத் தெரியாமலே என் மகளை இட்டுச் சென்றான். தாய்தந்தையர்கட்குத் தெரியாது இவ்வாறு செய்வதுதான் முறையோ? இத்தகைய

செயல்களை அந்தச் சிவனைத் தவிர வேறு யார் செய்வார்கள்? எங்கள் குலத்தைச் சிவன், குற்றத்துக்கு உட்படுத்தினான். அதுவுமல்லாமல் என் ஆணையையுங் கடந்தான். சிவன் ஐயமேற்பவன் என்னும் பழிமொழி நிற்க இப்பொழுது களவு செய்பவன் என்னும் இழிமொழியும் உண்டாகியது," என்று பலவாறு கூறிச் சிவபெருமானை இகழ்ந்தான். அப்பெருமானை நினையாமல் சினத்தோடு இருந்தான்.

## ௯. தக்கன் கயிலை செல்லுதல்

தக்கனுடைய செயலை நான்முகன் முதலிய தேவர்கள் அறிந்து வருந்தினர். "தவத்தினாலே செல்வங்களைப்பெற்று விளங்குகிற தக்கன் சிவபெருமானை எண்ணாமல் இறுமாப்படைந்திருக்கின்றான். அதனால் விரைவில் உயிரை இழப்பான். அவனுடைய ஏவல்களைச் செய்கின்ற நம்முடைய உயிர்க்கும் இறுதிவரும். நாம் தக்கனைமதியாது நீங்குவோமாயின், அவன் சிவபெருமானிடத்தில் பெற்றுள்ள மேன்மையின் சிறப்பால் நம்முடைய பதவிகளையும் மாற்றுவான். இனிமேற் செய்வது யாது?" என்று எண்ணமிட்டார்கள். "தக்கனுக்கும் சிவபெருமானுக்கும் உள்ள பகைமையைப் போக்கவேண்டும்," என்று முடிவுசெய்தார்கள். தக்கனையடைந்து "உன் தவத்தினால் தோன்றிய உன் மகளை நீ மறந்திருப்பது நன்மையாகமாட்டாது. நீ திருக்கைலைமலைக்குச் சென்று இறைவனையும் உமாதேவியையும் கண்டு வருதல்வேண்டும். குற்றம்பாராட்டிக் கொண்டிருப்பின் சுற்றமாந்தன்மை உண்டாகமாட்டாது," என்று பல அறவுரைகளைக் கூறினார்கள்.

குற்றந் தெரிதல் அஃதே குணன் என்று கொள்ளில்
சுற்றம் ஒருவற் கெவணு உண்டு துறந்து நீங்கிச்
செற்றஞ்செய் கண்ணும் மகிழ்வுண் டிதுசிந்தி யாயேல்
மற்றுன்னை வந்தோர்வசை சூழ்தரும் வள்ளல் என்றார்.

தேவர்கள் கூறியவைகளைக் கேட்ட தக்கன் ஆராய்ந்து பார்த்தான். திருக்கைலைமலைக்குச் சென்றுவருதற்கு உடன்

பட்டான். தன்னை நீங்காத சிலரோடு திருக்கைலைமலையை அடைந்தான்; சிவபெருமான் எழுந்தருளி யிருக்குந் திருக்கோயிலையணுகினான்; நந்திதேவர் வீற்றிருக்கும் கோபுரவாயிலை யடைந்தான்.

## பூதர்கள் தடுக்கத் தக்கன் திரும்புதல்

கோபுரவாயிலைக் காவல் செய்யும் பூதர்கள் தக்கன் உள்ளே நுழையாதவாறு தடைசெய்தார்கள். தக்கன் பூதர்களை வெகுண்டு நோக்கினான். "நான் என் மகளைப் பார்த்தற்கு வந்தேன். நீங்கள் என்னைத் தடுக்கவேண்டிய காரணம் என்னை?" என்று கேட்டான். வாயில்காக்கும் பூதர்கள் தக்கனைப் பார்த்து, "அறியாமையையுடைய தக்கனே! நீ முன்னாளில் சிவபெருமானை இகழ்ந்தாய்! அத்தன்மையையுடைய நீ இங்கே எவ்வாறு வரலாம்? முப்புரத்தரக்கர்கள் உலகத்தார்களை வருத்தினாலும் சிவ பெருமானுக்கு நல்லவர்கள். அவர்கள் இறைவனிடத்திற் கொண்டுள்ள அன்பில் ஓர் அணுவளவாயினும் நின்னிடத்தில் இல்லை. அவ்வாறுள்ள நீ எவ்வாறு வாழ்வாய்? சிவபெருமான் அளித்த செல்வங்களையெல்லாம் நுகர்ந்து மகிழ்கின்ற நீ அவரை இகழ்ந்து திரிகின்றாய்! மாயையின் வழிப்பட்டு அறிவு கெட்டிருக்கின்றாய்! சிவபெருமானைப் போற்றாத தீவினையாளர்களுடைய பழக்கமே கூடாது. மிகுந்த கொடியவனாகிய உன்னுடைய முகத்தைப் பார்த்து நாங்கள் பேசுதலுங் கூடாது. அவ்வாறு பேசுதல் தீவினைக்கு ஏதுவாகும். நீ எம்பெருமானுடைய திருமுன்பு சென்று வழிபாடு செய்ய விரும்பின் இங்கே நில்! இன்றேல் இவ்விடம்விட்டு அகன்று செல்!" என்று கூறினார்கள்.

பூதர்கள் புகன்றவைகளைக்கேட்ட தக்கன் மிகுந்த சினங்கொண்டான் பூதர்களாற் காக்கப்பெறுகிற வாசல்களைக் கடந்து உள்ளே செல்லமுடியாதவனானான். நாணம் அவனை வருத்தியது. அங்குநின்று திரும்பத் தொடங்கினான். திரும்பத்தொடங்கியவன் பூதர்களைப்பார்த்து, "ஓ பூதர்களே! நான் உங்கள் கடவுளாகிய சிவனை வணங்க

மாட்டேன். திருமாலும் நான்முகனும் எனக்கு ஏவல் செய்கிறார்கள். மற்றுள்ள தேவர்களும் என்னுடைய தொண்டர்கள். உலகம் முழுவதற்கும் நான் அரசன். என்னுடைய பெயர் தக்கன். உங்களை இவ்வாறு தடுக்குமாறு அறிவித்தது சிவன் என்றே நான் உறுதியாக அறிவேன். உங்கள் கடவுளை எவரும் போற்றிப் புகழாமல் இகழும்படி செய்கிறேன்!" என்று கூறிவிட்டுத் தன் இருப்பிடத்தை யடைந்தான்.

இருப்பிடத்தை யடைந்த தக்கன் நான்முகன் முதலிய தேவர்களைப்பார்த்து, "என் மகளும் சிவனும் ஒத்த மனமுடையவர்களானார்கள். எம்மை உள்ளே விடாமல் வாயில் காவலர்களைக்கொண்டு தடுத்தார்கள். பலவாறு பூதர்களைக்கொண்டு இகழவும் செய்தார்கள். அவைகளை யெல்லாம் நான் இங்குக் கூறுவதாற் பயனில்லை. என்னைப் பொருட்படுத்தாத சிவனையும் உமையையும் நீங்கள் இன்று முதல் வணங்கிப் போற்றுதல் கூடாது. அவர்களைச் சிறிதும் மதித்தலுங் கூடாது. நீங்கள் என்னுடைய கட்டளையை மீறுவீர்களாயின் உங்களுடைய உரிமைகளை யெல்லாம் மாற்றி விடுவேன். இஃது உறுதி," என்று சினத்துடன் கூறினான். தேவர்கள் தத்தம் இருப்பிடங்களை யடைந்தார்கள்.

## கo. நான்முகன் வேள்வி

### நான்முகன் வேள்விசெய்யத் தொடங்கல்

தக்கனுடைய கட்டளைக்கஞ்சிய தேவர்கள் பலகாலம் தக்கனுடைய ஆணைப்படி நடந்துகொண்டிருந்தார்கள். நான்முகன் இறைவனைத் தலைவனாகக்கொண்டு ஒரு வேள்வியைச் செய்ய எண்ணினான். அதற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் தேடித் தொகுத்தான். திருமால் முதலிய தேவர்களையெல்லாம் தன் மக்களைக்கொண்டு அழைக்கச் செய்தான். தான் திருக்கைலாயமலையை அடைந்து சிவபெருமானைக் கண்டு வணங்கிப் போற்றினான். சிவபெருமான் நான்முகனைப் பார்த்து, "நீ இவ்விடம் வந்த காரணம்

யாது?'' என்று கேட்டருளினர். நான்முகன் தான் ஒரு வேள்வியைச் செய்யப்போவதாகவும் அதற்கு இறைவன் வந்தருளவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டான். சிவபெருமான் நான்முகனைப் பார்த்து, "நமது வடிவத்தைக் கொண்ட நந்தி அங்கே வருவான் நீ செல்வாயாக'' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

பிறகு தக்கனிடம் நான்முகன் சென்று தக்கனையும் வேள்விக்கு வருமாறு அழைத்துவிட்டுத் தன் இருப்பிடமாகிய மேருமலையிலுள்ள மனோவதியை யடைந்து வேள்வியைச் செய்யலுற்றான். திருமால், இந்திரன், தேவர்கள், முனிவர்கள், தக்கன் முதலிய எல்லோரும் வேள்விக்கு வந்தார்கள். நான்முகன் அவரவர் தகுதித்தன்மைக்குத் தக்கவாறு இருக்கை அளித்துப் போற்றினன்.

## நந்திதேவர் வேள்விக்கு வருதல்

இறைவன் நந்திதேவரைப்பார்த்து, "நீ நான்முகனுடைய வேள்விக்குச் சென்று, நம்முடைய அவிப்பாகத்தை வாங்கிக்கொண்டு வருவாயாக!'' என்று கட்டளையிட்டருளினர். நந்திதேவர் நூறுகோடி பூதகணங்கள் தம்மைச்சூழ நான்முகனுடைய வேள்விச்சாலைக்கு வந்தார். நான்முகன் விரைந்தெழுந்து நந்திதேவரை வணங்கிப் போற்றினன். ஓர் உயரிய அரியணையில் எழுந்தருளச் செய்தான். நந்திதேவருடன் வந்த பூதப்படைத் தலைவர்கட்கும் இருக்கைகள் அளித்தான். பிறகு வேள்வியைச் செய்யத் தொடங்கினன்.

## தக்கன் நந்திதேவர்க்குச் சினம் உண்டாக்குதல்

தக்கன் நந்திதேவரைப் பார்த்தான். அவனுள்ளத்தில் பொறாமைத் தீ மூண்டது. அவன், "திருமால் முதலிய தேவர்களும், திருமகள் முதலிய தெய்வமகளிர்களும், முனிவர் கூட்டங்களும் நெருங்கியுள்ள நான்முகன் வேள்வியில், நஞ்சையுண்டு கூத்தாடும் சிவனுடைய ஆளாகிய நந்தியும் பூதக்கூட்டங்களுமோ வந்திருப்பது?

இது மிகவும் நன்றாக விருக்கின்றது! சிவனுடைய வெள்ளி மலையைக் காக்கும் நந்தியை இங்கு அழைத்தவர் யாவர்?'' என்று உள்ளத்தில் எண்ணினான். தேவர்கள் அச்சத்தை யடையும்படி நான்முகனைச் சினந்து நோக்கினான். "நீயோ முதல்வனாகிய நான்முகன்? வேள்வி செய்யப்போவதைச் சிவனுக்குத் தெரிவித்து, அவனால் அனுப்பப்பெற்ற நந்தியை என் முன் பணிந்து நடுவிலே இருக்கச் செய்தாய்! இது நினக்குத் தகுமோ? நீ என்னுடைய தந்தையாகலின் பிழைத்தாய்! இன்றேல் உன்னுடைய தலையை வெட்டியிருப்பேன்! அறிவற்றவனே! நான் கூறுவதைக் கேள்! சுடலையை இடமாகக்கொண்டு பூதங்கள் சூழத் தீயில் நின்றாடுஞ் சிவனுக்கு நீ அவிப்பாகத்தை முன்போலக் கொடாதே! இன்று முதல் அது அவனுக்கு இல்லை. எலும்பையும் பாம்பையும் தலைமாலையையும் அணிந்து சாம்பலைப்பூசிய பித்தன், வேள்வியில் அவிப்பாகம் ஏற்றற்கு உரியவனாவனோ? முன்பு சிவனுக்குக்கொடுத்த அவியை இனிமேல் தேவர்களுக்குக் கொடுப்பாயாக! இன்று முதல் திருமாலையே கடவுளாகக் கொள்வாயாக! அவருக்கே அவியை முதலிற் கொடுப்பாயாக! சிவனே பரம்பொருள் என்று சொன்ன மறைமொழிகளை விளக்குவாயாக!'' என்று கூறினான்.

## நந்திதேவர் வெகுளி

தக்கன் சாற்றிய மொழிகளைக் கேட்ட நந்திதேவர் இருகைகளாலுங் காதுகளை மூடிக்கொண்டார். அன்போடு இறைவன் திருப்பெயர்களை எண்ணிப் போற்றினார். "எம்பெருமானே! இத்தீயோனுடைய மொழிகளை இன்றைக்கு நான் கேட்கவேண்டுமென்றோ என்னை இங்கு அனுப்பினீர்!'' என்று கூறித் துன்பத்தில் மூழ்கினார். திடீரென்று வெகுண்டார்! நந்திதேவருடைய சினத்தைக் கண்ட தேவர்கள் அனைவரும் அஞ்சினர். தீக்கடவுளும் வருந்தினான். உலகங்கள் எல்லாம் நடுநடுங்கின. உலகங்களெல்லாம் அசைந்தன. நான்முகனும் திருமாலும் கலங்கினார்கள்.

நந்திதேவர் தக்கனைப் பார்த்து, "உமாதேவிபாக ராகிய சிவபெருமானை இகழ்ந்தாய்! உன் வாயைத் துளைத்து விடுவேன்! அது சிவபெருமானுடைய கட்டளையல்ல வாகையால் சும்மா விட்டுவிட்டேன். அதனால், நீ பிழைத் தாய்! இனிமேல் சிவபெருமானை வைதாயானால் உன் னுடைய தலையைக் கொய்வேன்," என்று தக்கனும் அஞ்சு மாறு கூறினார். மேலும், தக்கனைப் பார்த்து, "வேள்வியில் சிவபெருமானுக்கு அவிப்பாகம் இல்லையென்று இயம்பி னாய்! வேள்விக்கிறைவர் சிவபெருமான் அல்லராயின் வேறு யாவர் ஆவர்? நீ திருமாலைப் பரம்பொருள் என்று கூறினாய்! சிவபெருமானைத் தலைவராகக் கொள்ளாது வேள்வி செய்வோருடைய தலை விரைவில் அறுக!" என்று சாபம் இட்டார். மேலும், தக்கனைப்பார்த்து, "சிவபெருமா னுடைய இயல்புகளை மதியாத உன்னுடைய செல்வம் விரைந்து அழிக! இறைவனை இகழ்ந்த உன்னுடைய தலை யொழிய வேறோர் இழிந்த தலை விரைவில் உண்டாகுக. உன்னைச் சேர்ந்த தேவர்களும் ஒருநாள் இறந்து மீண்டு எழுந்து அளவற்ற ஊழிக்காலம் சூரன் என்னும் அவுண னால் துன்பக்கடலில் மூழ்குக!" என்று பல சாபங்களை இட்டார். பூதங்கள் சூழத் திருக்கைலாயமலையை அடைந் தார். நிகழ்ந்தவைகளைச் சிவபெருமானுக்கு விண்ணப்பஞ் செய்தருளினார். முன்போலத் தமது திருப்பணியை மேற் கொண்டார்.

நந்திதேவர் சென்றபிறகு வேள்விச்சாலையில் கூடி யிருந்த தேவர்கள் வருந்தினார்கள். நான்முகன் நந்திதேவ ருடைய சாபத்தை எண்ணி எண்ணி ஏங்கினான். மேற் கொண்டு வேள்வியை நடத்தாமல் நிறுத்திவிட்டான். தக்கன் தேவர்களுடன் தன்னுடைய இருப்பிடத்தை யடைந்தான். மற்றவர்களுந் தனக்குரிய இடத்தையடைந் தார்கள்.

## கக. சாலை செய்தல்

### தக்கன் வேள்வி செய்ய முயலுதல்

நீண்ட காலமாக முனிவர்களும் தேவர்களும் அந்தணர்களும் வேள்வி செய்தலை விட்டுவிட்டார்கள். வேள்வி செய்ய எண்ணியவர்களை நந்திதேவரின் சாபம் அச்சுறுத்தியது. ஒருநாள் தக்கன் தன்முன் வந்த தேவர்களைப் பார்த்து, "நீங்கள் நெடுங்காலமாக வேள்வி செய்தலை ஏன் மறந்துவிட்டீர்கள்?" என்று கேட்டான். தேவர்கள் நந்தியின் சாபத்திற்கஞ்சி வேள்வியை மறந்திருந்தோம் என்றார்கள். தக்கன் அவர்களைப் பார்த்து, "நந்தி அந்நாளிலே கூறிய சாபத்திற்கு இந்நாளினும் அஞ்சிக்கொண்டிருத்தல் கூடாது. முதலிலே மறைமுறைப்படி யான் ஒரு வேள்வியைச் செய்கிறேன். அது இனிது நிறைவேறிற்றாயின் பிறகு நீங்களும் வேள்விகளைச் செய்யுங்கள்," என்று கூறினான். தேவர்களும் அதற்கு உடன்பட்டார்கள்.

பிறகு ஒருநாள் தக்கன் வேள்விசெய்ய எண்ணினான். விசுவகன்மனை அழைத்தான். "நான் ஒரு வேள்வி செய்யப்போகிறேன். நீ வேள்விச்சாலை ஒன்றை முறைப்படி அமைப்பாயாக!" என்று கட்டளையிட்டான். விசுவகன்மன் அவ்வாறே செய்வேன் என்றான். கங்கைக்கரையிலுள்ள கனகலம் என்னும்இடத்தில் வேள்விச்சாலையை அமைப்பானானான். ஆயிரம் யோசனை நீளமும் அகலமும் ஒத்த தன்மையாக இடத்தை ஒழுங்குசெய்து, மதில் கோபுரவாயில் முதலியவைகளை அமைத்து, உள்ளே வருகின்றவர்கள் அமர்தற்குரிய இடங்கள், தங்குவதற்குரிய இடங்கள், உண்டற்குரிய இடங்கள், ஆடற்குரிய இடங்கள், வேள்விக்குழிகள் முதலிய எல்லாவற்றையும் முடித்துத் தக்கனுக்குத் தெரியப்படுத்திச் சென்றான்.

தக்கன் வேள்விச்சாலையைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தான். தன் பக்கமுள்ள முனிவர்கள் பலரையழைத்தான். "வேள்விக்குவேண்டிய விறகுகள், சாகைகள்

இலைகள், பசுக்கள் மற்றும் வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் விரைவிற் கொண்டுவாருங்கள்,'' என்று கட்டளையிட்டான்.

காமதேனு, சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி ஐந்தருக்கள் ஆகியவைகளை யழைத்தான். "வேள்வியைப் பார்ப்பதற்கு வருபவர்கள் வேண்டியவைகளைக் கொடுங்கள்'' என்று கட்டளையிட்டான். அவைகள் தத்தமக்குரிய இடங்களிற் போயிருந்தன. தக்கன் தன் விருப்பம்போல் நடத்தக்கூடிய முப்பதாயிரம் முனிவர்களை யழைத்து உணவு முதலியவைகளை வருபவர்கட்குப் பரிமாறும்படி பணித்தான். அறுபதினாயிரம் முனிவர்களை வேண்டுவன வழங்குமாறு ஏவினான். தூதுவர்களைப் பார்த்து, "சிவனைத் தவிர மற்றைய தேவர்கள் முனிவர்கள் பார்ப்பனர்கள் முதலியவர்களை அழைத்துக்கொண்டு வாருங்கள்,'' என்று கட்டளையிட்டான்.

வேள்விக்கு வரவேண்டியவர்கள் அனைவரும் வந்து சேர்ந்தார்கள். வேள்வியுந் தொடங்கப்பெற்றது. தக்கனுடைய கட்டளைப்படி சென்ற தூதுவர்கள் மண்ணுலகம் விண்ணுலகம் முதலிய எல்லாவுலகங்கட்குஞ் சென்று தக்கனுடைய வேள்விச் செய்தியைத் தெரியப்படுத்தினார்கள். நான்முகன் தன் மனைவியர் மூவரோடும் வந்து சேர்ந்தான். இந்திரன்வந்துசேர்ந்தான். அரம்பையர் முதலாகிய பெண்கள் தேவர்களோடு வந்து சேர்ந்தார்கள். திக்குப்பாலகர்களும், ஆதித்தர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர், இயக்கர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், ஞாயிறு, திங்கள் முதலிய அனைவர்களும் வேள்விக்கு வந்தார்கள். திருமாலும் வந்துசேர்ந்தார். வேள்விக்கு வராதவர்களை இலர். தக்கன் அனைவரையும் அன்போடு வரவேற்றுப் போற்றினான். திருமால், நான்முகன் முதலியவர்களை மணி அணைகளில் அமர்த்தினான். மறைகள் ஒலிக்கத் தக்கன் அனைவருக்கும் நடுவில்வீற்றிருந்தான். தெய்வப் பெண்கள் வேதவல்லி யிருக்குமிடத்தை

யடைந்து தத்தமக்கேற்ற இருக்கைகளில் இருந்தார்கள். நிலவுலகத்திலுள்ள பார்ப்பனர்களும் முனிவர்களும் தக்கனுடைய வேள்விக்கு வந்தார்கள். அனைவரையும் அழைக்கச்சென்ற தூதுவர்கள் திரும்பிவந்து தக்கனைப் பணிந்து நின்றார்கள். தக்கன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் சென்று அழைத்தவர்களில் இங்கு வராதவர்கள் யாவர்?" என்று வினவினன். தூதுவர்கள் தக்கனைப் பார்த்து, "அகஸ்தியர், சனகாதிமுனிவர், அத்திரி, வசிட்டர், பிருகு, ததீசி, துர்வாசர், பராசரர் ஆகியவர்கள் உன்னுடைய வேள்விக்கு வரமாட்டார்கள் போலும்," என்று கூறினர்.

## கஉ. ததீசிமுனிவர் வருதல்

### ததீசிமுனிவரும் தக்கனும் உரையாடுதல்

ததீசிமுனிவர் முனிவர்கள் பலர் தம்மைச் சூழ வேள்விச்சாலைக்கு வந்தார். தக்கன் அவரைப் பார்த்தான். "இம் முனிவர் சிவனைச்சேர்ந்தவர் அல்லர். நான் செய்யும் வேள்வியைப் பார்க்கும்பொருட்டு வந்திருக்கிறார் என்று எண்ணித் தன்னுளே மகிழ்ந்தான். "இவ்விடம் வருக!" என்று கூறி தன்னிடம் அழைத்து வழிபாடு செய்தான். அவரை ஓர் பெரிய இருக்கையில் இருக்கச் செய்தான். ததீசிமுனிவருடைய இருபக்கங்களிலும் முனிவர்கள் அமர்ந்தார்கள். ததீசிமுனிவர் தக்கனைப் பார்த்து, "நீ இங்கே அழைத்த காரணம் யாது?" என்று கேட்டார். தக்கன் ததீசிமுனிவரைப் பார்த்து, "சிவன் என் மகளை மணஞ் செய்தார். திருமணம் முடிவதற்கு முன்னரே மறைந்து சென்றார். பின்னொருநாள் வந்து உமையைக் களவாக அழைத்துச் சென்றார். உமைக்குப் பெரும் மாயத்தைச் செய்தார். உமையையுஞ் சிவனையும் பார்க்கும்படி நான் திருக்கைலைக்குச் சென்றேன். பூதர்களைக்கொண்டு என்னைத் தடுத்தார். பலவாறு இகழவும் செய்தார். நான் கைலையை நீங்கி என் இருப்பிடத்தை யடைந்தேன். நான் கைலைக்குப் போய்த் திரும்பிய

பொழுது என் மகளும் என்னை வந்து பார்த்திலள். என் தந்தையாகிய நான்முகன் ஒரு வேள்வியைச் செய்தார். நான் அங்கே சென்று, முன்னாள் தொட்டுச் சிவனுக்குக் கொடுத்துவந்த அவியைக் கொடாதவாறு தடுத்தேன். அப்போது நந்தி வந்து சாபங்கொடுத்துச் சென்றான். நந்தியின் சாபத்திற்கு அஞ்சி நான்முகன் வேள்வியை நிறைவேற்றாமல் நிறுத்திவிட்டார். அன்று முதல் இன்று வரை யாரும் வேள்வி செய்தலை மேற்கொள்ளாமல் விட்டு விட்டார்கள். ஐயமேற்றுத்திரியும் அந்தச் சிவனுக்குரிய அவியை மாற்றுவதற்காகவே நான் இந்த வேள்வியை நடத்துகின்றேன். வேறொரு பயனையும் விரும்பவில்லை. தேவர்களும் முனிவர்களும் வேள்விக்காக இங்கு வந்து கூடியிருக்கிறார்கள். உமக்கும் இதனைச் சொல்லியனுப்பினேன். நிகழ்ந்தது இதுவேயாகும்,'' என்று கூறினான்.

தக்கன் கூறிய உரைகளைக் கேட்ட ததீசிமுனிவர் பற்கள் வெளியே தோன்றுமாறு நகைத்தார். முனிவர் நகைத்ததைக் கண்ட தக்கன் சினந்து சீறினான். "நீ சிவனுக்கு அடியவன் போலும்,'' என்று கூறினான்.

ததீசிமுனிவர் தக்கனைப் பார்த்து, "உலகங்களை எல்லாம் பெற்றருளிய தன் நிகரில்லாத் தனிப்பெருந் தலைவனாகிய சிவபெருமானை இகழ்ந்தோ நீ வேள்வியைச் செய்ய நினைக்கின்றாய்! சிவபெருமான் வேள்விக்குத் தலைவர் அல்லர் என்றால் பிறர் யார் தலைவராகக் கூடியவர்கள்? தேவர்கள் எல்லாருக்குங் கொடுக்கும் அவிப்பாகங்களை ஏற்றுக்கொள்பவரும், தீக்கு முதல்வரும், வேள்விக்குத் தலைவரும், வேள்வியைக் காப்பாற்றுபவரும் சிவபெருமானே என்று மறைகள் கூறும். நான்முகன் முதலிய தேவர்கள் அனைவரும் உயிர்கள். சிவபெருமான் ஒருவரே உயிர்கட்குத் தலைவர். தேவர்கள் அனைவரும் சிவபெருமானுடைய பணியையே மேற்கொண்டவர்கள். இது மறைமொழி. இவைகளை யெல்லாம் நீ விரைக மறந்து மாயத்தில் அழுந்துகின்றாய்! மேலான சிவபெருமானை நீ இகழ்ந்து நிற்றல் உன்னுடைய அறியாமையே தவிர

உனக்குப் பெருமையன்று. துன்பத்தை விரும்பி யார் தவத்தைச் செய்வார்கள்? அத்தன்மை பொருந்தியவன் ஒருவன் உளனென்றால் அவன் நீயேயாவாய். நீ மறை நெறியை விலக்கி இவ்வேள்வியைச் செய்ய முயன்றாய். நீ எவ்வாறு முயலினும் இவ்வேள்வி முடிவுபெறாது. சிவ பெருமானுடைய கட்டளை வந்து இவ்வேள்வியை அழித்து விடும். சிவபெருமானுக் கஞ்சாதவர்கள் எவராயினும் இருப்பின் அவர் இறந்தொழிவர். சிவபெருமானைத் தலைவராகக்கொள்ளாது வேள்வி செய்ய எண்ணிய நின் எண்ணம் தீது!'' என்று கூறியருளினார்.

தக்கன் "சிவனுக்குக் கொடுக்கும் அவியைத் திருமாலுக்குக் கொடுத்து வேள்வியைச் செய்வேன்,'' என்றான். ததீசிமுனிவர் தக்கன் மொழியைக் கேட்டுப், "பெரியோரை விட்டுவிட்டுச் சிறியோரை உயர்த்துதல் உய்தற்கு வழியன்று. நீ தொடங்கியிருக்குஞ் செயல் உன்னைச் சேர்ந்தவர்கள் உயிர்கட்கெல்லாம் தீமையை உண்டாக்கும்,'' என்று கூறினார்.

மேலுந் தக்கன் "உருத்திரர்களுக்கு அவிர்ப்பாகத்தைக் கொடுத்து வேள்வியை முடிப்பேன்,'' என்றான். "நீ கூறும் உருத்திரர்கள் மகா உருத்திரமூர்த்திக்கு ஒப்பாக மாட்டார்கள். மகா உருத்திரமூர்த்தியேமுழுமுதற் பொருளாவர். நீ கூறும் உருத்திரர்கள் தவஞ்செய்து சிவபெருமானுடைய சாரூபத்தைப் பெற்ற அடியார்களைப் போன்றவர்கள்,'' என்றார் ததீசிமுனிவர்.

தக்கன் ததீசிமுனிவரைப் பார்த்து, "படைத்தல் காத்தல்களைச் செய்யும் நான்முகன் திருமால் ஆகியோர் முதற்கடவுளாகாமல் அழித்தலைச் செய்யும் உருத்திரன் மட்டும் முதற்கடவுளாகக் காரணம் யாது? கூறும்,'' என்று கேட்டான்.

ததீசிமுனிவர் தக்கனைப் பார்த்து, "ஓ தக்கனே! முதற் கடவுளாகிய உருத்திரமூர்த்தி திருமாலோடும் நான்முகனோடும் ஒருங்கெண்ணப்பட்டமையால், அவரைப் பெரியவ

றென்று நீ எண்ணவில்லை. முதலீறு அற்ற நம் கடவுளுக்கு பெயரும் வடிவமுஞ் செயலும் இல்லை. இதனை மறைகள் உறுதியாகச் சொல்லும். ஆணவமலத்தால் கட்டுண்ட உயிர்களுடைய வினைகளை நீக்கவேண்டும் என்னும் தண்ணளியினால் பெயரையும் வடிவையுஞ் செயலையுங்கொண்டு நான்முகன் முதலிய தேவர்களை உண்டாக்கினர். அவர்களுக்குத் தொழிலையும் ஏற்படுத்தினர். அழித்தல் தொழில் பிறரால் செய்தற்கரியது என்று அதனைத் தாமே மேற்கொண்டார். தேவர்கள் யாவரும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, "எமக்குப் படைத்தல் முதலிய தொழில்களைத் தந்தீர்! நாங்கள் அவற்றைத் தாங்கும் ஆற்றலுடையவர்களல்லேம்! இச்சுமை எங்களை விட்டு எப்பொழுது நீங்கும்?" என்றார்கள்.

சிவபெருமான் அத்தேவர்களைப்பார்த்து, 'உங்கள் வாணாள் எல்லைவரையும் இச் செயல்களைச் செய்யுங்கள். திருநீற்றையுண்டாக்கி உடம்பில் அணிந்து, உள்ளத்தில் ஐந்தெழுத்தை எண்ணுங்கள். அவ்வாறு செய்வீர்களாயின் தொழில்களைத் தாங்கும் ஆற்றலை யடைவீர்கள். மேலும் மிகுந்த நன்மையைப் பெறுவீர்கள்' என்று அருளிச் செய்தார். அத்தேவர்களைக்கொண்டே மற்றைத் தொழில்களையும் செய்வித்தார். பிறவிக்கடலில் விழுந்தவர்களுடைய கவலைகளைக் கெடுத்தொழித்து அவர்களை உயர்த்திவிடுவதால் சிவபெருமானுக்கு உருத்திரர் என்னும் பெயர் உண்டாயிற்று. மேலும் அவருடைய திருவடிகளையடைந்த அன்பர்களுக்கும், சாரூப்பியம் உற்றோர்க்கும் எய்திற்று.

முன்னொருகாலத்தில் தேவர்கள் அவுணர்களோடு போருக்குச் சென்றார்கள். செல்லுங்காலத்தில் அவர்கள் தமக்குள்ள செல்வங்களைத் தீக்கடவுளிடத்திலே ஒப்படைத்துவிட்டுப் போருக்குச் சென்றார்கள். பகைவர்களோடு போர்செய்து திரும்பியபின் தீக்கடவுளிடஞ் சென்று தாம் கொடுத்துவைத்த செல்வங்களைக் கொடுக்குமாறு கேட்டார்கள். தீக்கடவுள் அதனைக் கொடாமல்

கைப்பற்றிக்கொண்டு ஓடினன். தேவர்கள் அவனைத் தொடர்ந்து சூழ்ந்து நெருங்கினர்கள். தீக்கடவுள் தடை செய்தபடியால் அவனுக்கு உருத்திரன் என்னும் பெயர் உண்டாயிற்று. மற்றும் பலவழிகளால் சிவபெருமானே முழுமுதற்கடவுள்," என்பதைத் ததீசிமுனிவர் தக்கனுக்கு விளக்கிக் காட்டினர். மேலுந் தக்கனைப் பார்த்து, "உனக்கு அழியுங்காலம் வந்தமையால் சிவபெருமானை மறந்ததன்றி இகழவுந் தொடங்கினய்! நான்முகன் முதலிய தேவர்களும் அழியும் இயல்பையுடைவர்களாக உன்னுடைய வேள்விக்கு வந்தார்கள். நீ மாயையினல் மருண்டாய்! பிழைப்பதற்கு எண்ணினய் ஆயின் சிவபெருமானுக்கு அவியைக்கொடுத்து இந்த வேள்வியைச் செய்!" என்று ததீசிமுனிவர் சாற்றினர்.

## கரு. ததீசி பதிலுரை

### தக்கன் கூறுதல்

ததீசிமுனிவர் கூறியவைகளைக்கேட்டுத் தக்கன் நகை செய்தான். மேலும் முனிவரைப்பார்த்து, "பரம்பொருளாகிய சிவன் எலும்பையுந் தலைமாலையையும் அணிவாரோ? தேவர்களுடைய சாம்பலைப்பூசுவாரோ? கங்காளத்தை ஏந்தித்திரிவாரோ? களைந்த மயிரை மேற்கொள்வாரோ? பன்றிக்கோட்டையும் ஆமையோட்டையும் பூண்பாரோ? உயிர்களை அழிப்பாரோ? புலித்தோலை உடுப்பாரோ? யானைத்தோலைப் போர்ப்பாரோ? தீ, மழு, மான் முத்தலைச் சூலம் ஆகியவைகளை ஏந்துவாரோ? எங்கும் ஐயம் ஏற்பாரோ? கூத்தியற்றுவாரோ? பூதப்படைசூழத் திரிவாரோ? பாம்புகளைத் தாங்குவாரோ? வெண்தலையைத் தலையில் அணிவாரோ? ஆடையற்றவராவாரோ? பலவேறு வடிவங்களைக்கொள்வாரோ? மாட்டின்மேல் ஏறுவாரோ? சுடலையில் ஆடுவாரோ? ஒரு பெண்ணைத் தலையின் சுமப்பாரோ? ஒரு பெண்ணை பக்கத்தில் வைப்பாரோ? பிள்ளையையும் பெறுவாரோ? தாமதகுணத்தைப் பொருந்துவாரோ? உங்கள் சிவன் ஒருகுணமும் இல்லாதவராகை

யால், நான் செய்கின்ற வேள்வியில் அவருக்கு வேள்வி யுணவைக் கொடுப்பது இல்லை," என்று கூறினன்.

ததீசிமுனிவருக்கு மிகுந்த சினம் உண்டாயிற்று. ஆயி னும் அவர் அதனை அடக்கிக்கொண்டு தக்கனுக்குப் பதி லுரை கூறலானர்.

## எலும்புகளை யணிதல் முதலியன

"அறிவற்ற தக்கனே! நான் கூறுதலைக் கேள்! அருளையே திருவுடலாகக்கொண்ட சிவபெருமான், நான் முகன் முதலிய தேவர்களைத் தந்து, தாம் அவர்களைப் பொருந்திநின்று, படைத்தல் முதலியவைகளைச்செய்து, உயிர்களுக்கு வினைப்பயன்களை யூட்டி, இருவினைகளும் ஒப்பாகிப் பக்குவம் வரப்பெற்ற உயிர்களை வீடுபேறடை யச்செய்து, மற்றைய உயிர்களையும் உலகங்களையும் பின் னர் அழித்துத் திருமால் நான்முகன் முதலிய தேவர்களை ஒடுக்கியருள்வார். தாம் அழிவற்றிருப்பார். அதன்பின் னும் ஐந்தொழில்களையும் செய்தருளுவார். இவ்வாறு செயல்களைச் செய்யுந்தோறும் நான்முகன் முதலியவர்களு டையஎலும்புகளை அணிவார். அவர்களுடைய தலைகளையெல் லாம் மாலையாகத் தொடுத்துப் பூண்பார். அவர்களுடைய மயிர்களைப் பூணூலாக அணிவார். அவர்களை முத்தலைச் சூலத்தில் கோத்து ஏந்துவார். அல்லது அவர்களை நெற் றிக்கண்ணுற் சாம்பராக்கிச் சாம்பரை உடலிற்பூசுவார். இப்படியெல்லாம் சிவபெருமான் செய்தற்குக் காரணம் அத்தேவர்கள் முன்னே மிகுந்ததவத்தைச் செய்திருந் தமையேயாம். ஆதலால் இவைகள் திருவருட்செயல்களே யல்லாமல் மருட்செயல்கள் அல்ல.

## பன்றிக்கோடு அணிதல்

இரணியாக்கன் என்னும் அவுணன் தேவர்களுக்குத் துன்பங்களைச் செய்துகொண்டிருந்தான். அவன் ஒரு நாள் நிலவுலகத்தைக் கவர்ந்து வயிற்றில் மறைத்துக் கொண்டு உலகங்களெல்லாம் நடுங்கும்படி பிலத்திற்புகுந் தான். தேவர்கள் அதனைக்கண்டு அஞ்சினர். திருமால்

நான்முகனுடைய மூக்கில் ஒரு பன்றியாகத் தோன்றினார். விண்ணிற்போய் மேருமலைபோல வளர்ந்தார். நொடிப்பொழுதிற் பாதலத்திற் புகுந்தார். இரணியனைக் கொன்றார். நிலத்தைக்கொண்டுவந்து முன்போல நிலை நிறுத்தினார். அதனால் தன்னை மிகவும் மதித்து ஆணவங் கொண்டார். அறிவு இழந்தார். நிலம் முழுவதையுங் கொம்பினால் கிண்டினார். கடலையும் உடைத்தார். திருமாலின் ஆணவத் திருவிளையாடல்களைச் சிவபெருமான் கண்டார். பன்றியுள்ள விடத்திற்கு எழுந்தருளி வந்தார். அப்பன்றியின் ஒரு கோட்டைப் பிடுங்கினார். பன்றியான திருமால் உணர்வு வரப்பெற்றார். முன்னைய வடிவத்தைக் கொண்டு சிவபெருமானைப் போற்றினார். சிவபெருமான் மறைந்தருளினார். சிவபெருமான் அன்றைக்குப் பிடுங்கிய கொம்பைத்தான் அறிகுறியாக அணிந்துள்ளார். அஃது இன்றைக்கும் அவருடைய திருமார்பிற் பிறைபோல விளங்குகின்றது.

## ஆமையோடு அணிதல்

ஆமையோட்டை யணிந்த காரணத்தையும் கூறுகிறோம் கேள். இதனை மறைகளும் இயம்பும். முன் ஒரு காலத்தில் தேவர்களும் அவுணர்களுஞ் சேர்ந்து திருப்பாற் கடலைக் கடந்தார்கள். மத்தாகிய மந்தரமலை கவிழ்ந்தது. திருமால் ஆமையாகிக் கடலுக்குட்சென்று அம்மலையை முதுகினால் தாங்கினார். பாற்கடலில் அமுதம் எழுந்தது. தம்மாலேயே அமுதம் எழுந்ததாகச் செருக்கடைந்த திருமால் தம்மைப் பெரிதும் வியந்து தருக்கினார். கடல்களில் விழுந்து கலக்கித்திரிந்தார். அதனால் நிலத்திற்கு அழிவுண்டாகியது. சிவபெருமான் அப்பொழுது ஆமையிடஞ்சென்று அதன் ஆற்றலைக் கெடுத்துத் தொலைத்தார். அந்த ஆமையின் ஓட்டைத்தான் சிவபெருமான் பன்றிக் கொம்புடன் அணிந்தருளினார்.

## ஐயமேற்றல்

'சிவபெருமான் ஐயமேற்பவர்' என்று நீ இகழ்ந்து பேசினாய்! அவர் ஐயமேற்க நேர்ந்த காரணத்தையுங் கூறு

கிறோம் கேள். தாருகாவன முனிவர்கள் சிவபெருமா னிடத்திலே அன்பற்றவர்களாக விருந்தார்கள். கருமமே வீடுபேற்றைத் தரவல்லதென்று நம்பினார்கள். கடவுளரு ளின்றித் தாமே வீடுபேற்றையடையலாமென்று எண்ணி னார்கள். உடம்பு துன்பத்தையடையுமாறு அளவற்ற தவங்களையும் வேள்விகளையுஞ் செய்தார்கள். சிவபெரு மான் அம்முனிவர்களுடைய மாறுபாட்டுணர்ச்சியைப் போக்க விரும்பினார். திருமாலையழைத்து மோகினி வடிவங்கொள்ளச் செய்தார். தாம் அழகிய ஆணுருவைக் கொண்டார். அம்மணக்கோலத்துடன் ஐயக்கடிஞையை யும், முத்தலைச் சூலத்தையுங் கையிலேந்தினார். இருவருந் தாருகாவனத்தை யடைந்தார்கள். சிவபெருமான் கட்ட ளைப்படி மோகினி வடிவங்கொண்ட திருமால் முனிவர்கள் இருக்குமிடத்தை யடைந்தார். முனிவர்கள் மோகினியைக் கண்டு மயங்கினார்கள். மிகுந்த காமவேட்கை கொண் டார்கள். தவவலி குன்றி வேள்வியை விட்டார்கள். மோகினியைச் சூழ்ந்தார்கள். பலவற்றைக்கூறிப் பிதற்றி னார்கள். காமப்பித்துக்கொண்ட அம்முனிவர்களுடைய பெருமை அழிந்தொழிந்தது.

ஐயமேற்குங் கோலங்கொண்ட சிவபெருமான் ஐய மேற்பார்போன்று முனிவர்களுடைய தெருவிற்போய் இசையோடு மறைகளைப் பாடினார். இசையைக்கேட்ட முனிவர்களின் மனைவியர்கள் உள்ளம் உருகினார்கள். தெருவை யடைந்து சிவபெருமானைச் சூழ்ந்தார்கள். காமன் கணைகளால் உணர்வு கெட்டுச் சோர்ந்தார்கள். காமக் கடலில் அழுந்திக் கலங்கினார்கள். அம்மாதர்கள் உடுத்தியிருந்த உடை அணிந்திருந்த வளையல் அணிகலன் கள் முதலியவைகளை யிழந்தார்கள். நாணமுங் கற்புங் கெட்டார்கள். உயிரைமட்டுந் தாங்கினார்கள். ஆடையற்றவ ராகச் செல்லும் சிவபெருமானைப் பின் தொடர்ந்தார்கள். ஐயக் கோலம்கொண்ட சிவபெருமான் ஆடிப்பாடிப் பல திருவிளையாடல்களைச் செய்துகொண்டு சென்றார். சிவ பெருமான்மீது காம மயக்கங்கொண்ட அந்த மங்கை

யர்கள் அனைவரும் கருப்பமடைந்து நாற்பத்தெண்ணாயிரம் மக்களைப் பெற்றார்கள். அம்மக்களனைவரும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கித் துதித்தார்கள். சிவபெருமான் அவர்களைப்பார்த்து, "நீங்கள் நம்மையெண்ணி இங்கே தவத்தைச் செய்துகொண்டிருங்கள்," என்று கட்டளையிட்டருளினார். அவர்களும் அவ்வாறே ஒரு பக்கத்தில் தவஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

## முனிவர்கள் சினங்கொள்ளுதல்

ஐயமேற்குங் கோலங்கொண்ட சிவபெருமான் முனிவர்களின் மனைவியர்கள் தம்மைப் பின்தொடரத் தெருவைக் கடந்து அப்பாற் சென்றருளினார். மோகினி வடிவங்கொண்ட திருமால் அக்கடவுளைப் பின்தொடர்ந்து சென்றார். மோகினியைக் கண்டு மயங்கிய முனிவர்கள் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். சிவபெருமான் அம் முனிவர்களுக்கு வேறொரு வடிவத்தைக் காட்டிநின்றார். முனிவர்கள் தம் மனைவியரின் நிலையைக் கண்ணுற்றார்கள். 'இவர்கள் உடுத்த உடையையும் நாணத்தையுந் தோற்றார்கள். நாம் இந்த மோகினியைக் கண்டு மயங்கியதுபோல இம் மங்கையர்களும் இவ்வாடவனைக் கண்டு மயங்கினார்கள்போலும்,' என்று எண்ணினார்கள். தம் மனைவியரின் இழிநிலையைக் கண்டதனால் மோகினிமீது கொண்ட மயக்கவுணர்வு சிறிது நீங்கப்பெற்றார்கள். யாவரும் ஒன்றுகூடி எண்ணமிட்டார்கள். தம்மை மயக்கிய பெண் திருமால் என்றும், தம் மனைவியர் கற்பைக் கொள்ளைகொண்டவர் சிவபெருமான் என்றும் உணர்ந்தார்கள். தம்முடைய மனைவியரின் கற்பு அழிந்ததே என்று வருந்தினார்கள். அவர்களுக்கு மிகுந்த சினமுண்டாகியது. அவர்கள் தம் மனைவியரைக் கூப்பிட்டு, 'நீங்கள் இறந்துபோதல்தான் நல்லது. அல்லது உங்களுடைய ஊர்களுக்குப் போய்விடுங்கள்,' என்று கூறிச் சீறினார்கள். முனிவர்களுடைய மனைவியர்கள் ஒருவாறு தெளிந்து நகரிலுள்ள தங்களுடைய இருப்பிடங்களையடைந்தார்கள்.

## முனிவர்கள் வேள்வியில் புலி வருதல்

சிவபெருமான்மீது சீற்றங்கொண்ட முனிவர்கள் இழிந்த ஒரு வேள்வியைச் செய்தார்கள். வேள்விக் குழியினின்றும் ஒரு புலி தோன்றிற்று. அப்புலி, அஞ்சத் தக்க தோற்றத்தை யுடையதாக விருந்தது. அதன் குரல் இடிபோன்றிருந்தது. அதன் சினம் தடுத்தற்கரியதாக விருந்தது. அதன் கண்களினின்றுந் தீப்பொறிகள் வெளிப் பட்டன. முனிவர்கள் தறுகண்மை மிகுந்த அப்புலியைப் பார்த்து, 'நீ சென்று சிவபெருமானைக் கொல்வாயாக,' என்று ஏவினார்கள். அப்புலி யாவரும் நடுங்கும்படியாக வந்தது. சிவபெருமான் அப்புலியைப் பிடித்து உரித்து அத்தோலை உடையாக உடுத்திக்கொண்டார்.

## சூலந் தோன்றுதல்

அதன்பின் அவ் வேள்விக்குழியில்நின்றும் ஒரு முத்தலைச் சூலந் தோன்றிற்று. முனிவர்கள் அதனைச் சிவபெருமான்மீது செலுத்தினார்கள். சிவபெருமான் அதனைப் பிடித்துத் தம்முடைய கையிலே ஏந்தி, 'நீ நம் முடைய படையாகக்கடவாய்!' என்று பணித்தார்.

## மான் வருதல்

பின்பு வேள்விக் குழியில்நின்று ஒரு மான்கன்று தோன்றியது. முனிவர்கள் அதனைச் சிவபெருமான்மீது செலுத்தினார்கள். அது விண்ணில் எழுந்து பாய்ந்து எல்லாப் பொருள்களையும் அழித்துக்கொண்டு, பெருங் குரலிட்டுச் சென்றது. அதனால் உயிர்கள் அழிவுறுவண் ணம் திருவருள்நோக்கஞ்செய்தார். அதனை விரைந் தழைத்தார். தம்முடைய வலதுகையிலே ஏந்தினார்.

## பூதப்படை வருதல்

பின்பு வேள்விக்குழியில்நின்று அளவற்ற பூதங்கள் உண்டாயின. 'சிவனுடைய ஆற்றலை மாற்றுங்கள்,' என்று கூறி முனிவர்கள் அப்பூதங்களைச் சிவபெருமான்

மீது ஏவினர். சிவபெருமான் அப்பூதங்களைப் பார்த்து, 'நீர் நம்மை யகலாது படைகளாகச் சூழ்ந்திருங்கள்,' என்று கட்டளையிட்டார். அவைகளும் அவ்வாறே இறைவனைச் சூழ்ந்து நின்றன.

## வெண்தலை தோன்றுதல்

அதன்பின் வேள்வித்தீயில் வெண்தலை ஒன்று தோன்றிற்று. அஃது உலகங்கள்யாவும் அழியும்படி நகைத்துக்கொண்டு எழுந்தது. முனிவர்கள் அதனையுஞ் சிவபெருமான்மேல் விடுத்தார்கள். அதனைத் திருக்கையால் பிடித்துச் சடைமேல் அணிந்தார்.

## உடுக்கை வருதல்

சிவபெருமானை நோக்கி முனிவர்கள் உள்ளங் குலைந்தார்கள். தங்கள் மறைகளையெல்லாம் ஒன்றாக ஏவிச், 'சிவனைக் கொல்லுங்கள்,' என்றார்கள். அவைகள் ஒரு உடுக்கை வடிவமாயின. உலகங்கள் செவிடாகும்படி ஒலித்துக்கொண்டு சிவபெருமான் அண்மையில் வந்தன. சிவபெருமான் அந்த வுடுக்கையை ஒரு திருக்கையால் பற்றினர். 'நம்முடைய காதின் அண்மையில் ஒலித்துக் கொண்டிருப்பாயாக,' என்று கூறி ஏந்திநின்றார்.

## வேள்வித்தீயும் முயலகனும் வருதல்

சினத்தால் அறிவிழந்த தாருகாவன முனிவர்கள் சிவபெருமானுடைய பெருமையை நன்கு உணர்ந்து கொள்ளவில்லை. மேலும் வேள்வியைச் செய்தார்கள். ஒரு முயலகன் எழுந்தது. முனிவர்கள் வேள்வியை நிறுத்தி வேள்வித்தீயை அழைத்தார்கள். இரண்டையும் பார்த்து, 'நம்முடைய ஆற்றலைக்கெடுத்த சிவபெருமானைக் கொல்லுங்கள்,' என்று கூறியனுப்பினர். அவைகள் மிகவும் விரைந்து வந்தன. சிவபெருமான் வேள்வித்தீயை ஒரு திருக்கையில் ஏந்தினர். முயலகனைத் திருவடியால் கீழே தள்ளித் திருவடியை முயலகனுடைய முதுகின்மேலே ஊன்றிக்கொண்டு, தேவர்கள் போற்ற நின்றார்.

## சாபம் இடுதல்

சிவபெருமான் எதற்கும் அழியாது நிற்றலைக்கண்ட தாருகாவன முனிவர்கள் எண்ணற்ற சாபங்களைச், 'சிவன் அழிக' என்று கூறி உரைத்தார்கள். சாபவுரைகளும் பயன்படாது போயின. முனிவர்கள் சினம் நீங்கி ஆற்றல் குறைந்து எச்செயலும் அற்று நின்றார்கள்.

## முனிவர்கள் திருவருள் பெறுதல்

சிவபெருமானுடைய திருவடிக்கீழ் அகப்பட்ட முயலகன் மெல்ல மெல்லத் தலையையெடுத்து அசைத்தான். சிவபெருமான் அவன்மீது நின்று நடித்தார். அதனைத் தாங்க முடியாது உலகங்கள் எல்லாம் நடுங்கின. தாருகாவன முனிவர்களும் நடுங்கி விழுந்தார்கள். அக்கூத்தை நான்முகன் திருமால் முதலிய தேவர்கள் பார்த்துக்கொண்டு மகிழ்ந்து நின்றார்கள். உலகங்கள் அஞ்சுதலைக்கண்டு சிவபெருமான் தம்முடைய திருக்கூத்தை ஒழித்து நின்றார். தம்மை மதியாத தாருகாவனத்து முனிவர்கள் அனைவருக்குஞ் சிவபெருமான் நல்லறிவைக் கொடுத்தருளினார். அவர்கள் சிவபெருமானை வணங்கிப் போற்றினார்கள். தம்முடைய குற்றங்களைப் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் அவர்களைப் பார்த்து, 'மறைமுறைப்படி ஒழுகுங்கள்! தீவினைகளை விட்டுத் தவத்தைச் செய்யுங்கள்!' என்று கூறித் தாம் திருக்கைலையை அடைந்தருளினார்.

## யானைத்தோலைப் போர்த்தல்

சிவபெருமான் யானைத்தோலைப் போர்த்த கதையையுங் கூறுவோம் கேட்பாயாக என்று கூறி மேலும் ததீசி முனிவர் கூறலானார். கயாசுரன் என்பவன் யானைவடிவத்தையுடையவன். அவன் மேருமலையிற் போய் நான்முகனையெண்ணி தவஞ்செய்துகொண்டிருந்தான். நான்முகன் அவ்வவுணனுக்கு முன் தோன்றி, 'நீ விரும்பிய மேன்மை யாது? கூறுவாயாக!' என்றான். கயாசுரன் நான்முகனைப் போற்றி, 'அழியாத ஆற்றலையும் வாழ்நாளையும் எனக்குத் தந்தருளும்'

என்று வேண்டிக்கொண்டான். நான்முகன் நகைத்து, 'நீ வேண்டியவாறே மேன்மையைக் கொடுத்தேன்! சிவ பெருமானுக்கெதிரில் செல்லாதே. செல்வாயாயின் உன்னுடைய மேன்மையழியும்!' என்று கூறி மறைந்தார். கயாசுரன் உலகங்கள் எல்லாவற்றிற்குந் துன்பஞ் செய்யலானான். விண்ணுலகத்திற்குச் சென்று இந்திரனோடு போர்செய்தான். இந்திரனைப் புறங்காட்டி யோடச்செய்தான். தேவர்களுடைய ஊர்களையெல்லாம் அழித்தான். ஐராவதத்தினுடைய வாலைப்பிடித்துச் சுழற்றியடித்தான். திக்குப்பாலர்களைத் துரத்தினான். தன் இனத்தவர்களையும் வதைத்தான். நிலவுலகில் வந்து மக்கட்கூட்டத்திற்குத் துன்பஞ் செய்தான். கொடிய நஞ்சுபோல எங்குந் திரிந்தான். முனிவர்கள் அவனைக்கண்டு அஞ்சி ஓடிக் காசிப் பதியை அடைந்தார்கள். அங்குள்ள மக்களும் முனிவர்களும் அங்குள்ள சிவபெருமானுக்கு முன்சென்று கயாசுரனுடைய துன்பத்தினின்றுந் தம்மைக் காத்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். கயாசுரன் அவ்விடத்தை யடைந்து இடிபோல உரப்பினான். விசுவநாதரிடம் அடைக்கலம் புகுந்தவர்களை அழிக்குமாறு சென்றான். சிவபெருமான் கொடிய வடிவத்தை மேற்கொண்டார். திருமுடி உலகத்தின் உச்சியைத் தொடுமாறு நிமிர்ந்தது. ஆயிரங்கோடி ஞாயிற்றொளியுடன் தோன்றினார். தேவர்களும் முனிவர்களும் மற்றவர்களும் அவ்வடிவைக் காணமுடியாதவர்களாக வருந்தினார்கள். சிவபெருமான் ஒரு முறை நகைத்து மெதுவாக உரப்பினார். அதனால் உலகங்களெல்லாம் நடுங்கின. அவ்வொலியைக் கேட்டநான்முகன் முதலிய தேவர்களும் வெருண்டார்கள். கயாசுரன் நான்முகன் கொடுத்த மேன்மையை மறந்து சிவபெருமானுடன் போர்செய்வதற்கு முயன்றான். சிவபெருமான் ஒரு திருவடியினால் கயாசுரனை உதைத்தார். அவன் கவிழ்ந்து விழுந்தான். சிவபெருமான் அவனுடைய தலையை ஒரு திருவடியாலுந் தொடையை ஒரு திருவடியாலும் மிதித்துக்கொண்டார். இரண்டு கைகளின் நகங்களினாலும் முதுகிற் கிழித்துத் தோலையுரித்தார். அதனைக்

கண்டு உமாதேவியாருங் கலங்கினார். உலகத்துயிர்கள் சிவபெருமானுடைய பேரொளியாற் கண்ணொளி மழுங்கி வருந்தின. சிவபெருமான் அத்தோலைப் போர்த்துக் கொண்டு தம்முடைய பேரொளியை மாற்றியருளினார். உலகத்துயிர்களுடைய அச்சத்தையும் நீக்கியருளினார்.

## நான்முகன் மண்டையோட்டை ஏந்தியது

இனி நான்முகனுடைய மண்டையோட்டை யேந்திய வரலாற்றையுங் கூறுகின்றோம் கேள். முன்னாளில் நான்முகனும் திருமாலும் மேருமலையின் ஒரு கொடுமுடியில் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது பல முனிவர்களுந் தேவர்களும் அவர்களை வணங்கி, 'முழுமுதற்கடவுள் யார்? அதனை எங்கட்குச் சொல்லுங்கள்!' என்று கேட்டார்கள். நான்முகன் சிவபெருமானுடைய மாயத்தில் அகப்பட்டுக் கொண்டான். 'நானே அம் முழுமுதற் பொருள் இதனை நீங்கள் நன்கு உணர்ந்துகொள்ளுங்கள்' என்றான். திருமாலும் அத்தன்மையில் ஈடுபட்டு, 'உன்னைத் தந்த யானே உன்னினுஞ் சிறந்த முழுமுதற் பொருள்!' என்றார். இவ்வாறு இருவருந் தம்முள் மாறுபட்டுப் போரிட்டார்கள். போரை மூட்டியவர்கள் அவ்விடம் விட்டு நீங்கிச்சென்றார்கள் மறையும் பிரணவமும் வெவ்வேறு வடிவங்கொண்டு அவ்விடத்தையடைந்து, 'நீங்கள் வீணாகப் போர் செய்யாதீர்கள் சிவபெருமானே முழுமுதற்கடவுள்!' என்று கூறின. நான்முகனுந் திருமாலும் அதனைக் கேளாமல் போர் செய்தார்கள். சிவபெருமான் அவர்கள் இருவருடைய போரையும் விளக்கத் திருவுள்ளங்கொண்டார். பேரொளிவடிவாகத் தோன்றியருளினார். நான்முகனும் திருமாலும் அப்பேரொளியைக் கண்டு மருண்டார்கள். சிவபெருமான் அவ்வொளியினிடத்திலே தமது திருவுருவைக் காட்டியருளினார். திருமால் மயக்கமடங்கிச் சிவபெருமானை வணங்கினார். மயக்கம் நீங்கப்பெறாத நான்முகன் தனது உச்சித் தலையில் உள்ள வாயினால் சிவபெருமானையும் இகழ்ந்தான். சிவபெருமான் வயிரவக் கடவுளை உண்டாக்கினார். அவ்வயிரவக்கடவுளைப் பார்த்து, நம்

முடைய சிறுவனாகிய நான்முகனுடைய உச்சித்தலை நம்மை யிகழ்ந்தது! அத்தலையைக் கிள்ளிக் கையிலேந்தி மீளவும் அவனுக்குயிரைக் கொடு. முனிவர்களுந் தேவர்களும் இருக்கின்ற இடங்கள்தொறும்போய், அவர்களுடைய உடலிலுள்ள குருதியை ஐயமாக ஏற்கக்கடவாய்! ஏற்கும்பொழுது இறந்தவர்களுக்கு மீட்டும் உயிரைக் கொடு. அவர்களுடைய ஆணவத்தை மாற்று! பிறகு உனக்கமைந்த இடத்திலிருந்து மனிதர்களையுந் தேவர்களையுந் துன்பம்நீங்கப் பாதுகாப்பாயாக!' என்று திருவாய்மலர்ந்தருளினார். பிறகு ஒளியில் மறைந்தார். ஒளியும் மறைந்தது. திருமால் நாம் இங்கே நிற்றல் முறையல்லவென்று சிவபெருமானை வணங்கித் தமது இருப்பிடத்தை யடைந்தார்.

வைரவக்கடவுள் நான்முகனுடைய உச்சித்தலையைக் கிள்ளி ஏந்தினார். பிறிக்கொண்டு எழுந்த குருதிப் பெருக்கு நிலவுலகத்தைச் சூழ்ந்தது. நான்முகன் இறந்தான். வயிரவக்கடவுள் தமது நெற்றிக்கண்ணின் தீயினால் குருதிப்பெருக்குச் சுவறச்செய்தார். நான்முகனுக்கு உயிரைக் கொடுத்தார். அவன் எழுந்து நல்லுணர்வு வரப்பெற்றான். வயிரவக்கடவுளுடைய அடிகளை அன்போடு வணங்கினான். தன்னுடைய குற்றங்களைப் பொறுத்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். தன்னுடைய தலையையுங் கையிலே ஏந்தியருளவேண்டுமென்று போற்றினான். வைரவக்கடவுள், 'அவ்வாறேயாகுக' என்று திருவருள் செய்தார். தேவர்கள் இருக்கும் உலகங்கள்தோறுஞ் சென்று குருதிப்பலி யேற்றார். இறுதியில் வைகுண்டத்தை யடைந்தார். திருமாலிடமுங் குருதிப்பலி யேற்றார். பிறகு தமக்குரிய இடத்தை யடைந்தார்.

## வேற்றுருக்கொண்டது

ஒருநாள் இந்திரன் சிவபெருமானை வழிபடுவதற்காகத் திருக்கைலாய மலைக்குச் சென்றான். அவனுடைய மனத்தில் ஆணவம் இருந்தது. அவன் கோயில் வாயிலை யடைந்தான். சிவபெருமான் ஒரு பூதக் கோலங்கொண்டு

வாயிலில் நின்றார். இந்திரன் மாறுகோலங்கொண்ட சிவபெருமானைப் பார்த்தான். 'நீ மிகப் புதியவனாக விருக்கின்றாய்! இன்றைக்குத்தான் உன்னை இங்குக் கண்டேன். நீ யார்? நான் சிவபெருமானை வழிபடும்பொருட்டு வந்தேன். அவர் எழுந்தருளியுள்ள சமயம் எப்படி?' என்று கேட்டான். மாறு கோலங்கொண்ட சிவபெருமான் யாதொரு பதிலும் கூறாது நின்றிருந்தார். இந்திரன் சினங்கொண்டான். தன்னுடைய குலிசப்படையை அவர்மீது எறிந்தான். அது சிவபெருமான்மேற் பட்டுத் தூளாகி விரைவிலழிந்தது. சிவபெருமான் உருத்திரவடிவத்தைத் தாங்கிப் பெருஞ் சினங்கொண்டார். சிறிது உரப்பி நான்முகன் முதலிய தேவர்களெல்லாரும் அஞ்சும்படி நின்றார். சிவபெருமானுடைய பெருஞ்சீற்றத்தைக்கண்டு இந்திரன் அஞ்சி நடுநடுங்கினான். அவருடைய அடிகளில் வீழ்ந்து, 'எம்பெருமானே! நாயினுங்கடையேனாகிய அடியேனுக்கு உம்முடைய மாயைகள் தெரியுமோ? தீவினையேன் செய்த குற்றங்களனைத்தையும் பொறுத்தருளுதல் வேண்டும்' என்று கூறிப் பல்முறை வேண்டினான். சிவபெருமான் தம்முடைய சினத்தை மேற்குக்கடலில் வீசினார். இந்திரனையனுப்பிவிட்டுத் தாம் தம்முடைய திருக்கோயிலில் எழுந்தருளினார்.

## சலந்தரன்

சிவபெருமானால் மேற்குக்கடலில் வீசப்பெற்ற சினமானது ஒரு குழந்தையாயிற்று. அக்குழந்தையைக் கடலரசன் எடுத்து வளர்த்தான். அக்குழந்தை சிறிது அழுததனால் உலகங்களெல்லாம் செவிடுபட்டன. நான்முகன் அவ்வொலியைக்கேட்டுக் கடலையடைந்தான். வருணன் நான்முகனை ஓர் இருக்கையில் இருக்கச்செய்து குழந்தையை நான்முகனுடைய கையிலே கொடுத்தான். நான்முகன் வாங்கித் தன்னுடைய மடியிலே கிடத்தினான். அக்குழந்தை நான்முகனுடைய நான்குமுகத் தாடிகளையும் இறுகப் பற்றிக்கொண்டு உறங்கியது. நான்முகன் மிக முயன்று தன்னுடைய தாடிகளை விடுவித்துக்கொண்டான்.

பிறகு வருணனைப் பார்த்து, 'இவன் சிவபெருமானுடைய சினத்தில்நின்றுந் தோன்றினான். ஆகையால், ஒரு கடவுளையும் நினையான். அவர்களிடத்திலே ஒரு மேன்மையையும் விரும்பான். இவனோடு எவராலும் போர்செய்தல் முடியாது. இவனெதிரில் யாரும் நிற்கமாட்டார்கள். இவனுடைய வெம்மையால் தீயுந் தீயும். இவனுக்கு நானும் அஞ்சுவேன். திருமாலும் அஞ்சுவார். இந்திரன், கூற்றுவன் முதலியவர்களும் அஞ்சுவார்கள். மண்ணும் விண்ணும் அஞ்சும். இவன் நெடுங்காலம் கொடுங்கோல் செலுத்தி அரசாள்வான். சிவபெருமானையன்றி வேறு எவராலும் இவன் அழிவடையமாட்டான்,' என்று கூறி, அக்குழந்தைக்குச் சலந்தரன் என்று பெயரிட்டுச் சென்றான். வருணன் அச்சிறுவனைச் சிறப்பாக வளர்த்தான். அவன் காளையாகி அவுணர் பக்கத்திலே சேர்ந்தான். திக்குக்களையெல்லாம் வென்றான். இந்திரனுந் தேவர்களும் அஞ்சி நடுங்கி மேருமலையில் ஒளிக்கும்படி கொடுமைகளைச் செய்தான். அசுரத் தச்சனைக்கொண்டு சாலாந்தரம் என்னும் பெயருடைய ஒரு நகரத்தை இயற்றிக்கொண்டு அதிலிருந்து அரசியற்றினான். காலநேமி என்னும் அவுணனுடைய மகளாகிய விருந்தை யென்பவளைச் சுக்கிராச்சாரியாருடைய கட்டளைப்படி திருமணஞ் செய்துகொண்டான். பன்னாள் உலகிலே யாவரும் அஞ்சும்படி வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தான். தேவர்கள் மேருமலையிலே ஒளிந்திருந்தார்கள். நாம் அவர்களோடு போய்ப் போர்செய்வோம் என்று அங்கே சென்றான். தேவர்கள் அஞ்சித் திருமாலை நினைந்து தொழுதார்கள். திருமால் கருடன்மீது ஏறி நொடிப்பொழுதில் அங்கு வந்தார். சலந்தராசுரனோடு இருபதினாயிரம் ஆண்டுகள் கடும்போர் செய்தார். ஆயினும், அவனை வெல்ல முடியவில்லை. அவனுடைய ஆற்றலைப் புகழ்ந்துவிட்டுச் சென்றுவிட்டார். இந்திரனுந் தேவர்களும் அஞ்சிக் கயிலைமலையை அடைந்தார்கள்.

சலந்தராசுரன் தன் பகைவர்களாகிய தேவர்களைத் தேடிக் கயிலைமலைக்குச் சென்றான். சலந்தரன் வருகை

யைத் தேவர்கள் சிவபெருமானிடங் கூறித் தங்களைப் பாது காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

## சலந்தரன் அழிதல்

சிவபெருமான் ஒரு திருவிளையாடலை எண்ணினார். கமண்டலத்தையுங் குடையையும் ஏந்தினார். தடியை ஊன்றினார். நரைதிரை பொருந்திய கிழப்பார்ப்பனக் கோலத்தைக்கொண்டார். இந்திரனுந்தேவர்களும் மறைந்து தம பின்னே வரச் சலந்தரனுக்கு முன்னே சென்றார். அவனைப் பார்த்து, 'நீ யார்? எங்குள்ளாய்? யாரைத் தேடி இங்கு வந்தாய்?' என்று கேட்டார். சலந்தரன் மாறுகோலங்கொண்ட சிவபெருமானைப் பார்த்து, 'நான் நிலவுலகத்திலுள்ளேன்! கடலின் மகன்! சலந்தரன் என்னும் பெயரையுடையவன்! தேவர்களை வென்று சிவ பெருமானையும் வெல்லும்பொருட்டு இங்கு வந்தேன்!' என்று கூறினான்.

சிவபெருமான் நகைத்து, 'நான் சிவபெருமானுக்குப் பக்கத்திலிருப்பவன். அவரோடு நீ போர்செய்ய முயன் றால் இறப்பாய்! பிழைக்க நினைத்தால் உடனே திரும்பிச் சென்று விடு' என்று கூறினார். சலந்தரன் சினமடைந் தான். மாறுகோலங்கொண்ட கடவுளைப்பார்த்து, 'நீர் என்னைச் சிறியவனாக எண்ணினீர்! என்னுடைய வெற்றி களையெல்லாம் உமக்குச் சொல்வதால் யாது பயன்? சிறிதுபொழுது இங்கே நின்று பாரும்! என்னுடைய ஆற்றலை அறிவீர்!' என்று கூறினான்.

மாறுகோலங்கொண்ட சிவபெருமான் சலந்தரனைப் பார்த்து 'நாமும் உன்னுடைய ஆற்றலைப் பார்ப்பதற்காகத் தான் விரும்பினோம்,' என்று கூறினார். தம்முடைய திருவடியினால் நிலத்தில் ஓர் உருளை வட்டத்தைக் கீறினார். சலந்தரனைப் பார்த்து, 'இதனைத் தலையில் தூக்கவைத்துத் தாங்கவல்லையோ?' என்று கேட்டார். சலந்தரன் 'இதனைத் தாங்குவது எனக்கு ஒரு பெரிய செயலன்று' என்று கூறி உருளைப்படையைக் கையில் எடுத்தான். அது

மிகவும் கனமாக இருந்தது. மிகமுயன்று மார்பிலும் தோளிலும் வைத்து இறுதியில் தலைமேல் தாங்கிச் சுமந்தான். அவனுடைய தலைமுதல் உடல்முழுவதும் கிழிந்தது. குருதிப்பெருக்கு எங்கும் பெருகியது. ஆழிப்படை சலந்தரனுடைய உடலை இருபிளவாக்கிச் சிவபெருமானிடஞ் சென்றது. சிவபெருமான் சலந்தரனுடைய படைகளை திருக்கண்பொழிந்த தீயினால் பொடியாக்கித் தமது மெய்வடிவத்தைக் காட்டி நின்றார். இந்திரன் முதலிய தேவர்கள் சிவபெருமானை வணங்கித் துன்பம் நீங்கினார்கள். சிவபெருமான் தமது திருக்கோயிலை யடைந்தார்.

## சலந்தரன் மனைவியும் திருமாலும்

சலந்தரன் மனைவியாகிய விருந்தையைத் திருமால் விரும்பினார். ஒரு தவமுனிவரின் கோலத்தைக் கொண்டார். சலந்தரனுடைய மாளிகைக்கு அருகேயிருந்த பொழிலில் வஞ்சனையாகத் தங்கியிருந்தார். கற்பிற் சிறந்த விருந்தை தன் கணவன் இறந்ததையறியாமல், தன் கணவன் நிலைமையாதாயிற்றோ என்னும் எண்ணத்துடன் அந்தப் பொழிலுக்கு வந்தாள். திருமாலினுடைய காவலாளர்கள் இருவர் அரிமா உருவத்தை யெடுத்து முழங்கிக் கொண்டு விருந்தைக்கு எதிரே வந்தார்கள். விருந்தை அஞ்சித் தவக்கோலம் பூண்டிருந்த திருமாலிடஞ் சென்று அச்சம் நீங்கினாள். தவக்கோல முனிவரைப் பார்த்து, 'சிவபெருமானோடு போர்க்குச் சென்ற என்னுடைய தலைவன் இன்னும் வந்திலன்! அவனுக்கு நிகழ்ந்ததைச் கூறும்!' என்று கேட்டாள்.

அப்போது திருமாலின் காவலாளர்கள் இருவரும் இறந்துபோன சலந்தரனுடைய உடலைக் குரங்கு வடிவம் எடுத்துத் தூக்கிக் கொண்டுவந்து விருந்தையின் முன் போட்டார்கள். கணவன் உடலைக் கண்ட விருந்தை அஞ்சி நடுங்கி மூர்ச்சித்து விழுந்தாள். பலவாறு அரற்றினாள். உணர்வழிந்துகிடந்த விருந்தையைத் தவக்கோல முனிவர் தேற்றி யெழுப்பினார். விருந்தை அவரை

வணங்கிநின்று, 'என்னுடைய கணவனைப் பிழைக்கச் செய்யும்' என்று வேண்டிக்கொண்டாள். திருமால் பிளவுபட்ட சலந்தரனுடைய உடலத்தை ஒன்ருகப் பொருத்தித் தாம் மாயமாக மறைந்து அவ்வுடலினுள்ளே புகுந்தருளினார். காவலாளர்கள் மறைந்து போனார்கள். சலந்தரனுடலிற் புகுந்த திருமால் சலந்தரனாக எழுந்தார். விருந்தை தன் கணவன் பிழைத்தெழுந்தான் என்று எண்ணி மகிழ்ந்தாள். மிகுந்த உவகையுடன் தழுவினாள். விருந்தையும் திருமாலும் இன்பம் நுகர்ந்து அந்தப் பொழிலிலே இருந்தார்கள். ஒருநாள் திருமால் மாயத்தை மறந்து கண்ணுறங்கினார். அப்பொழுது விருந்தை அவரைப் பார்த்துவிட்டாள். திருமால் என்று தெரிந்து வருந்தினாள். தன் கற்பு நிலைகெட்டதே என்று பெரிதும் ஏங்கி யிரங்கினாள். திருமாலுக்குச் சாபம் வழங்கத் தொடங்கினாள்.

## விருந்தை சாபம் இடல்

'முன்பு இங்கே அரிமாவடிவங்கொண்டு வந்தவர்கள் இருவரும் உன்னுடைய ஏவலராவர். அவர்கள் உனக்குப் பகைவர்களாகக் கடவர். நீ நிலவுலகில் ஓர் அரசனாகிக் குரங்குகளோடு அலைந்து திரிவாயாக! என் கணவனைப் போல் வந்து என்னைப் பலநாள் கூடினாய்! உன்னுடைய கற்பிற் சிறந்த மனைவியைப் பகைவர்கள் மாயையினாற் கவர்ந்து கொண்டுபோக அதனால் நீ பெரும் பழியைச் சுமக்கக்கடவாய்!' என்று சாபமிட்டாள். தான் தீயிற் புகுந்து உயிர்விட்டாள்.

## துளசி தோன்றுதல்

திருமால் விருந்தையின் பிரிவைப் பொறுக்க முடியாமல் மிகவும் வருந்தினார். விருந்தை வெந்த சாம்பலிற் புரண்டு பலவாறு புலம்பினார். நான்முகனுந் தேவர்களுந் திருக்கைலையை அடைந்தார்கள். சிவபெருமானிடம் திருமாலினுடைய நிலைமையை விண்ணப்பஞ் செய்தார்கள். உமாதேவியார் அதனைக் கேட்டுப் பேரருள் புரிந்தார். ஒரு

விதையை உண்டாக்கி அவர்களிடங் கொடுத்து, 'இதனைத் திருமாலுக்கு முன்னே கொண்டுபோய் இடுங்கள்' என்றார். நான்முகன் அதனை இருகையையும் நீட்டிப் பெற்றுக்கொண்டு சென்று விருந்தை வெந்த சாம்பலின் மீது விதைத்தான். அது திருமாலுக்கு முன் துளவமாக வளர்ந்து ஒரு பெண் வடிவமாயிற்று. திருமால் அப் பெண்ணைக் கண்டார். விருந்தைமீது கொண்டகாதல் நீங்கிப் புதியபெண்மீது காதல்கொண்டார். தேவர்களும் நான்முகனும் அப்பெண்ணைத் திருமாலுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்கள். திருமால் அப்பெண்ணை யழைத்துக்கொண்டு தம்முடைய நகருக்குச் சென்றார். அவளை முடிமாலையாகவும் அணிந்து கொண்டார்.

## திருமால் ஆழிப்படை பெறுதல்

சலந்தரனைக் கொன்ற ஆழிப்படையைத் திருமால் சிவபெருமானிடம் இருந்து பெறுவதற்கு எண்ணினார். சிவபெருமானுடைய திருவடிகளை ஆயிரம் ஆயிரம் தாமரை மலர்களால் பலநாள் வழிபட்டுக் கொண்டு வந்தார் ஒரு நாள் ஒரு தாமரை மலர் குறைந்தது. தம் கண்ணையே தோண்டித் தாமரை மலருக்குப் பதிலாக அடிகளில் இட்டார். திருமாலின் அன்பிற்குகந்த சிவபெருமான் அவ்வாழிப் படையைத் திருமாலுக்கு வழங்கியருளினார்.

## காளையூர்தி

இரண்டாயிரம் நான்கு ஊழிகள் முடிந்தால் நான் முகனுக்கு ஒரு நாளாகும். அந்த நாள் முப்பது கொண்டது ஒரு திங்களாகும். திங்கள் பன்னிரண்டு கொண்டது ஓர் ஆண்டாகும். இப்படி நூறு ஆண்டுகள் கழிந்தால் நான்முகனுடைய ஆயுள் நீங்கும். அது திருமாலுக்கு ஒரு நாளாம். திருமாலினுடைய ஆயுளும் இவ்வாறே கழியும். அப்பொழுது உயிர்களும் உலகங்களும் அழியும். எல்லா உலகங்களையும் தீயானது சூழ்ந்து உண்ணும். உலகமெல்லாஞ் சுடலையாய்த் தூய்மையுடையதாக விளங்

கும். அந்தச் சமயத்திலே அறிவு முதல்வராகிய சிவ பெருமான் உமையம்மையார் காணத் திருக்கூத்தாடி யுலவுவார். இத்தகைய சமயத்தில்அறக்கடவுள் அஞ்சிக் காளையின் வடிவத்தையெடுத்துச் சிவபெருமானுடைய திருமுன்புவந்து அவரைப்போற்றி, 'அடியேன் இறக்குந் தன்மையை மாற்றித் தேவரீருக்கு ஊர்தியாகும் பேற் றைத் தந்தருளும்' என்று வேண்டிக்கொண்டது.

சிவபெருமான் எருதாகவந்து போற்றிய அறக் கடவுளுக்கு, இறவாத தன்மையையும் தம்மைத் தாங்கும் பேற்றையும் ஒப்பில்லாத ஆற்றலையும் அன்பையும் மெய் யுணர்வையும் தந்து அதற்கு அருள்செய்து ஊர்தியாகக் கொண்டருளினார். அந்நாள் முதல் சிவபெருமான் காளை யின்மீது ஏறுகின்றார். சிவபெருமான் முப்புரத்தை யெரித் தருளிய காலத்தில் திருமால் காளையுருவங்கொண்டு சிவ பெருமானைத் தாங்கியருளினார். ஆகையால் காளையின் மீது ஏறுதல் சிவபெருமானுக்கு இழுக்கன்று.

## நஞ்சையுண்டது

'சிவபெருமான் நஞ்சையுண்டார்' என்று கூறினாய். அதன் காரணத்தையுங் கூறுகிறோம் கேள். தேவர்கள் இறவாமலிருக்கக் கருதினார்கள். அதன்பொருட்டு அமு தத்தை யெடுத்து உண்பதற்குப் பாற்கடலைக் கடைந் தார்கள். கடலைக் கடைதற்கு மந்தரமலையை மத்தாகவும், திங்களைக் கடைத்தறியாகவும், வாசுகியை நாணாகவும் பயன்படுத்தினார்கள். ஒரு புறத்தில் தேவர்களும் மற்றொரு புறத்தில் அவுணர்களுமாக நின்று இழுத்துக் கடைந்தார் கள். கயிறாக அமைந்த வாசுகி பொறுக்கமுடியாது மிகுந்த துன்பத்தை யடைந்து பதைபதைத்தது. ஆயிரம் வாய் களினின்றும் நஞ்சை வெளிப்படுத்தியது. பாற்கடலுந் தன்னிடமிருந்த நஞ்சை வெளிப்படுத்தியது. நஞ்சுகளின் கடுமை யாண்டும் பரவியது. அவுணர்களும் நான்முகன் முதலிய தேவர்களும் நஞ்சுக்கு அஞ்சி ஓடலானார்கள். திருமால் அந்நஞ்சைக்காப்பதற்கு முயன்றார். எதிரே

சென்றார். அந் நஞ்சுகள் வெகுண்டு திருமாலைத் தாக்கின. திருமாலின் செந்நிறம் மாறிக் கருநிறம் உண்டாகியது. அவராலும் நஞ்சுக்குமுன் நிற்க முடியவில்லை. அனைவருந் திருக்கைலைமலையை அடைந்தார்கள். நந்திதேவர் சிவபெருமான் கட்டளைப்படி நான்முகனையும் திருமாலையும் சிவபெருமானிடம் அனுப்பினார். அவர்கள் இருவரும் சிவபெருமானைக்கண்டு வணங்கிப்போற்றிப் புகழ்ந்தார்கள். சிவபெருமான் திருமாலைப் பார்த்து, 'உன்னுடைய உடல் கருமையாகிய காரணம் யாது?' என்று கேட்டார். திருமால் நிகழ்ந்ததைக் கூறினார். அந்த நஞ்சினுடைய கொடுமையைமாற்றி அருள் புரிய வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். தேவர்கள் திக்குப்பாலகர்கள் அவுணர்கள் ஆகியோரும் வெளியே இருந்தபடியே வணங்கிப் புகழ்ந்தார்கள். சிவபெருமான் அனைவரையும் உள்ளே அழைக்குமாறு கட்டளையிட்டருளினார். அவர்களும் உள்ளேசென்று சிவபெருமானைப் போற்றிப்புகழ்ந்தார்கள்.

சிவபெருமான் தம்மிடம் தொண்டு செய்திருக்கும் சுந்தரர் என்பவரைப் பார்த்து, 'அந்தக் கொடியநஞ்சை இங்கே கொண்டு வருவாயாக' என்று கட்டளையிட்டருளினார். சுந்தரரும் சிவபெருமானை வணங்கிச் சென்றார். எங்கும் பரந்த நஞ்சைப் பற்றிக்கொண்டுவந்து சிவபெருமானிடங் கொடுத்தார். சிவபெருமான் அந்த நஞ்சினையுண்டு கண்டத்திலே நிறுத்தியருளினார். தேவர்களனைவரும் மிகுந்த மகிழ்ச்சியை யடைந்தார்கள்.

பிறகு சிவபெருமான் தேவர்களைப் பார்த்து, 'இன்னும் பாற்கடலைக் கடையுங்கள் அமுதந்தோன்றும்' என்று கட்டளையிட்டருளினார். அனைவருந் திரும்பிச் சென்று மீண்டும் பாற்கடலைக் கடைந்தார்கள். அமுதமும் வேறு பல பொருள்களுந் தோன்றின. சிவபெருமான் நஞ்சையுண்ட வரலாறு இதுவாகும். அவர் கங்கையைத் தாங்கிய வரலாற்றையுங் கூறுவோம் கேட்பாயாக.

## கங்கையைத் தாங்கியது

ஒருநாள் சிவபெருமான் திருக்கைலை மலையிலுள்ள பொழில் ஒன்றிலே அமர்ந்திருந்தார். உமாதேவியார் யாதும் பேசாமல் சிவபெருமானுக்குப் பின் புறமாக வந்தார். விளையாட்டாகச் சிவபெருமானுடைய திருக்கண் களைத் தமது திருக்கைகளினாலேமூடினார். அதனால் உயிர்கள் எல்லாம் வருத்தமடையும்படி உலகங்கள் முற்றும் இருண் டன. அம்மையார் சிவபெருமானுடைய கண்களை மூடிய கணப்பொழுதில் உலகத்துயிர்கட்குப் பல ஊழிக்காலங்கள் ஆயின. சிவபெருமான் உயிர்களுக்குத் திருவருள் செய்ய எண்ணினார். தம்முடைய நெற்றியிலே ஒரு திருக்கண்ணை யுண்டாக்கினார். அதனால் எங்கும் பரவியபேரிருளை மாற்றி னார். கதிரவன் முதலாயினோர்க்கும் பேரொளியைக் கொடுத்தார். உயிர்கள் களிப்படைந்தன. சிவபெருமா னுடைய செயலை உமாதேவியார்கண்டு அச்சமடைந்தார். திருக்கண்களை மூடிய திருக்கைகளையெடுத்தார். அச்சத்தி னாலே விரல்களினின்றும் வியர்வை தோன்றியது. திருக் கைகளை யுதறினார். அவ்வியர்வை பத்துக் கங்கைகளாய்க் கடல்களைப் போல எங்கும் பரவியது. திருமால் நான் முகன் முதலிய தேவர்களும் பிறருஞ் சிவபெருமானைத் தொழுது கங்கைப்பெருக்கைத் தாங்கிக் காத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் அக்கங்கையைத் தமது சடையிலுள்ள ஒரு மயிரின்மீது விடுத்தார். அதனால் கங்கைப் பெருக்கு அடங்கியது. தேவர்கள் பிறகு சிவபெருமானிடமிருந்து அக்கங்கையில் சிறிதைத் தாம் வாங்கிச் சென்றார்கள். நான்முகன் உல கத்தையடைந்த கங்கைதான் பிறகு பகீரதனால் நிலவுலகிற் குக் கொண்டுவரப்பட்டது.

## உமாதேவியாரைப் பாகத்தில் வைத்திருத்தல்

சிவபெருமான் உமாதேவியாரைப் பாகத்தில் வைத் திருத்தலைப் பற்றியுங் கூறுவோம் கேட்பாயாக! முன்னே ஒரு நான்முகன் தோன்றினான். அவன் பல உயிர்களையும்

படைக்கக் கருதினன். முதலிலே சனகர் முதலாகிய நான்கு மக்களையும் உண்டாக்கினன். அவர்கள் தவஞ் செய்யப் போய்விட்டார்கள். நான்முகன் திருமாலிடஞ் சென்று தன் குறையைக் கூறினன் திருமால் நான்முகனை யழைத்துக்கொண்டு திருக்கைலைமலையை அடைந்தார். சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கினர். நான்முகனுடைய படைப்புத் தொழில் கைகூடி வராமையைக் கூறினர். தனித்தவராக அமர்ந்துள்ள சிவபெருமான் தமது இடத்தோளை நோக்கினர். அதினின்றும் உமா தேவியார் தோன்றியருளினர். சிவபெருமான் அவ்வுமா தேவியாரை இடப்பாகத்தில் அமர்த்தினர். பிறகு 'படைப்புத்தொழில் இனிமேற் கைகூடிவரும்,' என்று திருவாய் மலர்ந்தருளினர். நான்முகன் முதலியோர் மகிழ்ந்து திரும்பிச் சென்றார்கள். பிறகு நான்முகனுடைய படைப்புத் தொழில் கைகூடியது. இவ்வாறு சிவபெருமான் நான்முகனுடைய படைப்புத் தொழில் கைகூடுமாறு தம்முடைய அருளையே ஒரு பெண்ணாகத் தந்து அவ்வருளாற்றலோடு கூடியிருத்தலை நீ உணராமல் பேசினய். இனிமேல் சிவபெருமான் ஒரு மகனைப்பெற்ற செய்தியை யுஞ் சொல்வோம் கேட்பாயாக!

## கச. யானைமுக அவுணன்

### அசுரமன்னனும் சுக்கிராச்சாரியாரும்

ஒருகாலத்தில் இந்திரன் படைகளோடுசென்று அசுர மன்னனைத் தோற்கடித்தான். புறங்காட்டிய அசுர மன்னன் மனம்புழுங்கி வாடி வருந்தினன். தன் குருவாகிய சுக்கிராச்சாரியாரை அடைந்து வணங்கினன். அவரைப் பார்த்து, 'இந்திரன் படைகளோடுவந்து என்னுடன் போர் செய்தான் யான் அவனுடன் போர் செய்து தோற்றுப்போனேன். நம்முடைய வழியிலிருந்த வீரர்கள் யாவரும் இறந்தார்கள். நாம் உயர்வடைவதற்கு வழியாது? கூறுவீராக,' என்று வேண்டிக்கொண்டான்.

சுக்கிராச்சாரியார் அசுர மன்னனைப் பார்த்து, 'மாகதர் என்னும் ஒரு முனிவர் தவஞ் செய்துகொண்டிருக்கிறார். அவரிடத்தே ஓர் அவுணக்கன்னிகையை அனுப்புவாயாயின் ஒரு மகன் தோன்றுவான். அவனால் அவுணகுலம் சிறப்படையும்,' என்று கூறினார். அசுர மன்னன் அவ்வாறே செய்வதாகக்கூறி ஆசிரியரிடம் விடை பெற்றுக்கொண்டு சென்றான்.

விபுதை என்பவள் அவுணகுலத்தில் பிறந்தவள். அழகிற் சிறந்தவள். அவளை அரசன் அழைத்து, 'மேரு மலையின் தென்பக்கத்தில் மாகதர் என்னும் ஒரு முனிவர் தவஞ்செய்துகொண்டிருக்கிறார். நீ அவரிடத்திலே சென்று அவருடைய குறிப்பறிந்து நடந்து அவருடைய தவத்தைக் கெடுத்து அவரைக் கூடுதல் வேண்டும். அவ்வாறு செய்வாயாகில் உன்னிடத்திலே ஒருமகன் பிறந்து நம்முடைய குலத்தின் குறைகளையெல்லாம் நீக்கி நமக்குச் சிறப்புண்டாக்குவான். ஆகையால் நீ தவறாமல் அம்முனிவர்பாற் செல்லுதல்வேண்டும,' என்று கூறினான்.

## விபுதையும் மாகதமுனிவரும்

அவுணமன்னன் வேண்டுகோளுக்கு விபுதை உடன்பட்டாள். மாகதமுனிவர் மாதவம் புரியும் இடத்திற்குச் சென்று அவரைக் கண்டாள். அவர்புரியும அருந்தவத்தைப் பார்த்து மிகுந்த வியப்படைந்தாள். எவ்வாறு இம்முனிவருடைய கொடுந் தவத்தைக் கெடுத்துச் சேர்வது என்று எண்ணமிட்டாள். அம்முனிவருக் கெதிரே தானுந் தவஞ்செய்துகொண்டிருந்தாள்.

ஒரு களிறானது பிடியோடு சேர்க்கை செய்துகொண்டிருந்தது. மாகதமுனிவர் அதனைக் கண்டார். தவத்தை மறந்தார். இன்பவலையிற் சிக்கினார். இறந்தவர்போல மயங்கினார். எதிரே விபுதையைக் கண்டார். மகிழ்ச்சி கொண்டு அவளிடஞ் சென்றார். அவள் நமது எண்ணம் முடிந்தது என்று களிப்படைந்தாள். விரைந்தெழுந்து முனிவரை வணங்கினாள். அவளுடைய உறுப்புகளை

யெல்லாம் முனிவர் நன்முகப் பார்த்துக் காமப்பித்துக் கொண்டார். இருவரும் யானைவடிவெடுத்து இன்பம் நுகர்ந்தனர்.

## யானைமுக அவுணன் பிறத்தல்

அவர்களுடைய சேர்க்கையால் யானைமுகத்தோடு கூடிய ஓர் அவுணன் பிறந்தான். பிடி யானையாகிய விபுதையின் மயிர்களில் நின்றும் கணக்கற்ற அவுண மள்ளர்கள் கையிற் படைக்கலங்களோடு தோன்றினார்கள். யானைமுகன் கையின்கண் கேடகத்தோடும் வாளோடும் அந்தப் படையுடன்கூடி ஆரவாரித்தான். தாயுந்தந்தையும் அவர்களைக்கண்டு அஞ்சியோடி முன்னைய வுருவங்களைக் கொண்டார்கள்.

## மாகதமுனிவர் நல்லுணர்வடைதல்

மாகதமுனிவருக்குப் பழைய உணர்வு தோன்றியது. அவர் மிகவும் இரங்கி யேங்கினார். ஊழ்முறையை உன்னி வருந்தினார். தன்முன் நின்ற விபுதையைச் சினத்துடன் பார்த்தார். "நீ எக்குலத்தவள்? எதனை எண்ணி இங்கு வந்தாய்?" என்று கேட்டார். அவள் உள்ளதை உரைத்தாள். முனிவர் துன்பக்கடலுள் ஆழ்ந்தார். விபுதையை அனுப்பிவிட்டுத் தாம் மேலுந் தவத்தைச் செய்யத்தொடங்கினார். விபுதை அசுர மன்னனிடஞ் சென்று நிகழ்ந்தவைகளைச் கூறினாள். அவன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான்.

## யானைமுகனுஞ் சுக்கிராச்சாரியாரும்

யானைமுகன் தன் படைகளோடு எல்லா வுலகங்களிலுஞ் சுற்றித்திரிந்தான். பல உயிர்களைக் கொன்று தின்றான். முனிவர்களுந்தேவர்களும் வருந்தினர். யானைமுகனுடைய தன்மைகளை அசுரமன்னன் அறிந்தான். சுக்கிராச்சாரியாரை அவனிடம் அனுப்பினான். சுக்கிராச்சாரியார் போய் யானைமுகனைக் கண்டார். "நான் உன் குலத்திற்கு ஆசிரியனாகவுள்ளேன். மறைகளின் நுண்ணிய பொருள்களையெல்லாம் உணர்ந்துள்ளேன். அசுர

மன்னன் என்னை உன்னிடம் அனுப்பினான். நான் உனக்கு நல்ல வழிகளைக் கூறும்படியாக இங்கு வந்தேன்" என்று கூறினார். யானைமுகன் சுக்கிராச்சாரியாருடைய அடிகளை வணங்கினான். அவனுடைய துணைவர்களும் வணங்கினார்கள்.

சுக்கிராச்சாரியார் யானைமுகனைப்பார்த்து, "நீ உயர்ந்த தவங்களைச் செய்யவில்லை. சிவபெருமானை அறியவில்லை. பகைவர்களுடைய தன்மையையுந் தெரிந்துகொள்ளவில்லை. இவ்வுடல் நிலையற்றதென்பதையும் எண்ணவில்லை. உன்னுடைய நாள்கள் பல வீணாகக் கழிந்துவிட்டன. நீ அறிவில்லாதவனாகவிருக்கின்றாய். இந்த உலகிலே எல்லா நன்மைகளையும் எய்திச் சிறப்படைவதற்குத் தவந்தான் உயர்ந்த நல்ல துணையாகும். ஆகையால், நீ சிவபெருமானைக்குறித்து மிகப்பெரிய தவத்தைச் செய்வாயாக! நீ விரும்புகின்ற மேன்மைகளையெல்லாம் அவர் தந்தருள்வார். அதன்பின் தேவர்கள் உன் குற்றேவலைச் செய்வார்கள். நீ ஒரு பெரிய அரசனாக இருப்பாய்," என்று சுக்கிராச்சாரியார் கூறினார்.

யானைமுகன் சுக்கிராசாரியாரை வணங்கினான். "முன்பே இவைகளை யாரும் எனக்குக் கூறவில்லை. நீர் கூறியபடி நான் தவத்தைச்செய்கிறேன். அதனைச் செய்வது எவ்வாறு என்பதைக் கூறியருளும்," என்று வேண்டினான். தவஞ்செய்தற்குரிய முறைகளையெல்லாம் சுக்கிராச்சாரியார் யானைமுகனுக்குக் கூறினார். "மேருமலையிலே சென்று தவஞ்செய்வாயாக," என்றார். யானைமுகன் அவருடைய அடிகளை வணங்கித் தவஞ்செய்வதற்குச் சென்றான். சுக்கிராச்சாரியார் அசுரமன்னனிடஞ் சென்று நிகழ்ந்தவைகளைக் கூறினார். அசுரமன்னன் மகிழ்ச்சியடைந்தான். இந்திரனுந்தேவர்களும் இதனையறிந்து துன்பமடைந்தார்கள்.

## யானைமுக அவுணன் தவம்

யானைமுகன் மேருவின்சாரலையடைந்தான். ஆசிரியர் கூறிய முறைப்படி ஐம்புலன்களையும் அடக்கினான். ஐந்

தெழுத்தையும் எண்ணிச் சிவபெருமானைக் குறித்துப் பெருந்தவஞ் செய்தான். ஆயிரம் யாண்டுகள் புற்களையும் இலைகளையும் உண்டு தவஞ்செய்தான். ஆயிரம் யாண்டுகள் சிறிது நீரைக் குடித்துத் தவஞ்செய்தான். ஆயிரம் யாண்டுகள் காற்றை நுகர்ந்து தவஞ்செய்தான். இவ்வாறு மூவாயிரம் யாண்டுகள் தவஞ்செய்து உயிர்க் காற்றை யெழுப்பி மூலத்தீயை வளர்த்து விந்துத்தானத்திலுள்ள அமுதத்தைப் பருகினான். யானைமுக அவுணன் தவஞ் செய்தலைக் கண்டு தேவர்கள் வருந்தினார்கள். பிறகு யானைமுக அவுணன் ஐந்து தீக்களின் நடுவில் நின்று பதினாயிரம் யாண்டுகள் தவஞ்செய்தான். சிவபெருமான் யானைமுகனுக்கு அருள் செய்தார். அவனுடைய உடல் நெருப்பிற் காய்ந்த இரும்புபோலக் குற்றம் நீங்கி விளங்கியது.

சிவபெருமான் காளையூர்தியின்மீது யானைமுக அவுணனுக்கு முன் வெளிப்பட்டருளினார். யானைமுகன் சிவபெருமானை வணங்கிப் போற்றினான். சிவபெருமான் வேண்டிய மேன்மைகளைப் பெற்றுக்கொள்ளுமாறு கூறினார். திருமால் நான்முகன் முதலிய தேவர்களைத் தோற்கடிக்கவேண்டுமென்றும் எத்தகைய படைக்கலங்களாலும் இறவாதிருத்தல்வேண்டுமென்றும் எல்லா வுலகங்களிலும் தன்னாணை செல்லவேண்டும் என்றும், சூழ்ச்சியால் இறந்து போனாலும் பிறவியுள் புகாதிருத்தல் வேண்டுமென்றும் வேண்டினான். சிவபெருமான் அவ்வாறே கொடுத்தருளினார். அசுரமன்னனும் சுக்கிராச்சாரியாரும் யானைமுக அவுணனிடம் வந்து வாழ்த்துரைகள் கூறினார்கள்.

## மதங்கமாபுரம்

மேன்மைகளைப் பெற்ற யானைமுக அவுணன் இந்திரனையும் மற்றைத் தேவர்களையும் வென்றான். நிலவுலகத்திற்கு வந்தான். சம்புத்தீவின் தென்திசையில் ஒரு நகரத்தை யுண்டாக்குமாறு அவுணத் தச்சனுக்குக் கட்டளையிட்டான். அவன் அவ்வாறே செய்து அந்நகருக்கு

மதங்கமாபுரம் என்று பெயரிட்டான். யானைமுகன் அந்நகரத்தைக் கண்டு வியப்படைந்தான். அசுரமன்னன் அசுரர்கள் ஆகியவர்களோடு அந்நகரத்தில் குடியேறினான். அசுரேந்திரனுடைய மகளாகிய விசித்திரகாந்தி என்பவளையும் மற்றும் பல பெண்களையும் திருமணஞ் செய்துகொண்டான் தேவர்கள் அவுணர் முதலானோர் வந்து வணங்கவும் ஏழுலகங்களிலும் தன் கொடுங்கோலும் ஆணையும் செல்லவும், காமதேனு சங்கநிதி முதலியன தன் ஏவல் கேட்கவும் அரசு செய்திருந்தான். அவுண மன்னனும் சுக்கிராச்சாரியும் அவனுக்கு அமைச்சர்களாக விருந்தார்கள்.

## குட்டுக் கட்டளை

யானைமுகன் ஒருநாள் இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்து, "நீங்கள் நம்முன் வரும்பொழுதெல்லாம் உங்கள் கைகளால் தலைகளில் மும்முறை குட்டிக்கொள்ளுதல் வேண்டும். பின் கைகளால் காதுகளை மாறிமாறிப் பிடித்துக்கொண்டு தாழ்ந்தெழுதல் வேண்டும். அதன்பின் பணிவிடைகளைச் செய்யத் தொடங்குதல் வேண்டும்," என்று கட்டளையிட்டான். இந்திரனுந் தேவர்களும் யானைமுகனுடைய கட்டளைகளை மறுத்தற்கு அஞ்சினார்கள். அவன் சொன்னபடியே செய்து பிறகு ஏவலைச் செய்யலானார்கள்.

## தேவர்கள் சிவபெருமானைக் காண்டல்

ஒருநாள் இந்திரன் தன் துன்பங்களை நான்முகனுக்குந் திருமாலுக்கும் உரைத்தான். அவர்கள் இந்திரனையுந் தேவர்களையும் அழைத்துக்கொண்டு திருக்கைலைமலைக்குச் சென்றார்கள். எல்லாருஞ் சிவபெருமானை வணங்கிப் போற்றினார்கள். யானைமுக அவுணனுடைய தொல்லைகளைக்கூறி அவைகளைப் போக்கியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் திருமால் முதலிய தேவர்களைப் பார்த்து, "நாம் ஒரு புதல்வனைப் பெற்று உங்களுடைய துன்பங்களை நீக்கியருள்வோம்; நீங்கள் வருந்துதல் வேண்டா,"மென்று கூறியருளினார்.

அனைவருஞ் சிவபெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பினார்கள்.

## யானைமுகக்கடவுள் தோற்றம்

ஒருநாள் சிவபெருமான் உமாதேவியாரைப் பூம் பொழிலுக்கு அழைத்துக்கொண்டு சென்றார். இருவரும் ஒரு மண்டபத்துக்குச் சென்றார்கள். உமாதேவியார் அம் மண்டபத்தின் கண்ணுள்ள ஓவியங்களைப் பார்த்துக் கொண்டு சென்றார். மண்டபத்தின் நடுவே பிரணவ எழுத்து இரண்டுருவாய் யானைகளின்வடிவாய்த் தோன்றி உமாதேவியார் காணுமாறு சேர்க்கையில் முயன்றன. அதனை உமாதேவியார் கண்டார். அப்பொழுது ஐந்து திருக்கைகளையும், மூன்று திருக்கண்களையும், தொங்கு கின்ற வாயினையும், திங்களையணிந்த சடையினையும் மும் மதங்களைப் பொழியும் யானைமுகத்தினையும் உடைய ஒரு புதல்வர் தோன்றியருளினார். அவர் மெய்யன்பர்களுடைய அறிவுக்கறிவானவர். எங்கும் நிறைந்தவர். எவராலும் அறியப்பெறாதவர். எவராலும் போற்றத்தக்கவர். நான் மறைப் பொருளாகவுள்ளவர். அருளையே வடிவமாகக் கொண்டு தோன்றியவர். அப்புதல்வர் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கிப் போற்றினார்.

சிவபெருமானும் உமாதேவியாரும் அப் புதல்வரைக் கண்டு மகிழ்ந்தார்கள். "மக்கள் ஒரு செயலைச் செய்வ தற்குத் தொடங்குமுன் உன்னை வழிபட்டுப் போற்று வார்களாயின், அவர்களுடைய செயல்களுக்கு எத்தகைய இடையூறும் நிகழாமல் முற்றுவிப்பாயாக! நான்முகன் திருமால் முதலிய தேவர்களுக்கும், மற்றைய உயிர்களுக் கும் நம்முடைய பூதக்கூட்டங்கட்குந் தலைவனாக இருப்பா யாக! யானைமுகன் என்னும் அவுணனைக் கொல்வாயாக! திருமாலடையுஞ் சாபத்தை நீக்குவாயாக!" என்றுகூறி அவருக்குப் பூதப்படைகளையும் உண்டாக்கிக் கொடுத் தருளினார். இருவருந் திருக்கோயிலை யடைந்தார்கள். யானைமுகக்கடவுள் திருக்கோயிலின் வாயிலிற் போய் எழுந்தருளி யிருந்தார்.

## சூதாட்டமும் பொய்யும்

ஒருநாள் திருமால் திருக்கைலைமலைக்குச் சென்றார். சிவபெருமானைக் கண்டு போற்றினார். ஒரு திருவிளையாடலைச் சிவபெருமான் எண்ணினார். உமாதேவியைப் பார்த்து, "நாம் இருவரும் சூதாடுவோம். நீ நமக்குத் தோற்றால் அணிந்திருக்கின்ற அணிகலன்களெல்லாவற்றையும் நமக்குக் கொடுத்துவிடு. நாம் தோற்றால் நம்முடைய திங்கள் பாம்பு முதலிய அணிகலன்களை எடுத்துக்கொள்," என்றார். உமாதேவியார் இணங்கினார். திருமாலை நடுநிலைமை கூறுவோராக அமைத்தார்கள். இருவருஞ் சூதாடினார்கள். சிவபெருமான் தோற்றார். ஆயினும் அவர் திருவுளம் எதையோ எண்ணியது. அவர் உமையைப் பார்த்து, "நீ நமக்குத் தோற்றாய்; ஒப்புக்கொண்டபடி அணிகலன்களைத் தருவாயாக!" என்றார். உமாதேவியார் திருமாலைப் பார்த்து, "நீ நடுநிலைமையாளனாக இருந்தாயே யார் வென்றது யார் தோற்றது என்பதைக் கூறுவாயாக," என்றார். "வென்றவர் சிவபெருமானே," என்று திருமால் ஒரு பொய்யைச் சொன்னார்.

## திருமால் சாப மேற்றல்

திருமால் கூறியதைக்கேட்ட உமாதேவியார், "நீ நல்ல உண்மையைச் சொன்னாய். உன்திறம் மிகவும் நன்று. முழுமுதற்கடவுள் பொய்யைச் சொன்னாலும் நீயுஞ் சொல்லலாமா? உன் உடலைப்போல உள்ளமுங் கருமையாகியதோ? வஞ்சகமாக இந்தப் பொய்யைச் சொன்ன நீ பாம்பாகக் கடவாய்," என்று சாபமிட்டார். உடனே திருமாலுக்குப் பாம்புருவம் உண்டாயிற்று. அவர் வருந்திச் சிவபெருமானுடைய அடிகளை வணங்கினார். "இவ்வடிவம் அடியேனுக்கு எப்பொழுது நீங்கும்?" என்று கேட்டார். சிவபெருமான் திருமாலைப் பார்த்து, "நீ நம்மாலே இந்த வடிவத்தைப் பெற்றாய். நாம் உனக்கு வந்த துன்பத்தை நீக்குகின்றோம். தென்னாட்டிலே ஆலங்காடு என்று ஓர் இடம் இருக்கிறது. அங்கே ஓர் ஆலமரம்

இருக்கின்றது. அம்மரத்தின் அடியிற் பொந்து ஒன்று இருக்கின்றது. நீ அப்பொந்திலிருந்து தவஞ் செய்து கொண்டிரு. நம்முடைய மகனாகிய யானைமுகன் அங்கே வருவான். அவனால் உன்னுடைய சாபம் நீங்கும்,'' என்று கூறியருளினார். திருமாலும் அவ்வாறே ஆலமரப் பொந்தை யடைந்து தவஞ் செய்திருந்தார்.

## யானைமுகன் அழிவு

யானைமுகக்கடவுளை இந்திரன் முதலிய தேவர்கள் வணங்கிப் போற்றினார்கள். யானைமுகக்கடவுள் அவர்களுக்குத் திருவருள் செய்தார். "உங்களுடைய குறை யாது கூறுங்கள்?'' என்று திருவாய் மலர்ந்தருளினார். இந்திரனுந் தேவர்களும் யானைமுக அவுணனுடைய தொல்லைகளை யெல்லாங் கூறினார்கள். யானைமுகக்கடவுள் "நாம் அந்த அவுணனைக் கொன்று உங்கள் துன்பங்களைத் தொலைப்போம்,'' என்று கூறினார்.

யானைமுகக்கடவுள் யானைமுக அவுணனோடு போருக்குப் புறப்பட்டார். அசலன் என்பவனுடைய தோளின் மீது எறியருளினார். பூதர்கள் யானைமுகக்கடவுளைச் சூழ்ந்து போருக்குப் புறப்பட்டார்கள். பல வகையான போர்க் கருவிகள் முழங்கின. படைகளுடன் மதங்கமாபுரியை நெருங்கினார். ஒற்றர்கள் விரைந்து சென்று யானைமுக அவுணனிடஞ் செய்தி கூறினார்கள். அவன் சினங் கொண்டான். இருக்கையைவிட்டுப் போருக்குப் புறப்பட்டான். பலவகைப் படைக்கலங்களோடு தேரின் மீது புறப்பட்டு யானைமுகக்கடவுளை யெதிர்த்தான். பூதப் படைகளும் அவுணப்படைகளும் கைகலந்து போர் செய்தன. அவுணர்கள் பூதப்படைகளுக்கு ஆற்றாமல் புறங்கொடுத் தோடினார்கள். யானைமுக அவுணன் (கயமுகாசுரன்) வில்லை வளைத்தான். கணைமழைகளைச் சொரிந்து பூதர்களுடைய உடம்பைத் தொளைத்தான். பூதர்கள் ஆற்றலிழந்து ஓடினார்கள்.

யானைமுகக்கடவுள் யானைமுக அவுணனுக்கு முன்னே சென்றார். அவன் தன் பக்கத்தில் நின்ற தூதுவர்களைப் பார்த்து, "இங்கே என்னோடு போர் செய்தற்கு வரும் இவன் யாவன்?" என்று கேட்டான். தூதுவர்கள் யானைமுக அவுணனைப்பார்த்து, "இவர் சிவபெருமானுடைய மூத்தபிள்ளையாவர்," என்று கூறினார்கள். அவன் தன்னுடைய தேரை யானைமுகக் கடவுளுக்கு நேரே செலுத்தச் செய்து அவரை நெருங்கினான், யானைமுகக் கடவுளைப் பார்த்து, "ஓ புதல்வனே யான்செய்த சிறந்த தவத்தைப் பார்த்து, உன் தந்தை எனக்குக்கொடுத்த மேன்மைகளை நீ அறிந்துகொள்ளவில்லை. உன்னுயிரைப் பாதுகாத்துக் கொண்டு பிழைத்துப்போ, என்னோடு போர்செய்வதற்கு உனக்குத் தகுந்த ஆற்றல் இல்லை. என்னோடு போர்செய்யத் தொடங்கிய யாவரும் இறந்தொழிந்தார்களே யல்லாமல், என்னை வென்றவர் எவரும் இலர். தேவர்களாலும் மனிதர்களாலும படைக்கலங்களாலும் நான் இறக்கமாட்டேன். இது நான் பெற்ற மேன்மையின் இயல்பாகும். இந்திரன் முதலானவர்களுடைய துன்பத்தைப் போக்குவதற்காக என்னுடன் போர்செய்யவந்த உன்னைவென்று அவர்களுடையஉயிரையும் பருகுவேன். என்னை வெற்றிகொள்ள வல்லையாயின் போருக்கு வருவாயாக!" என்று கூறினான்.

யானைமுகக்கடவுள் அவுணன் கூறியவைகளைக்கேட்டு, "ஓ அவுணனே! உனக்கு எல்லா மேன்மைகளையுங் கொடுத்த சிவபெருமானே உன்னுயிரைக் கவர்ந்து தேவர்களுடைய துன்பங்களை நீக்குமாறு கட்டளையிட்டிருக்கிறார். நீ உயிர்பிழைக்க வேண்டுமானால் தேவர்களுக்குத் துன்பஞ் செய்தலைவிடு. விண்ணுலக ஆட்சியை இந்திரனிடம்கொடு. மண்ணுலக ஆட்சியைமட்டும் நீ செய்துகொண்டிரு. இன்றேல் உன்னை அழிப்பேன்," என்று கூறினார்.

யானைமுகக்கடவுள் கூறியவைகளைக்கேட்ட யானைமுக அவுணன் மிகுந்த சினங்கொண்டான். ஒரு பெரிய வில்லை வளைத்து யானைமுகக்கடவுள்மீது கணைகளைப் பொழிந்தான். யானைமுகக்கடவுள் ஓர் எழுப்படையினால் அவை

களை விலக்கியருளினார். அவனுடைய வில் முறிந்து விழும்படி அதனால் அடித்தார். அவன் மற்றொரு வில்லைவளைக்க அதனையும் அழித்தார். யானைமுக அவுணன் ஒருதடிப் படையை எடுத்துக்கொண்டு யானைமுகக்கடவுளையெதிர்த்தான். அத்தடி ஒடிந்துவிழுமாறு யானைமுகக்கடவுள் தமது எழுவினால் அடித்தார். பிறகு அவனுடைய மார்பிலும் அந்த எழுவினால் அடித்தார். அவன் சோர்ந்து நின்றான். யானைமுகக்கடவுள் பாசத்தைவீசி அவனுடைய நால்வகைப் படைகளையுங் கட்டியருளினார். மழுப்படையினாலே அந்தப் படைகளைக் கொன்றார். தேவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். அவுணன் தன்னுடைய கையிலுள்ள படைக்கலங்கள் எல்லாவற்றையுஞ் செலுத்தினான். அப்படைக் கலங்கள் யானைமுகக்கடவுளைப் போற்றி அவருடைய ஏவலின் வழி நின்றன. யானைமுகஅவுணன் யாதுஞ் செய்ய வியலாமல் வாளா நின்றான். யானைமுகக்கடவுள் தமது கொம்புகளில் ஒன்றை முறித்து யானைமுக அவுணன்மீது செலுத்தினார். அஃது அவனுடைய மார்பைப் பிளந்தது. உடலை நிலத்தில் வீழ்த்தியது. நன்னீர்க்கடலில்மூழ்கி யானைமுகக் கடவுளுடைய கையை அடைந்தது. அவனுடைய மார்பினின்று ஆறுகள் போலப் பெருகிய குருதிப்பெருக்கு பக்கத்திலுள்ள ஒரு காட்டில் பரந்தது. அந்த இடம் திருச்செங்காடுஎன்று பெயர்பெற்றது.

## யானைமுகன் பெருச்சாளியாதல்

சிவபெருமானுடைய அருளால் இறவாத கயமுகன் பழைய வடிவைவிட்டு ஒரு பெருச்சாளி வடிவங்கொண்டான். தாக்குமாறு சினத்துடன் வந்தான். யானைமுகக் கடவுள் அவனுடைய போராற்றலை அழித்தார். அசலனுடைய தோளில் நின்றும் இறங்கினார். பெருச்சாளியின் மீது ஏறிக்கொண்டார். இந்திரன் நான்முகன் முதலிய தேவர்கள் நம்முடைய துன்பங்கள் தொலைந்தன என்று கூறி இன்பக் கூத்தாடினார்கள். யானைமுகக்கடவுள்மீது மலர் மழை பொழிந்தார்கள். யானைமுகக்கடவுள் எல்லோருக்குந் திருவருள் புரிந்தார்.

அசுரமன்னன் இவைகளையெல்லாம் பார்த்து அஞ்சி ஒரு பறவையானான். மேருமலைச் சாரலையடைந்து ஓரிடத்தில் மறைந்தான். யானைமுகக்கடவுள் திருச்செங்காட்டிற்குச் சென்றார். ஒரு சிவலிங்கத்தை ஏற்படுத்தி அன்போடு வழிபாடுசெய்தார். அந்த இடம் கணபதீச்சுரம் என்னும் பெயருடன் விளங்குகின்றது.

## கரு. திருமால் சாபம் நீங்குதல்

### ஆனைமுகக்கடவுள் ஆலங்காடடைதல்

யானைமுகன் அழிந்து பெருச்சாளியானபிறகு ஆனைமுகக்கடவுள் ஆலங்காட்டிற்குச் சென்றார். அங்கு ஆலமரப் பொந்தில் தவஞ்செய்துகொண்டிருந்த திருமால் ஆனைமுகக்கடவுள் வந்ததை யுணர்ந்தார். விரைவாக எழுந்து ஆனைமுகக்கடவுளை வணங்கினார். அவருடைய பாம்புவடிவம் நீங்கியது. அவர் ஆனைமுகக்கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார். பிறகு அக்கடவுளுடைய உடன்பாடு பெற்றுப் பூசனை புரிந்தார். ஆனைமுகக்கடவுள் அப்பூசனையை ஏற்றுக்கொண்டு அருள் புரிந்தார். தேவர்கள் போற்றத் திருக்கைலை மலையை அடைந்து தாம் எழுந்தருளுமிடத்தில் எழுந்தருளினார்.

### குட்டுவழிபாடு

சிவபெருமானை வழிபடற்கு வந்த திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் ஆனைமுகக்கடவுளைப் போற்றி வழிபட்டு நின்றார்கள். ஆனைமுகக்கடவுள் அவர்கட்கு அருள்புரிந்தார். தேவர்கள் ஆனைமுகக்கடவுளைப் பார்த்து, "நாங்கள் ஆனைமுக அவுணனிடம் இதுவரையில் செய்து வந்த தொண்டை இன்றுமுதல் தம்முடைய திருமுன்பு செய்வோம். தாம் அதனை ஏற்று அருள்புரிந்திடுதல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள். ஆனைமுகக்கடவுள் 'அப்படியே செய்யுங்கள்' என்று அருள்புரிந்தார். யானைமுக அவுணனுக்கு முன் செய்தவாறு குட்டுக்கள்

போட்டுக்கொண்டு, காதுகளை மாறி மாறிப் பிடித்துக் கொண்டு தாழ்ந்தெழுந்து வணங்கினின்றனர். அதைப் பார்த்த பூதர்கள் ஆரவாரஞ் செய்தனர். தேவர்கள் யானை முகக்கடவுளைப் பார்த்து, "இன்றுமுதல் உலகத்தில் உள்ளோர் எவரும் எங்களைப்போல இவ்வணக்கத்தைத் தேவரீர் திருமுன்பு செய்துவரும்படி அருள்செய்தல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள். ஆனைமுகக்கடவுள், 'அவ்வாறே யாகுக' என்று அருள்புரிந்தார். திருமால் நான்முகன் முதலிய யாவர்க்கும் விடைகொடுத்தனுப்பினார். சிவபெருமானுக்குத் தாமதகுணம் வந்ததைப்பற்றியுங் கூறுவோம் கேட்பாயாக!

## அழித்தல் தொழில்

சிவபெருமான் மூவகைக் குணங்களும் அற்றவர். அக்கடவுள் உயிர்த்தொகைகளுடைய பாசங்களை நீக்க வேண்டுமென்னுந் திருவருளினாலே நான்முகனுக்குந் திருமாலுக்கும் படைத்தல் தொழில் காத்தல் தொழில்களைக் கொடுத்துத் தாம் அழித்தல் தொழிலை மேற்கொண்டார். படைத்தல் தொழில் சாத்துவிக குணத்தையும் காத்தல் தொழில் இராசதகுணத்தையும் அழித்தல் தொழில் தாமத குணத்தையும் உடையன. அழித்தல் தொழில் சினத்தினால் செய்யப்பெற வேண்டுவதாகலின் அதற்குத் தாமதகுணம் வேண்டியதாயிற்று. சிவபெருமான் தாமதகுணத்தையுடையவராயின் மறை முதலியவைகளை அருள்செய்யவும் நால்வர்க்கு அறிவுரை வழங்கவும் வல்லவராவரோ? சிவ்பெருமான் அழித்தலைச் செய்யுந் தன்மையால் அவரைத் தமோ குணத்தர் என்றாய்; அக்குணம் அவருக்குச் செயற்கைக்குணமாம். அவருடைய இயற்கைக் குணத்தை அறியமுடியுமோ? இவ்வாறு பலவற்றையும் ததீசிமுனிவர் தக்கனுக்குரைத்தார்.

## ததீசிமுனிவர் சாபம் கொடுத்தல்

தக்கவனல்லனாகிய தக்கன் ததீசிமுனிவர் சாற்றிய நன்மை மிக்க அறிவுரைகளை உள்ளத்திற் கொள்ளவில்லை.

அவன் முனிவரைப்பார்த்து, "நீர் இங்கே பலவற்றையும் பகருவதாற் பயனில்லை. கைலைமலையில் இருக்கும் உங்கள் சிவபெருமான் அறுகுணங்களையும் உடைய கடவுளே யாகுலும் ஆகட்டும். நான் வேள்வியில் அவிப்பாகத்தை அவருக்கு கொடுக்கமாட்டேன். யான் தொடங்கிய செயலை என் நோக்கம்போல் செய்துமுடிப்பேன்" என்று கூறினன். அவ்வளவில் ததீசிமுனிவருக்குப் பெருஞ் சினம் உண்டாயிற்று. ஊழித்தீயும் அஞ்சியது. தேவர்க ளுடைய உள்ளங்கள் தளர்ந்தன. மகாமேருமலையும் நடுங்கியது. எழுகடல்களும் ஒடுங்கின. முனிவர் தம்மால் உலகத்திற்குத் தொல்லை ஏற்படக்கூடாது என்று எண்ணித் தம்முடைய சினத்தை மாற்றிக்கொண்டார். தம்மைச் சூழ்ந்த முனிவர்களோடு எழுந்தார். தக்கனைப்பார்த்து, "நீ சிவபெருமானை விலக்கிப் புரிகின்ற வேள்வி அழிக. இங்கே உன்னோடு இப்பொழுதிருக்கின்ற தேவர்கள் யாவ ரும் ஒழிக!" என்று சாபமிட்டதுடன், வேள்விச்சாலையில் இருக்கின்ற தேவர்களைப்பார்த்து அவர்களுக்குஞ் சில சாபங்களை இட்டார். முனிவர்களோடு தம்முடைய இருப் பிடத்தையடைந்தார்.

## கரு. அறம் புரிதல்

### தக்கன் தொடர்ந்து வேள்விபுரிய முயலுதல்

ததீசிமுனிவர் திரும்பிச் சென்றவுடன் தக்கனுடைய கொடி அறுந்தது. வேள்வித்தூணில் கழுகுகளுங் காக்கைக ளும் நெருங்கின. வேதவல்லியினுடைய மங்கலநாண் தானே கழன்றது. இத்தகைய தீய அறிகுறிகளைக் கண்டும் தக்கன் அஞ்சவில்லை. நான்முகனையுந் திருமாலையும் வழி பட்டான். மற்றைத் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேண்டியவைகளை வேண்டியவாறே கொடுத்தான். தன் பெண்களுக்கும் மருகர்களுக்கும் பலவகை மேன்மைகளைச் செய்தான். திருமால் காத்தலைச் செய்ய வேள்வியைத் தொடங்கினன்.

காமதேனுவானது உணவுப்பொருள்களை மிகுதியாகக் குவித்தது. சிந்தாமணியும் சங்கநிதியும் பதுமநிதியும் ஐந்தருக்களும் தக்கனுடைய அறச்சாலையில் வந்து பல வகை மணிகளையும் பொன்களையும் அணிகலன்களையும் ஆடைகளையும் மற்றும் வேண்டிய பொருள்களையும் நிறைத்து வைத்தன.

பார்ப்பனர் உணவுச்சாலையை அடைந்து முனிவர்கள் பரிமாற அவாக்கெடுமாறு நன்கு உண்டு மகிழ்ந்தார்கள். உண்டு மகிழ்ந்தபின் பொன்களையும் அணிகலன்களையும் ஆடைகளையும் ஆக்களையும் மற்றும் பல பொருட்களையும் மிகுதியாகப் பெற்று மகிழ்ந்தார்கள்.

திருமாலுடைய கருடனும், நான்முகனுடைய அன்னமும், இந்திரனுடைய ஐராவதமும், தீக்கடவுளுடைய ஆட்டுக்கடாவும், எமனுடைய எருமைக்கடாவும், கதிரவனுடைய குதிரைகளும் ஒருபக்கத்தில் ஒலித்து நின்றன. அரம்பையர்கள் ஒரு பக்கத்தில் நடித்தார்கள். அரம்பையர்களும் தேவர்களும் சோலைகளிலும் குளங்களிலும் விளையாடினார்கள். வேதவல்லியின் புதல்விகளும் தேவமகளிர்களும் இந்திராணியும் வேள்வியின் சிறப்புக்களைப் பார்த்துக்கொண்டும் பேசிக்கொண்டும் ஒருபக்கத்தில் இருந்தார்கள்.

## கஎ. வேள்வி

### வேள்விச் செயலைத் தொடங்குதல்

வேள்வித் தலைவனாகிய தக்கன் நான்முகனோடுந் திருமாலோடும் ஆராய்ந்தான். முறைப்படி மூவகைத் தீக்களையும் உண்டாக்குமாறு வேள்வியை நடத்துவிப்போர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களுஞ் செய்யவேண்டியவைகளைச் செய்து தீயை வளர்த்தார்கள். வேள்விச் செயல்கள் நடைபெற்றன. ஒருவர் வேள்வியைச் செய்வித்தார். ஒருவர் சிவபிரான் ஒழிந்த மற்றைத் தேவர்கள் அவியை ஏற்கும்படி அவரவர்கட்குரிய மறைகளைச் சொன்னார். ஒரு

வர் அவ்வத் தேவர்களுடைய பெயர்களைக் குறிப்பிட்டு அழைத்தார். ஒருவர் அவியைக் கையிலேந்தித் தீயில் விட்டார். ஒருவர் யாதுங் குறையேற்படாமல் பார்த்துக் கொண்டிருந்தார். தக்கன், 'இதனை உண்ணுங்கள்' என்று கூறி அவிகளை ஊட்டிக் கொண்டிருந்தான். அவ்வவிகள் அமுதம் போன்றனவாயினும் சிவபெருமானை யின்றி நுகர்ந்தமையால் தேவர்களுக்கெல்லாம் நஞ்சைப்போன்றிருந்தன.

## க அ. உமாதேவியார் வருதல்

### வேள்வியைக்காண இறைவி வருதல்

தக்கன் வேள்வி செய்தலை நாரதமுனிவர் கண்டார். சிவபெருமானிடஞ்சென்று செய்தியைக் கூறினார். தக்கன் புரியும் வேள்வியைப் பார்ப்பதற்கு உமாதேவியார் அவாக் கொண்டார். சிவபெருமானை வணங்கித் தம் தந்தை இயற்றும் வேள்வியைச் சென்று பார்த்துவருதற்கு உடன்பாடு தருதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். "நீ வேள்விக்குச் சென்றால் தக்கன் உன்னை மதியான். சிறுமையை நீ அடைவாய். ஆதலால் அவ்வேள்விக்குச் செல்லுதல் தக்கதுஅன்று" என்று சிவபெருமான் தடுத்துரைத்தார். "தக்கன் அறிவில்லாதவன். அவனுடைய பிழையைப் பொறுத்தருளும். நான் சென்று வேள்வியைப் பார்த்துவிட்டு விரைவிலே திரும்பி வந்துவிடுவேன்" என்று மீண்டும் வேண்டிக்கொண்டார். சிவபெருமான் "அவ்வாறாயின் சென்றுவிட்டு விரைவிலே திரும்பிவிடுவாயாக!" என்று உடன்பாடு தந்தருளினார்.

உமாதேவியார் புறப்பட்டுத் தக்கனுடைய வேள்விச் சாலையை அடைந்தார். தக்கனுக்கெதிரே சென்றார். அறிவற்ற தக்கன் அவரை வெகுண்டுபார்த்தான். 'சிவனுக்கு மனைவியாகியநீ இந்த வேள்விக்கு ஏன்வந்தாய்? வருமாறு உன்னைக் கூப்பிட்டவர்கள் யாவர்? நீ உடனே திரும்பிப் போய்விடு' என்று கூறினான். தக்கன் கூறியவை

களை உமாதேவி கேட்டு, 'நீ உன்னுடைய மருகர்கட்கும் என்னுடைய தங்கையர்கட்கும் இந்த வேள்வியிலே சிறப்புக்களைச்செய்து உறவுகொண்டாடினாய். எங்களைச் சிறிதும் நினைக்கவில்லை. அழையாமல் வந்த என்னையும் சினந்து விரட்டுகிறாய். உன்னுடைய எண்ணந்தான்யாது? சொல்லுவாயாக' என்று கூறினார்.

## உமாதேவியார் சினமடைதல்

தக்கன் உமாதேவியைப் பார்த்து, "முக்குணங்களுள் இழிந்த தாமசகுணத்துக்குரிய அழித்தல் தொழிலைச்செய்து பேயோடாடும் பித்தனாகிய சிவனுக்கு மனைவியாகியநீயும் அவனுடைய நிலைமையையே அடைந்தாய். அவனோடு நீயும் ஆணவத்தைக் கொண்டபடியால் உன்னையும் இகழ்ந்தேன். உன்னுடைய தங்கையர்களும் அவர்களுடைய கணவர்களும் எனக்குமிகவும் இனியர். ஆகையால் அவர்களுக்குச் சிறப்புச்செய்தேன். இந்த வேள்வியில் அவிப்பாகத்தையுங் கொடுத்தேன். திருமால் நான்முகன் முதலிய யாவரும் என்னைப் புகழ்கின்றார்கள். சிவனும் நீயும் மட்டும் மதிக்காமல் இருக்கின்றீர்கள். ஆதலால் உங்கள்மேல் எனக்கு விருப்பம் இல்லை. மாட்டின் மேல் ஏறுகின்ற உன்னுடைய தலைவனுக்கு இந்த வேள்வியில் அவியையுங் கொடேன். அவனைப் புகழுகின்ற மறைமொழிகளையும் மாற்றுகின்றேன். இங்கேவந்த உனக்கும் ஒரு தினையளவாயினுஞ் சிறப்புச் செய்யேன்" என்று கூறினான்.

தக்கன் சாற்றிய மாற்றங்களைக்கேட்ட இறைவிக்கு அளவுகடந்த சினம் உண்டாகியது. அதனால் உலகங்கள் நடுங்கின. கடல்களும் நடுங்கின. தீயும் நடுங்கியது. முகில்களும் நடுங்கின. திக்குயானைகளும நடுங்கின. தேவர்கள் யாவரும் நடுங்கினர். நான்முகனும் திருமாலும் நடுங்கினார்கள். உமாதேவியின் தோழியாகிய விமலையென்பவள் இறைவியைப் பணிந்து சினத்தை மாற்றினாள்.

உமாதேவியார் தக்கனைப்பார்த்து, 'நீ என்னை இகழ்ந்ததை நான் ஒருபொருட்படுத்தமாட்டேன், என் தலைவ

ராகிய சிவபெருமானை இகழ்ந்தாய். அதனை நான் பொறுக்க மாட்டேன். சிவபெருமான் அருண்ஞானகுண முடைய வர். அவர் ஒரு குணத்தின் பாற்பட்டவரும் அல்லர். குணங்களுக்கு அப்பாற்பட்டவர். ஓயாமற் பிறந் திறந்து உயிர்த்தொகைகள் உழலாவண்ணம் அழித்து அவை களின் துன்பத்தைச் சிறிது காலம் மாற்றுதலால் அழித் தல் தொழில் தீயதன்று. அஃது அருட்செயலே யாகும். சிவபெருமான் எல்லோருக்கும் ஒப்பற்ற தலைவர். மறைக ளெல்லாம் அவரை வியந்து போற்றுகின்றன. நீ அவருக்கு அவியைக்கொடாமல் இகழுகின்றாய். "சிவ" என்னும் இரண்டு சிறந்த எழுத்துக்களையும் சொல்பவர்கள் யாவரோ அவர்களே வீடுபேற்றை யடைவார்கள். அறிவற்றவனாய் முழுமுதற் கடவுளை இகழும் நீ எவ்வாறு உய்யப்போகின் றாய்? சிவபெருமானை இகழ்ந்தவர்கட்கெல்லாம் விரைவில் ஒறுத்தல் கிடைக்கும். நீ அதனில் நின்றும் பிழைத்தல் இயலாது,' என்று கூறி வேள்விச்சாலையை நீங்கிக் கயிலையை அடைந்தார். "தக்கனுடைய வேள்வியை அழித்தருளுதல் வேண்டும்" என்று சிவபெருமானை வேண்டிக்கொண்டார்.

## கக. வீரபத்திரர் தோன்றுதல்

### வேள்வியை அழித்தற்குப் படைகள் உண்டாதல்

சிவபெருமான் தக்கனுடைய வேள்வியை அழித் தருளுதல் வேண்டும் என்று எண்ணினார். அவ்வளவில் ஆயிரந் தலைகளையும், ஆயிரம் முகங்களையும் முகங்கள் தோறும் மும்மூன்று கண்களையும் வளைந்த கொடிய பற் களையும் இரண்டாயிரந் தோள்களையும் உடைய வீரபத்திரக் கடவுள் தோன்றியருளினார். சிவபெருமான் அணிந்துள்ள அணிகலன்களையெல்லாம் வீரபத்திரரும் அணிந்திருந்தார். அந்த வீரபத்திரர் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணில் நின்றுந் தோன்றியருளினார். அவருடைய சினத்தீ அண்டகோளகைக்கு அப்பாலுஞ் சென்றது.

உமாதேவியார் தமது சினத்தீயில் நின்றும் ஆயிரம் முகங்களையும் இரண்டாயிரங் கைகளையும் உடைய பத்திர காளியை உண்டாக்கினர். அந்தக்காளி வீரபத்திரக் கடவுளுக்குத் துணைவியாய் அவரை யடைந்தாள். வீர பத்திரக்கடவுள் காளியோடு இறைவனையும் இறைவியையும் வணங்கி, "நீங்கள் எங்களை உண்டாக்கியது எதற்காக அதனைச் சொல்லுங்கள்," என்றார்.

சிவபெருமான் வீரபத்திரக்கடவுளைப் பார்த்து, "தக்கன் நம்மை யிகழ்ந்து ஒரு வேள்வியைச் செய்கிறான். நீ அந்த வேள்விக்குப்போய் நமக்குரிய அவியைக் கேட்பாயாக! அவன் கொடுத்தால் வாங்கிக்கொண்டு திரும்பி வருவாயாக! இன்றேல் அவன் தலையை அறுத்துத் தள்ளு. அவனைச் சேர்ந்திருப்போர்களையும் கொன்று வேள்வியை யுங் கலக்குவாயாக! நாமும் அங்கு வருவோம்" என்று கட்டளையிட்டருளினர்.

## படைகள் வேள்விச்சாலைக்குச் செல்லுதல்

வீரபத்திரக்கடவுள் தம்முடைய உயிர்ப்புக் காற்றி லிருந்தும் வியர்வையிலிருந்தும் மற்றும் பல உறுப்புக் களிலிருந்தும் எண்ணிறந்த பூதக் கூட்டங்களை யுண்டாக் கினர். பத்திரகாளியும் அவ்வாறே காளிப்படையை உண்டாக்கினள். இவ்வாறுண்டாகிய படைகள் இரு வரையுஞ் சூழ்ந்து சென்றன. பானுகம்பர் முதலிய பூதர்கள் பல ஒலிக்கருவிகளை முழக்கிக்கொண்டு வீரபத் திரக்கடவுளுக்கு முன் சென்றார்கள். தண்டன், பிருகி, சிங்கன் முதலாயினோர் குடைகளைப் பிடித்துக்கொண்டும் சாமரங்களை வீசிக்கொண்டும் சென்றார்கள். வீரபத்திரக் கடவுள் பெருஞ் சினத்தோடு வேள்விச்சாலையை அணு கினார். தம்பக்கத்தில் வருகின்ற படைத்தலைவர்களைப் பார்த்துத், "தக்கனுடைய வேள்விச்சாலையினின்றும் எவரும் வெளியே ஓடிப்போகாதவாறு பாதுகாத்துக் கொள்ளுங்கள்" என்று கட்டளை யிட்டார். அவர்கள் மதிற்புறங்களினும் விண்ணினுஞ் செறிந்து நின்று காத் தார்கள். தக்கனுடைய படைகளாய் வந்து எதிர்த்தவர் களைக்கொன்று ஆரவாரித்தார்கள்.

## உ0. வேள்வியழிவு

### வீரபத்திரக்கடவுள் வேள்விச்சாலையினுள் நுழைதல்

வீரபத்திரக்கடவுள் பத்திரகாளியோடு தக்கனுடைய வேள்விச்சாலைக்குள் நுழைந்தார். அவ்விருவரையும் நான்முகன் முதலாகிய தேவர்களனைவருங்கண்டு அச்சங்கொண்டார்கள். பலரும் பலவாறு அஞ்சினார்கள். சிலர், சிவபெருமானை இகழ்ந்தக்கன் ஏன் வேள்வி செய்யத் தொடங்கினான் என்றார்கள். சிலர், தேவர் கூட்டங்களுக்கெல்லாம் இன்றைக்கே அழிவுண்டாகும் என்றார்கள். சிலர், ஓடிப்போதற்கும் வழியில்லாமற் போய்விட்டது என்றார்கள். வீரபத்திரக்கடவுள் தக்கனுக்கு முன்னாற் சென்றார். தக்கனைப்பார்த்து இடி இடித்தாற்போல நகைத்தார். கொம்பு வாத்தியத்தை ஊதினார். அவ்வொலியால் மேருமலை பிளந்தது. நிலம் வெடித்தது.

### தக்கனும் வீரபத்திரக்கடவுளும்

தக்கன் வீரபத்திரரைப் பார்த்தான். ஏங்கி மிகவும் நடுங்கி உள்ளந்தளர்ந்தான். மிகவுந் துன்பமடைந்தான். பேராற்றலுடையவன்போல வீரபத்திரக்கடவுளைப் பார்த்து, "நீ யார்? இங்கே ஏன் வந்தாய்?" என்று கேட்டான். வீரபத்திரக்கடவுள் தக்கனைப் பார்த்து, நான் சிவபிரானுடைய மகன். உன்னுடைய வேள்வியில் அவருக்குக் கொடுக்கப்பெற வேண்டிய அவிப்பாகத்தைக் கொடுப்பாயாக! அதன் பொருட்டே நான் சிவபெருமானுடைய ஏவலால் இங்கு வந்தேன்," என்று கூறினார். தக்கன் அதனைக்கேட்டு, "இனிமேல் சிவனுக்கு உலகிலுள்ளார் அவியைக் கொடுக்கமாட்டார்கள்" என்றான். அப்பொழுது அங்கே இருந்த நான்கு மறைகளும் பிரணவமும் விரைவில் ஒருங்குகூடி எழுந்து, "உயிர்களுக்குச் சிவபெருமானைத் தவிர வேறொரு தலைவரும் உண்டோ? நீ அந்தச் சிவபெருமானுக்கு உடனே அவியைக்கொடுத்துவிடுவாயாக!" என்று கூறின. அப்பொழுதுகூடத்

தக்கன் சிவபெருமானுக்கு அவியைக்கொடுக்க இணங்க வில்லை. மறைகள் வேள்விச்சாலையை நீங்கித் தத்தம் உறைவிடங்களுக்குச் சென்றுவிட்டன.

## தேவர்கள் துன்பமடைதல்

வீரபத்திரக்கடவுள் தக்கனைப்பார்த்து, "மறைகள் மொழிந்த உண்மையைக் கேட்டாயல்லவா? இப்பொழு தாயினுஞ் சிவபெருமானுக்குரிய அவியைக் கொடுப்பா யாக!" என்று கேட்டார். அவன், "சுடுகாட்டில் ஒரு பெண்ணோடு நின்று கூத்தாடுகிற அந்தப் பித்தனுக்கு அவியைக் கொடேன்" என்றான். வீரபத்திரக்கடவுள் திருமால் நான்முகன் முதலிய தேவர்களைப்பார்த்து, "நீங்கள் இந்தத் தக்கன் கூறியவைகளைக் கேட்டீர்கள். அவன் கூறியது உங்கட்கும் உடன்பாடுதானா?" என்று கேட்டார். அவர்கள் யாதும் உரையாமலிருந்தார்கள். வீரபத்திரக்கடவுள் தீயெழச் சினந்தார். பல்லைக்கடித்தார். ஒரு தடியினாலே திருமாலினுடைய மார்பில் அடித்தார். அவர் தக்கன் அஞ்சும்படி கீழே விழுந்தார். நான்முக னுடைய தலையிலே இடிவிழுந்தாற்போல ஒரு குட்டுக் குட்டினார். நான்முகனுடைய மனைவியரின் மூக்கையுங் கொங்கைகளையும் அறுத்தார். இவைகளைப்பார்த்து நின்ற தேவர்கள், ஒளிப்பிடந்தேடி ஓடிக் கதறிப்பதறி வாடி னார்கள். தப்பியோடுகிற முழுத்திங்களை வீரபத்திரக் கடவுள் பார்த்துத் தம்முடைய ஓர் அடியினால் (காலினால்) தள்ளி அவனுடலைச் சின்னமுண்டாகுமாறு தேய்த்தார். கதிரவனைப்பிடித்துக் கன்னத்திலடித்துப் பற்களை உதிர்த் தார். அவன் உயிர்நீங்கி விழுந்தான். நமனைப் பிடித்துத் தலையை வெட்டினார். இந்திரன் அஞ்சிக் குயிலுருக் கொண்டு விண்ணிற்பறந்தான். அவனைக்கண்டு வாளால் வெட்டி வீழ்த்தினார். தீக்கடவுளைப்பிடித்துக் கையை வெட்டினார். எழுநாக்களையும் அறுத்தார். அவன் தள் ளாடி விழுந்தான். அவன் மனைவியின் மூக்கை நகத்தாற் கிள்ளினார். விண்ணில் எழுந்த நிருதியைத் தடியினால் அடித்து வீழ்த்தினார். உருத்திரர்கள் தம்மை வணங்கிப்

பணிய ஓடிப்போதற்குரிய வழியை அவர்களுக்குக் காட்டி விட்டார். வருணனை எழுவால் அடித்தார் வாயுவை மழுவால் அடித்தார். குபேரனை முத்தலைச்சூலத்தினுற் கொன்ருர். ஈசான உருத்திரர் பணிய அவரை வைது விரட்டினர். சோணிதபுரத்தரசனுகிய அசுரேந்திரன் தலையை ஒரு கணையினுல் வீழ்த்தினுர். வேள்வித் தெய்வ மாகிய எச்சன் தலையை ஒரு கணையினுல் அறுத்தார்.

## தக்கன் எண்ணமும் திண்ணமும்

நிகழ்ந்தவைகளையெல்லாம் தக்கன் கண்டான். "மிகுந்த பெருமையுடைய இந்த வேள்வியும் என்முன் இவ்வாறு அழியுமோ? என் தந்தையாகிய நான்முகன் உரைத்தபடி சிவபெருமானை நோக்கிப் பெருந்தவஞ்செய்து சிறந்த வளங்களையெல்லாம் பெற்றேன். அவற்றைத் தந்த கடவுளை எண்ணுமல் அறிவு மயங்கினேன். உமாதேவி யைத் திருமணஞ்செய்துகொடுத்து என் மருகன் என்று எண்ணி இகழ்ந்தேன். என் தந்தையினுடைய வேள்வி யில் சிவபெருமானுக்குரிய அவியைக் கொடாது தடுத்த தோடு, நானும் இந்தக் குற்றம் பொருந்திய வேள்வியைச் செய்தேன். ததீசிமுனிவருடைய மொழிகளையும இகழ்ந் தேன். இவ்வேள்விக்கு எழுந்தருளிய உமாதேவியையும் வெறுத்துச் சிவபெருமானையும் இகழ்ந்தேன். இந்த வீர பத்திரக் கடவுள் வந்து கேட்டவுடனும் அவியைக் கொடா மல் வீம்பு பேசினேன். மறைகள் கூறியவைகளையும் எண்ணிப் பார்க்காமற் போனேன். என் அழிவுக்கே தீய அறிவுகள் எனக்கு உண்டாயின போலும். தேவர்களுக் கும் முனிவர்களுக்கும் நான் இறுதியைத் தேடிக்கொடுத் தேன். வீரபத்திரக்கடவுளும் பத்திரகாளியும் மிகுந்த ஆற்றல்படைத்தவர்கள். நான் தப்பியோடுவது முடியாத செயலாகும். வருவதைப்பட வேண்டியதுதான்" என்று எண்ணிக்கொண்டு மிகுந்த ஆற்றலுடையவன்போல வீரபத்திரக்கடவுளுக்கு முன்னே நின்முன்.

## தக்கன் இறத்தல்

வீரபத்திரக்கடவுள் தக்கனுடைய நிலையைப்பார்த்தார். அவருக்கு மிகுந்த சீற்றமுண்டாகியது. அவனை நெருங்கித், "தக்கனே நீ தேவர்களோடுகூடித் தேவதேவனாகிய சிவபெருமானை இகழ்ந்தாய். அதற்கு இதுவே கழுவாயாகும்" என்று கூறி வாட் படையினால் அவனுடைய தலையைவெட்டினார். அது கீழே விழுமுன் கையாற் பற்றினார். தீயைப்பார்த்து, "இதனை உண்பாயாக" என்று கூறிக்கொடுத்தார். அது நொடிப்பொழுதில் உண்டுவிட்டது. தக்கன் மனைவியாரும் புதல்வியரும் அதனைப்பார்த்தார்கள். புலம்பிக்கொண்டு அங்கே வந்தார்கள். பத்திரகாளி வேதவல்லியினுடைய காதையறுத்தாள். மற்றைய மனைவியர்கள், புதல்வியர், மங்கையர், முதலியவர்களுடைய தலைகளையும் வாட் படையினால் வெட்டிப் பந்துபோல விளையாடினாள். இருவருஞ்சேர்ந்து மற்றைத் தேவர்களையும் முனிவர்களையுங்கொன்று தொலைத்தார்கள்.

வீரபத்திரர், பத்திரகாளி ஆகிய இருவருடைய செயல்களையுங்கண்ட பூதப்படைஞர்கள் வீரபத்திரக் கடவுளுடைய கருத்தின்படி தாமும் அழித்தல் தொழிலைச் செய்யத்தொடங்கினார்கள். வேள்விச் சாலையைச் சூழ்ந்த மலைபோன்ற மதிலை இடித்துத்தள்ளி உட்புகுந்தார்கள். தேவர்கள் திகைக்கும்படி சினத்தோடு ஆரவாரித்தார்கள். தேவர்களும் முனிவர்களுஞ் சேர்ந்து ஓடப்பார்த்தார்கள். ஓடத்தொடங்கிய தேவர்களையும் முனிவர்களையும் பூதர்கள் வளைத்துக்கொண்டார்கள். சிலர் வெருண்டனர். சிலர் சோர்ந்தனர். சிலர் மயங்கினர். சிலர் கலங்கினர். பலர் உறவினர்களை அழைத்துப் புலம்பினர். பூதர்கள் சிலதேவர்களைப் பிடித்து அடித்தார்கள். சிலரைப் பற்களால் கடித்தார்கள். சிலரைக் கழுத்தையொடித்தார்கள். சிலரைத் தோளை முறித்தார்கள். சிலருடைய கண்ணைப் பிடுங்கினார்கள். சிலருடைய நாக்கைப் பிடுங்கினார்கள். சிலரை வேள்வித் தீயிற் போட்டுக் கொளுத்தினார்கள். சிலரைப் படைக்

கலங்களால் தூக்கியெறிந்தார்கள். சிலரைக் கால்களால் நசுக்கிக்கொன்றார்கள். சிலர் வேள்வித் தூண்களிற் பிணித்த ஆநிரைகளை அவிழ்த்துக் கங்கைக் கரையில் செல்லவிட்டார்கள். அரம்பையர்களுடைய தலைகளும் மற்றைய உறுப்புக்களும் அறுபட்டன. சிலர் வேள்விச் சாலையிலுள்ள மேடைகள் தீக்குழிகள் முதலியவைகளை இடித்துத் தகர்த்தார்கள். சிலர் கொடி முதலியவைகளை அழித்தார்கள். சிலர் தக்கனுடைய மருகர்களைப் பிடித்து இழிவு படுத்தினார்கள். வேள்விச்சாலையில் இருந்தவர்கள் அனைவரும் பலவாறு இறந்தொழிந்தார்கள். வேள்விச் சாலை பெரிதும் அழிந்தது.

## திருமால் போர்

முன்பு அடிபட்டு வீழ்ந்த திருமால் தெளிவடைந்து எழுந்தார். வீரபத்திரக் கடவுளோடு போர்செய்ய எண்ணிக் கருடனை நினைத்தார். அஃது இறந்துபோய்விட்டபடியால் வரவில்லை. திருமால் தம்முடைய சினத்தை ஒரு கருடனாக்கினார். அதன்மேல் ஏறி ஐந்து படைக்கலங்களையும் ஏந்தினார். பூதப்படைகளோடு போர் செய்தார். அவர்கள் மீது கணக்கற்ற கணைகளைச் செலுத்தினார். பூதர்களும் காளிகளும் பேய்களும் ஒன்றாகக்கூடித் திருமாலைச் சூழ்ந்து போர்செய்தார்கள். தம்படைகளோடு திருமால் போர்செய்தலைப் பார்த்து வீரபத்திரக் கடவுள் நகைத்தார். அப்பொழுது சிவபெருமான், வீரபத்திரக்கடவுளுக்கு ஒரு தேரையனுப்பினார். அடிபட்டுச் சோர்ந்துகிடந்த நான்முகன் தெளிவு பெற்றெழுந்து அந்தத் தேரைச் செலுத்துந் திருப்பணியை மேற்கொண்டான். வீரபத்திரக்கடவுளும் பத்திரகாளியும் அத்தேர்மீது ஏறி யருளினார்கள். வீரபத்திருடைய தேர் திருமாலுக்கு முன்னே சென்றது. திருமால் வீரபத்திரக் கடவுளைப் பார்த்து, "சிவபெருமானை இகழ்ந்த தக்கனை நீர் அழிப்பதல்லது ஒரு தவறுஞ் செய்யாத தேவர்களை அழிப்பதென்னை? வேள்வியை அழிப்பதென்னை? கூறும்" என்று கேட்டார். "சிவ

பெருமானை இகழ்ந்த தீவினையையுடைய தக்கன் புரிந்த வேள்வியில் அவிப்பாகத்தை உண்டவர்கட்கெல்லாம் மறை ஏற்படுத்திய தண்டனையையே புரிந்தோம். உன்னையும் அழிப்போம். நீ ஆற்றலுடையையாயின் உன்னைக் காத்துக்கொள்'' என்று கூறினார் வீரபத்திரக்கடவுள். திருமால் அதனைக்கேட்டு வெகுண்டார். வில்லை வளைத்து நாணொலி புரிந்தார். கணைகளைப் பூதர்கள் மேற்செலுத்தினார். வீரபத்திரக்கடவுள் ஒரு பெரிய வில்லை வளைத்து நாணொலி செய்தார். அதனால் கடல்கள் ஒடுங்கின. உலகங்கள் நடுங்கின. மலைகள் வெடித்தன. உயிர்கள் துடித்தன. வீரபத்திரக்கடவுள் பல கணைகளைத் தூண்டித் திருமாலை மறைத்தார். அவர் விடுங் கணைகளையெல்லாம் பொடியாக்கினார். திருமால் ஆயிரங்கணைகளை வீரபத்திரக் கடவுளுடைய தோளில் எய்தார். வீரபத்திரக்கடவுள் அவைகளையெல்லாம் விலக்கினார். திருமாலுடைய நெற்றியில் ஒரு கணையைச் செலுத்தினார். அதனால் திருமால் தளர்ச்சியடைந்தார். அவருடைய தளர்ச்சி நீங்கிய பின், போர் தொடங்கியது. வீரபத்திரக்கடவுள் ஊழித் தீப்படையைத் திருமாலின்மீது தூண்டினார். அஃது அவருடைய மார்பிற்பட்டது. திருமால் தம்மிடமிருந்த தெய்வப் படைக்கலங்கள் எல்லாவற்றையுஞ் செலுத்தினார். வீரபத்திரக்கடவுள் அவைகளையெல்லாம் மாற்றினார். திருமால் உருளைப்படையை எறிந்தார். வீரபத்திரக் கடவுள் அதனைக் கையாற்பற்றி விழுங்கினார். திருமால் தடிப்படையை எறிந்தார். வீரபத்திரக்கடவுள் தமது தடிப்படையால் அதனை யழித்தார். திருமால் வாட்படையை யெடுத்தார். வீரபத்திரக்கடவுள் சினந்து உங்காரஞ் செய்தார். திருமால் அஞ்சி ஓவியப்பாவைபோல் தளர்ந்து நின்றார். மிகுந்த சினத்தை விடுவாயாக'' என்று ஓர் உருவற்ற விண்வாக்குத் தோன்றியது. வீரபத்திரக் கடவுள் சினந்தணிந்து நின்றார். திருமால் தம்முடைய தவறுகளையெல்லாம் உணர்ந்தார் வீரபத்திரக்கடவுளிடம் பணிந்து தம்முடைய குற்றங்களையெல்லாம் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். வீர

பத்திரக்கடவுள் திருமாலுடைய பிழைகளைப் பொறுத்தருளினார்.

## சிவபெருமான் எழுந்தருளுதல்

சிவபெருமான் உமாதேவியாரோடு அங்கு எழுந்தருளினார். வீரபத்திரக்கடவுள் சிவபெருமானை வணங்கிப் பக்கத்தில் நின்றார். திருமாலும் நான்முகனும் சிவபெருமானை வணங்கி நின்றார்கள். தக்கனுந் தேவர்களும் வேள்விச்சாலையிற் கொலையுண்டு கிடத்தலை உமாதேவியார் கண்டார். முன்னே கொண்ட சீற்றம் நீங்கினார். இறந்தவர்களனைவரையும் எழுப்பியருளுதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்.

## செத்தவர் பிழைத்தல்

சிவபெருமான் வீரபத்திரக் கடவுளைப்பார்த்து, "இந்த வேள்வியில் உன்னாலிறந்தவர்களனைவரையும் பிழைக்கச் செய்வாயாக!" என்று திருவாய்மலர்ந்தருளினார். வீரபத்திரர், "இறந்தவர்கள் அனைவரும் முன்போல எழுங்கள்" என்று கூறினார். அவ்வளவில் தேவர்களும் முனிவர்களும் உறக்கம் நீங்கி யெழுந்தவர்களைப்போல எழுந்தார்கள். தக்கனுடைய வேள்விக்கு வந்து இறந்து பிழைத்ததைக் கனவு கண்டார்போல உணர்ந்து நாணினார்கள்.

உயிர்பெற்றெழுந்த தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானைக் கண்டு வணங்கி அஞ்சி நடுங்கினர். "அஞ்சற்க," என்று சிவபெருமான் அத்தேவர்களுக்கு அருள் புரிந்தார். நான்முகனுந் திருமாலும் தேவர்களும் சிவபெருமானுடைய அருளைக் கண்டு மகிழ்ந்தார்கள். பலவாறு போற்றிப் புகழ்ந்து வணங்கினார்கள்.

## தக்கன் பிழைத்தெழுதல்

தக்கன் எழாமையை நான்முகன் கண்டான். சிவபெருமானுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். தக்கனும் பிழைத்தெழுமாறு அருள்புரியவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் அவ்வாறே ஆகுக என்று அருள்புரிந்தார்.

வீரபத்திரர் தக்கனுடைய உடலைக்கொண்டு வருமாறு செய்து ஓர் ஆட்டுத்தலையை அவனுடைய உடலோடு பொருத்தினர். "எழுக" என்றார். உயிர்பெற்றெழுந்த தக்கன் எதிரில் நிற்கும் வீரபத்திரக் கடவுளைக் கண்டு அஞ்சினன். ஆட்டுத்தலையால் வணங்கி நாணினன். தான் செய்த செயல்களை நினைந்து துன்பக்கடலுள் ஆழ்ந் தான். சிவபெருமானையும் உமாதேவியாரையும் கண்டு மிகவும் அச்சமடைந்தான். "தக்கனே! நீ அஞ்சற்க," என்று சிவபெருமான் அருள்புரிந்தார். தக்கன் இருவரை யும் வணங்கித் தன்னுடைய குற்றங்களையெல்லாம் பொறுத் தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபெரு மான் அனைவருக்கும் அருள்செய்து திருக்கைலையை அடைந்தார்.

## உக. அடிமுடி தேடுதல்

### தக்கனுக்கு நான்முகன் அறிவுரை

சிவபெருமான் சென்றபின் நான்முகன் தக்கனைப் பார்த்தான். "தக்கனே! என்னாயிற்று நின் அறிவின் போக்கு என்பதை அறிந்துகொண்டாயா? உன் அறிவி னால் நீ எத்தகைய பயனைப் பெற்றாய்? தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அந்தணர்களுக்கும் கூற்றுவன் ஆனாய்? சிறப்பை யிழந்தாய்? தக்கன் என்னும் பேரைப் போக்கி னாய்? உன்னுடைய அழகையுந் தொலைத்தாய்? உன் னுடைய ஏவலைச் செய்கின்றவர்கள் அனைவரையும் இழந் தாய்? மிகுந்த துன்பத்தையடைந்தாய்? உன்னுணர்வைக் கொண்டு எல்லாச் செயல்களையுஞ் செய்தாயேயல்லாமல் பெரியோர்கள் கூறியபடி நடந்தாயில்லை. நீ சிவபெருமா னுடைய இயல்பை அறிந்திருந்தும் ஊழினால் அக்கடவுளை இழந்து இந்நிலையை அடைந்தாய். பெருஞ்செல்வங்களைக் கொடுத்தருளிய சிவபெருமானை மறந்தாய். மயக்கமானது உனக்குமட்டுமன்று; உயிர்த்தொகைகளுக்கெல்லாம் உள் ளது. இந்த மயக்கம் முன்னாளில் எங்களுக்கும் வந்தது. எனக்குந் திருமாலுக்கும் உண்டாகிய மயக்க வுணர்வைச்

சிவபெருமான் போக்கியருளினார். நீ சிவபெருமானுடைய திருவடிகளை அன்போடு வழிபடுவாயாக! அவ்வாறு வழிபடுவாயாகில் அக்கடவுள் உனக்கு அறிவையும் வீடு பேற்றையுங் கொடுத்தருள்வார்," என்று கூறியருளினான். தக்கன் நான்முகனைப்பார்த்து, "உங்கள் மாட்டும் மயக்கம் வந்ததாகவுஞ் சிவபெருமான் அதனைப் போக்கியருளிய தாகவுங் கூறினீர்! அதனை யெனக்குக் கூறியருளவேண்டும்," என்று வேண்டிக்கொண்டான்.

## ஆணவங்கொண்டது

நான்கு ஊழிக்காலங்கள் ஆயிரங் கழிந்தால் எனக்கு ஒரு பகற்காலமாகும். பகற்காலங் கழிந்து இரவு வந்தால் நான் உறக்கங்கொள்வேன். அப்பொழுது கோள்களும் தேவர் கூட்டங்களும் இவ்வுலகமும் உயிர்களும் அழியும். மேலுலகில் உள்ளவர்கள் அஞ்சிச் சனலோகத்தையடைவார்கள். நாற்றிசைக் கடல்களும் எழுந்து உலகத்தை யழிக்கும். திருமால் சிவபெருமானுடைய திருவடிகளை யெண்ணி ஓர் ஆலிலையின்மீது உறக்கங்கொள்வார். பிறகு படைப்புத்தொழில் நிகழும். ஒரு படைப்புத்தொழிலின் போது நானுந் திருமாலும் உலகப்படைப்பு எங்களாலே நிகழ்கின்றது என்று மிகுந்த ஆணவங்கொண்டோம். திருமால் மிகுந்த ஆணவத்தோடு திருப்பாற்கடலில் அறிதுயில்கொண்டார். நான் திருப்பாற்கடலையடைந்து திருமாலுடைய மார்பிலே தாக்கி, "உறக்கம்விட்டு எழும்பும்," என்றேன். அவர் எழுந்தார். நான் அவரைப் பார்த்து, "நீர் யார்? சொல்லும் என்று கேட்டேன். அவர் மகனே! நான் உன்னுடைய தந்தை. என்னை உனக்குத் தெரியவில்லையா? என்றார். நான் நகைத்து, "நான் எழுப்பினும் எழும்பாமல் இன்னும் உறங்கிக் கொண்டிருக்கின்றாய் போலும். அதனால்தான் இவ்வாறு பதிலுரைக்கின்றாய். நீ எனக்குத் தந்தை என்னும் செருக்கை விட்டுவிடு. யாமே பரப்பிரமம் என்று அறி. நீ முன்னாளிலே ஒரு தூணிடத்திலே பிறந்தாயே, அந்தத் தூணை உனக்குத் தந்தையென்று கூறட்டுமா? என் மகன் பிருகுமுனிவ

னுடைய சாபத்தால் பத்துப் பிறப்பை யெடுத்தாய். அந்த உன்னுடைய உடல்களை யெல்லாம் நாமே படைத்தனம். அவ்வாறு படைத்தபடியால் நம்முடைய கையுஞ் சிவந்திருக்கின்றது. அதனைப் பார்ப்பாயாக!'' என்றேன். அவர் சினங்கொண்டு கையோடு கையைத்தட்டி நகைத்தார். "சிவபெருமான் உன்னுடைய உச்சித் தலையை நகத்தினாற் கிள்ளினார். நீ அஞ்சி விழுந்தாய். அதை இன்னும் படைத்துக் கொண்டாயில்லை. இத்தகைய நீ என்னைப் படைப்பதாகக் கூறுவது வியப்பாக விருக்கிறது. உன்னைப்பெற்ற தாயும் யாம். தந்தையும் யாம். தெய்வமும் யாம். ஆசிரியரும் யாம். நீ நம்முடைய மாயையினால் மயக்கமடைந் திருக்கின்றாய். பொன்னில்லாமல் அணிகலன் உண்டாகுமா? அரசன் இல்லாமல் உலகம் நிகழுமா? என்னையன்றி உலகில் எந்தப் பொருள்களும் உண்டாகுமா? எவ்வுயிர்களையும் ஆட்டுவிக்கின்றவன் யான். தலைமைப் பொருளும் யான். ஐம்புலன்களும் யான். அணுகுதற் கரியவனும் நான். நாரணனாகிய கடவுளும் நான். இந்திரனும் நான். மறையும் அம்மறைப் பொருளும் யான். அந்தப் பரமசிவனும் யான். பரம்பொருளும் யான்,'' என்று பலவற்றைச் சொன்னார்.

நான் அத்திருமாலுக் கெதிராகச் சினந்து, "நாமிருவரும் போரைச் செய்வோம். நமமில் வெற்றி கொண்டவர்களே சிறந்தவர்களாவர். போருக்கு எழும்புவாயாக!'' என்று கூறினேன்.

## இருவரும் போர்செய்தல்

திருமால் அதற்கு உடன்பட்டு எதிர்த்து எழுந்தார். பல படைக்கலங்களை என்மீது செலுத்தினார். நான் தருப்பையினால் அவ்வப் படைக்கலங்களை யுண்டாக்கி அவைகளை யெல்லாம் அழித்தேன். திருமால் சிவப் படைக்கலத்தை விட்டார். நானும் சிவப்படைக்கலத்தை யெடுத்து வழிபாடுசெய்து செலுத்தினேன். இரண்டு சிவப்படைக்கலங்களும் கொடிய போர் செய்தன. அத

னால் உலகங்களெல்லாம் கலங்கின. அப்படைகள் வெளிப் படுத்திய தீப்பிழம்புகள் எங்கும் நெருங்கின. அவ் வெம்மையைப் பொறுக்க முடியாமல் தேவர்கள் நடுங் கினர். சிலர் மாண்டார்கள். சிலர் கைலையை நோக்கி ஓடினார்கள். பல உயிர்த்தொகைகள் அழிந்தன.

இவ்வாறு நாங்களிருவரும் போர் செய்தபொழுது நாரதமுனிவன் எங்கட்கு முன் தோன்றினான். பல அறி வுரைகளைக் கூறினான். அவைகளை நாங்கள் கேட்கவில்லை. செருக்கு நீங்காமல் மேலும் பெரும்போர் செய்தோம். சிவபெருமான் எங்களைப் பற்றியுள்ள அறியாமையை ஓட்டித் திருவருள்செய்ய விரும்பினார். மாசித்திங்கள் அமரபட்சத்தின் பதினான்காவது நாளில் நள்ளிரவில் எங்களிருவர்க்கும் நடுவில் ஒரு தீமலையாகத் தோன்றி யருளினார். நாங்கள் செலுத்திய சிவப்படைக்கலங்களை அம்மலை தன்னுள்ளடக்கிக் கொண்டிருந்தது. அது பொறுத்தற்கரிய வெம்மையோடு கூடியதாக விளங்கியது. நாங்கள் போர்செய்தலை விட்டுவிட்டுச் சேய்மையிற் சென்று நின்று பார்த்துக்கொண்டிருந்தோம். 'சிறுவர்காள்! உங்களுடைய ஆற்றலைச் சிவபெருமான் காண்பார். நீங்கள் இந்த மலையின் அடியையும் முடியையும் காணுங்கள்,' என்று ஒரு விண் வாக்கு எழுந்தது. நாங்கள் அதனைக் கேட்டுச் சினம் நீங்கினோமாயினும் ஆணவம் நீங்கவில்லை. 'இது காற்றினின்றுந் தோற்றிய தீயன்று: இதன் தன்மையொன்றையும் நாம் அறியோம். நாம் இருவரும் இதனுடைய அடியையும் முடியையுந் தேடிக் காண்போம்,' என்று சூளுரை கூறிக்கொண்டோம். 'அடி முடிகளில் ஒன்றைக் கண்டவரே முதற்கடவுளாவர்,' என்று உறுதி செய்துகொண்டோம். "நான் தீமலையின் முடியைக் காண் பேன்," என்றேன். 'திருமால் அடியைக் காண்பேன்' என்றார்.

திருமால் ஒரு பெரிய பன்றியின் வடிவத்தையெடுத் துக்கொண்டு நிலத்தைத் தேடிக்கொண்டு கீழ் உலகங்கள் எங்குஞ் சென்றார். அவர் நெடுங்காலம் முயன்றும்

அம்மலைச் சுடரின் அடியைக் காணமுடியாதவராஞர். நான் ஒரு பெரிய அன்னப்பறவையின் வடிவத்தையெடுத்துக்கொண்டு மேலுள்ள உலகங்களில் தேடிச்சென்றேன். அச்சுடர் என் கண்ணுக்கு அகப்படாமல் மேன்மேலுஞ் சென்றது. திருமாலுக்குப் பற்கள் நொந்தன. உடம்பு ஒடுங்கியது. ஆற்றல் அழிந்தது. நீர்வேட்கை உண்டாயிற்று. சூளுரையும் ஆணவமும் ஒழிந்தன. பழைய அறிவு முழுவதும் உண்டாயிற்று. அவர் வருந்தி நிலத்தின்மேலே வந்து சுடருக்கு அண்மையில் நின்ருர்.

நான் ஆயிரம் ஆண்டுகள் திரிந்து தேடியும் சுடரின் முடியைக் காணமுடியவில்லை. மேலும் மேலுந் தேடிக்கொண்டே சென்றேன். என் உள்ளம் வெதும்பியது. உயிர் உலைந்தது. ஆற்றல் அழிந்தது. கண்கள் சுழன்றன. சிறைகள் வருந்தின. கால்கள் ஓய்ந்தன. அறிவுந் தடுமாறியது. அப்பொழுது சிலர் தோன்றி என்னுடைய முயற்சியை இகழ்ந்தார்கள். சிவபெருமானுடைய திருவருளால் என்னுடைய ஆணவம் நீங்கியது. சிவபெருமானுடைய புகழ்களை யெடுத்துக்கூறிப் போற்றினேன். வழிபாடு செய்ய நினைத்தேன். திருமால் இருந்த இடத்தை யடைந்தேன். இருவரும் மனக்கோட்டம் தீர்ந்தோம். சிவலிங்கத்தை முறைப்படி அமைத்து வழிபாடுசெய்தோம். சிவபெருமான் சுடருக்கண்மையாகத் தோன்றி எங்கட்குத் திருவருள் புரிந்தார். நாங்கள் இருவரும் அவருடைய அடிகளை வணங்கினேம். அருள் வெள்ளத்துள் ஆழ்ந்தோம். பலவாறு போற்றிப் புகழ்ந்தோம்.

சிவபெருமான் எங்களைப் பார்த்து, 'நீங்கள் செய்த குற்றங்களைத் திருவுளத்தில் கொள்ளமாட்டோம். உள்ளத்தில் ஒன்றையும் நினையாதேயுங்கள். அந்நாளில் உங்களுக்குத் தந்த பதங்களை இன்றுந்தந்தோம். வேண்டிய மேன்மைகளைக் கேளுங்கள்.' என்று திருவருள் செய்தார். எங்கட்கு அருள்செய்து சுடரிலே மறைந்தருளிஞர்.

### திருவண்ணமலை

சிவபெருமான் மறைந்தபொழுது நாங்கள் வணங்கி யெழுந்தோம். வளர்ந்தெழுந்த அந்தச் சுடர் சுருங்கிவந்து ஒரு சிறு மலையாக அமைந்து நின்றது. அந்த மலையை நாங்கள் வலஞ்செய்து வணங்கிப் போற்றினோம். எங்கள் இருப்பிடங்கட்குச் சென்றோம். அதன்பின் சிவபெருமானை மறந்திலோம். நாங்கள் இருவருந்தேடிய அம்மலை திருவண்ணமலை என்னும் பெயருடையதாக நிற்கின்றது. அந்தச் சுடர் தோன்றிய இரவே சிவராத்திரி யாகியது. அந்நாளிலே பலருஞ் சிவபெருமானைப்போற்றி யருள் பெற்றார்கள். சிவபெருமானுடைய அருளைப்பெற்றவர்கள் அவருடைய இயல்பையறியும் மெய்யறிவையும் பெறுவார்கள். மெய்யறிவைப் பெறாதவர்கள் பல நூல்களையும் ஓதியுணர்வதால் எத்தகைய பயனும் உண்டாகமாட்டாது. நீயும் இப்பொழுது இவ்வினை நீங்கப்பெற்றபடியால் சிவபெருமானையறியும் மெய்யறிவு உனக்கும் உண்டாகும். நமக்குத் தாயும் தந்தையும் ஆசிரியரும் மற்றெல்லாமும் ஆகிய அந்தச் சிவபெருமானைப் போற்றி வழிபாடு செய்து நன்மை பெறுவாயாக!'' என்று நான்முகன் கூறினான்.

## உ௨. தக்கன் சிவவழிபாடு

### தக்கன் காசியை அடைந்து இறைவனை வழிபடல்

நான்முகன் கூறியவைகளைக்கேட்ட தக்கன் மெய்யுணர்வு வரப்பெற்றான். "நீர் கூறியபடியே சிவ வழிபாடு செய்கிறேன்,'' என்று நான்முகனுடைய அடிகளை வணங்கினான். காசிநகரை யடைந்தான். மணிகர்ணிகைக்குப் பக்கத்தில் ஒரு கோயிலை அமைத்தான். அதில் இறைவனுடைய வடிவமாகிய சிவலிங்கத்தை அமைத்தான். ஆயிரம் ஆண்டுகள் வழிபாடு செய்து போற்றினான். தக்கனுடைய அன்பைப்பார்த்த சிவபெருமான் வெளிப்பட்டருளினார். "எம்பெருமானே! அடியேன் ஆணவங்கொண்டு தேவரீரை இகழ்ந்தேன். அதனால் என்னிடத்தில் கணக்

கற்ற தீவினைகள் உண்டாயின. அவைகள் எல்லாவற்றை யும் போக்கி உம்மிடத்திலே மிகுந்த அன்பைக்கொடுத் தருளும்," என்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் அவனுடைய தீவினைகள் எல்லாவற்றையும் தொலைத்து அருள்புரிந்தார். தக்கனைத் தம்முடைய பூதக்கூட்டங் களுக்குத் தலைவனாக்கி மறைந்தருளினார். தக்கன் தூய்மை யுடையவனானான்.

நான்முகன் திருமால் இந்திரன் முதலிய தேவர்கள் வீரபத்திரக்கடவுளை வணங்கித் தத்தமக்குரிய இடங்கட்குச் சென்றார்கள். அவர்கள் சிவவழிபாடுசெய்து தத்தம் உடம்பிலிருந்த ஊறுபாட்டை யொழித்தார்கள்.

இவைகளையெல்லாம் வியாழபகவான் கூறக்கேட்ட சயந்தன் பழைய வரலாறுகளையெல்லாம் உணர்ந்து மகிழ்ந் திருந்தான்.

## உ௯. முருக வழிபாடு

### முசுகுந்தன் மேன்மை பெறுதல்

முசுகுந்தச் சக்கரவர்த்தி ஒரு நாள் வசிட்டமுனிவ ரிடத்திற்குச் சென்றான். அவருடைய அடிகளை வணங்கிப் போற்றினான். "முருகக்கடவுளுக்குரிய நோன்புகள் எல்லாவற்றையும் எனக்குக் கூறியருளும்" என்று வேண்டிக்கொண்டான். ஏழுகிழமை நோன்புகளுக் குள்ளே வெள்ளிக்கிழமை நோன்பானது முருகக்கடவு ளுடைய நோன்பாகும். அதனைக் கடைப்பிடித்தவர்கள் உள்ளத்தில் எண்ணியவைகளையெல்லாம் எண்ணியவாறே அடைவார்கள்.

எள்ளருஞ் சிறப்பின் மிக்க எழுவகை வாரந் தன்னுள்
வெள்ளிநாள் விரதந் தானே விண்ணவர் உலகம் காத்த
வள்ளல்தன் விரத மாகும் மற்றது புரிந்த மேலோர்
உள்ளமேல் நினைந்த எல்லாம் ஒல்லையின் முடியும் அன்றே.

பகீரதன் என்னும் அரசன் வெள்ளிக்கிழமை நோன்பை மேற்கொண்டு கோரன் என்னும் அரக்கனை

வென்று, இழந்துபோன தன்னுடைய அரசுரிமையைத் திரும்பப்பெற்றான்.

நாரதமுனிவர் நோன்பினாலே மேன்மையடைய எண்ணினார். ஏழு முனிவர்களினும் உயர்ந்த நிலைமையை அடைய விரும்பினார். ஆனைமுகக்கடவுளுடைய அடிகளை வணங்கி நின்று, "யான் மேன்மையடையுமாறு அடியேனுக்கு ஒரு நோன்பைச் சொல்லியருளும்" என்று வேண்டிக்கொண்டார்.

## கார்த்திகை நோன்பு

ஆனைமுகக்கடவுள் நாரதரைப் பார்த்து, "நீ நம்முடைய இளவலாகிய முருகனை வழிபட்டுக் கார்த்திகை நாள் விரதத்தைப் பன்னிரண்டு ஆண்டுகள் முயற்சியுடன் கடைப்பிடிக்கக்கடவாய். அவ்வாறு கடைப்பிடிப்பையானால் நினைத்ததை யடைவது திண்ணம்," என்று திருவாய் மலர்ந்தருளினார். கார்ததிகை நோன்பை நாரதர் கடைப்பிடிக்க எண்ணினார். நிலவுலகத்தை யடைந்தார். பரணி நாளில் நண்பகலில் மட்டும் ஒருவேளை உண்டார். கார்த்திகை நாளில் விடியற்காலையில் நீராடினார். வெள்ளுடையணிந்து நாடோறுஞ் செய்யுங் கடன்களைச் செய்தார். ஐம்புலன்களை அடக்கினார். அறுமுகக்கடவுளை முறைப்படி வழிபட்டார். வெறுந் தண்ணீரை மட்டும் உண்டார். நாணற்புல்லாகிய படுக்கையில் படுத்து முருகக் கடவுளுடைய திருவடிகளை யெண்ணிக்கொண்டு அன்றிரவு முழுவதும் உறக்கமின்றி யிருந்தார். உரோகிணி நாளில் நீராடல், முருகவழிபாடு முதலியவைகளை முடித்துக் கொண்டுவந்த முனிவர்களோடு உணவுகொண்டார். நோன்பிருந்து உண்டவர்கள் அன்று பகற்பொழுதில் உறங்கினால் மிகுந்த தீவினையுண்டாகு மென்றுணர்ந்து அன்றுபகல் முழுவதும் உறங்காமலிருந்தார். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் கார்த்திகை நோன்பைக் கடைப்பிடித்து ஏழுமுனிவர்களுக்கும் மேலாகிய நிலைமையை அடைந்தார்.

கார்த்திகை நோன்பை நிலவுலகில் ஓர் அந்தணன் கடைப்பிடித்து முதல் மநுவாகி உலகம் முழுவதையும் ஆண்டான். வேறோர் அந்தணன் கடைப்பிடித்து உள்ளத்தில் நினைந்தவைகளையெல்லாம் அடைந்தான். இறுதியில் திரிசங்கு மன்னனும் ஆனான். ஓர் அரசனும் வேடனும் கார்த்திகை நோன்பைக் கடைப்பிடித்துச் சிறப்படைந்தார்கள். மற்றும் பலபேர் கார்த்திகை நோன்பைக் கடைப்பிடித்துச் சிறப்பை யடைந்தார்கள்.

## சட்டி நோன்பு

ஐப்பசித் திங்கள் சுக்கிலபட்சப் பிரதமை முதலாக ஆறுநாளும் காலையில் நீராடி, முறைப்படி வழிபாடுசெய்து மோதகம் படைத்துப் போற்றிச் சிறிது தண்ணீரையுண்டு, ஏழாவது நாளில் முருகக்கடவுளுக்குச் சிறந்த வழிபாடு செய்து போற்றுவோர் சிறந்த நன்மைகளை யடைவார்கள்.

## முசுகுந்தச் சக்கரவர்த்தி நோன்பு

வசிட்டமுனிவர் இவ்வாறு கூறியவற்றைக் கேட்ட முசுகுந்தச் சக்கரவர்த்தி அந்நோன்புகளைக் கடைப்பிடிக்க மிகுந்த அவாக்கொண்டான். அஃவிறந்த காலம் நோன்புகளைச் செய்தான். முருகக்கடவுள் மயிலின்மீது வீரவாகு தேவர் இலக்கத்தெண்மர் முதலியோர் சூழக் காட்சி கொடுத்தருளினார். முசுகுந்தன் மகிழ்வடைந்து முருகக் கடவுளைப் போற்றினான். முருகக்கடவுள் முசுகுந்தனைப் பார்த்து, "உனக்கு வேண்டிய மேன்மைகள் யாவை?" என்று கேட்டார். முசுகுந்தன் முருகக்கடவுளைப் பார்த்து, "நிலவுலகம் முழுவதையும் அடியேன் ஆளும்படி வீரவாகுதேவர் முதலிய யாவரையும் துணைவர்களாகத் தந்தருளும்" என்று வேண்டிக்கொண்டான்.

முருகக்கடவுள் வீரவாகுதேவர் முதலியோரைப் பார்த்து, "நீவிர் முசுகுந்தனுக்குத் துணைவர்களாக இருக்கக்கடவீர்கள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். வீரவாகு முதலியோர் அதனை மறுத்தார்கள். அறுமுகக்

கடவுள் வீரவாகு முதலியோரைப் பார்த்து, "நீங்கள் நம் முறையை மறுத்தீர்கள். ஆகையால், மக்கள் யாக்கையை எடுத்து, முசுகுந்தனுடைய படைகளாகப் பலகாலம் இருந்து பின்பு இங்கு வந்து சேரக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டார். தாம் பூதப்படைகளோடு மறைந்தருளினார்.

முசுகுந்தச் சக்கிரவர்த்தி கருவூர் என்னும் நகரத்தில் இருந்து அரசுபுரிந்தான். அந்நகரிற் பல மாடவீதிகளை இயற்றினான். அவைகளில் வீரவாகுதேவர் முதலியவர்களை இருத்தினான். அவர்களுக்கு வளமிகுந்த நாடுகளையும் படைகளையுங் கொடுத்துப் படைத்தலைவர்களாக்கினான். அனைவருக்குந் திருமணஞ் செய்துவைத்தான்.

## வலனை வெல்லுதல்

முசுகுந்தச் சக்கிரவர்த்தி அரசு செய்திருக்கும் நாளில், வலன் என்னும் அவுணன் படைகளோடு சென்று விண்ணுலகத்தைச் சூழ்ந்தான். இந்திரன் சிலநாள் அவனோடு போர்செய்து பார்த்தான். அவனை வெல்ல முடியவில்லை. முசுகுந்தச் சக்கிரவர்த்தியை அழைத்து வருமாறு ஒரு தூதுவனை யனுப்பினான். முசுகுந்தன் வீரவாகுதேவர் முதலிய வீரர்கள் கூட்டத்தோடு விண்ணுலகத்தை யடைந்தான். அவுணப்படைகளை யெல்லாம் அழித்தான். படைகள் அழிந்ததும் இந்திரன் சிலநாள் வலனோடு போர்செய்து குலிசப்படையினால் அவனைக் கொன்று வெற்றியடைந்தான். முசுகுந்தனைப் போற்றிப் பலநாள் தன்னோடுவைத்துச் சிறப்புச் செய்தான்.

திருக்கைலையில் எழுந்தருளியிருப்பதைப் போலச் சிவபெருமான் அங்கே வீற்றிருந்தார். முசுகுந்தச் சக்கிரவர்த்தி சிவபெருமானைக்கண்டு வணங்கினான் :

ஏகனே போற்றி யார்க்கும் ஈசனே போற்றி அம்மை
பாகனே போற்றி மேலாம் பரஞ்சுடர் உருவே போற்றி
மேகமார் களனே போற்றி விடைமிசை வருவாய் போற்றி
மோகமார் தக்கன் வேள்வி முடித்திடும் முதல்வா போற்றி. க

அம்புயா சனன்மால் இன்னும் அளப்பருந் திறத்தாய் போற்றி
நம்பனே போற்றி எங்கள் நாதனே போற்றி கோதில்
செம்பொனே மணியே போற்றி சிவபெரு மானே போற்றி
எம்பிரான் போற்றி முக்கண் இறைவனே போற்றி போற்றி. உ

பொங்கரா அணிக ளாகப் புனைதரு புனிதா போற்றி
அங்கரா கத்திற் பூதி அணிந்திடும் ஆதி போற்றி
வெங்கரா சலத்தின் வன்தோல் வியன்புயம் போர்த்தாய் போற்றி
சங்கரா பரமா போற்றி தாணுவே போற்றி போற்றி. ௩

முன்னெனும் பொருளுக் கெல்லாம் முன்னவா போற்றி முப்பால்
மன்னுயிர்க் குயிரே போற்றி மறைகளின் முடிவே போற்றி
என்னைமுன் வலிந்தாட் கொண்டே இருநிலம் விடுத்தாய் போற்றி
நின்னுருக் காட்டி என்னை நினைப்பித்த நித்தா போற்றி. ௪

எவ்வெவர் தம்மை யேனும் யாவரே எனினும் போற்றின்
அவ்வவர் இடமாக் கொண்டே அவர்க்கருள் தருவாய் போற்றி
மெய்வரு தெளிவில் உன்னை வெளிப்பட உணர்ந்த ளோர்க்குத்
தெய்வத போக முத்தி சிறப்பொடு தருவாய் போற்றி. ௫

அம்புய மலர்மேல் அண்ணல் அச்சுதன் ஆதி வானோர்
தம்பதம் எமக்கு நல்கும் தற்பரா என்றே யாரும்
நம்புறு பொருட்டால் வேதம் நவின்றிட அடைந்தோர்க் கெல்லாம்
உம்பர்தம் பதமும் ஈயும் உலகுடை முதல்வா போற்றி. ௬

உறைதரும் அமரர் யாரும் உழையராய்ச் சூழ நாப்பண்
மறைபயில் பெரியோ ருற்று வழிபட இருந்தாய் போற்றி
அறுவகை ஐந்தும் ஆறும் ஆகிய வரைப்பின் மேலாம்
இறைவனே போற்றி போற்றி என்பிழை பொறுத்தி என்றான். ௭

முசுகுந்தச்சக்கிரவர்த்திக்குச் சிவபெருமான் திருவருள் செய்தார். "திருமால் அளவற்ற காலம் நம்மை அன்போடு வழிபட்டு இந்திரனிடத்தில் வைத்தான். நீ நம்மை நிலவுலகிற்கொண்டுபோய் வழிபடுவாயாக!" என்று இந்திரன் கேளாவாறு கூறியருளினார். இந்திரன் முசுகுந்தச்சக்கிரவர்த்திக்கு விருந்து செய்து பலவகைப் பரிசுகளை வழங்கியபின், "இன்னும் உனக்கு வேண்டியதைக் கேட்பாயாக" என்றான். முசுகுந்தன் இந்திரனைப் பார்த்து, "நீ வழிபடுகின்ற கடவுளை யான் நிலவுலகிற்குக் கொண்டுபோய் வழிபடுவதற்காகக் கொடுப்பாயாக" என்று கேட்டான்.

இந்திரன் அக்கடவுள் திருமாலிடம் இருந்து வந்த வரலாற்றைக் கூறித் திருமாலினுடைய உடன்பாடு உள்ள தாயின் தருவேன் என்றான். முசுகுந்தச்சக்கிரவர்த்தி திருமாலையடைந்து அவருடைய உடன்பாட்டைப் பெற்றுக் கொண்டுவந்தான், இந்திரன் அந்தக் கடவுளைப் பிரிதற்கு மிகவும் வருந்தி இரங்கினான். ஒரு சூழ்ச்சியை உள்ளத்தில் எண்ணினான். தான் வைத்துப் பூசனைபுரியும் வடிவத்தைப்போல ஆறு வடிவங்களை ஆறுமுறை செய்வித்து முசுகுந்தச்சக்கிரவர்த்தியிடம் கொடுத்தான். முசுகுந்தச் சக்கிரவர்த்தியோ சிவபெருமானுடைய திருவருளால் உண்மையுணர்ந்து அவைகளைப்பெற மறுத்துவிட்டான். சூழ்ச்சி வெற்றி பெறாமையைக்கண்ட இந்திரன் இறுதியில் திருமாலிடமிருந்து பெற்றிருந்த உண்மை வடிவத்தைக் கொடுத்ததுடன் தான் செய்வித்த ஆறு வடிவங்களையும் முசுகுந்தச்சக்கிரவர்த்தியிடமே கொடுத்து, "நிலவுலகிற் கொண்டுபோய்த் திருவாரூர் முதலிய சிவப்பதிகளில் வைத்து வழிபாடு செய்வாயாக!" என்று கூறிக் கொடுத்தனுப்பினான்.

## முசுகுந்தன் நிலவுலகடைதல்

முசுகுந்தன் இந்திரனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு நிலவுலகையடைந்தான். திருமால் வழிபாடு செய்த வடிவத்தைத் திருவாரூரில் அமைத்து வழிபாடு செய்தான். மற்றைய ஆறுவடிவங்களையும் திருநாகைக் காரோணம், திருநள்ளாறு, திருக்காறாயல், திருக்கோளிலியூர், திருவான்மியூர், திருமறைக்காடு என்னும் ஆறுபதிகளிலும் ஒரேநாளில் அமைத்து மறை முறைப்படி வழிபாடு செய்வித்தான். திருவாரூரில் அமைத்த தியாகராசப் பெருமானுக்குத் திருவிழாச் செய்தான். இந்திரன் தான் வழிபட்ட வடிவத்தை முசுகுந்தச் சக்கிரவர்த்தியிடம் கொடுத்தமையால் புலி வடிவுபெற்றுப் பின் அவ்வடிவு நீங்கப்பெற்றான்.

முசுகுந்தச் சக்கிரவர்த்தி கருவூரில் நெடுங்காலம் அரசு செலுத்தியிருந்தான். பின் தன் மகனாகிய அக்கினி

வன்மனுக்கு முடி புனைந்து உலகத்தை ஆளச்செய்தான். தான் திருக்கைலைமலையை அடைந்தான். வீரவாகுதேவரும் நூறாயிரத்தெண்மரும் தங்கள் மக்களை அக்கினிவன்மனுக்குச் சுற்றமாக வைத்துத் தாங்கள் தவஞ்செய்து மக்கட்டன்மை நீங்கினார்கள். முருகக்கடவுளுடைய நோன்பு இத்தகைய சிறப்புடையதாகும்.

## உச. வள்ளியம்மை திருமணம்

### வள்ளியம்மை மான்வயிற்றிற் பிறத்தல்

தொண்டைவள நாட்டிலே மேற்பாடி என்னும் பெயருடைய ஓர் ஊர் இருக்கின்றது. அதன் பக்கத்தில் பல வளங்களை யுடையதும் மிக உயர்ந்ததுமாகிய ஒரு மலை இருக்கின்றது. அம் மலையினுடைய பெயர் வள்ளிமலை; அம்மலை பிற்காலத்தில் அறுமுகக்கடவுள் தங்கும் பேற்றைப் பெற்றது. அம்மலையை ஒட்டிய சிற்றூரில் வேடர்கள் வாழ்ந்திருந்தனர். அவர்களுடைய தலைவன் பெயர் நம்பி. அவன் பெண்மக்கட்பேற்றை விரும்பித் தன்னுடைய குலதெய்வத்தை வழிபட்டுக்கொண்டிருந்தான். வள்ளிமலையின் சாரலில் சிவமுனிவர் என்னும் பெரியார் ஒருவர் சிவபெருமானை யெண்ணித் தவஞ்செய்துகொண்டிருந்தார். அங்கு ஓர் அழகிய பெண்மான் முருகக்கடவுளினுடைய திருவருளினாலே வந்து உலாவியது. அம்மானைக் கண்ட சிவமுனிவர் மயங்கினார். காமத்தாற் கலங்கினார். மிகுந்த துன்பமடைந்து காமப்பித்துக்கொண்டார். இன்பக் கிளர்ச்சியுடன் அந்த மானை நோக்கினார். அவருடைய பார்வையினால் மானின்வயிற்றிற் கருப்பஞ் சேர்ந்தது. திருமாலின் மகளாகிய சுந்தரவல்லி அந்த மான் வயிற்றுக் கருப்பத்தை யடைந்தாள். கருப்பங்கொண்ட பிணைமான் வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியொன்றிலே குழந்தையை ஈன்றது. சுந்தரவல்லி குண்டலம் தொடி வளை முதலாகிய பழைய அணிகலன்களை அணிந்து மரவுரியை உடுத்து முன்னைய உணர்வு இல்லாமலிருந்தாள். மான், தான் ஈன்றது மக்கட்குழந்தையா யிருத்தலைக் கண்டு அஞ்சி ஓடி

விட்டது. குழந்தையாகிய சுந்தரவல்லி குழியிலே அழுத வாறு கிடந்தாள்.

வேட்டுவ ராசனாகிய நம்பி தன் சுற்றத்தினருடன் தினைப்புனத்திற்குச் சென்றான். அவன் அவ்வழுகை யொலியைக் கேட்டு, "இவ்வொலி யாது?" என்று ஆராய்ந்தான். வள்ளிக்குழியில் இருந்த குழந்தையைச் சென்று கண்டான். அதனைக் கையிலெடுத்துத் தன் னுடைய மனைவி கையிலே கொடுத்தான். தான் ஆடிப் பாடிப் பெருமகிழ்ச்சி யடைந்தான். நம்பியினுடைய மனைவி தன்னுடைய கொங்கைகளிலே சுரந்த பாலைக் குழவிக்கு ஊட்டினாள். பிறகு குழந்தையை இல்லத் திற்குக் கொண்டுசென்றனர். குழந்தைப்பேற்றின்பொருட் டுத் திருவிழாக் கொண்டாடினர். முதியோர்கள் பலர் ஒன்றுகூடிக் குழந்தைக்கு, "வள்ளி," என்று பெயரிட்ட னர். குழந்தையைச் சீராட்டிப் பாராட்டிப் பேரன்போடு வளர்த்து வந்தனர். வள்ளியம்மைக்கு அகவை பன் னிரண்டு நிரம்பியது.

## வள்ளியம்மை தினைப்புனங் காத்தல்

வேட்டுவகுலத்தின் வழக்கப்படி வள்ளியம்மையைத் தினைப்புனங் காவல் காப்பதற்கு வைத்தனர். வள்ளியம் மைக் கருள்புரிய விரும்பிய முருகக்கடவுள் கந்தமலையை நீங்கித் திருத்தணிகைமலையை அடைந்து எழுந்தருளி யிருந்தார். நாரதமுனிவர் தினைப்புனத்தில் வந்து வள்ளி யம்மையாரைப் பார்த்துவிட்டு முருகக்கடவுளிடஞ் சென்று வள்ளியம்மையின் பேரழகைப்பற்றி வியந்து கூறினார். அறுமுகக்கடவுள் வள்ளியம்மையாருக்குத் திருவருள் செய்ய எண்ணினார். வேட்டுவக் கோலம்பூண்டு தினைப் புனத்தை யடைந்து வள்ளியம்மையாரைக் கண்டார். காமமயக்கங் கொண்டவர்போலக் கலங்கி நடித்தார். வள்ளியம்மையாரிடம் இன்பவுரைகள் ஆடினார்.

## அறுமுகக்கடவுள் வேங்கைமரமாதல்

முருகக்கடவுள் வள்ளியம்மையாரோடு இன்பவுரைக ளாடிக் கொண்டிருக்கும்போது வேட்டுவராசனாகிய நம்பி,

பல ஒலிக்கருவிகள் ஒலிக்க' வேடுவர்களோடு அங்கே வந்தான். அப்பொழுது முருகக்கடவுள் ஒரு வேங்கை மரமாக வடிவங்கொண்டு நின்றார். வேட்டுவராசன் தன் மகளாகிய வள்ளியம்மையாரைக் கண்டு, வள்ளிக்கிழங்கையும் தேனையுந் தினைமாவையும் பாலையும் பிற தின்பண்டங்களையுங் கொடுத்தான். புதிதாக அவ்விடத்தில் தோன்றி நிற்கும் வேங்கை மரத்தைக் கண்டான். வேடுவர்கள் அவ் வேங்கை மரத்தின் நிலைமையைப் பார்த்து வியப்படைந்தார்கள். அப்புதிய மரத்தால் ஏதேனுந் தீமை நேரிடக் கூடும் என்று எண்ணி அதனை வெட்டுதற்கு முயன்றார்கள். பிறகு முருகக்கடவுளுடைய திருவருளால் அம்மரத்தை வெட்டாது சென்றார்கள்.

## முருகக்கடவுள் முதிய சிவனடியாராதல்

வேடுவர்கள் சென்ற பின்பு முருகக்கடவுள் பழைய வடிவங்கொண்டு வள்ளியம்மையாருக்கு முன்னே தோன்றினார். பல உரைகளைக் கூறி நின்றார். வள்ளியம்மையார் முருகக்கடவுளைப் பார்த்து, "நான் இழிகுலமாகிய வேட்டுவகுலத்திற் பிறந்தவள். நீர் என்னை விரும்புதல் தக்கதன்று," என்று பலவற்றைக் கூறி நின்றார். வேட்டுவ ராசன் மறுவேளை உணவு கொடுத்தற்கு வேட்டுவர் கூட்டத்தோடு வந்தான். வள்ளியம்மையார் வேட்டுவக்கோல அறுமுகக்கடவுளைப் பார்த்து, "மிகுந்த ஆற்றல் படைத்த வேட்டுவர்கள் மிகவுந் தீயவர்கள். நீர் பிழைக்க விரும்பினால் இங்கே நில்லாமல் ஓடிப்போம்," என்றார். முருகக் கடவுள் அகவை முதிர்ந்த ஒரு சிவனடியாராகக் கோலம் பூண்டு வேட்டுவர்களுக்கு எதிரே சென்று நம்பிராசனுக்குத் திருநீறு அளித்தார். அரசனை வாழ்த்தினார். "நான் குமரியாடுதற்கு வந்தேன்," என்றார். வேட்டுவராசன் கிழச்சிவனடியாரைப் பார்த்து, "நீர் இங்கே என் மகளுக்குத் துணையாக இரும்," என்று கூறித் தன் மகளுக்கு வழக்கப்படி உணவைக் கொடுத்துச் சென்றான். முருகக் கடவுள் வள்ளியம்மையார் வழங்கிய தேனையுந் தினைமாவையும் உண்டார். தண்ணீர் வேட்கை மிகுதியாக இருக்கிறது

என்றார். வள்ளியம்மையார் முதியவரை மலைச்சுனை ஒன்றுக்கு அழைத்துச் சென்று நீர் அருந்தச்செய்தார். தண்ணீர் குடித்த முதியவர், என் தாகத்தைத் தணித்ததுபோல மோகத்தையுந் தணிக்க வேண்டுமென்றார். வள்ளிநாயகி நடுநடுங்கிச் சீறினார். தவக்கோலம் பூண்டுகொண்டு தகாத மொழிகளைப் பேசுகிறீர். வேட்டுவர் இச்செய்கையை உணர்வார்களாயின் தீமையாகமுடியும். நீர் அகவை முதிர்ந்தவராக விருந்தும் அறிவு சிறிதும் இல்லாதவராக இருக்கிறீர். இழிகுலத்தவளாகிய என்னை விரும்பிப் பித்துக்கொண்டவர்போலப் பிதற்றுகின்றீர். இதனால் வேடர் குழுவுக்கெல்லாம் ஒரு கொடிய பழியை விளைத்தீர்," என்று கடிந்து கூறினார்.

## ஆனைமுகக்கடவுள் ஆனையாக வருதல்

ஆறுமுகக்கடவுள் ஆனைமுகக்கடவுளை எண்ணினார். "இவளுக்கு முன்னாலேவந்து அருள்செய்யும்" என்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக்கடவுள் கடல்போல முழங்கி வள்ளியம்மையாருக்கு முன்னாக வந்தார். யானையைக்கண்ட வள்ளியம்மையார் மிகுந்த அச்சங்கொண்டார். வேட்டுவக்கோலப் பெம்மானைப் பார்த்து, "யானையிடமிருந்து என்னைக்காப்பாற்றும்; நீர் கூறுகிறபடி செய்கிறேன்," என்றார். முருகக்கடவுளுக்குப் பின் பக்கத்திற் சென்று அவரைத் தழுவிக்கொண்டார். ஆனைமுகக்கடவுள் திரும்பிச் சென்றார். முருகக்கடவுள் வள்ளியம்மையாரை ஒரு பொழிலிற் கூடினார். ஆறுமுகங்களையும் பன்னிரண்டு திருத்தோள்களையும் உடையவராய் மயிலின்மீது காட்சி கொடுத்தார். வள்ளியம்மையார் முருகக்கடவுளை வணங்கிப் போற்றி வியப்படைந்தார். "இத் திருக்கோலத்தை முன்னரே எனக்குக் காட்டியிருக்கலாகாதா? என்னுடைய குற்றங்களையெல்லாம் பொறுத்தருளும்," என்று வேண்டிக்கொண்டார். பிறகு முருகக்கடவுளுடைய கட்டளைப்படி தினைப்புனத்தையடைந்தார்.

## தோழி ஐயுறல்

திணைப்புனத்திலிருந்த பாங்கி வள்ளியம்மையினுடைய அடிகளை வணங்கினாள். நாற்றம் தோற்றம் முதலிய மாற்றங்களைக்கண்டு ஐயங்கொண்டாள். வள்ளியம்மையைப் பார்த்து, "நீ யாண்டுச்சென்றாய்?" என்று கேட்டாள். வெயிலால் மெலிந்து சுனையிலே நீராடச் சென்றேன்," என்றார் வள்ளியம்மையார். அதற்குப் பாங்கியானவள், "கண்சிவக்கவும், வாய்வெளுக்கவும் உடல் வியர்க்கவும், கொங்கைகள் விம்மவும், கைவளைகள் கழலவுஞ் செய்கின்ற சுனையாண்டிருக்கிறது கூறுவாயாக!" என்றாள். வள்ளியம்மையார் பாங்கியைச்சினந்து, "யான் உன்னைத் துணையாகக் கொண்டிருக்க, நீ எனக்குக் குற்றங் கூறினாய்; நீ மிகவுங் கொடியவள்" என்றார்.

## வேழம் வினாதல்

வள்ளியும் பாங்கியும் இவ்வாறு உரையாடிக்கொண்டிருக்கும்போது முருகக்கடவுள் வேட்டுவக்கோலத்துடன் அவ்விடத்தை யடைந்தார். அவர்களைப்பார்த்து, "யான் எய்த யானை ஒன்று இங்கு வந்ததா? கூறுங்கள்" என்றார். அவ்வேட்டுவக்கோல முருகனுடைய கேள்வியையும் வள்ளி நாயகியினுடைய பார்வைக் குறிப்புக்களையும் கண்ட பாங்கி, குறிப்பினால் உண்மையை உணர்ந்துகொண்டாள். இருவருந் தனித்து மகிழ்தற்கான வாய்ப்புக்களையும் ஏற்படுத்திக் கொடுத்தாள். இருவருஞ் சிலநாள் களவொழுக்கத்தில் ஈடுபட்டனர்.

## வெறியாட்டு

திணைக்கதிர்கள் முற்றி விளைந்தன. திணைப்புனம் அறுவடையாயிற்று. வள்ளியம்மையார் இல்லத்தை யடைந்தார். தம்முடைய தன்மை வேறுபட்டார். ஆடல் பாடல்களில் ஈடுபடாமல் புலம்பித் தனியே இருந்தார். வள்ளியம்மையின் உடல் வேறுபாட்டையும் தன்மையையும் நற்றாயும் செவிலித்தாயுங் கண்டார்கள். உள்ளத்திலே ஐயங்கொண்டார்கள். வெளியே போகாவண்ணம் இற்

செறித்தார்கள். வள்ளியம்மையார் உடல் மெலிந்து, உள்ளம் வெதும்பி உயிரிழந்தவர்போல மயங்கினர். நம் பெண்ணைத் தெய்வம் தீண்டிற்றுப் போலும் என்று எண்ணி வேட்டுவர்கள் வெறியாட்டயர்ந்தார்கள்.

## முருகக்கடவுள் வருந்தல்

முருகக்கடவுள் தினைப்புனத்திற் சென்று வள்ளியம்மையைக் காணாது புலம்பினர். முகிலை வினவினர். தினைப்புனத்தை வினவினர்! மயிலை வினவினர்! நாகணவாய்ப் பறவைகளை வினவினர்! கிளிகளை வினவினர்! யானைகளை வினவினர்! மான்களை வினவினர்! பொழில்களை வினவினர்! வாடினர்! மனந்தளர்ந்தார்! நெஞ்சம் வருந்தினர்! வள்ளியம்மையைத் தேடித்திரிந்தார்! இவ்வாறு பல விளையாடல்களைப் புரிந்த முருகக்கடவுள் இரவில் சிற்றூரிற் புகுந்து நம்பியின் சிறு குடிலின்புறத்தே போய் நின்றார். பாங்கி முருகக்கடவுளைக் கண்டாள். வள்ளியம்மையை உடன்கூட்டியனுப்பினள். அவர் அழைத்துக்கொண்டு சென்று ஒருபொழிலில் தங்கியிருந்தார்.

## வேட்டுவர்கள் போர்செய்து இறத்தல்

பொழுது விடிந்தது. வேட்டுவராசனுடைய மனைவியானவள் உறக்கம் நீங்கியெழுந்தாள். தன் மகளைக் காணாமல் எங்குந் தேடினள்! தோழியை வினவினள்! தன் கணவனுக்கு மகள் காணாமற்போன செய்தியைத் தெரியப்படுத்தினள். அவன் மிகுந்த சினமடைந்து, "நம்முடைய மகளை ஆற்றல்மிக்க எவனே கொண்டு சென்றான்" என்று கூறிப் போர்க்கோலங்கொண்டு போருக்குப் புறப்பட்டான். வேடுவர்களுஞ் சினங்கொண்டு போருக்கு எழுந்தார்கள். எல்லோரும் வள்ளியம்மையைத் தேடிச் சென்றார்கள். பொழிலிலே முருகக்கடவுளையும் வள்ளியம்மையாரையுங் கண்டார்கள். சினமடைந்து பொழிலை வளைத்துக்கொண்டார்கள். இவன் நமது ஆற்றலை அறியாதவனாகவிருக்கின்றான்; இவனுடைய ஆற்றலை விரைவில்

அழிப்போம் என்று கூறி வில்லைவளைத்துக் கணைகளைப் பொழிந்தார்கள். கதிரவனை முகில்கள் மறைத்தாற்போல முருகக்கடவுளைச் சூழ்ந்தார்கள். வேட்டுவர்கள் கணை, முருகக்கடவுள்மீது மலரைப்போன்று பட்டன. வள்ளியம்மையார் மனம் வருந்தினர். முருகக்கடவுளுடைய அண்மையில் நின்ற சேவற்கொடி நிமிர்ந்தெழுந்து கூவியது. வேட்டுவராசனும் மற்றவர்களும் இறந்து வீழ்ந்தார்கள்.

## இறந்தவர்கள் பிழைத்தல்

உற்றார் உறவினர்கள் இறந்து வீழ்ந்தமையைக் கண்டு வள்ளிநாயகியார் வருந்தினர். முருகக்கடவுள் அந்தப் பொழிலை நீங்கிச் சென்றார். வள்ளியம்மையார் அவரைப் பின் தொடர்ந்தார். அப்பொழுது நாரதமுனிவர் தோன்றினர். இறந்தவர்களை எழுப்பியருளாமற் செல்வது தக்கது அன்று என்றார். முருகக்கடவுள் மீண்டும் பொழிலுக்கு வந்தார். வள்ளியம்மையாரைப் பார்த்து, "நம்மோடு போர்செய்து இறந்த உன்னுடைய சுற்றத்தார்களையெல்லாம் எழுப்புவாயாக," என்றார். வள்ளியம்மையார், "இறந்துபோன சுற்றத்தார்கள் அனைவரும் எழுங்கள்," என்று அருள்புரிந்தார். இறந்தொழிந்த அனைவரும் எழுந்தார்கள். முருகக்கடவுள் எல்லோருக்குந் தம்முடைய திருவுருவத்தைக் காட்டியருளினர். அனைவரும் முருகக்கடவுளைப் போற்றிப் பணிந்தார்கள். வள்ளியம்மையை எங்களுடைய சிற்றாரில் தானே திருமணஞ் செய்து கொண்டு செல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

## வள்ளியம்மை திருமணம்

வேடுவர்களுடைய வேண்டுகோளுக்கு வேற்படைக் கடவுள் இணங்கியருளினர். நாரதமுனிவரோடு சிற்றாரையடைந்தார். வேட்டுவராசன் திருமணத்திற்கு ஆக வேண்டிய சிறப்புக்களைப் புரிந்தான். அறுமுகக்கடவுள் வள்ளியம்மையாரை அருளோடு நோக்கினர். வேட்டுவக்

கோலம் நீங்கி வள்ளியம்மையாருக்குத் தெய்வத் திருக் கோலம் உண்டாயிற்று. நல்ல வேளையிலே வேட்டுவ ராசன் முருகக்கடவுளுடைய திருக்கையில் வள்ளியம்மை யாருடைய கையை வைத்து, "வள்ளியம்மையை இன்று உமக்குத் திருமணஞ்செய்து தந்தேன்; ஏற்றுக்கொள் ளும்," என்று கூறி நீர் வார்த்தான். முருகக்கடவுளுடைய கட்டளைப்படி நாரதமுனிவர் திருமணச் சடங்கைச் செய் தார்.

## சிவபெருமான் எழுந்தருளுதல்

அப்பொழுது சிவபெருமான் திருமால் நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள்சூழ உமாதேவியாரோடு விண்ணில் எழுந்தருளி நின்றார். முருகக்கடவுள் வள்ளி யம்மையைத் திருமணம் புரிவதைப் பார்த்துத் தண்ணருள் புரிந்தார். திருமால் முதலிய தேவர்கள் மகிழ்ந்து பூமழை பொழிந்தார்கள். அறுமுகக்கடவுள் சிவபெரு மானையும் உமாதேவியாரையுந் தொழுதார். சிவபெரு மான் தேவர்களோடு மறைந்தருளினார். நம்பி, முருகக் கடவுளுடைய திருமணக்கோலத்தைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். வேட்டுவப்பெண்கள் வாழ்த்துரை கூறி அறுகையும் மங்கல அரிசியையுஞ் சொரிந்தார்கள். திருமணம் இனிது நிறைவேறியது.

## திருத்தணிகைக்கு எழுந்தருளுதல்

முருகக்கடவுள் வேட்டுவராசனைப் பார்த்து, "நாம் வள்ளியம்மையோடு திருத்தணிகைமலையிற் சென்று எழுந் தருளி யிருப்போம்," என்று கூறியருளினார். அவன், "நல்லது," என்று கூறி உடன்பட்டான். வள்ளியம்மை யின் நற்றாயும் செவிலியும் பாங்கியும் வள்ளியம்மையைத் தழுவிப் பல வாழ்த்துரைகளைக் கூறினார்கள். முருகக் கடவுள் வள்ளியம்மையாரோடு திருத்தணிமலையை அடைந் தார். அங்கே அமைக்கப்பட்ட திருக்கோயிலில் எழுந் தருளியிருந்தார்.

## திருத்தணிகை மலை

முருகக்கடவுளை வள்ளியம்மையார் பணிந்து, திருத்தணிகைமலையின் சிறப்பினைத் தமக்குக் கூறியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். முருகக்கடவுள் வள்ளியம்மையைப் பார்த்து, "நாம் சூரபன்மனோடு செய்த போரினும், உன்னவர்களாகிய வேடர்களோடு செய்த போரினும் சினந் தணிந்து இங்கே வந்திருத்தலால் இம் மலை செருத்தணி என்னுங் காரணப்பெயரைப் பெற்றது. இம்மலை காஞ்சிக் கணித்தாக விருப்பதால் மிகுந்த சிறப்பை யுடையது. மலர்களில் தாமரைமலர் சிறந்து விளங்குதல் போலவும், ஆறுகளில் கங்கை சிறந்து விளங்குதல்போல வும், பதிகளில் காஞ்சி சிறந்து விளங்குதல் போலவும், மலைகளில் செருத்தணி சிறந்து விளங்குகின்றது. இம் மலையிலே நாம் பல திருவிளையாடல்களைப் புரிவோம். சிவபெருமான் திருக்கைலாசமலையை மிகுதியாக விரும்பி எழுந்தருளி யிருத்தலைப்போல ஈண்டு நாம் மிகுதியாக விரும்பி எழுந்தருளி யிருப்போம். நமக்குத் தினந் தோறும் அணியும்படி மூன்று கருங்குவளை மலர்களை இந்திரன் முன்னாளிலே இந்தச் சுனையில்வைத்து உண் டாக்கினன். அவைகளில் காலையில் ஒன்றும், நண்பகலில் ஒன்றும், மாலையில் ஒன்றும் ஆக மூன்று கருங்குவளை மலர்கள் ஊழி திரும்பினும் ஒழிவின்றி எந்நாளும் மலரும். இந்த மலையின் பெருமை அளவிடற்கரியது. இந்த மலை யில் ஐந்துநாள் வந்து தங்கி நம்முடைய அடிகளை வழிபடு கின்றவர்கள் விரும்பிய பேறுகள் எல்லாவற்றையும் அடைந்து இறுதியில் வீடுபேற்றையும் அடைவர். தேவர்க ளாயினும் முனிவர்களாயினும் வேறு யாவராயினும் இந்த மலையை வந்து வணங்காதவர்கள் இழிந்த பிறப்புடையவர் களேயாவர். எத்தகைய தீவினையைச் செய்தவர்களாக விருந்தாலும் அவர்கள் செருத்தணியை அடைந்து வழி படுவார்களாயின் தீவினை நீங்கப்பெறுவர். இந்தத் திருத் தணியில் செய்யப்பெறுகிற அறங்கள் ஒன்று பலவாகப் பெருகும். தீவினைகள் பலவற்றைச் செய்தாலும் அவைகள்

அழிந்துவிடும்,'' என்று கூறியருளியதுடன் அங்கே சில நாள் வீற்றிருந்தார்.

## கந்த வெற்படைதல்

முருகக்கடவுள் ஒருநாள் வள்ளியம்மையாருந் தாமுமாகக் கந்தவெற்பை யடைந்தார். தம்முடைய திருக்கோயிலுள் நுழைந்தார். தெய்வயானையம்மையார் வந்து பணிய அவரைத் தழுவியருளினார். அவர் வள்ளியம்மையாரைக் கண்டு, தனித்தவளாக இருந்த எனக்கு ஒரு துணை கிடைத்ததென்று மகிழ்ந்தார். "வள்ளியம்மையாருடைய வரலாறு யாது?'' என்று தெய்வயானையம்மையார் முருகக்கடவுளைக் கேட்டார். தெய்வயானையம்மையாரும் வள்ளியம்மையாரும் முற்பிறப்பில் திருமாலின் புதல்விகளாய்த் தவஞ் செய்திருந்த வரலாற்றையும் தாம் அப்பொழுது அருள்புரிந்தமையையும் கூறியருளினார். வள்ளியம்மையாருந் தெய்வயானையம்மையாருந் தாங்கள் உடன் பிறந்தவர்கள் என்பதை அறிந்து ஒருவரை ஒருவர் தழுவி மகிழ்ந்தனர். முருகக்கடவுள் வள்ளியம்மையாருடனுந் தெய்வயானையம்மையாருடனுங் கந்தவெற்பில் இனிது வீற்றிருந்தருளினார்.

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியார் எல்லாம் !

புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி ஒழுகச் செய்து நவைஅறு காட்சி நல்கி
என்னையும் அடியன் ஆக்கி இருவினை நீக்கி ஆண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி !

என்னாயகன் விண்ணவர் நாயகன் யானைநாம
மின்னாயகன் மறைநாயகன் வேடர்நங்கை
தன்னாயகன் வேற்றனி நாயகன் தன்புராண
நன்னாயகம் ஆம்எனக் கொள்கஇஞ் ஞாலமெல்லாம்.

**கந்தபுராண உரைநடை முற்றிற்று.**

# போற்றுதல்

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றுய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை ஏத்துவாம். 1

பிறப்பதும் இறப்பதும் பெயருஞ் செய்கையும்
மறப்பதும் நினைப்பதும் வடிவம் யாவையும்
துறப்பதும் இன்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம். 2

முழுமதி யன்ன ஆறு முகங்களும் மூநான் காகும்
விழிகளின் அருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய கரமீ ராறும் அணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவஞ் செப்பற் பாற்றோ.

மூநான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டும்
கொன்னார்வை வேலும் குலிசமும் ஏனைப்படையும்
பொன்னார் மணிமயிலு மாகப் புனக்குறவர்
பின்னாள்கண் காண வெளிநின் றனன்விறலோன். 4

வற்றாவருள் சேர்குமரேசன்வண் காதைதன்னைச்
சொற்றாரும் ஆராய்ந் திடுவாரும் துகளுறாமே
கற்றாரும் கற்பான் முயல்வாரும் கசிந்துகேட்கல்
உற்றாரும் வீடு நெறிப்பாலின் உறுவரன்றே. 5

பாராகி ஏனைப் பொருளாய்உயிர்ப் பன்மையாகி
பேரா வுயிர்கட் குயிராய்ப் பிறவற்றுமாகி
நேராகித் தோன்ற லிலாதாகி நின்றான்கழற்கே
ஆராத காதலொடு போற்றி யடைதுமன்றே. 6

# இவ்வுரை நடையில் வரும்
# கந்தபுராணப் பாடல்களின்
# முதற் குறிப்பு

